## Ciṅkavarttaṉaṉ tavam

*pūru vattiṉuyar cūra paṉmaṉiṭa*
*porupa ṭaikkatipa rākiya*
*vīra veṟṟipukaḷ ciṅka varttaṉeṉum*
*vīra rukkuḷuyar cūraṉāyk*
*kōra māyttavacu ceytu ṟuppiṉai*
*koṭunta ṉaṟkirai koṭuttumā*
*mēru vottiṭu viḷaṅku tēkamu*
*melintu niṉṟuneṭu nāḷumē.*

## Ciṅkavarttaṉaṉ's Austerities

"In days of yore, Ciṅkavarttaṉaṉ
Was famous for heroic deeds.
He was the commander-in-chief
Of the soldiers of Cūrapaṉmaṉ,
A leader of Acurās. He performed
Terrible austerities, cut up his flesh
And offered it to the fire.
His *Mēru*-like body grew emaciated
As long years passed by.

(வரம் பெற்ற சிங்கவர்த்தனன்)

380. அயன ளித்தவர பால னத்தின்பல
மதிக ரித்தமரர் தங்களைப்
பயமு றுத்திட வடித்து பொன்னுல
கழித்து பாரின்முடி மன்னவர்
நயமு ரைத்தடி பணிந்து பொற்றிறை
கொடுக்க நற்புவிகள் யாவினுஞ்
செயம ணித்திகழ் வெதிரி லாதரசு
செய்து நின்றுதிகழ் காலையின்.

எ-து இவ்விதமாய்ச் சிங்கவர்தனனானவன் கோரமாய்ச் செய்கின்ற தவத்தினைக் குறித்து பிரமாவானவர் அன்னவாகனரூடராய், நாமகள் மனோகரமாய் அவனுக்கிரங்கி அனுக்கிரகம் செய்த வரபாலனத்தினாலே திரிபுவனத்துக்குச் சக்கரேசுவரனாய் வெண்கொற்றக் கொடையினது நிழலினிருந்தரசு செய்கின்ற காலத்தின் தேவாதிகளை யெல்லாம் கண்டித்துப்

பயமுறுத்தியும், பொன்னுலகத்தினை அழித்தும், இப்பூமியை அரசாட்சி புரிகின்ற ஐம்பத்தாறு தேசத்தரசர் முதலாகிய மவுலிபுனைந்த பேர்களெல்லாம் நல்ல நயப்பாக்கிய வார்த்தையைக் கூறி அவனது பாததாமரையினைப் பணிந்து சொர்ணத்திறைகளைக் கொடுக்க, இந்த உலக முதலாகிய லோகங்களெல்லாம் செய மணியானது முழங்கத் தனக்கொருவரு மெதிரில்லாத வர்களாய் அரசாட்சி செய்து செயசாலியாயிருக்கின்ற காலத்தின் என்றவாறு. (3)

வரபாலனம் - தேவ ஈகை அருளுதல். பொன்னுலகு - தேவலோகம். பொற்றிறை - பொன் + திறை; அரசிறையாகக் கொடுக்கும் பொன்.

**உரை** - மவுலி - முடி. 'எதிரில்லாதவனாய்' என்றிருப்பது சிறப்பு.

## Varam peṟṟa Ciṅkavarttaṉaṉ

*ayaṉa ḷittavara pāla ṉattiṉpala*
*matika rittamarar taṅkaḷaip*
*payamu ṟuttiṭa vaṭittu poṉṉula*
*kaḻittu pāriṉmuṭi maṉṉavar*
*nayamu raittaṭi paṇintu poṟṟiṟai*
*koṭukka naṟpuvikaḷ yāviṉuñ*
*ceyama ṉittikaḷ vetiri lātaracu*
*ceytu niṉṟutikaḷ kālaiyiṉ.*

## Ciṅkavarttaṉaṉ Granted boons

With the boons granted by Piramaṉ
He became very powerful. He began
To frighten the celestials,
Devastated heaven. Even as kings
Offered him tribute, he achieved
Victory all over earth, became a king
Without an equal".

(குமரன் போருக்குப் புறப்படுதல்)

381. எதிர்த்த சூரரை வதைத்த சேயனை
யழைத்து இந்திர னுரைத்திட
உதித்த செங்கதி ரெனத்தி கழ்ந்தமுடி
யோடு குண்டல மிலங்கவே

கதித்த மாமயிலி னேறி வேலினொடு
கனக பொற்குடை நிழற்றவே
கொதித்து வானவர் ரதத்தி னோடுமகிழ்
கொண்டு சென்றனர்கள் மருவியே.

எ-து. நாரதமகாமுனிவராலே தனக்கு வந்த துன்பத்தைச் சொல்லக் கேட்ட இந்திர மகாராசனானவன் தாருகா சுரன், சிங்கமுகாசுரன், சூரபன்மன் முதலாகிய பேர்கள் எதிர்த்த காலத்திலே வதை புரிந்து நமக்குத் தேவ பதவியைக் கொடுத்தருளிய தேவசேனாபதியான செயசாலியாகிய சுப்பிரமணியரை அழைத்து அவ்விந்திரனானவன் தனக்கு வந்த இடரையெல்லாம் சொல்லக் கேட்ட குமரனானவர் உதயகிரியிலே உதிக்கா நின்ற செங்கதிராகிய சூரியனைப்போலப் பிரகாசிக்காநின்ற வாறு மவுலிகளும் பன்னிரண்டு குண்டலமும் பிரபையினை வீசப்பாரித்த மயில்வாகனரூடராய் வச்சிர வேலானது கரதல கமலங்களிலே பிரகாசிக்கக் கனகமயமாகிய பொற் குடையானது திருமுடியின் மேல் விரிந்து ஒளியினைக் காலப் பிரவேசித்த மாத்திரத்திலே தேவர்கூட்டங்களானவர்கள் கோபித்துத் தத்தமிரதங்களிலே ஆரோகணிதராய்க் காண்டீபத்தைக் கையில் தாங்கி வச்சிரக்கவசங்களைப் புனைந்து முதுகிலே அம்பறாத் தூணியை இறுக்கக்கட்டிச் சுப்பிரமணியருடைய மயிலி னைச் சூழ்ந்து வந்தார்க ளென்றவாறு. (4)

சேயன் - முருகபெருமான். கதித்தல் - பருத்தல். கனகம் - பொன். கனகபொன் - இருபெயரொட்டு.

## Kumaraṉ pōrukkup puṟappaṭutal

*etirtta cūrarai vataitta cēyaṉai*
*yaḻaittu intira ṉuraittiṭa*
*utitta ceṅkati reṉatti kaḻntamuṭi*
*yōṭu kuṇṭala milaṅkavē*
*katitta māmayili ṉēṟi vēliṉoṭu*
*kaṉaka poṟkuṭai niḻaṟṟavē*
*kotittu vāṉavar ratatti ṉōṭumakiḻ*
*koṇṭu ceṉṟaṉarkaḷ maruviyē.*

## Kumaraṉ to the Battle

Intiraṉ called Kumaraṉ who had destroyed
The enemy hosts earlier, and commanded him
To go. With the crown and ear - ornaments
Shining like the rays of the rising sun,
Cuppiramaṇiya ascended his fast peacock

With a lance. The golden umbrella
Spread shade. The incensed gods
Accompanied him on the chariots
Filled with excitement.

(சிங்கவர்த்தனன் படையுடன் புறப்படுதல்)

382. இரத மோடுபரி யானை சேனைக
ளிலங்க வெண்டிசை கலங்கவே
பரவு கொண்டலென வண்ட மெண்டிசை
படர்ந்த வானவர் [1]பரப்பெலாம்
வரவு கண்டுமொழி கின்ற சாரணர்கள்
வந்து ரைத்திட மதித்தபோர்
சரத வெங்கலர தங்க ளோடுமெதிர்
[2]சார்ந்து நின்றுசமர் செய்தனர்.

எ-து. இவ்விதமாய்த் தேவர்கூட்டங்கள் முற்காலத்தைப் போலச் செயங்கொள்ளலாம் என்கின்ற மனமகிழ்ச்சியோடும் கூடினவர்களாய் இரத, கச, துரக, பதாதிகளாகிய நான்கு வகைச் சேனைகளுடனே தோல் கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக் கருவியாகிய பஞ்சநாதத் தொனிகளும் முழங்க, எட்டுத்திக்கும் கரகரவென்று சுழன்று கலங்கிடத்தக்கதாகவும், ஆகாயத்தில் பரவிய சத்த மேகங்களினது தொனியைப்போலத் தேர்களினுடைய வண்டிச்சத்தங்களானவை முழங்க வருகிற தேவ சயினியங்களைக் கண்டு சுக சாரணர்களாகிய அசுர தூதர்களானவர்கள் வாயுவேக, மனோவேகமாய்ப் போய் அதிக துரிதமாய்ச் சிங்கவர்தனன் பாத கமலங்களில் வீழ்ந்து அறிக்கையிட்ட மாத்திரத்தில் அவன் மந்திராலோசனை செய்து தன்னை நம்பியிருக்கின்ற வெங்கல ரதக்கரர் அனேக கோடி பேர்களை அழைப்பித்து மற்ற நான்கு வகைச் சேனைகளையும் வரவழைத்துக் கொண்டு பதினெண் வாத்தியமு முழங்கத் தக்கதாய்ச் சமர்க்களத்தின் வந்தெதிர்த்தா னென்றவாறு.(5)

பரப்பு - மிகுதி, கூட்டம். சாரணர் - அரசர்குழுவிலுள்ள ஒற்றர். சரதம் - உண்மை.

**பா.வே.** - 1. பரந்ததேர். 2. கொண்டுநின்று.

**Ciṅkavarttaṉaṉ paṭaiyuṭaṉ puṟappaṭutal**

*irata mōṭupari yāṉai cēṉaika*
*ḷilaṅka veṇṭicai kalaṅkavē*
*paravu koṇṭaleṉa vaṇṭa meṇṭicai*
*paṭarnta vāṉavar parappelām*

*varavu kaṇṭumoḻi kiṉṟa cāraṇarkaḷ*
*vantu raittiṭa matittapōr*
*carata veṅkalara taṅka ḷōṭumetir*
*cārntu niṉṟucamar ceytaṉar.*

## Ciṅkavarttaṉaṉ to Battle

With chariots, horses, elephants
And soldiers, the gods put into commotion
The eight directions, spreading
In the spaces of the celestials.
The spies perceived the formations
In the eight directions of the universe
Like a spread of clouds
And reported the message to the king.
Gathering chariots made of bell-metal
He came to the battle ground.

(அசுர சேனைகள் அழிதல்)

383. கடல்க ளோடுபெருங் கடல்க ளாமெனக்
கலங்கி நின்றுசமர் செய்திட
வடல்மி குந்தசுர ரமரர் தங்களை
யடித்தி டித்துடலம் வேறதாய்
குடர்கள் குண்டிகள் சரிந்தி டப்பெருகு
குருதி யுண்டுமகிழ் கொண்டபின்
வடவை போலெதிரின் மயிலி னோடுதிகழ்
மதிகள் கோடியெனக் கண்டனன்.

எ-து சுப்பிரமணியருடைய சேனைகளானவை கருங்கடலினை யொத்தன. அசுரசேனைகள் பெரும் புறக்கடலினை யொத்தன. அவ்விரு திறத்தனவாகிய சேனைகளும் கலந்து அரிய போரினை விளைத்திட்டபோது வலியினாலுயர்ந்த அசுர சேனைகளில் நின்ற யூகதத்தலைவர், சேனைத்தலைவர், மந்திரியர்கள், பட்டவர்தனர், மகுடவர்தனர் முதலாகிய பேர்களானவர்கள் தேவ சயினியங்களைக் கதைகளாலே அடித்தும், இரும்புலக்கைகளினாலே இடித்தும், வாள்கள், கண்டகோடரிகளாலே அவயவங்களை வெட்டியும், உடல்களைச் சின்னா பின்னப்படுத்தியும், குடர்கள், குண்டிகள் முதலானதெல்லாம் சரிந்திடச் செய்தும், இரதங்களை

உடைத்தும், யானைப் பந்திகளை அழித்தும், அசுவக் கூட்டங்களை நீராக்கியும் மகிழ்ச்சியை அடைந்தார்கள். அப்படியாகிய காலத்தில் தேவசேனாபதியானவர் கண்டு வடவாமுகாக்கினியைப் போலக் கொதித்துச் சீறி மயில் வாகனத்தின்மேல் ஆரோகணிதராய்க் கோடி சந்திரர் கூட்டமிட்டதுபோன்று ஆறு திருமுகங்களுடனே வந்து எதிர்த்தார் என்றவாறு. (6)

அடல் - வெற்றி, வலிமை குண்டி - இருதயம் அடல்மிகுந்த அசுரர் குருதியுண்டு மகிழ்கொண்டனர் என்க. வடவை - ஊழித்தீ

உரை - தேவசேனாபதி - குமரக்கடவுள்.

## Acura cēṉaikaḷ aḻital

*kaṭalka ḷōṭuperuṅ kaṭalka ḷāmeṉak*
*kalaṅki niṉṟucamar ceytiṭa*
*vaṭalmi kuntacura ramarar taṅkaḷai*
*yaṭitti ṭittuṭalam vēṟatāy*
*kuṭarkaḷ kuṇṭikaḷ carinti ṭapperuku*
*kuruti yuṇṭumakiḻ koṇṭapiṉ*
*vaṭavai pōletiriṉ mayili ṉōṭutikaḷ*
*matikaḷ kōṭiyeṉak kantaṉaṉ.*

## Destruction of the Acura Army

The battle raged as if oceans
Were battling with big oceans
In commotion; the fierce Acurās
Beat up the celestials happily.
Intestines and hearts fell out
And blood streamed forth as floods.
Incensed like the fire during deluge
Cuppiramaṇiyaṉ appeared on the peacock,
Brilliant as a million suns.

வேறு

(தேவர் படையுடன் சிங்கவர்த்தனன்)

384. கண்ட சூரனெதிர் கொண்டு காலனெனக்
கடுகி வெஞ்சமர முடுக்கியே
அண்ட மூடுருவ நின்ற மாரத
மழித்து பொற்கொடி யறுத்துபோர்ச்

**சென்ற தேவரொடு நின்ற வேலவர்**
**செருக்க ளத்தின்மத யானைபோல்**
**நின்ற [1]சூரரை வதைத்தி டக்கணைகள்**
**சிதறி நீள்சம ரியற்றினான்.**

எ-து. இத்தன்மைத்தாய் முற்காலத்தில் சூரபன்மா முதலாகிய அளவிறந்த சேனை வெள்ளங்களை அழித்துத் தேவர் இடுக்கண்களைத் தீர்த்தருளிய சுப்பிரமணிய தேவரானவர் மயில்வாகன ரூடராய் வந்து எதிர்த்த காரணத்தினைக் கண்ட சூரனான சிங்கவர்தனானவன், கோடி எமதர்மராசனானவன் ஒன்றாய்க் கூடி எதிர்த்தால் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தாய் வாயுவேகம் மனோ வேகமாய்த் தனது இரதத்தை நடாத்திக் கொண்டு வந்து குரூரமான காண்டீபத்தினை வணக்கி நாணேறிட்டுக் குணத்தொனிசெய்து சரமாரிகளாய்ப் பொழிந்தான். அதனாலே, தேவாதிகள் அண்டரண்ட பகிரண்டங்களையெல்லாம் ஊடுருவி நிற்காநின்ற இரதபந்திகளையும் உடைத்துப் பொன்மயமாகிய இடக்கியங்களான கொடிகளை அறுத்துக் கீழே தள்ளிப் போரினைக் குறித்து வந்த வேலவனுடனே வந்த தேவர்கூட்டங்களின் மதப்பட்ட யானையைப்போல நின்ற பேர்களையெல்லாம் அழித்திடத்தக்கதாய் அனேகமாகிய சரதாரைகளைக் கரோவேக சரோவேகமாய்ப் பொழிந்தான் சிங்கவர்தனன் என்றவாறு. (7)

**உரை** - இடக்கியங்கள் - தேர்க்கொடிகள். சரதாரை - அம்புமழை.

பா.வே. - 1. பேர்களை யழித்திடக் கணைகள்.

## Vēṟu

### Tēvar paṭaiyuṭaṉ Ciṅkavarttaṉaṉ

*kaṇṭa cūraṉetir koṇṭu kālaṉeṉak*
*kaṭuki veñcamara muṭukkiyē*
*aṇṭa mūṭuruva niṉṟa mārata*
*maḻittu poṟkoṭi yaṟuttupōrc*
*ceṉṟa tēvaroṭu niṉṟa vēlavar*
*cerukka ḷattiṉmata yāṉaipōl*
*niṉṟa cūrarai vataitti ṭakkaṇaikaḷ*
*citaṟi nīḷcama riyaṟṟiṉāṉ.*

### Ciṅkavarttaṉaṉ and the Celestial Army

Seeing the destroyer of Cūraṉ
Come now as Yamaṉ to the fierce battle,
Cūraṉ smashed the chariots that were high
Piercing the skies, cut down the golden flags,

Showered arrows and battled to kill the-gods
Who stood as elephants in rut
Beside Cuppiramaniyan in the battle-field.

**வேறு**

**(படைகளின் ஒப்புமை)**

385. **வடவரையி னிமையவரை யெனவிருவர் முடுகியடர்**
**அரிகளென அகில வுலகுங்**
**கிடுகிடென இரணியனு நரசிமமு மெனக்கடுகி**
**கிளர்வரைக ளிலகு பொடியாய்**
**அடல்மிகுதி யுடைசிவனு மிடமகல கடைவடவை**
**யனல்கொளிய தெனமு னிவரும்**
**உடனகல கதிர்மறைய வுலகதிரத் திசைகளிறு**
**யொலிகளிட பெருகி யதரோ.**

எ-து. இந்தப் பிரகாரம் சிங்கவர்த்தனானவன் தனது இரதத்தை நடாத்தித் தேவசேனாதிபதி முன்பாக வந்தெதிர்த்தது எப்படியிருந்ததென்றால், மகமேருகிரியும் ஒரு பர்வதமும் ஒன்றோடொன்று எதிர்த்ததுபோலும், சிங்கத்தோடு சிங்கம் எதிர்த்ததுபோலும், இரணியாசூரனுடனே நரசிங்கம் எதிர்த்ததுபோலும், இருரதமும் இடசாரி வலசாரியாய் அட்டகுலாசலபர்வதம், மகமேருகிரி, சப்த சாகரங்கள் அதினிருக்கின்ற தீவாந்தரங்கள், சக்கரவாளகிரி, உதையகிரிபர்வதம், அண்டப்பித்திகை முதலாகிய இடங்களெல்லாம் திரிந்து யுத்தம் செய்யும் பர்வதங்களெல்லாம் தூளிப் படலமாகியும், வெற்றியையுடைய சிவனும் கயிலாயகிரியை விட்டோட ஊழிக்காலத்து அக்கினி பிரவேசித்ததென்று முனிவர்களோடவும், சந்திர சூரியர் முதலாகிய பேர்கள் மறைந்து போகவும், அட்டதிக்குக்கசங்கள் வீரிடவும் இப்படி யுத்தம் செய்தார்கள் இருவரும் என்றவாறு. (8)

வடவரையி னிமையவரை - வடவெல்லையாகிய இமயமலை. அரிகள் - சிங்கங்கள். கடைவடவை - இறுதிக்காலத்து வடவா முக அக்கினி; ஊழித்தீ. கொளியது - கொளுத்தியது, மூண்டது.

**Vēṟu**

**Paṭaikaḷiṉ oppumai**

*vaṭavaraiyi ṉimaiyavarai yeṉaviruvar muṭukiyaṭar*
*arikaḷeṉa akila vulakuṅ*
*kiṭukiṭeṉa iraṇiyaṉu naracimamu meṉakkaṭuki*
*kiḷarvaraika ḷilaku poṭiyāy*

*aṭalmikuti yuṭaicivaṉu miṭamakala kaṭaivaṭavai*
*yaṉalkoḷiya teṉamu ṉivarum*
*uṭaṉakala katirmaṟaiya vulakatirat ticaikaḷiṟu*
*yolikaḷiṭa peruki yataro.*

## The Armies Compared

Like the Himalayas in the North,
The two armies battled like lions,
While the entire world was shaken;
Striving like Iraṇiyaṉ and the Man-Lion,
Pulverising the rising mountains around,
It made fiery Civaṉ run away from Kailās.
Terror that the fire of deluge had risen
Made the sages take to their heels;
The sun was veiled; the elephants
Of the directions trumpeted
Filling the universes with sound.

(சரமாரியும் தேர்ப்படையும்)

386. கணைகள்பல வசுரெறிய கணைகளறு முகனெறிய
கணைகளினில் பொடிபொ டியதாய்
இணைகணைகள் தசகணைகள் சதகணைக ளிவனெறிய
அவனுமுடல் முறிய சிதறத்
துணையொருவ ரிலைகருதி வருவதரி தெனகுயவர்
திகிரியெனச் சுழல இவர்தேர்
பணையொலிகள் வலவரொலி திரணமென வுறுகணைகள்
படபடென விடிக ளெனவே.

எ-து பலபல சரமாரிகளை அசுரனானவன் தனது காண்டீபத்தினின்றும் விட அததுணைப் பகழியை அறுமுகன் தூவிக் கண்டித்துக் கீழே தள்ளினார். அதன்பின்பு இரண்டு குரூரமான பல்லவங்களையும் பத்துக்கணைகளையும் நூறு கணைகளையு மீட்டும் தூவினான். குமரகுருபர மூர்த்தியும் அத்துணைச் சிலீ முகங்களை விட்டுக் கண்டித்துத் தள்ளினார் அதன்பின்பு சிங்கவர்தனனானவன் குரூரக்கணைகளால் குகன் சரீரத்திலழுத்தினான் அபபோது தேவ சேனாதிபதியானவர் ஆதரவில்லாதவராய் ஆலோசித்து இவனைச் சம்மரிக்க இரதத்தை நடாத்தத்தக்கதாகச் சாரதிக்குக் கட்டளையிட்டார். இருவர் இரதங்களுங் குலாலன் சக்கரம்போல வலசாரி, இடசாரியாய்த் திரியப் பதினெண் வாத்தியங்களும்

தொனிக்கச் சாரதிகள் கோஷ்டங்களும் கணைகள் படபடவென்கிற கோஷ்டமும் இடிகளைப் போல முழங்க அண்டபகிரண்டங்களெல்லாம் திரிந்து சமர் செய்தார்கள் இடியினது முழக்கத்தினைப்போல் என்றவாறு. (9)

அசுர்எறிய - அசுரர் எறிய - அசுரனான சிங்கவர்த்தனனும் அவன்படை வீரர்களும் வீச இணைகணை, தசகணை, சதகணை என்பன வெவ்வேறுவகைக் கணைகள். பணை - இசைக்கருவி, பறை. வலவர் - தேர்ப்பாகர்.

## Caramāriyum tērppaṭaiyum

*kaṇaikaḷpala vacureṟiya kaṇaikaḷaṟu mukaṉeṟiya*
*kaṇaikaḷiṉil poṭipo ṭiyatāy*
*iṇaikaṇaikaḷ tacakaṇaikaḷ catakaṇaika ḷivaṉeṟiya*
*avaṉumuṭal muṟiya citaṟat*
*tuṇaiyoruva rilaikaruti varuvatari teṉakuyavar*
*tikiriyeṉac cuḻala ivartēr*
*paṇaiyolikaḷ valavaroli tiraṇameṉa vuṟukaṇaikaḷ*
*paṭapaṭeṉa viṭika ḷeṉavē.*

## Chariots, Shower of Arrows

The Acura aimed several arrows
Which were pulverised by the six-visaged
Cuppiramaṇiyaṉ; the Acura followed
With two, ten and hundred arrows;
But they were immobilised by the Lord.
More arrows swished past.
Finding no support, the Lord ordered
The charioteer to speed forward;
The twin chariots chased one another.
An immense, thunderous sound
Rose from the swish of arrows and drums.

(பலவகைக் கணைகள் மோதுதல்)

387. தருகவிவ ரிருவரினு மொருவரரி கணைதரவு
மொருவர்மழை கணைத ரவுமற்
றொருவரிருள் கணைதரவு மொருவர்கதிர் கணைதரவு
மொருவரடர் மழைக ணைதர

**ஒருவர்வளி கணைதரவு மொருவரிடி கணைதரவு**
**மொருவர்கரி கணைத ரவுமா**
**மொருவரரி கணைதரவு மொருவிருவ ரிகல்மலைய**
**வொருவரொரு வரைம டிதர.**

எ-து. இவ்விதமாய்ச் சுப்பிரமணியரும் சிங்கவர்த்தனனும் ஒருவர் அக்கினிக்கணைகளைப் பொழிந்தால் ஒருவர் வருணப்பல்லவங்களைப் பொழிந்தவிப்பார்கள். ஒருவரிருட் கணைகளைப் பொழிந்தா லொருவர் சூரிய சிலீமுகத்தா லதப்படுத்துவார்கள். ஒருவர் மேகக் கணைகளை விட்டால் ஒருவர் பிரசண்டமாருதக் கணைகளால் அதப்படுத்துவார்கள். ஒருவர் இடியாகிய சிலீமுகங்களை விடுத்தா லொருவர் அந்தகன் கணையால் விலக்குவார்கள். ஒருவர் யானையினது சந்தானங்களைப் பொழிந்தால் ஒருவர் சிங்கக்கணையினாலே மாற்றுவார்கள். இப்படியாக இரு திறத்தினர்களும் ஒருவருக்கொருவர் இளையாதவர்களாய் அண்டங்கள் மகமேரு அட்ட குலாசலங்கள், சத்த தீவாந்திரங்களும் சென்று சமர்புரிந்தார்க ளென்றவாறு. (10)

வாரி கணை - வருணாஸ்திரம், வருண அம்புகள். மழைக்கணை - மேகக்கணை. அரிகணை - சிங்கக்கணை. இருள்கணை - கறுப்புக்கணை, இருளை உண்டாக்குவது. கதிர் - ஒளி.

**உரை** - அந்தகன் - எமன். சிலீமுகம் - அம்பு.

## Palavakaik kaṇaikaḷ mōtutal

*tarukaviva riruvariṉu moruvarari kaṇaitaravu*
*moruvarmaḻai kaṇaita ravumaṟ*
*ṟoruvariruḷ kaṇaitaravu moruvarkatir kaṇaitaravu*
*moruvaraṭar maḻaika ṇaitara*
*oruvarvaḷi kaṇaitaravu moruvariṭi kaṇaitaravu*
*moruvarkari kaṇaita ravumā*
*moruvarari kaṇaitaravu moruviruva rikalmalaiya*
*voruvaroru varaima ṭitara.*

## A Variety of Missiles

If one aimed the fire missile
The other countered with a shower of rain;
The missile of darkness
Was opposed by that of light;
If one ignited the missile of clouds

The other released that of cyclones;
If one aimed the thunder-missile
The other sent one of Death;
If one showered the elephant-missile
The other sent forth one of lions.
Thus the two heroes strove.

**(போர் முறைகள்)**

388. **வரவரவு முதிரசின மடுகணைக ளறகொடிக**
**ளறகுணமு [1]மறவ ரிசிலை**
**நெறநெறென முறியஅவ ரெறியமறு சிலைகைகொள**
**நெறியசர மழைய தனிலே**
**புரவிதலை யறவுருளை பிளவுபட [2]வனிகமுடல்**
**பிளவுபட வலவ னுடலஞ்**
**சிரமுருள விருவருடல் படபடெனக் கணைநுழைய**
**வதிகசெய விறலை முருகன்.**

எ-து. இருதிறத்தினரும் ஒருவருக்கொருவர் மாறாத கோபத்தினையுடையவர்களாய், ஒருவர் சிலீமுகங்களை யொருவர் கண்டித்தும் ஒருவர் துசபடத்தினை ஒருவரறுத்தும், குணத்தொனியால் அண்டத்தைப் பிளவுபடுத்துகின்ற ஒருவர் காண்டீபத்தை ஒருவர் மளமளவென்று முறியத்தக்கதாகச் செய்தும், இமைதிறக்கும் முன்பு ஒருவருக்கொருவர் காண்டீபங்களை வளைத்துக் குணத்தொனி செய்த மாத்திரத்தின் அதனையும் கண்டித்துக் கீழே தள்ளியும், மறுபடியும் மற்றொரு காண்டிபங்களை வளைத்து அனேக சந்தான கணைமாரியினைத் தூவித் தேரில் பந்தித்து வசுக்கூட்டங்களைக் கண்டித்தும், தேர்களைச் சின்னா பின்னமாகச் சிதைத்தும்,உருளைகளைப் பிளவுபடுத்தியும், அரக்கருடல் பிளவுபடவும், சாரதிகள் பிளவுபட்டுத் தலையுருளவும், இருவர் உடலங்களும் கணைகளால் துளைக்கப்பட்டுப் படபடவென்று உடலந்துடித்தாலும் கோபம் மாறாத சிங்கம்போல் சமரினை விளைத்தார்கள் என்றவாறு. (11)

வரவர - மேலும்மேலும். முதிர்தல் - வளர்தல், முற்றுதல். உருளை - தேருருளை, சக்கரம். அனிகம் - படை, படைவீரர்.

**உரை** - சந்தானம் - தொடர். பந்தித்தல் - கட்டுதல் . வசு - அட்டவசுக்கள்.

**பா.வே.** - 1. மறலுரிசிலை. 2. வனகமுடல்.

## Pōr muṟaikaḷ

*varavaravu mutiraciṉa maṭukaṉaika ḷaṟakoṭika*
*ḷaṟakuṇamu maṟava ṟiciḷai*
*neṟaneṟaṉa muṟiyaava ṟeṟiyamaṟu cilaikaikoḷa*
*neṟiyacara maḻaiya taṉilē*
*puravitalai yaṟavuruḷai piḷavupaṭa vaṉikamuṭal*
*piḷavupaṭa valava ṉuṭalañ*
*ciramuruḷa viruvaruṭaḷ paṭapaṭeṉak kaṇainuḻaiya*
*vatikaceya viṟalai murukaṉ.*

## Varieties of War

As their anger grew fiercer than ever,
They destroyed arrows, cut down flags,
Broke up bows with deafening noise,
Flung arrows at one another with speed,
Leading to a rain of arrows.
The horses were beheaded, the wheels
Cracked, the soliders cut down,
The heads of charioteers were slashed,
As they pierced each other with arrows.
Cuppiramaṇiyaṉ began to have the upper hand.

(சிங்கவர்த்தனன் தளர்ச்சியடைதல்)

389. அசுரனுடல் துளைவுபட முறியசிலை வெறியகணை
யணிகமுழு திலும ழியவோர்
நிசிசரரு முதவியில பரிகரிக ளுதவியில
நிறையவுயர் [1]கணைம ழையினாற்
பசபசென விழிபுரள ரதமழிய தொடையுதற
பகர்கரமு மதிர வுடல்மேல்
விசிகமுற குருதிதிரள் மலையருவி [2]யெனவருக
விடசமுக மெனவி ரைவிலே.

எ-து. இத்தன்மையாய் இருவரும் சமர்புரியும் காலத்திலே சுப்பிரமணியருடைய காண்டீபப் பல்லவங்களாலே சிங்கவர் தன்னுடலமெல்லாம் துளைபட்டு, இரத்தவெள்ளம் பெருகக் காண்டீபமும் பிளவுபட்டு இரத, கச, துரக, பதாதிகளாகிய நான்கு வகைச் சேனைகளுங் கரிந்தெரிந்து நீராச்சுது. அப்போதொரு பரிசனங்களும் இல்லாதவனாய்க் கலங்குங் காலையில் மீட்டும் சுப்பிரமணியருடைய குரூரமாகிய கணைகளானவை வந்து தாக்குதலாலே பிரமித்து முழிச்சு, அவன் இரதமும் பங்கப்பட்டு இரண்டு தொடைகளும் உதறி நடுக்கமெடுக்கக் கைகளிரண்டும் அசந்துபோய் உடலமெல்லாம் துளைபட்ட வழியில் குருதி நீர் மலையினதருவியைப் போலப் பெருகப் பல்லவங்களினிட கூட்ட சமுகங்களால் கலங்கி வருத்தத்தை அடைந்தான் சிங்கவர்த்தன னென்றவாறு. (12)

நிசிசரர் - அசுரர். விசிகம் - அம்பு, இருபபுலக்கையாகிய ஆயுதம்.

பா.வே. - 1. கணைமயிழையினால். 2. யனவருக.

## Ciṅkavarttaṉaṉ taḷarcciyaṭaital

*acuranuṭal tuḷaivupaṭa muṟiyacilai veṟiyakaṇai*
*yaṉikamuḻu tiluma ḻiyavōr*
*nicicararu mutaviyila parikarika ḷutaviyila*
*niṟaiyavuyar kaṇaima ḻaiyiṉāṟ*
*pacapaceṉa viḻipuraḷa ratamaḻiya toṭaiyutaṟa*
*pakarkaramu matira vuṭalmēl*
*vicikamuṟa kurutitiraḷ malaiyaruvi yeṉavaruka*
*viṭacamuka meṉavi raivilē.*

## Ciṅkavarttaṉaṉ Grows Tired

The Acurā's body was pierced all through.
His bow broke. As all his soliders
Were destroyed, he received no help
From Acurās, horses or elephants.
He blinked as the rain of arrows
Attacked him and broke his chariot.
His thighs shook, his hands grew limp,
His body was pounded by missiles,
And his blood flowed as a water-fall
From a mountain, released
By the poisonous arrows.

(மீண்டும் சிங்கவர்த்தனன்)

390. தவசினிலை யதனில்பல கதிரவர்க ளெனவொளிரு
கனகரதம் வரவ தனின்மேல்
கவசமொடு சிலைகணைகள் பலவுமிகு துரிதமொடு
கரவிரவி லணிய வுலக
மவசமுற சிலைவளைய வடுகணைகள் பலவுதிர
வரிகரியை யடுவ தெனவோர்
துவசமற பரியழிய வலவனுடல் தடியவரி
சிலையழிய தொடைநி றையவே.

எ-து. இத்தன்மையாய் இளைத்துக் களைத்துச் செய்யும் காரியம், தவிரும் காரியம் தெரியாதவனாய் மதிமயங்கும்படியாகிய சிங்கவர்த்தன் பிரம்மாவைக் குறித்துச் செய்த தபோ பலத்தினாலே பல சூரியப் பிரகாசம்போல கனகமயமாகிய ஒரு இரதமானது உதவியாச்சுது. அதன் மேல் ஆரோகணிதமான பின்பு, அந்த இரதத்தினிருந்த வச்சிர கவசத்தினைப் புனைந்து மகமேருவினைப் போன்ற காண்டீபத்தைக் கையினெடுத்துப் பலபல கணை மாரிகளைப் புங்கானு புங்கமாய்க் கரோவேக சரோவேகமாய்ப் பொழிந்தான். அப்போது உலகமெல்லாம் அரணமும் மூர்ச்சையடைய ஒரு வீர சிங்கத்தினை மதப்பட்ட யானையானது கொல்லத் தொடங்கினதுபோல, சுப்பிரமணியருடைய இரதத்தில் கட்டிய துசப்படாத்தினை அறுத்துக் கீழே தள்ளி அதன் பின்பு தேரில் பந்தித்த குதிரைகளைக் கண்டித்து மீட்டும் சாரதி சிரசை அறுத்து அதன்பின் காண்டீபத்தைக் கண்டதுண்டப்படுத்தி அனேக சிலீநகங்களைத் தொடுத்து அவர் தேகங்களைத் துளைத்து ஆர்ப்பரித்தா னென்றவாறு. (13)

தவசினிலை - தவசின் - நிலை - தவத்தின்பயனால். உலகம் அவசம் உற - உலகம் மயக்கமடையும்படி. அரிகரியை அடுவதென - அரி - சிங்கம்; கரி - யானை.

**உரை** - பந்திதத - கடடப்பட்ட. சிலீநகம் - சிலீமுகம் என்பதைக் குறிப்பதாகும்; அம்பு.

## Mīṇṭum Ciṅkavarttaṉaṉ

*tavaciṉilai yataṉilpala katiravarka ḷeṉavoḷiru*
*kaṉakaratam varava taṉiṉmēl*
*kavacamoṭu cilaikaṇaikaḷ palavumiku turitamoṭu*
*karaviravi laṇiya vulaka*
*mavacamuṟa cilaivaḷaiya vaṭukaṇaikaḷ palavutira*
*varikariyai yaṭuva teṉavōr*
*tuvacamaṟa pariyaḻiya valavaṉuṭal taṭiyavari*
*cilaiyaḻiya toṭaini ṟaiyavē.*

## Ciṅkavarttanaṉ Again

Due to his austerities he now received
A chariot shining as a group of suns.
It held an armour and several missiles
Which he took up in a flash.
As the earth grew limp, he bent his bow
And aimed several, terrible missiles
Which acted like an elephant
Trying to kill a lion, cut down
Kumaraṉ's flag and horses and the bow,
Attacked his body and raised a shout.

(குமரன் வலியழிதல்)

391. சிரநெரிய வுரமதனி னுதிரநிறை குமரபதி
திறனெரிய சினவி யவனுங்
கரமுதற நுதலின்மிகு கணைபுதைய துணைநெரிய
கவசமற வவச முறமேல்
சரமழைகள் முழுதுநிறை யுடல்பதற விபுதர்குல
சருகெரிய வனல மெனவச்
சுரனொடியி லனிகதொகை பிளவுபட இடிகள்விழ
சுழலரவ மெனவி வனுமேல்.

எ-து. அந்தச் சிங்கவர்த்தனனுடைய குரூரமான கணைகளாலே சிரசானது நெரிந்து போகவும், மார்பகத்தில் உதிரமாரி பொழியவும், குமரகுருபரமூர்த்தியினது வலியானதழியவும், அவன் செய்த கொடுமையினாலே கோபக் குரோதங்களால் கரங்களானவை உதறவும், அவருடைய நெற்றியிலே சிங்கவர்த்தனன் கணைகளானவை தைக்கவும், துணையாகிய தேவர்கூட்டங்கள் எரிந்து போகவும், வச்சிர கவசமானது பிளவுபடவும், ஆயாசப்பட்டவுடனே மறுபடி கணைமாரிகளானவை மூடவும், அதனாலே உடலானது பதறவும், அக்கினியில் சருகு எரிந்தது போல நான்கு வகைச் சேனைகளும் அக்கினிப் பிரவேசமாய் இடி விழுந்த சர்ப்பக் கூட்டங்களைப்போலக் கலங்கினர்கள் என்றவாறு. (14)

நெரிதல் - நொருங்குதல். உரம் - மார்பு. குமரபதி - முருகபெருமான், நுதல் - நெற்றி. துணை - துணையாக வந்த தேவர்கூட்டம். அவசம் - மயக்கம் விபுதர் - வானோர்.

## Kumaraṉ valiyaḻital

*ciraneriya vuramataṉi ṉutiraniṟai kumarapati*
*tiṟaṉeriya ciṉavi yavaṉuṅ*
*karamutaṟa nutaliṉmiku kaṇaiputaiya tuṇaineriya*
*kavacamaṟa vavaca muṟamēl*
*caramaḻaikaḷ muḻutuniṟai yuṭalpataṟa viputarkula*
*carukeriya vaṉala meṉavac*
*curaṉoṭiyi laṉikatokai piḷavupaṭa iṭikaḷviḻa*
*cuḻalarava meṉavi vaṉumēl.*

## Cuppiramaṇiyaṉ Grows Weak

With his head under attack,
And the chest receiving the rain of arrows
Cuppiramaṇiyaṉ felt his strength ebbing away.
His hands shook with anger at the attack.
His foreheads were stung by the arrows.
The celestials were torched.
His armour broke and he grew tired
As the body received a further wave
Of arrows. The celestial army
Was burnt up as dried leaves in a fire
While the gods shook with fear
As a knot of serpents, thunder-struck.

(முருகன் அரங்கனை நினைத்தல்)

392. மயினினைய வரவதுவு முதவியில வுடல்சரிய
வவனிமிசை மதித ளர்வுறக்
கையினயிலு முதவியில கணைகள்பல நிறையவவர்
கவலைமிகு வவச முறுகால்
புயல்வணனை மனமுருகி மிகத்தொழுது வருளுமென
புனிதமறை யுரைசெய் படியே
மயலொழிய விருகணிலு மருவிவர கரமுகிழ
மனதினவ னுருநி னையவே.

எ-து. அப்போது சுப்பிரமணியரானவர் சூரபன்மாவாகிய மயிலினை நினைக்க அதுவும் வந்து உதவியாகாமல் போய் அவருடைய சரீரமானது துளைபட்டுத்

தளர்ச்சியடைந்தும், கையில் இருக்கின்ற வேலாயுதமாகிய அஸ்திர தேவதையும் துணையாகாமல் போயது. இந்தக் காரணங்களையெல்லாம் மதித்துணர்ந்த வடிவேலவரானவர் நீருண்ட காளமேகம் போன்ற நாராயண மூர்த்தியினுடைய நித்திய அனந்த கலியாண விபூதி விக்கிரக சொரூபத்தை மனத்தினால் உபாசித்து வேத வாக்கிய பதக்கிரம சடைகளாலே தோத்தரித்த மாத்திரத்தில் மூர்ச்சைதெளிந்து இருகண்களிலும் ஆனந்தக்கண்ணீர் துளிக்க உச்சியில் கூப்பிய கராம்புயத்தையுடையவராய் இடைவிடாது நினைந்துருகினார் என்றவாறு. (15)

மயினினைய - மயில் நினைய - சூரபன்மனாகிய மயிலை நினைக்க. அயில் - கைவேல். அருவி - கண்ணீர். முகிழ்தல் - கூப்புதல். உரு - உருவம், வடிவம்.

**சிங்கவர்த்தனன் யுத்த அத்தியாயம் முற்றிற்று.**

## Murukaṉ Araṅkaṉai niṉaittal

*mayiniṉaiya varavatuvu mutaviyila vuṭalcariya*
*vavaṉimicai matita ḷarvuṟak*
*kaiyiṉayilu mutaviyila kaṇaikaḷpala niṟaiyavavar*
*kavalaimiku vavaca muṟukāl*
*puyalvaṇaṉai maṉamuruki mikattoḻutu varuḷumeṉa*
*puṉitamaṟai yuraicey paṭiyē*
*mayaloḻiya virukaṇilu maruvivara karamukiḻa*
*maṉatiṉava ṉuruni ṉaiyavē.*

## Murukaṉ Meditates on Araṅkaṉ

Cuppiramaṇiyaṉ thought of the peacock
But its coming was no help; his body
Grew weaker, as he fell on the earth
In a swoon; the lance in his hand
Was no help, nor the arrows.
As he grew worried thinking of this,
He meditated upon the cloud-hued Lord,
His heart praying for guardianship
According to the holy scriptures.
He was released from swoon,
His eyes grew wet, he held up
His palms in salutation and began
To meditate continuously.

# 21. பதினேழாவது
# சுப்பிரமணியர் சரணாகதி அத்தியாயம்

சிங்கவர்த்தனனாலே துன்பமடைந்த குமரனானவர் நரசிங்கவடிவாய் இரணியனைக் கொன்ற நாராயணனைத் துதித்தார். சதுர்ப்புயங்களோடு ஐம்படைகளையுடைய அனந்தசயன விமானசேகரரே! சிங்கவர்த்தனனை வதைத்து என் இடரினைப் போக்குவாயாக என்று வேண்டினார். அவரது வேண்டுகோளுக்கிரங்கி, கருடவாகனரூடராய்த் தோன்றிய நாராயணமூர்த்தியை வணங்கி, சூரபன்மன் முதல் அனேக அசுரர்கூட்டங்களை அழித்து வெற்றிகண்ட நான் இன்று சிங்கவர்த்தனனாலே வாட்டமுற்றேன். எனது துன்பத்தைப் போக்குவீர் என்று கூறி வேண்டினார்.

நாராயணமூர்த்தி கூறுகிறார்: சிங்கவர்த்தனன் பிரமதேவனது வரத்தினாலே இத்தகு சிறப்புபெற்றிருக்கிறான். நீவிர் என்னுடன் வாரும்; தக்க உபாயம் கூறுகிறேன் என்று கூற, இருவருமாக அசுரரது கோட்டைப் பாசறையில் நுழைந்தார்கள். அப்போது சூரியன் மறையுந்தருணமாயிற்று. அடுத்து வரவிருக்கும் சந்திரனுக்கு உலகப் பொருள்களைச் சுட்டிக்காட்டுதல்போல மேல் திசையில் சிவந்து விளங்கினான் அச்சூரியன். சிறிது நேரத்தில் கடலின் ஆழத்தை அளப்பவன்போலத் தன் கிரணங்களை நீரிலே செலுத்தி மறைந்தான். தேவியானவள் தன் கணவனாகிய கதிரவனைத் தேடிவந்ததுபோன்று மாலைக்காலம் வந்தது. இருள் சூழ்ந்தது. நட்சத்திரக்கூட்டங்கள் ஒளிவீசின. நாராயணமூர்த்தியுடன் வரும் குகனதுவரவைக் கண்ட அசுரனானவன் தனது படையை விட்டு வெற்றி முரசு கொட்டுமாறு செய்தான். அசுரர்களும் முரசறைந்து ஆரவாரம் செய்தார்கள்.

**(குமரன் அரங்கனைத் துதித்தல்)**

393. **கோர மிக்கவுயர் நார சிங்கவுரு**
**கொண்டு தேனஃ லர்கொண் மாலையான்**
**பார நற்சிலைகொள் வீர பொன்னனுயர்**
**மார்பி னைப்பிளவு பட்டிட**
**வீர னற்குடர் சரிந்து செம்புனல்கள்**
**விரிய வுண்டுவிய னசுரர்கள்**
**சார மற்றவர்க டிறன ழித்தசர**
**ணார விந்தமது சார்ந்தனன்.**

எ-து. இத்தன்மையாய்ச் சிங்கவர்த்தனனாலே கிலேசமடைந்த குமர குருபரமூர்த்தியானவர், கோரத்தினாலே மிகவும் உயர்ச்சியை அடையாநின்ற நாரசிங்கமூர்த்தியினது உருவத்தையெடுத்து, அனந்த கலியாண குணவிபூதி லீலைகளைச்

செய்தருளிய, தேன்களைச் சொரியாநின்ற மலர்மாலையை யுடையவன், பாரமாகிய காண்டீபத்தை வளைக்காநின்ற வீரத்தினால் உயர்ந்த இரணியாசூரனுடைய உயர்ந்த மார்பகமானது பிளந்து போகத்தக்கதாய் அவனது ஈரலையும் குடலினையும் சரியச் செய்து, செம்புனலாகிய குருதி வெள்ளங்களையெல்லாம் சுவறத்தக்கதாயுண்ட அளவில், பெரிய நான்குவகைச் சேனைகளும் வந்து வளைய அவர்களின் புசபலங்களை யெல்லாம் அழித்துக் கர்வபங்கம் படுத்துகின்ற நாராயணமூர்த்தியினது உபய சரணாரவிந்தங்களைச் சார்ந்து உபாசித்தார் சுப்பிரமணியர் என்றவாறு. (1)

நாரசிங்கம் - நரசிங்கம்; திருமாலவதாரம். சிலை - வில். பொன்னன் - பொன்னவன் - இரணியன். செம்புனல் - இரத்தம்.

**உரை** - சுவறல் - வற்றுதல்.

## Kumaraṉ Araṅkaṉait tutittal

*kōra mikkavuyar nāra ciṅkavuru*
*koṇṭu tēṉalarkoṇ mālaiyāṉ*
*pāra naṟcilaikoḷ vīra poṉṉaṉuyar*
*mārpi ṉaippiḷavu paṭṭiṭa*
*vīra ṉaṟkuṭar carintu cempuṉalkaḷ*
*viriya vuṇṭuviya ṉacurarkaḷ*
*cāra maṟṟavarka ṭiraṉa ḻittacara*
*ṇāra vintamatu cārntaṉaṉ.*

## XXI. Cuppiramaṇiyaṉ's Surrender

## Kumaraṉ Prays to Araṅkaṉ

Kumaraṉ now surrendered to the feet
Of the Lord who manifested as the terrible
Man-lion, and split open the chest
Of the heroic Iraṇiyaṉ who wore
Garlands of honey-dripping blossoms
And carried a well-wrought bow.
The intestines of the hero were spilt
And red blood flowed out as a stream.
When the asura army surrounded him
He had destroyed them as well.

(அரங்கனின் திருவடிகளை நினைந்து உருகுதல்)

394. வேத நற்சொரூப மாகி மிக்குயர்
விகங்க நற்புருடன் மீமிசைப்
பாதம் வைத்தொளிர் பரப்பி யண்டமுழு
துண்டு மிழ்ந்ததிறல் பரமனைக்
காதல் பெற்றவ ரிடுக்க ணீக்கியருள்
கமலக் கண்ணினைக் கருத்தினிற்
போத முற்றதிறல் குமர நற்குரு
குறித்து பொன்னடி [1]யடைந்தனன்.

எ-து. அப்படிச் சுப்பிரமணியரானவர் நாராயணமூர்த்தியினது உபய சரணாரவிந்தத்தினை இடைவிடாது உபாசித்த செயலை அறிந்து, வேதத்தினது காண்டங்கள், அட்டகங்கள், சாகைகள், பருச்சங்கள், வர்க்கங்கள், பதிக்கிரமச்சடைகள் முதலானவைகளை யெல்லாம் அவயவங்களாயுடைய மகமேருவினைப்போன்ற கருட பகவானின் பிடரியி னெழுந்தருளியவரது உபய கராம்புயமலரின் பாதகமலங்களைத் தரித்துப் பிரகாசித்து அண்டரண்ட பகிரண்டங்களை யெல்லாம் உண்டு மீட்டுமுமிழாநின்ற திறலினையுடைய பரமாத்மாவை யபேட்சித்து மெய்யன்பைச் செலுத்திய பேர்களின் இடுக்கண் நீக்கி அனுக்கிரகம் செய்யாநின்ற செந்தாமரைக் கண்ணினை உடையவனதருளைக் குறித்து வேத வேதாந்தங்களால் அவரது ஸ்ரீபாத கமலங்களைப் புகழ்ந்து உருகினார் என்றவாறு. (2)

விகங்கன் - கருடன் போதம் - ஞானம்.

**உரை** - அபேட்சித்தல் - விரும்புதல்.

பா.வே. - 1 புகழ்ந்தனன்.

## Araṅkaṉiṉ tiruvaṭikaḷai niṉaintu urukutal

*vēta naṟcorūpa māki mikkuyar*
*vikaṅka naṟpuruṭaṉ mīmicaip*
*pātam vaittoḷir parappi yaṇṭamuḻu*
*tuṇṭu miḻntatiṟal paramaṉaik*
*kātal peṟṟava riṭukka ṇikkiyaruḷ*
*kamalak kaṇṇiṉaik karuttiṉiṟ*
*pōta muṟṟatiṟal kumara naṟkuru*
*kuṟittu poṉṉaṭi yaṭaintaṉaṉ.*

## Meditating on Araṅkaṉ's Feet

Cuppiramaṇiyaṉ thus prayed at the feet
Of the Lord who is the image of Vēdas.
He rides the noble Karuṭa. His feet
Spread brilliance in all the worlds
Which he devours and recreates as well.
Kumaraṉ prayed to the Supreme Lord
Who has lotus eyes that chase away
The problems of his prayerful devotees,
The Lord who is the great teacher.

**(சிங்கவர்த்தனனின் கொடுமையிலிருந்து காக்க வேண்டுதல்)**

395. **கள்ள மிக்கதிற லசுரன் வஞ்சனை**
**கருத்தி னானுள மெலிந்தியான்**
**உள்ள நெக்குருகி யுனைய டைந்தன**
**னுயர்ந்த [1]வைம்படைகொ ளாழியாய்த்**
**தள்ள ரும்புகழ் படைத்த வித்தகுவர்**
**தானை வேந்தனை முடித்திடர்**
**விள்ள நற்கருணை புரிகு வாயெமது**
**விமலனே கருணை யமலனே.**

எ-து. இத்தன்மையாய் நாராயணமூர்த்தியின் அனந்த கலியாண விபூதி மங்கள குணங்களையும் உபாசித்துப் புகழ்ந்துருகிய குமரகுருபர மூர்த்தியானவர் விண்ணப்பம் செய்கிறார். கபட வஞ்சனையினாலே திறலமைந்த சிங்கவர்த்தனனால் யான் உளமெலிந்து நெக்குருகி உனது கருணாநிதியாகிய கிருபா நோக்கத்தால் உனது சரணாரவிந்தத்தை அடைந்தேன். ஐம்படையாகிய சங்கம், சக்கரம், கடகம், கோதண்டம், வாளாகிய ஐம்படைகளைத் தரிக்காநின்ற சதுர்ப்புசங்களையுடைய, திருப்பாற்கடலின் அனந்த சயன விமான சேகரரே! தள்ளுதற்கு அருமையவாகிய பெரிய வலியினைப் படைத்த விந்தத்தகுவராகிய வசுரர்கூட்டங்களினது சதுரங்க தளத்தினுக்கு வேந்தனாகிய சிங்கவர்த்தனனை வதைத்து என் இடரானது விட்டு நீங்கக் கருணையைச் செய்து பாதுகாப்பாய், எமக்கு விமலனாகியும் அமரர்களுக்குத் தலைவனாகியுமிராநின்ற நாராயணனே என்றார் சுப்பிரமணியர் என்றவாறு. (3)

விள்ளுதல் - நீங்குதல். விமலன் - தூயவன். அமலன் என்பதும் அது.

**உரை** - படைத்தவிந்தத்தகுவர் - படைத்த இந்தத் தகுவர் - தகுவர் - அசுரர்.

**பா.வே.** - 1. வெம்படை.

## Ciṅkavarttaṉaṉiṉ koṭumaiyiliruntu kākka vēṇṭutal

*kaḷḷa mikkatiṟa lacuraṉ vañcaṉai*
*karutti nāṉuḷa melintiyāṉ*
*uḷḷa nekkuruki yuṉaiya ṭaintaṉa*
*ṉuyarnta vaimpaṭaiko ḷāḻiyāyt*
*taḷḷa rumpukaḻ paṭaitta vittakuvar*
*tāṉai vēntaṉai muṭittiṭar*
*viḷḷa naṟkaruṇai puriku vāyematu*
*vimalaṉē karuṇai yamalaṉē.*

## Prayer for Deliverance from Ciṅkavarttaṉā's Terror

'Because of the evil and deceitful asura
I have grown weak within, and come to you
With a melting heart. Discus-wielder
Who carries fearsome weaponry!
Put an end to the commander of the asuras
Who are famed for their ferocious ways
And solve this crisis. O Pure One!
I seek your compassion. Blameless Lord!'

(அரங்கனின் தோற்றம்)

396. என்று கூறிகும ரேச னின்பொடு
இறைஞ்ச வெம்பெரும குருபரன்
சென்று நற்கருட னோடு மாமவுலி
திகழ குண்டல மிலங்கவே
மன்ற லந்துளப மாலை மாமணி
மருங்கி நிற்கனக வாடையு
நன்ற தாயொளி பரப்ப நாண்மலர்கொள்
பதுமை தன்னையு நயந்தனன்.

எ-து. இவ்விதமாய்ச் சரணாகதி அடைந்த குமரகுருபர மூர்த்தியானவர் வந்தனம் செயய, அந்த வந்தனையை மகிழ்வினால் ஏற்றருளிய நாராயண மூர்த்தியானவர் அவர்க்கெதிர்ந்து வந்தருளினார். எத்தன்மைய ரென்றால் எம்பெருமானாகியும், பரப்பிரம மூலகாரணரானவராயும், கருடவாகனரூடராய்த் திருச்சிரசிலே நவரத்தின மவுலியும், இரண்டு காதிலே கவச குண்டலங்களும் பிரகாசிக்கவும், திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற

துளபமாலையும், கவுத்துவாபரணமும் மார்பினில் பிரகாசிக்கவும், திருவரையில் பீதாம்பர உடையும், நன்கினையுடைய ஒளிகளைப் பரப்பவும், ஆயிரத்தெட்டு இதழினையுடைய பதும பீடிகையின் வீற்றிருக்காநின்ற ஸ்ரீ மகாலட்சுமி தேவியானவள் பிரகாசிக்கத்தக்கதாகவும் தோன்றினான் என்றவாறு. (4)

குமரேசன் - முருகபெருமான். பதுமை - தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி; பதுமப்பீடிகையில் வீற்றிருப்பவள், பதுமம் - தாமரை. நயந்தனன் - விரும்பினான், விரும்பி ஏற்றிருந்தான்.

**உரை** - எதிர்ந்து - எதிரில்.

## Araṅkaṉiṉ tōṟṟam

*eṉṟu kūṟikuma rēca ṉiṉpoṭu*
*iṟaiñca vemperuma kuruparaṉ*
*ceṉṟu naṟkaruṭa ṉōṭu māmavuli*
*tikaḷa kuṇṭala milaṅkavē*
*maṉṟa lantuḷapa mālai māmaṇi*
*maruṅki niṟkaṉaka vāṭaiyu*
*naṉṟa tāyoḷi parappa nāṇmalarkoḷ*
*patumai taṉṉaiyu nayantaṉaṉ.*

## Araṅkaṉ's Appearance

As Cuppiramaṇiyaṉ prayed soulfully,
Our gracious Lord rode the Karuṭa
To him. With his crown and ear-ornaments
Shining, fresh *Tuḷaci* garlands
And gem-encrusted necklaces on his chest,
And robed in a garment of golden sheen
All of which spread light, he appeared
Along with the Goddess on the Lotus.

**(சிங்கவர்த்தனனின் கொடுமையைக் கூறுதல்)**

397. வணங்கி நின்றகர முச்சி கூப்பிமகிழ்
கொண்டு ரைக்குமயி லவன்முன
மிணங்கு தேவசிறை செய்த சூரனிளை
யோரை மைந்தரை யொறுத்தயா

னுணங்கு கின்றனனவ் அசுர சேனைபதி
யொருவ னாலெளிய னாகியான்
குணங்க டங்குபுகழ் குன்றி னன்பரம
குரவ னேயமரர் தலைவனே.

எ-து. இத்தன்மையனவாகிய சர்வமங்கள வந்தனை யோக்கிய ரூபமாய்த் தோன்றிய ஸ்ரீமன் நாராயண மூர்த்தியைக் கண்டு ஆனந்தமடைந்த குமர குருபர மூர்த்தியானவர் அவர் திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்பித்துக் கராம்புய மலரை உச்சியில் கூப்பினவராய் மகிழ் சிறந்து விண்ணப்பம் செய்கின்றார். தேவரீர் திவ்விய திருவடிக்கு அடிமைப்பட்ட தேவர்கூட்டங்களையெல்லாம் ஆயிரத்தெட்டு அண்டமாண்டும் இந்திர ஞாலத் தேரினையுடையவனாய், நூற்றெட்டு சதுரியுகத்தின்அளவும் சயந்த மகாராசனாகிய இந்திர புத்திரன் முதலான பேர்களையெல்லாம் சிறைசெய்து பருவரல் படுத்துகின்ற சூரபன்மன், சிங்கமுகாசுரன், தாருகாசுரன் முதலாகிய முதல்வர்கள் மூவர்களையும் அவரது புத்திரராகிய பானுகோபன், இரணியாசூரன், அக்கினிமுகாசூரன், வச்சிரவாகு, மூவாயிரம் பிள்ளைகள், அதிசூரன், சுரேந்திரன், நூற்றுவர்கள் முதலானோர்களையும், மந்திரியாகிய தர்ம கோபன், துற்குணன், காலசித்து என்றோர்களையும், சேனாதிபதிகளாகிய கோர னதிகோரன், கசமுகன், தசமுகன், ஆயிரவாகுகளினனங் கூறுகின்ற அனேக கோடி வெள்ளங்களையும் தேவரீருடைய அனுக்கிரகத்தினாலே செயபதியாய்க் காண்டீபத்தினால் விசையங் கொண்ட யானிக்காலத்தில் அந்த சூரபன்மனது சேனாதிபதியாகிய சிங்கவர்த்தன னொருவனாலே வாட்டமுற்று எளியனாய்த் தருக்கிழந்தேன். அதனால் எனது செயகீர்த்திகளெல்லாம் மணமின்றிய முருக்கம் பூப்போலப் பயன்படாமற் போச்சுது. ஆகையால் எமது குருவாகியும், தேவாதிகளுக்கெல்லாம் பிதாவாகியும் இரட்சிக்கப்பட்ட கர்த்தனே என்று பணிந்தார் சுப்பிரமணியர் என்றவாறு. (5)

மயிலவன - மயிலை ஊர்தியாக உடைய முருகன். சூரன் - சூரபன்பன். இளையோர் - சிங்கமுகாசுரன், தாரகாசுரன் ஆகியோர். மைந்தர் - பானுகோபன் முதலாகிய மக்கள். நுணங்குதல் - வாடுதல. குணங்கடங்கு - குணங்கள் + தங்கு.

உரை - அணடம் - உலகம் சதுரியுகம் - நான்கு யுகமுங்கூடிய பேருகம். பருவரல் - துன்பம். தருககு - பெருமிதம.

## Ciṅkavarttaṉaṉiṉ koṭumaiyaik kūṟutal

*vaṇaṅki niṉṟakara mucci kūppimakiḻ*
*koṇṭu raikkumayi lavaṉmuṉa*
*miṇaṅku tēvaciṟai ceyta cūraṉiḷai*
*yōrai maintarai yoṟuttayā*

*ṉuṇaṅku kiṉṟaṉaṉav acura cēṉaipati*
*yoruva ṉāleḷiya ṉākiyāṉ*
*kuṇaṅka ṭaṅkupukaḻ kuṉṟi ṉaṉparama*
*kurava ṉēyamarar talaivaṉē.*

## About Ciṅkavarttaṉaṉ's Terror

The peacock-rider saluted, held his palms
On, his forehead and spoke happily.
'By your grace I defeated Cūraṉ
And his siblings and sons
Who had imprisoned the gods.
But by this single asura commander
Have I been stayed. O Lord
Famed for all-auspicious qualities!
Supreme! Lord of the Immortals!'

**(அசுரனை வெல்ல வேறு உபாயம் உண்டு எனல்)**

398. இன்ன வாறுதுயர் கூறு நற்கருணை
யிளவ றன்முக மதித்தபின்
அன்ன வாகன மிவர்ந்த நான்முக
னளித்த நல்லதொரு வரமதால்
தன்னை யேபொருவு தான வன்வலி
தணந்தி மாதுயர்வு தங்கினான்
அன்ன வன்றனை வதைக்க வேல்கொடு
அமர்த்தொ ழிற்புரித லரியதாம்.

எ-து. இவ்விதமாய்க் கூறுகின்ற தேவ சேனாதிபதியாகிய சுப்பிரமணியரது திருவாய் மலரக் கேட்டருளிய ஸ்ரீமன் நாராயண மூர்த்தியானவர் தமது திருவுளம்மகிழ்ந் தருளிச் செய்கின்றார். வாரீர் சுப்பிரமணியரே! அந்த அசுரனோ வென்றால் அன்னவாகனத்தில் ஆரோகணிதமான நான்கு திருமுகங்களை உடைய பிரம்மாவானவர் இந்த சிங்கவர்த்தனன் செய்த கோரமான தவத்தினுக்கிரங்கிக் கொடுத்த அந்த ஆயுத அஸ்திரங்களினாலும் அழிவில்லாத வரபாலனத்தைப் பெற்றிருக்கின்றான். ஆதலால் அந்த அசுரனை வெல்வதற்கு உனது சத்தி வேலானும் ஆகாதாகையால் அதற்கு வேறேயொரு உபாயம் இருக்குதென்றார், ஸ்ரீமன்நாராயண மூர்த்தி என்றவாறு. (6)

இளவறன் - இளவல் + தன்; முருகபெருமானுடைய. பொருவு - ஒப்பு, உருபு. தானவன் - அசுரன், சிங்கவர்த்தனன். தணந்திடாது - நீங்காமல்.

**உரை** - அஸ்திரம் - அம்பு.

### Acuraṉai vella vēṟu upāyam uṇṭu eṉal

*iṉṉa vāṟutuyar kūṟu naṟkaruṇai*
*yiḷava ṟaṉmuka matittapiṉ*
*aṉṉa vākaṉa mivarnta nāṉmuka*
*ṉaḷitta nallatoru varamatāl*
*taṉṉai yēporuvu tāṉa vaṉvali*
*taṇanti mātuyarvu taṅkiṉāṉ*
*aṉṉa vaṉṟaṉai vataikka vēlkoṭu*
*amartto ḻiṟpurita lariyatām.*

### Alternate Way to Overcome the Acura

Listening kindly to the celestial commander,
The Lord said: 'The Acura has gained
A boon from the swan-riding Piramaṉ.
Hence he has that superior power
To overcome others. It is not possible
To kill him even by battling
With your own invincible lance.

(சிங்கவர்த்தனன் ஆரவாரம்)

399. ஆத லானெனது பின்தொ டர்ந்துவரின்
அசுரன் மாளவலி கூறுதும்
போத வாவென புகன்ற மாதவன்
புரிந்த நற்கருணை பொலிவினாற்
சீத ளக்குமர னேக கண்டவசு
ரேசர் காவலன் செருக்கினா
னோத மாமென வுயர்ந்த பேரிகை
யொலித்து பாசறை யுய்த்தனர்.

எ-து. ஆகையினாலே எனது பின் தொடர்ந்து நீ வருவாயாகின் அசுரேந்திரனைச் செயித்து வதைக்கத்தக்கதாகிய வலியினை யான் கூறுகின்றேன். ஞான போதகத்தினையுடைய குகனே! நீ வரக்கடவாய், என்று அருளிச் செய்கின்ற மாதவனது கருணையாகிய திருவாய் மலரினானலர்ந்த திருவாக்கினாலே சீதளக் குமரனாகிய சாந்ததத்துவத்தினையுடைய குமரகுருபரனானவர் பின்தொடர்ந்து மறைந்து போகுதலைக் கண்ட அசுர சேனாதிபதியாகிய சிங்க வர்தனனானவன் மகிழ்சிறந்து விளங்க, செய பேரிகை அடித்தார்களது பெரும்புறக்கடல் போல முழங்கிற்றது. அப்பொழுது சிங்கவர்த்தனன் முதலாகிய சேனைக்கூட்டங்களானவை உற்ற பாசறையாகிய கோட்டையில் பிரவேசித்திருந்தார்க ளென்றவாறு. (7)

போதவன் - அறிவுடையோன். போதவ - ஞானக்குமரனே! அசுரேசர்காவலன - சிங்கவர்த்தனன். ஓதமாம்என - ஓதம் - கடல்; கடல் போன்று

**பா.வே.** - 1. உயர்ந்தனர்.

## Ciṅkavarttaṉaṉ āravāram

*āta lāṉeṉatu piṉto ṭarntuvariṉ*
*acuraṉ māḷavali kūṟutum*
*pōta vāveṉa pukaṉṟa mātavaṉ*
*purinta naṟkaruṇai poliviṉāṟ*
*cīta ḷakkumara ṉēka kaṇṭavacu*
*rēcar kāvalaṉ cerukkiṉā*
*nōta māmeṉa vuyarnta pērikai*
*yolittu pācaṟai yuyttaṉar.*

## Ciṅkavarttaṉā's Outcry

'Hence if you follow me
I will tell you of a method
To kill the Acura. Come!'
Led thus by the Lord's compassion
Cuppiramaṇiyaṉ followed him. Seeing this,
The Acura commander grew proud,
Beat a large drum creating sounds
Rivalling the sea. The Acura army
Returned to its tents.

வேறு

சூரியனஸ்தம்

400. புவன மியாவையு மாழியொன் றுருட்டியே பொருந்துங்
கவன வாம்பரிக் கதிரவ னத்தமாங் காலைத்
தவமி குத்தமற் றரையர்க்குத் தன்கரஞ் சுட்டிக்
குவல யப்பொருள் காட்டல்போற் சிவந்தனன் குடக்கின்.

எ-து. இந்தப் பூமண்டலங்களில் யாவையும் ஏகசத்திர பதியாகிய புவனசக்கிரேசுவரனாய்ச் சக்கரத்தை நடாத்திப் பொருந்துகின்ற வேகத்தினையுடைய வேதசந்த செழுங்குதிரைத் தொகுதியாயுடைய சூரிய தேவன், அத்தமானத்தை யடையும்போது தனதரசு நீங்கித் தவமிகுதியினாலே புவன சக்கிரேசுவரனாய் வருகின்ற இதரமான வரனாகிய சந்திரனுக்குத் தனது விரலினைச்சுட்டி இந்தப் பூமண்டலத்தின்கண் ணிலகாநின்ற பொருள்களையெல்லாம் அவனுக்கு ஒப்பித்துக் காட்டல் போன்று மேற்குத் திசைக்கண் சிவந்திருந்தான் என்றவாறு. (8)

கவனவாம்பரி - மிகுந்த வேகத்தையுடைய குதிரை, சிறந்தநடையையுடைய குதிரை. அத்தம் - மறைவு. மற்றரையர் - வேறு அரசர், சூரியனுக்கு வேறாகிய அரசன், சந்திரன். குடக்கு - மேற்கு.

## Vēṟu

## Cūriyaṉastam

*puvaṉa miyāvaiyu māḻiyoṉ ṟuruṭṭiyē poruntuṅ*
*kavaṉa vāmparik katirava ṉattamāṅ kālait*
*tavami kuttamaṟ ṟaraiyarkkut taṉkarañ cuṭṭik*
*kuvala yapporuḷ kāṭṭalpōṟ civantaṉaṉ kuṭakkiṉ.*

## Sunset

By moving a single wheel all over
The universe with a fast-speeding
Horse, the sun began to set
In the west, russet - coloured,
Showing a finger to the moon
As if pointing out the things on earth.

## வேறு

### (கதிரவன் கதிர்கள்)

401. சில்ப கல்கழிந் ததற்பினே குடகடல் சேர்ந்து
பல்க திர்த்தொகை நீரிடைப் படர்ந்திடற் பலவாம்
மல்கி யோங்குபொற் கழையினால் நீர்நிலை மதித்தற்
செல்லலொத்தன கதிரவன் செறிந்திடு மியல்பே.

எ-து. இவ்விதமாய்ச் சிவந்த கதிரவனானவன் சில காலம் சென்றபின்பு மேற்குத் திசைக் கடலின்கண் சேர்ந்த அளவின் அவனது பலகதிர்ச் சமூகங்கள் நீரின்கண் பிரதிவிம்பித்தல் எத்தன்மைத்தெனின் பலவாய்ப் பெருமை தாங்கிய பொன்னால் செய்தமைத்த மூங்கிலினாலே அக்கடலினது நீரளவையினை மதித்துப் பார்க்கும் தன்மையினை யொத்திருந்தது கதிரவனது கிரண சமூகமானது அந்தக் கடலினது நீரிலே தோன்றுதல் என்றவாறு. (9)

பகல் - நாள். மல்கி - மிகுந்து, பலவாகி. பொற்கழை - பொன்னால் ஆன மூங்கில். மதித்தல் - மதிப்பிடுதல், அளத்தல்

**உரை** - பிரதிவிம்பித்தல - பிரதி பிம்பித்தல் - போலியுருவமாகத் தோற்றுதல்.

## Vēṟu

### Katiravaṉ katirkaḷ

*cilpa kalkaḻin tataṟpiṉē kuṭakaṭal cērntu*
*palka tirttokai nīriṭaip paṭarntiṭaṟ palavām*
*malki yōṅkupoṟ kaḻaiyiṉāl nīrnilai matittaṟ*
*cella lottaṉa katiravaṉ ceṟintiṭu miyalpē.*

### Sun's Rays

After a while, when he reached the sea
Westwards, the many rays spread
Over the waters; it appeared as if
The sea was being sounded for its depth
By a golden bamboo.

(மாலைக் காலம்)

402. கதிர வன்கரந் திடுதலுங் காதலாற் காணச்
சதிய தானவள் சசிநுதல் கறைதில கமதாய்ப்
புதிய தாய்ச்சிவந் திடுமங்குற் பூந்துகிற் புனைந்து
கதியொ டுற்றுதே டியதுபோன் றதுகதிர் மாலை.

எ-து. சூரியதேவ ரஸ்தமானத்தை அடைந்த காலத்தின் அவனது தேவியானவள் அவனைத் தேடிப் பிரவேசித்தபோது, மூன்றாம் பிறைச் சந்திரனாகிய நெற்றியின்கண் ணதற்குத் தகுதியாகிய களங்கமென்கின்ற திலகப் பொட்டினையும், சிவந்த மேக சாலமாகிய பீதாம்பரத்தினையுடுத்து அதிவேகமாய்த் தேடி வந்தது போன்றது கதிரினையுடைய மாலைக்கால மென்றவாறு. (10)

கரந்திடுதல் - மறைந்திடுதல். சதியதானவள் - சதி - மனைவி; மனைவியானவள். சசி - சந்திரன்; சசிநுதல் - பிறைச்சந்திரனை நிகர்த்த நெற்றி. கறை - சந்திரனின் களங்கம். திலகம் - பொட்டு மங்குல் - மேகம். கதி - விரைந்த நடை.

## Mālaik kālam

*katira vaṉkaran tiṭutaluṅ kātalāṟ kāṇac*
*catiya tāṉavaḷ cacinutal kaṟaitila kamatāyp*
*putiya tāyccivan tiṭumaṅkuṟ pūntukiṟ puṉaintu*
*katiyō ṭuṟṟutē ṭiyatupōṉ ṟatukatir mālai.*

## Evening

As the sun set, when his consort
Came in his search, the evening
Appeared wearing a russet mantle.
Her moon-bright forehead seemed
To have the stain as an auspicious dot.

(இருட் கூட்டம்)

403. வான கத்தனி யேட்டினின் வரைந்தவக் கரம்போற்
பானி றத்தொளி தாரகை பரந்தவை பகரு
மூன மின்றிய வேட்டினின் மையினை யூட்ட
லான தாயதா விருட்குழா மந்தர மடைதல்.

எ-து. ஆகாயமென்கின்ற ஒப்பற்ற ஏட்டின் கண்ணே எழுதாநின்ற எழுத்தினது வருக்கம்போலப் பாலினது நிறமமைந்த தாரகையாகிய நட்சத்திரக் கூட்டங்களானவை பரந்து பிரகாசித்தன. ஞனமில்லாத யவ்வேட்டினுக்கு மையினையிட்டால் எத்தன்மைத்தோ அத்தன்மையதாய் இருட்கூட்ட சமூகங்களானவை அந்தரத்திலே தோன்றும் தன்மைய தென்றவாறு. (11)

அக்கரம் - எழுத்து. பானிறம் - பால்நிறம். தாரகை - நட்சத்திரம். ஊனமின்றிய ஏடு - தூய்மையான வானம். இருட்குழாம் - இருள்கூட்டம், மிகுந்த இருள் அந்தரம் - ஆகாயம்.

**சுப்பிரமணியர் சரணாகதி அத்தியாயம் முற்றிற்று.**

## Iruṭ kūṭṭam

*vāṉa kattaṉi yēṭṭiṉiṉ varaintavak karampōṟ*
*paṉi ṟattoḷi tārakai parantavai pakaru*
*mūṉa miṉṟiya vēṭṭiṉiṉ maiyiṉai yūṭṭa*
*lāṉa tāyatā lirutkuḷa mantara maṭaital.*

## Forces of Darkness

The milk-white stars spread and were
Like letters written on the palm-leaf
Of the skies. The night sky seemed
Like the pitch dark collyrium
Applied to palm leaves.

# 22. பதினெட்டாவது
# கோலாசல உற்பத்தி அத்தியாயம்

அசுரர்களின் ஆரவாரத்தைக்கண்ட அரங்கநாயகரும் முருகபெருமானும் அவ்விடம்விட்டு நீங்கினர். வடமேரு மலையை அடைந்தனர்; மலையின் வளங்களைக் கண்டு களித்தனர். அப்போது நாராயணமூர்த்தி, முருகபெருமானைப் பார்த்து, வராகங்களின் புணர்ச்சியால் தோன்றிய சுக்கிலத்தினைக் காட்டி, அச்சுக்கிலத்திலே உமது அமிசமாய்த் தோன்றி மேருமலையின் புத்திரராய் உருவெடுத்து வரக்கடவாய் என்று அருளிச்செய்தார். அதன்படியே குகனானவர் மலைவடிவமானார். முருகபெருமானது அமிசமாகிய அம்மலையிலே கற்பகம் முதலாகிய தருக்கள் நிறைந்த சோலைகளும், சுனைகளும் தடாகங்களும் நிறைந்து விளங்கின. அம்மலையின் மீது வச்சிராயுத மேந்திய இந்திரன் வடிவமாய்த் தோன்றிய நாராயண மூர்த்தியானவர் அமர்ந்தார். தேவர்கூட்டங்கள் தொடர அம்மலையினை நடத்தி வந்தார். அம்மலையானது ஆகாயவழி பறந்து வந்தது. சிங்கபுரத்திற்கு அருகிலே வரும்போது இந்திரனாக வீற்றிருந்த நாராயண மூர்த்தி அம்மலையின் சிறகினை வெட்டி வீழ்த்தினார். மலையானது அந்த நகரத்தின் மீது விழுந்து, அங்கிருந்த மாடமாளிகைகள், நால்வகைப் படைகள், சிங்கவர்த்தனனைச் சூழ்ந்திருந்த அசுரர்கள் போன்ற எல்லாவற்றையும் நசுக்கிப் பாதாலத்தில் அழுத்தியது.

முருகபெருமான் மகிழ்ச்சியடைந்து நாராயணமூர்த்தியை வணங்கி, அடியேன் உம்மைவிட்டகலாமல் இருந்து அனந்த கலியாணகுண வைபவத்தைக் கண்டு இன்புற அருள்புரிய வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். நாராயணமூர்த்தி சுப்பிரமணியரே! உமது பதினாறு கலைகளிலே ஒன்றினை இம்மலையிலே நிறுத்தி நிலைபெறச் செய்வீராக என்று கூறியருளினார். கீழ்த்திசையிலே தோன்றிய கதிரவனைக் கண்டு உலகின் இருட்கணங்கள் மறைந்தொழிந்தன. அச்செயலானது நரசிங்கத்தால் இரணியன் பிளவுபட்டது போன்று இருந்தது. காலைநேரத்து இயற்கைக்காட்சிகள் உள்ளத்தை ஈர்த்தன. ஆலயங்களில் சங்குகள் ஒலிக்க, தேவ ஆராதனைகள் நடைபெற்றன. அக்காலையில் அரங்கநாயகரின் கட்டளைப்படி குமரக்கடவுள் தம் கலைகளில் ஒன்றை அம்மலையிலே நிறுவி அங்கு வாசம் செய்யத் தொடங்கினார். மேலும் நாராயணமூர்த்தியானவர் முருகபெருமானிடத்திலே கூறுகின்றார்: நான் சிலகாலம் கழித்து என்னுடைய முழு அம்சத்துடனே இம்மலையில் எழுந்தருள வேண்டி உள்ளது நீர் இம்மலையிலே அதுகாறும் வீற்றிருக்கக் கடவீராக என்று அருள் புரிந்தார். அதன்படி வெற்றி வீரராகிய முருகபெருமான் அம்மலையின்கண் வீற்றிருந்தார். இச்செய்திகளை எல்லாம் நாரதர் கூறக்கேட்ட இந்திரனானவன் மகிழ்ச்சியடைய மேலும் அம்மலையினது சிறப்பினைக் கூறத்தொடங்கினார் நாரதர் என்று அச்செய்தியைச் சூதபுராணிகர் கூறுகிறார்.

அந்தக் கோலாசலத்தின் பெருமையை ஆதிசேடனாலும் கூறமுடியாது. பரவாசு தேவனாகிய நாராயணமூர்த்தியே விருப்புற்று அம்மலையில் எழுந்தருளியுள்ளார் என்றால் அதன் பெருமையை நான் கூற வேண்டுவதில்லை. இம்மூவுலகிலும் அதன் புகழ் விளங்கித்தோன்றும். பிறவித்துன்பத்தை ஒழித்து வீட்டின்பத்தை அளிக்கவல்ல அம்மலையினை ஒருமுறையாவது தரிசிப்பீராகில் அந்த நாராயணமூர்த்தியின் திருவடிகளிலே நித்திய சூரியர்களாய் விளங்குவீர்கள்.

மேலும் அம்மலையினை ஒரு நாளைக்கு உரித்தாகிய ஆறு காலங்களில் ஒரு காலம் வலம்வருவோர் இந்நில உலகில் அட்ட லட்சுமிகடாட்சம் பொருந்திய பேரரசராய் விளங்குவர். இரண்டுகாலம் வலம்வருவோர் இந்திர பதவியைப் பெற்று இந்திர போகத்தைப் பெறுவார்கள். மும்முறை வலம் வந்தவர்களோ பிரமலோகத்தில் வீற்றிருக்கும் பேற்றினைப் பெறுவார்கள். முக்காலமும் நடைபெறும் திருவாராதனைகளில் ஈடுபட்டுத் தரிசனம் செய்வோர் பரவாசு தேவனை விட்டு நீங்காத நித்திய சூரியர்களாய் விளங்குவார்கள் என்று கூறினார்.

**(குமரனும் நாரணனும் போர்க்களத்திலிருந்து வரும் வழி)**

404. இருதி றத்தினர்க ளேகி யாயிர
மிலங்கு மாமுடியி சைந்தபொன்
னுருவு தங்கியொளிர் மேரு மால்வரையி
னோடை செங்கமல வொள்ளிதழ்
மருவி யன்னம்விளை யாட வால்வளை
யொலித்து நின்றுமகிழ் கூர்தரும்
பெருகு [1]நல்லவள நோக்கி சாரல்செறி
சோலை பெற்றியை மகிழ்ந்தனர்.

எ-து. இந்தப் பிரகாரம் செயபேரிகை அறைந்த பின்பு ஸ்ரீமன் நாராயணமூர்த்தியும் குமரகுருபரனுமாகிய இருதிறத்தினர்களும் அந்த இரணகளத்தினை விட்டு நீங்கி அனேக யோசனைகளைக் கடந்து ஆயிரத்தெட்டு மாற்றாகிய சிகரங்களையுடைய வடமேரு கிரியில் தோன்றுகின்ற பலவளங்களை இருவரும் கண்ட காட்சியாவது பலபல ஓடைகளிலே ஆயிரத்தெட்டு இதழினை அலர்ந்து விரிக்காநின்ற செங்கமல பீடத்திலே அரச அன்னசமுகங்களானவை ஏறி விளையாட்டயரவும், வெண்மையினையுடைய வலம்புரி, இடம்புரி, சலஞ்சலம் முதலாகிய சங்கங்கள் அந்தத் தாமரை மலரினிவர்ந்து தொனித்துக் களிகூரவும் அத்தன்மைத்தாகிய சிங்கார வளங்களையெல்லாம் கண்ணுற்று மகிழ் சிறந்தார்கள் என்றவாறு. (1)

முடி - மலை உச்சி. வால்வளை - வெண்சங்கு. சாரல் - மலைச்சாரல், மலைப்பக்கம்.

**பா.வே.** - 1. பல்லவள.

### Kumaraṉum Nāraṇaṉum pōrkkaḷattiliruntu varum vaḻi

*iruti ṟattiṉarka ḷēki yāyira*
*milaṅku māmuṭiyi caintapoṉ*
*ṉuruvu taṅkiyoḷir mēru mālvaraiyi*
*ṉōṭai ceṅkamala voḷḷitaḷ*
*maruvi yaṉṉamviḷai yāṭa vālvaḷai*
*yolittu niṉṟumakiḻ kūrtarum*
*peruku nallavaḷa nōkki cāralceṟi*
*cōlai peṟṟiyai makiḻntaṉar.*

## XXII. Rise of the Kōla Hill

### Kumaraṉ and Nārāyaṇa Come Away from the Battlefield

The two, Kumaraṉ and Nārāyaṇaṉ,
Left the field and journeyed forth
Watching the beauty of North *Mēru*
Which has large, golden peaks.
They perceived with joy red lotuses
In bloom; there the swans sported;
White conches sounded; in the valley
Nature's beauty echoed these sounds.

(வழியில் மகமேருவின் காட்சி)

05. குன்ற கோபுர முயர்ந்த நல்வள
குளங்க ளல்லிமலர் குறைவிலா
மன்றல் வீசிமண நாறு தென்றல்தவழ்
மாவி னந்தளி ரரும்பிய
அண்ட வாணர்கள் வளர்த்த வோமதழ
லாகு மீதென அறைந்தவர்
சென்ற காலைதிரு மாலி னின்னருள்
சிறப்பி னானிவை நினைந்தனர்.

எ-து. பின்பு அந்த மகமேருவினில் இருவரும் கண்ட அதிசயமாவ தென்னென்றால் கிரியினை யொத்தன வாகிய அபரஞ்சி, நவரத்தின கசிதமாகிய கோபுர நிரைகளும் உயர்ந்த நல்ல வளங்களாகிய செந்தாமரை, வெண்டாமரை, செவ்வல்லி, நீலோற்பலம், செங்கழுநீர் முதலாகிய புட்ப சமுகங்களையுடைய தடாக பந்திகளில் செவ்வல்லி புட்பங்கள் அபரிமிதமாய் அலர்ந்து பிரகாசிக்கவும், மன்றலாகிய திவ்விய பரிமளங்களை வீசி மணம் நாறுகின்ற தென்றல் காற்றானது தவழா நின்ற காலையில், மாமரக்காவெல்லாம் தளிரை விரித்துத் தழைத்திருப்பதைக் கண்டார்கள். இது தேவர்கள் கூடிச் செய்யாநின்ற யாகத்தினது சிகையாகிய வாகவனீயங் காருகபத்தியந் தெட்சணாக்கினியினது சொலிக்கும் கொழுந்து வென்று எண்ணினார்கள். அப்போது திருமாலானவர் தமது கருணையின் அதிச் சாமர்த்தியத்தால் திருவுளத்தில் மதித்திவை நினைந்தருளினார் என்றவாறு. (2)

மன்றல் - மணம், வாசனை. மாவினம் - மாமரங்களின் தொகுதி. அண்டவாணர் - தேவர். ஓமதழல் - யாகத்தீ.

**உரை** - அபரஞ்சி - புடமிட்ட பொன். கசிதம் - பதித்தல். சிகை - சுவாலை. ஆகவனீயம், காருகபத்தியம், தெட்சணாக்கினியம் - என்னும் மூன்றும் மூவகை வேதாக்கினிகளாகும்.

## Vaḻiyil makamēruvin̲ kāṭci

*kun̲r̲a kōpura muyarnta nalvaḷa*
*kuḷaṅka ḷallimalar kur̲aivilā*
*man̲r̲al vīcimaṇa nār̲u ten̲r̲altavaḻ*
*māvi n̲antaḷi rarumpiya*
*aṇṭa vāṇarkaḷ vaḷartta vōmataḻa*
*lāku mīten̲a ar̲aintavar*
*cen̲r̲a kālaitiru māli n̲in̲n̲aruḷ*
*cir̲appi n̲ān̲ivai nin̲aintan̲ar.*

## The Great *Mēru*

High peaks, noble ponds rich with water
Where innumerable lilies bloomed;
The wind blew, plentifully scented;
Serried formations of mango trees
Full of green shoots which seemed to them
As the flames of sacrificial fires
Ignited by the immortals. All these
Were indeed due to the grace of the Lord.

(இரண்டு வராகங்கள்)

406. துடித்த சூரரை வதைத்த சேவலன்
சிறந்த நற்புக ழலர்ந்திடப்
படித்த லத்தினை யளந்த தாமரை
பதத்த னற்கருணை பண்பினா
னிடித்தெ ழுந்திரு வராக நல்லுரு
வெடுத்து லீலைக ளிழைத்திட
வடித்த சுக்கில முதித்தெ ழுந்திட
மதித்து ரைத்தனன் மகிழ்வினால்.

எ-து சூர பன்மன் முதலாகிய அசுரர்களை வதைக்கா நின்ற சேவலனாகிய சுப்பிரமணியரது செயமாகிய நல்ல புகழான மணங்கமழ்ந்தோங்கி அலர்ச்சியை அடையத்தக்கதாய் இந்தப் பூமியையெல்லாம் அளந்து அருளிய பாததாமரையினையுடைய பரநதாமனானவர் தமது அதிச்சாமர்த்திரத்தால் இடிகளைப் போல கோஷ்டித்து வராநின்ற இரண்டு வராகமானவை ஆணும் பெண்ணுமாய் சரச, சல்லாப, வினோத, லீலைகளை அனுபவிக்க, அதிலே நின்றும் சுக்கிலமானது உண்டாக அதைக்கண்ணால் கண்டருளிய சர்வபூமனானவர் களிகூர்ந்தருளிச் செய்கின்றார். (3)

சேவலன் - சேவற்கொடியோன், முருகன், படித்தலம் - நிலவுலகம், பூமி, தாமரைபதத்தன் - தாமரை மலர் போன்ற திருவடிகளையுடையவன், திருமால்.

### Iraṇṭu varākaṅkaḷ

*tuṭitta cūrarai vataitta cēvalaṉ*
*ciṟanta naṟpuka ḻalarntiṭap*
*paṭitta lattiṉai yaḷanta tāmarai*
*patatta ṉaṟkaruṇai paṇpiṉa*
*ṉiṭitte ḻuntiru varāka nalluru*
*veṭuttu līlaika ḷiḻaittiṭa*
*vaṭitta cukkila mutitte ḻuntiṭa*
*matittu raittaṉaṉ makiḻviṉāl.*

### Two Boars

To increase the fame of Cuppiramaṇiyaṉ
Who killed the powerful Cūraṉ,
There appeared the lotus feet
That had measured the three worlds.

The Lord now manifested as twin boars
Out of compassion to perform a divine play.
Their togetherness brought forth
A creative stream. The Lord said happily:

(குமரன் மலை வடி வாதல்)

407. பெருகு சுக்கில மதிற்பு குந்துபிரி
யாத மாமலையி னுருவதாய்
வருக வென்றுகுக னுக்கு ரைக்கமகிழ்
கொண்டு சென்றதின் வதிந்தனன்
னுருவு கொண்டுமக மேரு [1]வாமென
உயர்ந்த நல்லுரு வெடுத்தபின்
திருவு தங்குசிறை தங்க மாமென
திகழ்ந்தொ ளிர்ந்திட சிறந்தனன்.

எ-து. ஸ்ரீமன் நாராயண மூர்த்தியானவர் சுப்பிரமணியரைப் பார்த்துத் திருவாய் மலர்ந்தருளுகின்றார். அத்தன்மைத்தாகிய மகமேருவிலே பெருகாநின்ற சுக்கிலத்தின்கண் ணுனதங்கிசமாய் அவதரித்து மகமேருவினது புத்திரனாய் உருவெடுத்து வரக்கடவாய் என்றருளிச் செய்த மாத்திரத்திலே அவரும் மகிழ்ச்சியை அடைந்தந்த சார்வமு மனுக்கிரகப் பிரகாரமந்தச் சுக்கிலத்திற் றனதங்கிசத்தைச் செலுத்தினார். அதன்பின்பு மகமேரு புத்திரனாகிய மலை உருவெடுத்துத் திருவானது தங்கியிராநின்ற சிறையடிகளானவை ஆயிரம் மாற்றுத் தங்க உருவாய் விளங்கி ஒளி சிறந்திடக் கிரி உருவமாயினார் என்றவாறு. (4)

சிறை - சிறகுகள். தங்கமயமான சிறகுகளோடு கூடிய மலை வடிவம்.

பா.வே. - 1. புத்ரனென.

## Kumaraṉ malai vaṭi vātal

*peruku cukkila matiṟpu kuntupiri*
*yāta māmalaiyi ṉuruvatāy*
*varuka veṉṟukuka ṉukku raikkamakiḻ*
*koṇṭu ceṉṟatiṉ vatintaṉaṉ*
*ṉuruvu koṇṭumaka mēru vāmeṉa*
*uyarnta nalluru veṭuttapiṉ*
*tiruvu taṅkuciṟai taṅka māmeṉa*
*tikaḻnto ḷirntiṭa ciṟantaṉaṉ.*

## Kumaraṉ becomes a Mountain

'Enter the stream of semen to become
An immense mountain'. Cuppiramaṇiyaṉ
Plunged in with pleasure, rose again
As a mountain, immense as the great *Mēru*.
Manifesting thus with golden wings
He was as it were the residence
Of the Goddess of Wealth.

(அம்மலை மீது இந்திரவடிவில் நாரணன்)

408. அந்த மால்வரையி னிந்தை யிற்கமுக
லர்ந்த சோலைக ளடைந்திட
முந்து நற்சுனை தடாக பந்திகளின்
முளரி மாமலர்கண் மொய்த்திட
இந்தி [1]ரன்னுருவு பெற்று கேசவ
னிசைந்த வச்சிர மிலங்கவே
சுந்த ரக்கிரியின் வந்து தித்தனர்
சுராதி பன்முனிவர் சூழவே.

எ-து அத்தன்மைத்தாகிய மகமேரு கிரியினது அபுத்திரனாகிய சுப்பிரமணியரது அங்கிசையாகிய கிரியிலே சுகுணமான கமுகந் தோப்புகளும் அனேகமாகிய நந்தனவனங்களிலே அலரா நின்ற கற்பகம், மந்தாரம், பாரிசாதம், செண்பகம் முதலாகிய நானாவிதமான புட்பங்களையுடைய சோலைகளடைந்தோங்கத் தக்கதாய் முதன்மையாகிய நல்ல சுனைகளும், தடாக பந்திகளும், அதன் நடுப்பிரதேசத்திலே செந்தாமரைக் கமலங்கள், வெண்டாமரைக் கமலங்கள் அலர்ந்து அளவிறந்தது பிரகாசிக்கவும், அத்தன்மைத்தாகிய கிரியின் மீது வச்சிரபாணியாகிய இந்திர மகாராசனுடைய உருவினை எடுத்து நாராயணமூர்த்தியாகிய சார்வ பூமனானவர் ஆரோகணிகதமாய் ஏறி நடாத்தி வரும்போது தேவர்க்கூட்டங்களும், முனிவரீட்டங்களும் சூழ்ந்து வந்தார்கள் என்றவாறு. (5)

உரை - சார்வபூமன் - ஒருவனைப் பணியாது உலகாளபவன்.

பா.வே. - 1 ரன்னுருவு கேசவன்னிசைவு பெற்று வச்சிர.

### Ammalai mītu Intiraṉvaṭivil Nāraṇaṉ

*anta mālvaraiyi ṉintai yiṟkamuka*
*larnta cōlaika ḷaṭaintiṭa*
*muntu naṟcuṉai taṭāka pantikaḷiṉ*
*muḷari māmalarkaṇ moyttiṭa*
*inti raṉṉuruvu peṟṟu kēcava*
*ṉicainta vaccira milaṅkavē*
*cunta rakkiriyiṉ vantu tittaṉar*
*curāti paṉmuṉivar cūḻavē.*

### Nārāyaṇaṉ as Intiraṉ on the Mountain

On their mountain were found
Groves of betel-nut trees;
There appeared a line of ponds
Where blossomed thick, large lilies.
The Lord took the form of Intiraṉ
And with a shining thunderbolt in hand
He appeared on the top of the lovely hill
With Intiraṉ and other sages.

(நாரணன் மலையின் ஒரு சிறகை வெட்டி வீழ்த்துதல்)

409. மேரு மால்வரை சுபுத்திர னாமென
விளங்கி விண்ணிடை யெழுந்திடச்
சோர்வின் மாமகுட குண்ட லந்திகழ்
சிறந்த விந்திர னடத்திடக்
காரு லாவுகடல் சென்று வெண்டிசை
கடந்து சிங்கபுர மணுகிடத்
தாரு லாவுசிறை வாளி னாற்கூடிய
நகரின் வீழ்ந்தவரை சார்ந்ததால்.

எ-து. மேரு மால்வரையானது அனேக தவம் செய்யாநின்றருளிய நற்குண நற்செய்கையினையுடைய சுபுத்திரன் என்று யாவரும் துதிக்கத் தக்கதாகிய அந்த கிரியானது ஆகாயத்தின் கண்ணிலே பறக்கும்போது அதிலே எழுந்தருளிய நாராயண மூர்த்தியானவர்

அணிந்த நவரத்தின கசிதமாகிய கிரீடமும் மகர குண்டலங்களும் ஆயிரம் தாமரைபோன்ற கண்களும் பிரகாசிக்க இந்திர உருவமாய் அந்தக் கிரியை நடாத்திக் கருங்கடல் முதலாகிய எழுகடலினையும் எட்டுத்திக்கினையும் நீங்கிச் சிங்கபுரத்துக்கு அணித்தாய் வந்த மாத்திரத்தில் செயம் கொள்ளும் தன்மையினை யோசித்த சார்வபூமனானவர் அந்த நகரப்பிரதேச நடுவிலே கிரியை நடாத்தி அது வந்த நடு மத்தியிலே வந்த போதந்த பர்வதத்தினது சிறகினை இந்திரனாகிய நாராயண மூர்த்தியானவர் தமது வச்சிர வாளினாலே வெட்டிச் சாய்த்தார். அப்போது அந்தக் கிரியானது அந்த நகரத்தின் மேலே வீழ்ந்தது என்றவாறு. (6)

சுபுத்திரன் - நற்புத்திரன், நற்குணமுடைய மகன் சிறை - சிறகு.

## Nāraṇaṉ malaiyiṉ oru ciṟakai veṭṭi vīḻttutal

*mēru mālvarai cuputtira ṉāmeṉa*
*viḷaṅki viṇṇiṭai yeḻuntiṭac*
*cōrviṉ māmakuṭa kuṇṭa lantikaḷ*
*ciṟanta vintira ṉaṭattiṭak*
*kāru lāvukaṭal ceṉṟu veṇṭicai*
*kaṭantu ciṅkapura maṇukiṭat*
*tāru lāvuciṟai vāḷi ṉāṟkūṭiya*
*nakariṉ vīḻntavarai cārntatāl.*

## Nārāyaṇaṉ cuts down the Mountain's Wing

The mountain had risen shining
As a noble son of the *Mēru* Mountain.
When it began to fly in the skies
The Lord wearing ear-ornaments piloted it,
Crossed the seas and the eight directions
To reach Ciṅkapuram. Here the Lord
Cut down its wing so that
It fell on the city spaces.

(மலை கீழே விழ அசுரர் கூட்டம் அழிதல்)

410. வீழ்ந்த மாமலையி னானி டிந்தன
விளங்கு மாளிகை சிறந்ததேர்
தாழ்ந்த யானைபரி காவ லாளர்கள்
தயங்கு மெய்பதை பதைத்திடச்

சூழ்ந்த மந்திரியர் சிங்க வர்த்தனொடு
　　சிதைவு பட்டுள மெலிந்தனர்
ஆழ்ந்த நன்னக ரழிந்தி டக்குமர
　　னகம லர்ச்சியின் மலர்ந்தனன்.

எ-து. அத்தன்மைத்தாய் அந்த நகரத்திலே வீழ்ந்த மலையினாலே மாடமாளிகைப் பரப்பமைந்த வீதிகளெல்லாம் இடிந்து வீழ்ந்தன. சிறப்பமைந்த தேர்க்கூடங்களெல்லாம் கலகலவென்று இடிந்து முறிந்து விழுந்தன. வேழமான யானைகளெல்லாம் பூனைகளைப் போல நசுங்கிப் போச்சுது. குதிரைக் கூட்டங்களெல்லாம் நலிந்து வீழ்ந்தன. பதாதிபந்திகளெல்லாம் தூளிப்படலமாச்சுது. இப்படியாகிய நான்கு வகைச் சேனைகளும் பதைபதைத்தார்கள். சிங்கவர்த்தனனைச் சூழ்ந்திராநின்ற அணித்தலைவர், யூகத்தலைவர், பட்டவர்தனர், மகுடவர்தனர், அர்த்தரதர், சமரதர், மகாரதர், மந்திரிமார்கள், புத்திர பவுத்திரர்கள் முதலாகிய பேர்களெல்லாம் இராசேந்திரனுடனே சிதைவு பட்டு உளம் மெலிந்து பதைத்து தூளிப்படலமாயினார்கள். அந்த நகரமானது பாதாளம் பரியந்தம் ஆழ்ந்து போச்சுது. அதைச் சுப்பிரமணிய தேவரானவர் கண்டு மகிழ்சிறந்து களிகூர்ந்தார் என்றவாறு. (7)

உரை - அர்த்தரதர், சமரதர், மகாரதர் - சேனைத் தலைவர் வகை.

## Malai ki̲le vi̲la Acurar kūṭṭam a̲lital

*vi̲lnta māmalaiyi ṉāṉi ṭintaṉa*
　　*viḷaṅku māḷikai ciṟantatēr*
*tā̲lnta yāṉaipari kāva lāḷarkaḷ*
　　*tayaṅku meypatai pataittiṭac*
*cū̲lnta mantiriyar ciṅka varttaṉoṭu*
　　*citaivu paṭṭuḷa melintaṉar*
*ā̲lnta naṉṉaka ra̲linti ṭakkumara*
　　*ṉakama larcciyiṉ malarntaṉaṉ.*

## The Acura Hordes Destroyed by the Wing

Because of the fallen mountain wing
The high-rise buildings were destroyed.
Also the noble chariots, elephants,
Horses and soldiers. The four wings
Of the army shuddered.
The ministers surrounded Ciṅkavarttaṉaṉ,
Grew weak of will. Their hearts

Became despondent. As the large city
Was shattered completely,
Cuppiramaṇiyaṉ became happy.

(குமரன் நாரணனிடம் வேண்டுதல்)

411. கமலக் கண்ணனிரு சரண பங்கயங்
கமழ்ந்த தாளிணை வணங்கியே
அமல மானகுக னறைகு வானடிய
னனுதி னமுமுனை யகன்றிடா
விமல வெற்கருள் புரிந்தி டாயென
விளம்பு வானுனது கலையினின்
நிமல மானதொரு கலைநி கழ்ந்திட
நிறுத்து வாயென நிகழ்த்தினான்.

எ-து. ஆயிரமிதழினையுடைய செங்கமலத்தினை யொத்த தாமரைக்கண்ணனுடைய மணங்கமழா நின்ற உபய சரணார விந்தத்தை வணங்கினவராய்ச் செயசாலியாய் அசுரகுல காலனாகிய சுப்பிரமணியர் விண்ணப்பம் செய்கின்றார். அடியேனானவன் சந்ததமும் உனைவிட்டகலாமல் எப்பொழுதும் உனது அனந்த கல்யாண குண வைபவ சேவையைக் கண்டு ஆனந்த இன்பத்தை யான் அடையத்தக்கதாய் எனக்கருள் கூர வேண்டுமென்று வரபாலனம் கேட்ப, அந்த சுப்பிரமணியரைப் பார்த்தருளிச் செய்கின்றார். வாராய் சுப்பிரமணியரே! உமது தேசோமயமாகிய சோடச கலைகளில் ஒரு கலையினை இந்தக் கிரியிலே அனுதினமும் நிறுத்திடக் கடவாயென்றி யாக்கியாபணம் செய்தருளினர் என்றவாறு. (8)

அமலம - தூய்மை. விமலன் - தூய்மையானவன். நிமலம் - நின்மலம் - தூய்மை.

உரை - சோடசகலை - பதினாறு கலை

## Kumaraṉ Nāraṇaṉiṭam vēṇṭutal

*kamalak kaṇṇaṉiru caraṇa paṅkayaṅ*
*kamaḻnta tāḷiṇai vaṇaṅkiyē*
*amala māṉakuka ṉaṟaiku vāṉaṭiya*
*ṉaṉuti ṉamumuṉai yakaṉṟiṭā*
*vimala veṟkaruḷ purinti ṭāyeṉa*
*viḷampu vāṉuṉatu kalaiyiṉiṉ*
*nimala māṉatoru kalaini kaḻntiṭa*
*niṟuttu vāyeṉa nikaḻttiṉāṉ.*

## Kumaran's Prayer to Nārāyaṇan

Saluting the scented lotus-feet
of the Lord who has lotus-eyes,
The blemishless Cuppiramaṇiyan spoke;
'I should be granted the boon
Of never being separated from you,
O Pure One! Grant me this!'
The Lord said: 'Retain one of your rays
Daily on the peak of this hill.'

### வேறு

### சூரிய உதயம்

412. தெண்டி ரைக்கடன் முகட்டினிற் கதிரவன் றேரோ
டண்ட வாணர்கண் முதலினர் வழுத்திட வலர்ந்த
புண்ட ரீகத்திற் றோய்கதிர் விரிந்திடப் பொரிந்து
கண்ட துண்டம தாயது கனவிருட் பிழம்பே.

எ-து. தெளிந்த அலையினையுடைய கீட்டிசை முகட்டினில் கதிரவனாகிய சூரிய தேவன் சத்த புரவியோடும் கூடி இரதாரூடனாய் அண்டவாணர்களாகிய தேவர்கூட்டங்கள் முதலான திரிபுவன சமஸ்த சீவராசிகளும் தோத்தரிக்க அலர்களை விரித்தொளிராநின்ற தாமரைக் கமலத்தின்கண் பொருத்துகின்ற தனது கிரணமாயிரத்தினையும் விரித்துப் பிரகாசித்த மாத்திரத்தின் கண்டதுண்டப்பட்டுப் பங்கப்பட்டு முறிந்து போய்விட்டது அண்டங்களை மூடிய விருட்கூட்டங்கள் என்றவாறு. (9)

முகடு - உச்சி; கடல் முகடு என்பது கீழ்வானத்தொடக்கம். தோய்தல் - உறைதல், கலத்தல். இருட்பிழம்பு - இருள்தொகுதி.

## Vēṟu

### Cūriya utayam

*teṇṭi raikkaṭaṉ mukaṭṭiṉiṟ katiravaṉ ṟērō*
*ṭaṇṭa vāṇarkaṇ mutaliṉar vaḻuttiṭa valarnta*
*puṇṭa rīkattiṟ ṟōykatir virintiṭap porintu*
*kaṇṭa tuṇṭama tāyatu kaṉaviruṭ piḻampē.*

## Sun Rise

On the edge of the southern sea
Rose the sun in his chariot
Along with celestials and others.
They were saluted by men. As the rays
Of the sun struck the lotuses
Darkness was cut to pieces
And chased away.

(சூரிய கிரணங்கள்)

413. பொன்னின் பேரினோ னுலகெலா நடுங்கிடப் பொருந்துந்
தன்னை யேபர மாமென நாட்டதா ரணியின்
என்னை யாளுடை நாரசிங் கத்தவ னெழுந்து
அன்ன வன்றனை யட்டல்போற் கதிரிரு ளட்டல்.

எ-து பொன்னின் பெயரினையுடைய இரணியா சுரனானவன் இவ்வுலகத்தில் புவன சக்கிரேசுவரனாய்ச் சக்கரம் உருட்டிய தலைவனாய்த் தன்னைப் பிரமமென்று இவ்வுலகத்தின்கண் ணல்தவ ஞானத்தின் எடுத்து, என்னையும் ஒரு பொருளாய் ஆட்கொண்டருளிய நாரசிங்க உருவாய் வந்து எம்பெருமானானவர் அந்த இரணியாசுரனைப்பிளந்ததுபோல் இருந்தது சூரியனது கிரணங்களால் இருளினை விழுங்கலான தென்றவாறு. (10)

இரணியம் - பொன். தாரணி - பூமி. அட்டல் - அழித்தல்.

## Cūriya kiraṇaṅkaḷ

*poṉṉiṉ pēriṉo ṉulakelā naṭuṅkiṭap poruntun*
*taṉṉai yēpara māmeṉa nāṭṭatā raṇiyiṉ*
*eṉṉai yāḷuṭai nāraciṅ kattava ṉeḻuntu*
*aṉṉa vaṉṟaṉai yaṭṭalpōṟ katiriru ḷaṭṭal.*

## Rays of the Sun

The manner in which the rays devoured
The darkness was like my Lord
Rising and destroying Iraṇya
Who had announced himself
As the emperor of the world, the Supreme.

(காலைக் காட்சி)

414. கயத்திற் பண்ணையிற் றடாகபந் தியினிடை களித்து
வியத்த காமர மளியினம் மிழற்றிட விரிந்த
நயத்த தாகிய நளினங்க ளாம்பல்க ணயந்து
பயத்த டைந்தன வளியினம் படர்ந்தன பாங்கர்.

எ-து. கயங்களினும் பண்ணைகளாகிய வயலிடத்தினும் தடாகபந்திகளினும் யாவரும் வியக்கா நின்ற காமர இசைப்பாட்டினை வண்டினங்கள் இசைத்து மூக்கினாலுழுது சிறகினால் அடித்து சட்பதங்களால் வருட, இதழ்களை விரிக்காநின்ற நயப்பினையுடைய நளினங்களான தாமரை சமூகங்களெல்லாம் மகிழ்வெய்திட ஆம்பல்களாகிய செவ்வல்லிகளெல்லாம் நலியப்பட்டுப் பயப்பிராந்தியை அடைந்தன; அவற்றின்கண் இசைப்பாட்டினை மிழற்றுகின்ற வண்டினங்களானவை பாங்காகிய அக்குளத்துக்கு அருகான உத்தியான வனத்தினும் தாமரைக் கரணிகையினும் வதிந்தன வென்றவாறு. (11)

கயம் - நீர் அறாத அகழி. தடாகம் - குளம். காமரம் - இசை. அளிஇனம் - வண்டுகளின் கூட்டம்.

**உரை** - சட்பதம் - சட் (ஷட்) - ஆறு; பதம் - கால்கள். நயப்பு - அழகு, சிறப்பு. நலிதல் - வருந்துதல், வாடுதல்.

## Kālaik kāṭci

*kayattir̲ paṇṇaiyir̲ r̲aṭākapan tiyiṉiṭai kaḷittu*
*viyatta kāmara maḷiyiṉam mil̲ar̲r̲iṭa virinta*
*nayatta tākiya naḷiṉaṅka ḷāmpalka ṇayantu*
*payatta ṭaintaṉa vaḷiyiṉam paṭarntaṉa pāṅkar.*

## Dawn

In the ponds, in the fields
And in the lakes, the bees droned
The kāmara tune bringing joy
To listeners; lotuses bloomed
In joy; lilies closed with fear.
Droves of bees spread everywhere.

(காலை வேளைப் பூசை ஒலி)

415. வேத கீதங்க ளெழுந்தன வெழுந்த[1]வீக் கணங்கள்
பாத தாமரை யரியினைப் பரவி மானிடர்க
ளாத ரத்துட னெழுந்தனர் ஆர்த்தன சங்கம்
நாதன் பூசனைக் கருகத்தோ [2]டமைத்தனர் நரரே.

எ-து. இவ்விதமாய்க் கீழ்த்திசை முகட்டினின் அருணசாரதியர் நடாத்தாநின்ற இரதத்துடனே கதிரவன் தோன்றிய அளவின் வேத கீதங்களானவை இவ்வுலகின்கண் முழங்கின. பட்சி சாலங்களெல்லாம் எழுந்தன. பாதபங்கயத்தினையுடைய நாராயணமூர்த்தியை அந்தப் பிராத காலத்தின் உபாசித்த மானிடர்களெல்லாம் ஆதரத்துடனே திருக்கண் மலர்ந்தார்கள். சன்னதிகடோறும் சங்கநாதத் தொனியான தார பாரித்து நாதனாகிய வச்சுதன் பரந்தாமனது திருவாராதனைக் கணுக்கமாகிய சங்க பாத்திர புட்பம் முதலியன வெல்லாம் விதிமுறையின் படியமைத்துப் பூத சுத்தி, மந்திர சுத்தி, யாதன சுத்தி முதலாகிய பஞ்ச சுத்தி செய்து தேவாராதனை யானது விதிப்படி காலையில் செய்தமைப்பார்கள் வைதீகர் என்றவாறு. (12)

வீக்கணம் - பறவைக்கூட்டம ; வீ - பறவை. அருகத்தோடு - தகுதியோடு; அருகம் - தகுதி.

**உரை** - அருணசாரதி - சூரியனின் தேர்ப்பாகன். பிராதகாலம் - விடியற்காலம் - பிராதம் - விடியல். பஞ்சசுததி - ஐவகைச சுத்திகள்; அவை: ஆத்மசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, பூதசுத்தி, மந்திரசுத்தி என்பனவாம்.

பா.வே. - 1 புள்கணங்கள் 2. டருச்சனை நயப்பார்

## Kālai vēḷaip pūcai oli

*vēta kītaṅka ḷeḻuntaṉa veḻuntavīk kaṇaṅkaḷ*
*pāta tāmarai yariyiṉaip paravi māṉiṭarka*
*ḷāta rattuṭa ṉeḻuntaṉar ārttaṉa caṅkam*
*nātaṉ pūcaṉaik karukattō ṭamaittaṉar nararē.*

## Morning Worship

The sounds of scriptures arose,
Along with the chirpings of birds.
Praising the lotus-feet of the Lord,
Men woke up with aspiring hearts.
The conches blew while devotees
Prepared for the proper worship of the Lord.

### வேறு

(குமரன் நாரணனை உடனிருக்க வேண்டுதல்)

416. அறுமு கத்திளவ லன்று தொட்டுவரை
யதனில் தன்னுரு வமைத்தனன்
கருணை மாதவ னகன்றி டக்கருது
கார ணத்தினை யறிந்துநற்

**குமர னாயக னினைப்பி ரிந்திவணில்**
**குறுகி டப்பெறுகி லேனெனாத்**
**தமர சங்கவொலி செய்யு நாரணனல்**
**தயையி னாலிவைகள் சாற்றுமால்.**

எ-து. அப்படி நாராயண மூர்த்தியானவர் அனுக்கிரகித்த மாத்திரத்தில் ஆறு திருமுகமும், பனிரெண்டு புயங்களையும் உடைய இளவலாகிய சுப்பிரமணியானவர் அன்று தொட்டு அந்தக் கிரியினிடத்திலே தனதங்கிசத்தின் ஒரு கலையினை நிறுவி வாசம் பண்ணினார். அதன்பின்பு கருணையோடும் கூடிய மாதவனாகிய நாராயணமூர்த்தியானவர் தன்னை விட்டுப் பிரிகின்ற காரணத்தினைக் குறிப்பினால் அறிந்து விண்ணப்பம் செய்கின்றார். தேவரீர் மானுபாவரே! தேவரீரை விட்டுப் பிரியத் தக்கதாய் அடியேன் சகிக்கமாட்டேன். ஆகையால் என்றும் பிரியாமல் உமது அனந்த கலியாண விபூதிவிக்கிர சேவை நிரந்தரம் அடியேன் சேவிக்கப் பிரார்த்திக்கிறேன். சங்கத்தினைத் தமது திருப்பவள வாயில் வைத்துத் தொனி செய்கின்ற தயாபர மூர்த்தியானவர் கருணையினாலே அருளிச் செய்கின்றார் என்றவாறு. (13)

தமர சங்க ஒலி - சங்கின் பேரொலி.

## Vēṟu

### Kumaraṉ Nāraṇaṉai uṭaṉirukka vēṇṭutal

*aṟumu kattiḻava laṉṟu toṭṭuvarai*
*yataṉil taṉṉuru vamaittaṉaṉ*
*karuṇai mātava ṉakaṉṟi ṭakkarutu*
*kāra ṇattiṉai yaṟintunaṟ*
*kumara ṉāyaka ṉiṉaippi rintivaṇil*
*kuṟuki ṭappeṟuki lēṉeṉāt*
*tamara caṅkavoli ceyyu nāraṇaṉal*
*tayaiyi ṉālivaikaḷ cāṟṟumāl.*

### Kumaraṉ's Request to Nāraṇaṉ

From that day, the six-visaged Lord
Retained his ray on this hill.
Learning that the compassionate Lord
Was preparing to withdraw,
Kumaraṉ said: 'Lord! I cannot live
Here, if separated from you.'
The Lord who sounds the conch said:

(குமரன் மலையில் நிரந்தரமாய் இருத்தல்)

417. சிலது நாளிவ ணிருந்தி டப்பெறுதி
யாயில் சிலபகல் கழித்தியான்
தலைமை யாகியநல் பூர ணாங்கிசை
தரித்து தாயகம தாகிய
நிலைமை காட்டுது மிருத்தி யையவென
நீங்கி னான்குமர பதியவண்
பலன டைந்துசெய சாலி யாகியவர்
பதம லர்த்தொழு திருந்தனன்.

எ-து. பின்னும் குமரகுருபரனை அவர் கிருபையாகப் பார்த்து பரவாசு தேவனானவர் அமுத சமூகங்களைப் பொழிகின்ற தமது திருவாய் மலரினையலர்த்தியருளிச் செய்கின்றார். வாராய் சுப்பிரமணியரே! இம்மலையின்கண் சில நாள் இருக்கக்கடவீர். நானும் சிலநாளகன்ற பின்பு தலைமையாகிய பூரணாங்கிசையுடனே எழுந்தருள வேண்டிய காரணமிருக்கையால் நீரிவ்விடத்தினில் நிரந்தரமாய் வாசம் செய்யக்கடவீர் என்று அனுக்கிரகம் செய்ய, தேவ சேனாதிபதியானவர் அவர் வரத்தினாலே செய சாலியாகிய வீரதத்துவ விசையமடைந்தவராய் அவர் பாத கமலத்தினை உபாசித்து அந்தக் கிரியின்கண் வீற்றிருந்தருளினார் என்றவாறு. (14)

இவண் - இங்கு. பூரணாங்கிசை - முழுமையான அமிசை; வடிவம். அவண் - அங்கு.

**Kumaraṉ malaiyil nirantaramāy iruttal**

*cilatu nāḷiva ṇirunti ṭappeṟuti*
*yāyil cilapakal kaḻittiyāṉ*
*talaimai yākiyanal pūra ṇāṅkicai*
*tarittu tāyakama tākiya*
*nilaimai kāṭṭutu mirutti yaiyaveṉa*
*nīṅki ṉāṉkumara patiyavaṇ*
*palaṉa ṭaintuceya cāli yākiyavar*
*patama larttoḻu tiruntaṉaṉ.*

**Kumaraṉ stays on the Hill Forever**

'Do stay here for sometime.
After the passage of a few days,
I have to get back to my cosmic form
Of lordship in my abode to reveal
Myself. Till then you be here.'

The Lord then withdrew.
Kumaran, stronger, and victorious
Remained worshipping the Lord's feet.

(இவ்வரலாறு கேட்ட இந்திரன்)

418. என்று நாரத னிசைத்த கோலவரை
யியல்பு கேட்டுமகி ழிந்திரன்
வென்றி யார்ந்ததின மின்று கொல்லென
வியம்பி வேதியன் மலர்ப்பதஞ்
சென்று மாமவுலி யால்வ ணங்கிபுகழ்
தேவ தேவனை நினைந்தனன்
குன்ற மாசிற கரிந்த வச்சிரபடை
கொண்ட லூர்திமக மேருவின்.

எ-து. இவ்விதமாகிய கதாப்பிரசங்கத்தை வரன்முறை பிறழாமல் நாரத மகாமுனிவரானவர் கோலாசல பர்வதத்தைக் குறித்துச் சொல்ல கர்ணாமிழ்தமாய்க் கேட்டு ஆனந்தத்தினாலே மகிழ்ச்சி பெறுகின்ற இந்திர மகாராசனானவன் கால நேமியினைக் கொன்று விசையமடைந்ததின் பின்றைய காலமென்றெண்ணி மகிழ்கூர்ந்து இன்பத்தையடைந்தவனாய் நாரதமகாமுனிவரது உபயபாத கமலங்களை மவுலி புனைந்த சிரத்தினால் பல தெண்டன் சமர்ப்பித்துத் தேவ தேவனாகிய நாராயண மூர்த்தியை உபாசித்தந்த வடமேரு கிரியில் வீற்றிருந்தான். அவனது பிரதாபம் எப்படிப்பட்டதென்றால் பர்வத சிறகுகளையெல்லாம் தனது வச்சிராயுதத்தினாலே கண்டித்து மேகவாகனத்தை நடாத்திய வச்சிரபாணியென்று கூறி நைமிசாரணிய மகா இருடியர்களைப் பார்த்து மீட்டும் அம்மலையினது பெருமை யினைக் கூறத் தொடங்கினார் சூத புராணிகர் என்றவாறு. (15)

வேதியன் - அந்தணன், நாரதன். மௌலி - முடி.

**உரை** - காலநேமி - இராவணனின் மாமன், ஒருதானவன்.

## Ivvaralāṟu kēṭṭa Intiraṉ

*eṉṟu nārata ṉicaitta kōlavarai*
*yiyalpu kēṭṭumaki ḻintiraṉ*
*veṉṟi yārntatiṉa miṉṟu kolleṉa*
*viyampi vētiyaṉ malarppatañ*
*ceṉṟu māmavuli yālva ṇaṅkipukaḻ*
*tēva tēvaṉai niṉaintaṉaṉ*
*kuṉṟa māciṟa karinta vaccirapaṭai*
*koṇṭa lūrtimaka mēruviṉ.*

## Intiraṉ Listens to the legend

Intiraṉ was happy to hear from Nāratar
The legend of the Kōla Hill
Saying, 'this indeed is a day
Of victory to me', he saluted
The sage with his great crown.
He than meditated upon the Lord.
Cūta began to speak of Intiraṉ's glory
That cut down the wings of the mountain.

வேறு

(இத்தகு சிறப்புடைய கோலவரையில் தங்குங்கள் எனல்)

419. அவ்வரையின் வரலாறீ தறையக் கேட்டீர்
அதன்பெருமை தனையளந்திங் காதி சேட
னெவ்விதமுஞ் சொல்லவல்ல னல்லன் மேலா
மிறையவனே யவணிருக்க விசைந்தா னென்றால்
செவ்வியுரை யுண்டோமா முனிவர் நீரே
செகமதினு மதன்பெருமை சிறந்த தன்றோ
கவ்வையொழி யவ்வரையை யொருகால் நீருங்
கண்டவுடன் பவமொழியுங் காண்மி னென்றான்.

எ-து அந்த கோலாசலத்தின் பெருமையினை யெல்லாம் சிலது யான் கூறக்கேட்ட முனிக்கணங்களே! அதனது பெருமையினை அளந்து கூறுதற்கு ஆயிரம் நாவினைப்படைதத ஆதிசேடனேயாகிலும் எவ்விதமாயினும் வருத்தப்பட்டுக் கூறுவானென்றாலும் அவனாலும கூறிமுடியாது. யாவருக்கும் மேனின்றுயர்ந்த இறைவனாகிய பரவாசு தேவனே அம்மலையை விருப்புற்று பூரணாங்கிசையினுடனே வீற்றிருக்கினறார் என்றால, இதற்குமேலே சிறந்த மொழி யானென்னை கூறுதும். ஆகையால் முனிககணங்களே! இந்தத திரிபுவனத்தினும் தனது பெருமையானது சிறந்து தோன்றுமாகையினாலே பிறவித் துன்பத்தைத் தொலைத்தின்ப வீட்டினைக் கொடுக்காநின்ற அந்தப்புணணிய பர்வதததை ஒரு தரமாவது நீங்கள் சேவிக்கப் பெற்றீர்களாகினும் உமது செனன சாகரங்களையெல்லாம கடந்து இன்பமாகிய முத்தி வைபவத்தில் நித்திய சூரியராய் ஆனந்தத்தைப் பெறுவீர்கள ஆகையினாலே அந்தத் தலத்தினைக் கண்டு தரிசிப்பீர்களென்றார் முனிவர்களைப் பார்த்துச சூத புராணிகர் என்றவாறு. (16)

தமரசங்க ஒலி - சங்கின பேரொலி

## Vēṟu

### Ittaku ciṟapputaiya kōlavaraiyil taṅkuṅkaḷ eṉal

*avvaraiyiṉ varalāṟī taṟaiyak kēṭṭīr*
*ataṉperumai taṉaiyaḷantiṅ kāti cēṭa*
*ṉevvitamuñ collavalla ṉallaṉ mēlā*
*miṟaiyavaṉē yavaṉirukka vicaintā ṉeṉṟāl*
*cevviyurai yuṇṭōmā muṉivar nīrē*
*cekamatiṉu mataṉperumai ciṟanta taṉṟō*
*kavvaiyoḷi yavvaraiyai yorukāl nīruṅ*
*kaṇṭavuṭaṉ pavamoḷiyuṅ kāṇmi ṉeṉṟāṉ*

### Remain on this Noble Kōla Hill

"You have heard spoken the legend
Of the mountain. Even Āticēṭaṉ
Cannot describe its greatness.
If the Supreme Lord himself had agreed
To come and remain here,
What more need be said?
O sages! Is not its greatness
Famous all over the earth?
If you see that hill even once,
The sins of birth will leave you'.

(கோலவரையை வலம் வருவதன் பயன்)

420. ஒருகாலம் மலைவலஞ்சூழ்ந் திட்டவரு
மிவ்வுலகுக் கொருவ னான
திருவாரு மரசர்பிரா னாகுவர்க
ளிருதிறத்தாற் சிறந்த விந்திரப்
பெருவாழ்வைப் பெறுகுவர்கள் முக்காலிற்
பிரமனாய்ப் பெற்றங் கோங்குந்
திருவாரா தனந்தினமுஞ் சேவிப்போர்
நாராணனார் திருத்தாள் சேர்வர்.

எ-து. மீட்டும் சூதபுராணிகர் தமது திருவாயினை அலர்த்தி அமுதத்தாரைகளைப் பொழிகின்றது போலக் கூறுகின்றார். வாழிர் மகாரிஷிகளே! அறுகாலத்தினொருகால் அந்த மலையினை வலஞ் சூழ்ந்து வருகின்ற பேர்களுக்குப் பலப்பிரயோசனம் யாதென்றால் இந்தச் சத்த சாகரம் சூழ்ந்திருக்காநின்ற உலகுக்கெல்லாம் ஒருவனாகிய அட்ட லட்சுமியினது பிரபலமமைந்த இராசாதி ராசனாகிய சக்கரவர்த்திகளாகுவார்கள். இருதரம் வரம் வருகின்ற பேர்களானவர்கள் சிறப்பமைந்த இந்திரப் பெருவாழ்வாகிய இந்திராணி, அயிராவதம், உச்சைச்சிரவம், அரம்பையர்கள், பஞ்சதாரு, சுரபி, சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி, பொன்னாடு முதலிய வாழ்வினைப் பெற்று அயிராவதத்தின் பேரிலே தவளச்சத்திரக்குடை நிழற்றத்தக்கதாகிய இந்திரனாய் வீற்றிருப்பார்கள். அதல்லாமல் மூன்று வலம் வந்த பேர்கள் பிரமனாகிய பிதாமகனாய், மனோவதி நகரின்கண் வீற்றிருப்பார்கள். அதுவன்றியும் திரிகாலமும் திருவாராதனம் செய்யும் காலத்தினடைந்து தரிசனை வைபவத்தைத் தரிசிக்கப் பெற்றோர்களெல்லாம் எம்பெருமானாகிய பரவாசு தேவன் திருவடிக் கமலங்களின் நிழலிலே வீற்றிருக்கப்பெற்று நித்திய சூரியர்களாய் வாழ்வார்களென்றவாறு. (17)

திருவாரதனம் - திருவாராதனம்; கடவுள பூசை

**கோலாசல உற்பத்தி அத்தியாயம் முற்றிற்று.**

## Kōlavaraiyai valam varuvataṉ payaṉ

*orukālam malaivalañcūḻn tiṭṭavaru*
*mivvulakuk koruva ṉāṉa*
*tiruvāru maracarpirā ṉākuvarka*
*ḷirutiraṭṭāṟ ciṟanta vintirap*
*peruvāḻvaip peṟukuvarkaḷ mukkāliṟ*
*piramaṉāyp peṟṟañ kōṅkun*
*tiruvārā taṉantiṉamuñ cēvippōr*
*nārāṇaṉār tiruttāḷ cērvar.*

## Circumambulating the Kōla Hill

The boons gained by going round the hill
Are many. Those who circumambulate once
Become emperors, gifted with riches;
Going round twice would mean
The glorious life of heavenly Intiraṉ;
Circumambulating thrice would mean
Piramaṉ's aegis; they would join
The daily worship of Nārāyaṇaṉ
And reach the noble feet.

# 23. பத்தொன்பதாவது
# சம்பீரவிருட்ச வரலாறு உரைத்த அத்தியாயம்

மேருமலையினது நற்புத்திரனாய்த் தோன்றிய கோலாசல மலையின் வரலாற்றைக் கேட்டு மகிழ்ந்தோம். பஞ்சதாருவே ஒரு எலுமிச்சை தருவாய்த் தோன்றித் தழைத்த வரலாற்றையும் கூறுங்கள் என்று கேட்கச் சூதமுனிவர் கூறுகிறார்.

மாளவதேச மன்னனாகிய மத்தளன் என்பவன் சிறந்த சிவபக்தனாய் விளங்கினான். அவன் நாராயணமூர்த்தியை வணங்கிய அன்பர்கள் எல்லாம் சீவன் முக்தர்களாய் விளங்குகிறார்கள் என்பதை உணராதவனாய் இருந்தான்; எனவே திருமாலடியார்களை வருத்திவந்தான். திருமாலின் ஆலயமணி ஒலியானது தன் செவிகளில் விழாதபடி தன் அரண்மனை வாயிலிலே ஆயிரம் மணிகளைக் கட்டி ஒலிக்குமாறு செய்தான். இத்தகு நாராயணத் துரோகச் செயல்களினாலே அவன் தனது அரசினை இழந்து, பேயுருவமாகி அலைந்தான். இவ்வாறு மத்தளராசன் வருந்தி அலைவதை அறிந்தார் கயிலாயபதியாகிய பரமசிவன்; இடபவாகனரூடராய் அவன்முன் தோன்றினார். வேத ஆகம முறைப்படி தேவபூசையினை மேற்கொண்டு ஒழுகினாய் என்றாலும் நாராயணமூர்த்தியின் பரத்துவத்தினை அறியாது நிந்தைசெய்ததால் இந்தக் கதி உனக்கு ஏற்பட்டது; இந்த இழி நிலை நீங்க நீ உடனே மகத தேசத்தை அடைந்து, அங்கு பிரமாவின் வரம் பெற்று அரசுபுரியும் சோமுகனது நந்தவனத்திலே எலுமிச்சை மரமாகத் தோன்றுவாயாக என்று கூறியருளினார். அதன்படி அவனும் சோமுகனின் நந்தவனத்தில் எலுமிச்சை மரமாய்த் தோன்றி விளங்கினான்.

நாராயணமூர்த்தியானவர் வராக வடிவமாய்த் தோன்றி சோமுகனோடு போர் செய்தபோது அந்த எலுமிச்சை மரத்தினைப் பிடுங்கி வாள் வடிவமாக்கித் தன்கையிலே தாங்கினார். அவ்வாளினால் சோமுகனை வென்று அதனைக் கோலாசல மலையிலே நாட்டினார். திருமாலின் திருக்கைகள் பட்டவுடனே மத்தளராசனின் துரோகபாவம் நீங்கியது. ஞானசொரூபியாக விளங்கினான். தன்னுடைய அடாத செயல்களை எல்லாம் எடுத்துக்கூறித் திருமாலிடத்திலே முறையிட்டுக் கொண்டான். மேலும் என்னைப் பாதுகாத்தருளிய தங்களுடைய திருவடிகளையும், எம்பெருமானாகிய பரமசிவனின் பொன்னடிகளையும் ஒரு சேர அடையும் பேற்றினை அருளவேண்டும் என்று வேண்டினான். இசைந்த அரங்கநாயகர் வராக நதிக்கு அருகில் உமது பெயராலே எழுந்தருளியுள்ள மத்தளேசுவரனை நீ தரிசனம் செய்வாயாக என்று வரமளித்து, உடனே அந்த நதிக்கருகிலே ஒருபெரிய பாறையைப் பிளந்து பரசிவலிங்கவடிவமாய்த் தாமே எழுந்தருளினார். நாராயணமூர்த்தி கூறியவாறே சென்று தன்பெயரால் விளங்கும் இறைவனைப் பூசித்து, அருகிலே மாயேசுவர தீர்த்தம் என்ற ஒரு தீர்த்தத்தினை அமைத்து அதிலே நாள்தோறும் நீராடி, பதினாறுவகைத் தானங்களையும் செய்து, அரங்கநாதனையும் துதித்து அவர்தம் திருவடி நிழலை அடைந்தான். அதன்பிறகு அரங்கநாயகரிடம் விண்ணப்பிக்கின்றான். ஐயனே! தங்கள் திருக்கோயிலின் முன் எக்காலத்தும் தங்களைத் தொழுது நிலைபெற்று இருக்கும்படியாக ஒரு எலுமிச்சை மரமாகவே தோன்றிட அருள்புரிவீராக என்று வேண்டினான்.

உன் விருப்பப்படியே இங்கு விளங்கும் நந்தியா வட்ட மலர்ச்செடியுடனே அதனருகில் எலுமிச்சை விருட்சமாய் நெடிது வாழக்கடவாய் என்று அருளிச் செய்தார் அரங்கநாயகர். அவ்வாறே வீற்றிருந்து பேறுபெற்றான் மத்தளராசன்.

**(தல விருட்சத்தின் வரலாறு யாது எனல்)**

**421.** **திருவி ளங்குமக மேரு புத்திரனெனத்**
**திகழ்நல் கோலவரை வரவினைப்**
**பெருகு கின்றஅமு தாமெ னத்தெளிவு**
**பெருக யாமிவை தெருட்டினைத்**
**தருவெ னப்புகலு கின்ற சம்பிர**
**விருக்கம் வந்ததனிப் புகழினைக்**
**குருவெ னப்பரவு கின்ற மாமுனிவ**
**புகலு வாயெனக் குறித்தனன்.**

எ-து மீட்டும் நைமிசாரணிய இருடிகள் சூதபுராணிகரைப் பார்த்துக் கூறுகின்றார்கள். அட்டலட்சுமியும் மன விலாசமாய் வீற்றிருக்காநின்ற வடமேரு கிரியினது சுபுத்திரனாய் அவதரித்து, நற்குண நற்செய்கையினையுடைய பிரதாப மிகுந்த புண்ணிய பருப்பதமாகிய கோலாசலத்தினது வரலாற்று முறைமையினையெல்லாம் பெருகுகின்ற திருப்பாற் கடலினைக் கடைத்தெடுத்த அமுதினைத் திரட்டிக் கரையிலே வைத்ததுபோலக் கிரியினது பெருமைகளை யெல்லாம் யாங்கள் தெளியும்படியாய்த் தெருட்டி வைத்தீர்கள். ஆகையினாலே பின்னும் ஒரு கதையைக் கேட்க விரும்பினோம். அதாவது, பஞ்சதாருவே ஒரு எலுமிச்ச விருட்சமாய்த் தோன்றித் தழைத்தோங்காநின்ற அந்த வரலாற்றினது ஒப்பற்ற புகழினை அருளே வடிவமாகிய குருவாமென்றி யாவரும் துதிக்காநின்ற மகத்தாகிய தவத்தினையுடைய சூதமுனிவரே! உமது திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று அந்தச் சவுனகாதி முனிவர்கள வினாவ அருளிச் செய்கின்றார் என்றவாறு. (1)

தெருட்டினை - தெளியச் செய்தாய்; முன்னிலைமுற்று. சம்பிரவிருக்கம் - சம்பிரம் - சம்பீரம்- எலுமிச்சை. விருக்கம - விருட்சம - மரம்

## Tala viruṭcattiṉ varalāṟu yātu eṉal

*tiruvi ḷaṅkumaka mēru puttiraṉeṉat*
*tikaḻnal kōlavarai varaviṉaip*
*peruku kiṉṟaamu tāme ṉatteḷivu*
*peruka yāmivai teruṭṭiṉait*
*taruve ṉappukalu kiṉṟa campira*
*virukkam vantataṉip pukaḻiṉaik*
*kuruve ṉapparavu kiṉṟa māmuṉiva*
*pukalu vāyeṉak kuṟittaṉaṉ.*

## XXIII. The Legend of the Lemon Tree
## The Legend of the Temple Tree

"You have spoken to us in clear words
As if gathering a stream of nectar
Regarding the legend of Kōla Hill
That appears as *Mēru*'s son, prosperous.
O sage who is our teacher! Tell us
About the famous lemon tree
Which is heavenly." So the sages said.

**(மாளவ மன்னன் மத்தளன்)**

422. **ஆதி காலமதின் மாள வத்தரச**
**னான மத்தள னெனப்புகழ்**
**சோதி தங்கியலர் சந்தி ரப்பிரபை**
**சூடு நற்சிவனைத் தொழுதவன்**
**வேதி யர்ப்புகழ சிறந்த நாரணனை**
**வேண்டி யிவ்வுலகின் விமலமா**
**யோதி யுய்ந்தவகை தெளிகி லாதவ**
**னொறுத்து நொந்துமன மெலிவினால்.**

எ-து. இவ்விதமாய்க் கூறிய நைமிசாரணியத்து இருடியர்கள் கேட்க அருளிச் செய்கின்றார் சூத புராணிகரானவர். பூர்வ காலத்திலே மாளவ தேசாதிபதியாகிய மத்தளனென்று புகழ்கின்ற கீர்த்தியினையுடைய இராச கண்டீரவனான சோடச கலைகளை விரித்த முத்தாரைகளைப் பொழிகின்ற சந்திரனது கீற்றைச் சடையுச்சியதிலே தாங்காநின்ற பரமசிவ அர்ச்சனைசெய்து தொழுகின்றவனானவன் வேத வேதியர்களாலே புகழ் சிறந்திலகாநின்ற ஸ்ரீமன் நாராயணமூர்த்தியை வேண்டினவர்களால் இவ்வுலகின்கண் விமலரானோர்களெல்லாம் ஓதி அவரது நாமதேயங்களால் அனேகம் பேர்களெல்லாம் பரம பவுத்திரராய்ச் சீவன் முத்தர்களாக வாசம் பண்ணுகிற காரணத்தினைத் தெளியாத அரசனானவன் ஒறுத்து நொந்து மன மெலிவினாலே பொறாமைப் பட்டான் என்றவாறு. (2)

மாளவம் - உச்சயினி நாட்டின் ஒரு பகுதி. அனுபதேசத்தின் வடமேற்கில் உள்ள பகுதி. ஒறுத்தல் - வருத்துதல், வெறுத்தல், தண்டித்தல்.

**Māḷava maṉṉaṉ Mattaḷaṉ**

*āti kālamatiṉ māḷa vattaraca*
*ṉāṉa mattaḷa ṉeṉappukaḷ*
*cōti taṅkiyalar canti rappirapai*
*cūṭu naṟcivaṉait toḻutavaṉ*
*vēti yarppukaḷa ciṟanta nāraṇaṉai*
*vēṇṭi yivvulakiṉ vimalamā*
*yōti yuyntavakai teḷiki lātava*
*ṉoṟuttu nontumaṉa meliviṉāl.*

**Mattaḷaṉ, the Māḷava King**

In days of yore the king of Māḷavam
Was one famous Mattaḷaṉ. He worshipped
Civaṉ who sports on his crown
The crescent that spews brilliance.
The king became jealous and despondent
To see people worship famed Nārāyaṇaṉ
And thereby grow prosperous.

(நாராயண ஒலி கேட்காதவாறு மணி கட்டுதல்)

423. கடைத்த லைக்கணி சைத்த கண்டைகள்
கவின்சி றந்தமனை தன்னிலே
புடைக்க வாயிர மிசைத்து நாரணனல்
புகழ்து திப்பது மவன்செவி
யிடைப்பு காவகை தொனிக்க தன்னர
சியற்கை யோடுபுரி காலையைம்
படைத ரித்தவரி துரோக சிந்தைபுரி
[1]பண்ண லாவறுமை யெய்தினான்.

எ-து. தனது உயர்ந்த மனையினது கடைவாசலிலே கண்டைகளாகிய அழகிய ஆராய்ச்சி மணியினைப் போலொதத ஆயிர மணிகளைக் கட்டி அடிக்க. அந்தத் தொனியினாலே ஸ்ரீமன் நாராயண மூர்த்தியினது புகழ்ச்சியினைத் துதிக்கா நின்ற ஒலி களானவை அவனது செவித்துளையிலே பிரவேசிக்காமற்படி தொனிக்கச்செய்து தனது தவளச்சத்திரக் குடையினது நிழலிலே வீற்றிருந்து சக்கரம் நடாத்திய தலைவனாய் அரசாட்சி செய்யும் காலத்தில் பஞ்சாயுதங்களைத் தரிக்காநின்ற அரியினைக் குறித்துச் செய்த விஷ்ணு

துரோகத்தினாலே சிந்தையிலே செலுத்திய பாதகத்தினால் அந்த மத்தள ராசனாகிய மாளவதேசாதிபதியானவன் வெம்பப்பட்டு வேறுபட்டா னென்றவாறு. (3)

கடைத்தலை - அரண்மனையின் கடைவாயில். கணடை - கணடாமணி - பேரொளி செய்யும் ஆராய்ச்சி மணி. புடைத்தல் - அடிததல், ஒலித்தல் ஐம்படை - ஐந்து ஆயுதம் - அவை. சக்கரம், வில். வாள். தணடு. சங்கு எனபன. வறுமை - தரிதத்திரம். வெறுமை.

**உரை** · வெம்பப்படுதல - கலங்குதல்

**பா,வே.** - 1. பயிற்சியானவனுமெய்தினான்

## Nārāyaṇa oli kēṭkātavāṟu maṇi kaṭṭutal

*kaṭaitta laikkaṇi caitta kaṇṭaikaḷ*
*kaviṉci ṟantamaṉai taṉṉilē*
*puṭaikka vāyira micaittu nāraṇaṉal*
*pukaḻtu tippatu mavaṉcevi*
*yiṭaippu kāvakai toṉikka taṉṉara*
*ciyaṟkai yōṭupuri kālaiyaim*
*paṭaita rittavari turōka cintaipuri*
*paṇṇa lāvaṟumai yeytiṉāṉ.*

## Tying Bells to Avoid Nārāyaṇaṉ's Name

A thousand bells that chimed loudly
Were tied to the front porch
Of the beautiful palace, so that
The sounds of praising Nārāyaṇaṉ
Would not reach his ears. He thus ruled
Till he became very poor
Due to the enmity he exhibited
Towards Hari, the wielder of weapons.

(கயிலாயபதி மத்தளனுக்குக் கூறுதல்)

424. பித்த னாயர சிழந்து பேயென
பெரும்பு விக்கணி னலைந்ததால்
சத்தி யோடுறை பினாக பாணியவன்
றனது கொள்கையை 'யறிந்தரன்

வெற்றி யாம்விடை யிவர்ந்து வந்தவனை
　　வினவி யொன்றுரைசெய் கின்றனன்
முத்தி தந்தமுத லோனை யென்றுமொழி
　　யாதொ ழிந்தவிதி முடிவினால்.

எ-து. அந்த நாராயண துரோகத்தினாலே அறிவிழந்த பித்தனாய் அரசாட்சியினை இழந்துபோய்ச் சத்தசாகரங்களிலும், அந்தந்தத் தீவாந்தரங்களிலும் பேயினது உருவமாயிணைத்துத் திரிந்தவனாய்ப் பருவரலுறுத் தன்மையினை அறிந்தார் சத்தியாகிய பார்வதியை வாமபாகத்தினிருத்திய கயிலாய பதியானவர் அவன் தன்னை நம்பி நாராயண துரோகம் செய்து வருந்துகின்ற பான்மையினைத் தெரிந்தவராய் வெற்றியோடுங்கூடிய அதிகார நந்தியினது உருவாகிய விடபவாகனத்தில் ஆரோகணிதராய் அதிக துரிதத்திலே மாளவ தேசாதிபதியினிடத்தின் வந்தருளி அவன் வருத்தப்பட்ட முறமையினைக் கேள்விப்பட்டு அதற்கு விமோசனம் கூறுகின்றார். மோட்ச கர்த்தாவாகிய நாராயண மூர்த்தியினை நீ எப்பொழுதும் உபாசிக்காமல் அவனது நாமதேயத்தைக் காதினாலும் கேளாதவனாய், செய்த மகாபாதக விதியினா லுனக்கு இவ்வளவு துன்பம் வந்ததென்று பின்னும் கூறுகின்றார் கயிலாயபதி யென்றவாறு. (4)

பெரும்புவிக்கண் - பரந்த உலகத்தில். சத்தி - பார்வதி பினாகபாணி - சிவபெருமான்; பினாகம் - சிவன் வில், சிவன்சூலம். விடை - இடப வாகனம

**உரை** . உபாசித்தல் - வழிபடுதல்

பா.வே. - 1. அறிந்தபின்

## Kayilāyapati Mattaḷaṉukkuk kūṟutal

*pitta nāyara ciḻantu pēyeṉa*
　　*perumpu vikkaṇi ṉalaintatāl*
*catti yōṭuṟai piṉāka pāṇiyavaṉ*
　　*ṟaṉatu koḷkaiyay yaṟintaraṉ*
*veṟṟi yāmviṭai yivarntu vantavaṉai*
　　*viṉavi yoṉṟuraicey kiṉṟaṉaṉ*
*mutti tantamuta lōṉai yeṉṟumoḻi*
　　*yāto ḻintaviti muṭiviṉāl.*

## Civaṉ to Mattaḷaṉ

Losing his land, the king grew mad
And wandered all over the world
As a ghost; this
By Civaṉ; he mounted the bull

And speeded to the king and spoke:
"By not worshipping the Supreme
Who grants Realisation,
You have come to this pass.

(சோமுகனின் நந்தவனம் அடையச் செய்தல்)

425. சிந்தை யானெமை துதித்து பூசைபுரி
செய்கை யானரி சிறப்பினை
நிந்தை செய்தகொடு விழிவி னானுனை
நெருங்கி யிவ்விழிவு சேர்ந்ததாற்
சந்த தம்புகழ் படைத்த மாமகத
தேச சோமுக தராபதி
நிந்தை யில்லதொரு நந்த னத்தினிடை
நிமல சம்பிர விருக்கமாய்.

எ-து தேசாதிபதியாகிய மத்தளனென்கிற அரசன் திருமுகத்தைப் பாாத்து மறுபடியும பரமசிவன் அருளிச் செய்கின்றார் உனது மனதினால் எண்ணி உபாசித்து வாயினால் துதித்துக் கரங்களால் மகதேவ பூசைக் கருகங்களாகிய சங்க பாத்திர முதலானதெல்லாம் அமைத்துத் தேவ பூசையினை வேதாகமப் பிரகாரம் விதி தவறாது நீ செய்தனையாயினும் நாராயண மூர்த்தியினது பரத்துவத்தினை அறியாமல் நிந்தை செய்கின்ற கொடுமையினாலே இந்த இழிவானது உன்னைப் பீடிக்க நீ மதிமயங்கி பிசாசுத்துவத்தை அடைநதாய் ஆகையால் இது நிவாரணமாய்ப் புனித பவுத்திரமடையும் பொருட்டு ஒரு உபாயம் கூறுகின்றோம் அந்நிலையில் நிறகக் கடவாய். சந்ததமான திரிகாலத்தினும் புகழ்ச்சியானது பெருகி மகததேசமென்கின்ற வொரு தேசம் உண்டு. அந்தத் தேசத்தை அரசாட்சி செய்கினற சோமுகனென்று சொல்கின்ற பெயரினையுடைய ஒரு இராச கண்டீர சேகரனானவன் உண்டு. அவன் பிரமாவினது வரபாலனத்தினாலே ஒரு ரமணியமாகிய நந்தன வனம் வைத்திருக்கின்றான். அந்த வனத்திலே நீ போய் எலுமிச்சை விருட்சமாய் முளைக்கக் கடவாய் என்றருளிச் செய்தார் சிவ னென்றவாறு (5)

நிந்தை - இகழசசி இழிவு - கேடு. சந்ததம - எப்பொழுதும் மகத தேசம - மகதநாடு மகதம் தட்சண மகதம. உததர மகதமென இரண்டு வகைப்படும. வஙக தேசததுககருகில் உள்ள நாடு இது சராசந்தன வம்சததவா ஆண்டது பீகாருககுத (பேகார்) தெறகில உள்ளது சோழ நாடடிறகும தொண்டை நாட்டிறகு மிடையிலுள்ள நாடு. இது தமிழா வடககில மகதநாட்டிலிருந்து குடியேறின நாடாகிய தமிழ்நாடடிற கிடடபெயா எனவும் வழங்குவர் தராபதி - நிலவுலகததலைவன. தரா - பூமி நிமலன - தூயவன்.

**உரை** - அருகம் - தகுதி சஙகம - விருப்பம் பரத்துவம - கடவுடடனமை நிவாரணம - பிராயசித்தம. பவுத்திரம - தூய்மை. ரமணியம - மகிழச்சி பிசாசுததுவம - இழிந்ததனமை பிசாசுததன்மை

## Cōmukaṉiṉ nantavaṉam aṭaiyac ceytal

*cintai yāṉemai tutittu pūcaipuri*
*ceykai yāṉari ciṟappiṉai*
*nintai ceytakoṭu viḻivi ṉāṉuṉai*
*neruṅki yivviḻivu cērntatāṟ*
*canta tampukaḷ paṭaitta māmakata*
*tēca cōmuka tarāpati*
*nintai yillatoru nanta ṉattiṉitai*
*nimala campira virukkamāy.*

## Directing Towards Cōmukaṉ's Garden

"You did pray to me in your heart
And did so through proper rituals.
But due to the evil of hating the Lord
You have fallen to this lowly state.
Go and be born as a lemon tree
In the blameless garden reared
By Cōmukaṉ of eternal fame.

(மத்தளன் வனத்தில் எலுமிச்சை மரமாதல்)

426. என்று கூறிசிவன் விடையொ டேகிகயி
லாய வெல்மலயி னிருந்தபின்
சென்று மாளவ வரசனவ் வனத்திடை
செறிந்த சம்பிர விருக்கமாய்
நன்றி நாரணன் வராக மாகியதைக்
கல்லி வாளுருவ தாக்கியே
வென்றி சோமுகனை வென்று கோலவரை
நாட்டி னானெவரு மேத்தவே.

எ-து இவ்விதமாய மததளராசனுக்கு அனுக்கிரகம் செய்து சிவனானவர் இடபவாகனத்துடனே கயிலாய கிரியில் பிரவேசித்து வீற்றிருந்தருளினார். அவரது உத்தரவின் பிரகாரம் மாளவ தேசாதிபதியாகிய மத்தளராச சேகரனானவன் அந்த மகத தேசாதிபதியாகிய சோமுகராச கணடீரவனுடைய நந்தன வனத்திலே போய்ச் சம்பீர விருக்கமாகிய எலுமிச்சை விருடசமாய் முளைததிருந்தான் அதன பின்பு வெகுகாலமாச்சு. அப்போது சர்வமங்கள குணக்கியலும மோடசகர்த்தாவான சர்வ பூமனாகிய ஸ்ரீமன் நாராயண மூர்த்தியானவர் வராக ரூபமாயெழுந்தருளி அவன்நினைக்கிலப்படுத்தும் போதந்த சம்பிர விருக்கத்தை வேருடனே கலலிப் பிடுங்கி வாளுருவமாகக் கையில் கொண்டு வென்றியைப் பொருந்திய சோமுகனாகிய

இராச சேகரனை அவ்வாளினாலே வெற்றி பெற்று அதன் பின்பு மகமேருவினது சுபுத்திரனாகிய கோலாசல பர்வதத்தின் கண் நாட்டினார். சுவாமியினது திருக்கராம்புய மலராய் நாட்டிய காரணத்தினாலே அவனது துரோகம் தீர்ந்து ஞான சொரூபியானான். அக்காலத்தில் தேவர், முனிவர் முதலாகிய பேர்களும் தொழுதேத்தினார்கள் என்றவாறு. (6)

கல்லுதல் - கிளறுதல்; தோண்டுதல். வாளுரு - கை வாள் உருவம்.

**உரை** - கிலப்படத்துதல் - சிதைத்தல், அழித்தல். சர்வபூமன் - எல்லாமானவன். துரோகம் - கொடியபாவம், குற்றம்.

## Mattaḷaṉ vaṉattil elumiccai maramātal

*eṉṟu kūṟicivaṉ viṭaiyo tēkikayi*
*lāya velmalayi ṉiruntapiṉ*
*ceṉṟu māḷava varacaṉav vaṉattiṭai*
*ceṟinta campira virukkamāy*
*naṉṟi nāraṇaṉ varāka mākiyataik*
*kalli vāḷuruva tākkiyē*
*veṉṟi cōmukaṉai veṉṟu kōlavarai*
*nāṭṭi ṉāṉevaru mēttavē.*

## Mattaḷaṉ Becomes a Lemon Tree

Having said this, Civaṉ rode his bull
Back to Kailāca Mountain. Māḷava's king
Went to the garden
And became a lemon tree in it.
Nārāyaṇaṉ manifesting as Varākam
Uprooted it, and wielding
The tree as a sword
Defeated the victorious Cōmukaṉ.
He replanted it in Kōla Hill
Even as everyone praised him.

(மத்தளன் மகிழ்ச்சி)

427. நாட்டு சம்பிர விருக்க மாயொளி
[1]சிறந்து நின்றபுகழ் நாயகன்
பூட்டு விற்கையொளிர் கேச வாவுனை
புகழ்ந்தி டாவெனது புன்மையான்

வாட்ட முற்றலகை யாகி சோமுகன்
வனத்தில் சம்பிர விருக்கமாய்
வீட்டு வாளுருவ தாகி னேனினது
கருணை யான்விமல மாகினேன்.

எ-து. இத்தன்மைத்தாய் ஸ்ரீமன் நாராயண மூர்த்தியினது கரதல கமலங்களில் நாட்டுகின்ற எலுமிச்சை விருட்சமாய் ஒளி சிறந்திராநின்ற இராசசேகரனானவன் பூட்டுகின்ற நாணினைப் பொருந்திய சாரங்க வில்லினையுடைய கேசவா! உன்னைப் புகழ்ந்திடாத எனது புத்தி ஈனத்தினாலே அனேக வாட்டப்பட்டு பிசாசத்துவத்தை அடைந்து இராச கண்டீரவனாகிய சோமுகனது உத்தியான வனத்திலே எலுமிச்சை விருட்சமாகியும், தேவரீர் இச்சையினாலே வெட்டுகின்ற வாளினது உருவமாகியும் மிகுந்த யானானவன் நினது கருணையினாலே விமல ரகிதனாகினேனென்றான் மத்தளராச னென்றவாறு. (7)

பூட்டுவிற்கையொளிர் - பூட்டும் நாணினையுடைய வில்லானது கையிலே விளங்குகின்ற - ஐயனே; சாரங்கம் என்னும் வில். அலகை - பிசாசு வீட்டுதல் - வெட்டுதல். விமலம் - தூய்மை.

பா.வே. : 1 சிறந்து நின்ற புகழ்.

## Mattaḷaṉ makiḻcci

*nāṭṭu campira virukka māyoḷi*
*ciṟantu niṉṟapukaḻ nāyakaṉ*
*pūṭṭu viṟkaiyoḷir kēca vāvuṉai*
*pukaḻnti ṭāveṉatu puṉmaiyāṉ*
*vāṭṭa muṟṟalakai yāki cōmukaṉ*
*vaṉattil campira virukkamāy*
*vīṭṭu vāḷuruva tāki ṉēṉiṉatu*
*karuṇai yāṉvimala mākiṉēṉ.*

## Mattaḷaṉ is Happy

The king who had thus become
A shining lemon-tree prayed thus:
'Kēcavaṉ whose hand gleams with the bow!
Because of the evil within me,
I did not sing your praises.
So I became poor, a ghost who grew
As a lemon-tree in Cōmukaṉ's forest,
And was transformed into a sword.
By your grace have I become pure.

(மத்தளன் நாரணனிடம் வேண்டுதல்)

428. நித்த னேயுல களித்த காரண
நிராம யத்திரு வரங்கனே
அத்த னேபரம தேவ தேவசெக
நாதனே யுமது கருணையால்
இத்த லத்தினிடை யுமது சேவையு
மிசைந்த நற்பரம சிவனையுங்
கர்த்த னேவர மளித்து பொன்னடியில்
காக்க வேண்டுமெனக் கழறினான்.

எ-து. நித்தியமாகிய அமலனே! உலகையெல்லாம் பாதுகாத்து இரட்சித்தருளிய காரணனே! நிராமயமாகிய நிருவிகற்பக தியானத்தை யுடைய திருவரங்க நாயகனே! அந்த பவுத்திரமாகிய பரப்பிரம தேவ தேவனான செகநாதனே! உமது கருணையினாலே இந்த தலத்திலே யானானவன் உமது சேவையினையும், பரமசிவனது சேவையினையும் யான் காணும்படியாய் வரபாலனமளித்த பின்பு தனது பொன்னந் தாமரை நிழலிலே காக்க வேண்டுமென்று கூறினான் மத்தளராசன் என்றவாறு. (8)

நிராமயம் - உருவற்ற நிலை; பன்றி உருவம் எனினுமாம். அத்தன் - தலைவன்.

**உரை** : நிருவிகற்பம் - நிர்விகற்பம் - வேறுபாடில்லாத தன்மை செகநாதன் - செகம் - பூமி; நாதன் - தலைவன்; திருமால்.

## Mattaḷaṉ Nāraṇaṉiṭam vēṇṭutal

*nitta nēyula kaḷitta kāraṇa*
*nirāma yattiru varaṅkaṉē*
*atta ṉēparama tēva tēvaceka*
*nātaṉē yumatu karuṇaiyāl*
*itta lattiṉiṭai yumatu cēvaiyu*
*micainta naṟparama civaṉaiyuṅ*
*kartta ṉēvara maḷittu poṉṉaṭiyil*
*kākka vēṇṭumeṉak kaḻaṟiṉāṉ.*

## Mattaḷaṉ's Prayer to Nārāyaṇaṉ

He prayed: "Eternal Lord! The Spotless
Who is the creator of the worlds!
Lord of Araṅkaṉ! Father!

Supreme Lord! Emperor of the world!
By your grace have I come here
To serve you and Lord Civaṉ.
Maker! Grant me boons
And keep me at your golden feet."

(விரசாநதியில் பூசை செய்க என வரமளித்தல்)

429. அரச னிவ்விதம தாய றைந்திடவும்
அமர நாயகனு மருளுவான்
விரசை மாநதி யெனப்பு கழ்ந்திட
விளங்கு கோலநதி யருகதாய்த்
திரம தாயுனது நாம முற்றசிவ
தரிச னஞ்செயவு மருளினோம்
பரவு வாயென வுரைத்துப் பாறையைப்
பிளந்து நற்பரம னாகினான்.

எ-து மத்தளராசனானவன் இவ்விதமாகிய வரபாலனத்தைக்கேட்ட மாத்திரத்திலே தேவ நாயகனாகிய பரந்தாமனானவர் அருளுகின்றார். பரம பதத்திருநாட்டின்கண் வீற்றிருக்காநின்ற விரசைமாநதியாகிய புண்ணிய தீர்த்தத்தைப் பார்க்கிலும் பவுத்திரமாய்ப் புகழாநின்ற விளககத்தினையுடைய வராக நதியினுக்கருகாகத் திரமதாகிய உமது நாம தேயத்தைப் பெறுகின்ற மத்தளேசுவரனை நீ தரிசனம் செய்யத்தக்கதாக வரபாலனம் அளிததோமாகையால அவ்விடத்தினில் நீ போய் வழிபாடாற்றி அருச்சனை புரியக் கடவாயெனறு உரைத்த பின்பு அந்த நதிக்கு அருகாகிய ஒரு பெரிய பாறையைப் பிளந்து பரமசிவ லிங்கமாயெழுந்தருளினாா அரங்கநாயக ரென்றவாறு (9)

விரசைமாநதி - விரசாநதி - வைகுண்டத்தில் உள்ள ஆறு. இதில் மூழ்கினோர் திருமால் பதம் அடைவா

## Viracānatiyil pūcai ceyka eṉa varamaḷittal

*araca ṉivvitama tāya ṟaintiṭavum*
*amara nāyakaṉu maruḷuvāṉ*
*viracai mānati yeṉappu kaḻntiṭa*
*viḷaṅku kōlanati yarukatāyt*
*tirama tāyuṉatu nāma muṟṟaciva*
*tarica ṉañceyavu maruḷiṉōm*
*paravu vāyeṉa vuraittup pāṟaiyaip*
*piḷantu naṟparama ṉākiṉāṉ.*

## Worship at Viracā River

As the king spoke so, the Lord said:
"Close to the Varāka stream
That is formed by the divine Viracā river,
You may worship Civaṉ in your name[1]
Such is my boon. Pray there".
He then broke a rock
To become the image of Civaṉ.

**(பூசையின் பயனாய்க் கோலவரை யடைதல்)**

430. **அரங்க னாரருளி னான டைந்தவனு**
**மச்சி வன்றனை யருச்சியா**
**வரம்பெ ரும்புகழ் மகேச தீர்த்தமும்**
**வகுத்து மாமகிழ்வு கூர்ந்தவன்**
**திறம்பெ றும்படி குடைந்து நற்செயல்**
**சிறப்ப மைத்துதிரு மாலடிக்**
**கரங்கு வித்தவணி னீங்கி கோலவரை**
**கடுகி பொன்னடி யடைந்தனன்.**

எ-து. அரங்கநாயகர் திருவாய் மலர்ந்தருளி வரபாலனத்தைப் பெற்ற மத்தளராசனானவன் தனது பெயரினான் அமைந்த மத்தளேசுவரனைச் சங்க பாத்திர புட்பமுதலாகியது அமைத்து பூதசுத்தி, மந்திரசுத்தி, திரவியசுத்தி முதலாகியதும் செய்து மகாதேவபூசை புரிந்ததன் பின், வரத்தைப் பெறுகின்ற பெரிய புகழினையுடைய மாயேசுவர தீர்த்தமென்றொரு தீர்த்தம் அமைத்துப் பெரும்புகழ் சிறந்தவனாய் அதிரமாகிய முத்தியைப் பெறும் பொருட்டாய் அதிலே நிதமும் தீர்த்தமாடிப் பதினாறு வகையாயுள்ள தானங்கள் முதலாகிய சற்கர்மங்களைச் செய்து கோலாசலத்தின் உச்சியின் வீற்றிருக்காநின்ற அரங்கநாயகனது விமான சேகரத்தைக் குறித்துத் தெண்டன் சமர்ப்பித்து இரண்டு கராம்புய மலரையும் உச்சியிற் கூப்பி நிதமும் தொழுது அந்த மத்தளேசுபரன் கருணையைப் பெற்று கோலாசல பர்வதத்தை அதிக துரிதமாய் அடைந்தவரது பொன்னந்தாமரை நிழலிலே அடைந்தான் மத்தளராச னென்றவாறு (10)

குடைதல் - நீராடுதல். அவணின் - அவ்விடமிருந்து.

---

1. in your name : Civaṉ here is known as Mattaḷēsvaraṉ.

## Pūcaiyiṉ payaṉāyk kōlavarai yaṭaital

*araṅka ṉāraruḷi ṉāṉa ṭaintavaṉu*
*macci vaṉṟaṉai yarucciyā*
*varampe ṟumpukaḻ makēca tīrttamum*
*vakuttu māmakiḻvu kūrntavaṉ*
*tiṟampe ṟumpaṭi kuṭaintu naṟceyal*
*ciṟappa maittutiru mālaṭik*
*karaṅku vittavaṉi ṉiṅki kōlavarai*
*kaṭuki poṉṉaṭi yaṭaintaṉaṉ.*

## Worshipping at Kōla Hill

Such was Araṅkaṉ's grace; the king
Worshipped Civaṉ there.
He built the famed tank, Makēca Tirttam
And was happy. He bathed in the tank
Daily, performed good acts,
And prayed to Araṅkaṉ's feet
With folded hands. Then
He went to Kōla Hill
And reached the Lord's feet.

(கோலவரையில் நிலையாயிருக்க வேண்டுதல்)

431. வந்த மத்தள இராச னும்புகழ்
வழுத்தி பொன்னடி வணங்கியே
எந்தை சம்பிர விருக்க மாயுனதி
னருளி னாலிசைய வேண்டுமியான்
சுந்த ரம்பெருகு முனது சேவைதிரி
கால முந்தொழு திருந்திடத்
தந்தி டாயென வுரைத்தி டப்பரமன்
நல்கி யொன்றுரைசெய் தானரோ.

எ-து. அத்தன்மைத்தாய் அரங்க நாயகரது பாததாமரை நிழலிலே பிறவி வெப்பந்தீர வீற்றிருக்கப் பெற்ற மத்தளராசனானவன் இன்பத்தை அடைந்து அரங்க நாயகரது புகழினை வழுத்தி மீட்டும் ஒரு உறுதியாகிய வரபாலனததைக் கூறுகின்றான். எனது தந்தையே! இதன்பிரகாரம் உனது ஆலயத்தின் எதிரிலே சம்பிரவிருட்சமாயும். உனதருளினாலே கற்பகாலத்திலும் அழிவின்றி எப்பொழுதும் நிலையாய் திரி காலத்தினும் தொழுதிருந்திடத்

தக்கதாய் வரந்தர வேண்டுமென்று உபசாரம் செய்திடப் பரமனானவர் அந்த வர பாலனத்தினை அனுக்கிரகம் பண்ணி ஒரு வார்த்தையருளிச் செய்கின்றார் என்றவாறு. (11)

சுந்தரம் - அழகு.

**உரை** - பிறவிவெப்பம் - பிறவித் துன்பம். வரபாலனம் - வரமாகிய பாதுகாப்பு.

## Kōlavaraiyil nilaiyāyirukka vēṇṭutal

*vanta mattaḷa irāca ṉumpukaḻ*
*vaḻutti poṉṉaṭi vaṇaṅkiyē*
*entai campira virukka māyuṉati*
*ṉaruḷi ṉālicaiya vēṇṭumiyāṉ*
*cunta ramperuku muṉatu cēvaitiri*
*kāla muntoḻu tiruntiṭat*
*tanti ṭāyeṉa vuraitti ṭapparamaṉ*
*nalki yoṉṟuraicey tāṉarō.*

## Prayer for the Lord's Permanent Residence

Having reached there, King Mattaḷaṉ
Praised the Lord, saluted him
And said: 'My father! by your grace
I became the lemon tree.
I ask for your grace.
I should be granted the boon
Of worshipping your beautiful form
Thrice daily'. The Lord agreed
And spoke:

(அவ்வாறே வரம் பெறுதல்)

432. கற்ப கோடிபெறு கால மிவ்வரையில்
கமழு சம்பிரம தாகியே
இப்பு விதனில் வதிந்து காய்கனிக
ளிலைகள் மாமலர் தழைத்திட
அற்பு தன்னருள் கொடுத்தி டப்பெருகி
யமல மாயவ னுதித்தனன்
செப்பு நந்திமல ரோடு வாழ்கவென
சீத ரன்அருகில் மேவினான்.

எ-து. மீட்டும் நாராயண மூர்த்தி திருவாய் மலர்ந்தருளுகின்றார். வாராய் மத்தள ராசனே! நீர் கற்ப கோடியாகிய பெருங்காலம் வந்தாலும் இந்த வரையிலே கமழாநின்ற எலுமிச்சை விருட்சமாய் இந்தத் தலத்திலே வாசமாய் இருந்து, காய்கள், கனிகள், இலைகள் சுகந்தத்தினையுடைய மலர் முதலாகியதும் தழைத்தோங்கும்படியாய் அற்புதனான அரங்கநாயகரானவர் அருளிச் செய்திட அவரது கருணையினாலே அமலனாகிய மத்தளராசனானவன் அக் கிரியிலே அந்த எலுமிச்சை விருட்சமாய், நந்தியா வட்டமலருடனே வாழக்கடவாயென்று சீதரனானவர் அருளிச் செய்ய அவர் அருகின் கண்ணே வீற்றிருந்தார் என்றவாறு. (12)

நந்திமலர் - நந்தியாவட்ட மலர்

## Avvāṟē varam peṟutal

*kaṟpa kōṭipeṟu kāla mivvaraiyil*
*kamaḻu campirama tākiyē*
*ippu vitaṉil vatintu kāykaṉika*
*ḷilaikaḷ māmalar taḻaittiṭa*
*aṟpu taṉṉaruḷ koṭutti ṭapperuki*
*yamala māyava ṉutittaṉaṉ*
*ceppu nantimala rōṭu vāḻkaveṉa*
*cīta raṉarukil mēviṉāṉ.*

## Boon Granted

'Even if countless years pass by
You would live on this hill
As the scented lemon tree,
Full of fruits, leaves and flowers.'
The wondrous Lord granted the boon
For the king so he could remain
As a lemon tree along with the plant
Of Nantiyāvaṭṭai blossoms.
The Lord too resided on the Kōla Hill.

(கோலவரையின் சிறப்பு)

433. இந்த மொழியைநா ரதனியம்பக் கேட்டிடு
மிந்திர னிறைஞ்சிக்

கந்த மாமலரிற் கடவு டன்வரமுங்
காள கண்டச்சிவன் கழறுஞ்
சந்த தம்பெருகு வரமும் வாரிசக்
கண்கட வுடன்சார் வரத்தாலும்
வந்த பேரசுர ரனேகரி னிவன்போல
கேட்ட றிந்தில மெனமதித்தார்.

எ-து. ஆகையினால் அத்தலத்தி னுறைபவர்கள் இகபரமும் அடைவர். நீயும் போக மனம் நினைத்த அளவில் துயர் நீங்கிப் பொன்னுலகைப் புரப்பாயென்று ஏகமனத்தோடு கூறி யிறைஞ்சி நாரத ரிருதாளேத்தித் துன்பம் போக எழுந்தருள புரியுமென வேண்டிசசசி முதலோர் போன்றாரன்றே (13)

மலரிற்கடவுள - பிரமதேவன் காளகண்டன் - சிவபெருமான் காளம - நஞ்சு. கருமை.

சம்பீரவிருட்ச வரலாறு உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

## Kōlavaraiyiṉ ciṟappu

*inta moḻiyainā rataṉiyampak kēṭṭiṭu*
*mintira ṉiṟaiñcik*
*kanta māmalariṟ kaṭavu ṭaṉvaramuṅ*
*kāḷa kaṇṭaccivaṉ kaḻaṟuñ*
*canta tamperuku varamum vāricak*
*kaṇkaṭa vuṭaṉcār varattālum*
*vanta pēracura raṉēkari ṉivaṉpōla*
*kēṭṭa ṟintila meṉamatittār.*

## Greatness of Kōla Hill

Having heard Nārata narrate thus
Intiraṉ said that the boons of Piramaṉ
And the auspicious boons granted by Civaṉ
And those given by Nārāyaṇaṉ
Had made this king unequalled.
He said that he had indeed
Never heard of any other like him.

# 24. இருபதாவது
# இந்திரன் மீண்ட அத்தியாயம்

மகமேருமலையில் வந்திருந்த இந்திரன் முதலாகிய தேவர்கள் அம்மலையைவிட்டு நீங்கித் தெற்குநோக்கிச் சென்றார்கள். அப்போது மலை, ஆறு, காடு, மாடமாளிகை நிறைந்த தலம், பன்னகசாலை போன்ற பல இடங்களையும் கடந்து காஞ்சிமாநகரை அடைந்தார்கள். மேருமலையினை ஒத்த கோபுரங்களை உடைய அக்காஞ்சிமாநகரத்தில் வாழை, மா, பலா ஆகிய முக்கனிகளின் சாறும் தேனும் கலந்து ஓடி, கமுகு, தென்னை ஆகிய மரங்கள் நிறைந்த தோப்புகளில் பாய்ந்து அவற்றை வளர்த்தன. அங்கு அமைந்துள்ள அத்திகிரி என்னுமிடத்தில், பிரமாவானவர் முனிவர்கள் சூழ வீற்றிருந்து தவம் செய்வதைக் கண்டார்கள் இந்திரன் முதலிய தேவர்கள். தவம் செய்யும் பிரமாவை வணங்கினான் இந்திரன். பிரமன் இந்திரனைப் பார்த்து, ஐந்தருவின்வளம், இந்திராணி, ஐராவதம் முதலான பல்வகைச் செல்வங்கள் யாவற்றையும் விட்டு இந்நில உலகிற்கு வந்ததன் காரணம் என்ன என்று கேட்டான். எனது தீவினையே வடிவெடுத்தாற் போல தோன்றிய காலநேமி என்னும் அசுரனுக்குத் தாங்கள் அளித்த வரத்தினால் எனது வளமெல்லாம் குறைந்தது என்றான் இந்திரன். அதைக்கேட்ட பிரமன், 'நல்வினை தீவினைகளின் கட்டிலிருந்து விடுபட யாராலும் முடியாது; அவ் ஊழ்வினைகளைக் கடக்கும் வழியை நீவிர் அறிவீர்; இருப்பினும் தென்திசையில் உள்ள கோலாசலத்தின் பெருமைகளைக் கேட்பீராக' என்று கூறி அதன் பெருமைகளைச் சொல்லுகிறான்.

அம்மலையினை வணங்குபவர்களுடைய தீவினையானது அழியும். மிகுந்த பக்தியோடு அதனைத்துதிப்போமாயின் அரங்கநாயகருடைய அடியார்கள் பெறும் ஞானத்தைப் பெற்று முக்தர்களாய் வாழ்வோம். அந்தமலையில் தபோதனர் சித்தர், ஞானியர், பாகவதர், தண்டமும் காவியும் அணிந்தவர், சாத்வீக ஞானமுடையோர் போன்றவர்களே வாழ்வார்கள். அவர்களைக்கண்டு வணங்குவாயானால் நீ சிறந்த ஞானத்தைப் பெற்று அரங்கநாதனைக் காண்பாய். அதன்பின் உன் துன்பமெல்லாம் உன்னைவிட்டு விலகும் என்று அருளிச் செய்தான் பிரமதேவன்.

இந்திரன் மகிழ்ந்து பிரமனை வணங்கி, இந்தப் பதினான்கு உலகங்களுக்கும் படைப்புக்கர்த்தாவாய் விளங்கும் தாங்கள் தவம் செய்யும் காரணத்தை அருளவேண்டும் என்று வேண்டினான். அதற்குப் பிரமன், நினைத்தற்கும் அரியவராகிய நாராயண மூர்த்தியின் திருவடிகளைக் காண வேண்டியும், அவரது அருட்பார்வைக்கு உரியவனாக வேண்டியும் இந்தத் தவவிரதத்தை மேற்கொண்டேன் என்று அருளிச் செய்தான். தங்கள் அமுதமொழியினால் பாவமாகிய பெருங்குன்றைக் கடந்தேன் என்று கூறிப் பிரமனை வணங்கிய இந்திரன், அரங்கநாயகன் எழுந்தருளியுள்ள தலத்தினைக் காணும் விருப்பமுடையவனாய்த் தேவர்கள் புடைசூழ நடந்து வந்தான்.

### (இந்திரன் காஞ்சியடைதல்)

434. வடவரை யதனின் வதிந்தவிந் திரனும்
வண்மையார் தேவர்கள் குழுவுந்
தடமலைத் தணந்து தென்புற நோக்கிச்
சாரல்க ணதிவனந் தலங்கள்
படர்தரு நாடு முனிவர ரிருக்கும்
பன்னக சாலைகள் பிறவுங்
கடலெனப் புடைசூழ் நகரெலாங் கடந்து
காஞ்சிமா நகரினைக் கண்டார்.

எ-து. உலகத்துக்கெல்லாம் ஆதாராமாயிருக்கின்ற வடதிசையில் விளங்கப்பட்ட சொர்ண மயமாகிய மகமேரு கிரியின்கண் காலநேமியென்னும் அசுரேந்திரன் செய்கின்ற தண்டத்தினது பயபுத்தியால் வந்து சேர்ந்திராநின்ற இந்திரமகாராசனும், பிரதாபசாலிகளாகிய தேவர்கூட்டங்களும் இந்த விசாலமாகிய மகமேரு கிரியைவிட்டு நீங்கித் தென்திசை மார்க்கத்தைக் குறித்து வரும்போது பர்வதச்சாரல்களும், புண்ணிய மகாநதிகளும் ஆரணியமும், புண்ணிய தலங்களும், மாடமாளிகைகளும் சூழ்ந்த நாடுகளையும், முனிவர்கூட்டங்கள் வாசம் பண்ணாநின்ற பன்னக சாலைகளையும், மற்றுமுண்டான பிறவிடங்களையும், கடலானது இவ்வுலகத்தினைச் சூழ்தல் போலத் தேவர்கூட்டங்கள் சூழ்ந்துவர இந்திர மகாராசனானவன் காஞ்சிமா நகரமாகிய தொண்டை மண்டலத்தினைக் கண்டு சுபகர மங்கள சாம்பிராச்சியத்தை அடைந்தார்களென்றவாறு. (1)

தடமலை - பெருமை பொருந்திய மலை. தணந்து - நீங்கி. சாரல்கள், நதி, வனம், தலங்கள் எனப்பிரிக்க. பன்னகம் - இலை, ஓலைகளால் வேய்ந்த வீடு.

### Intiraṉ kāñciyaṭaital

*vaṭavarai yataṉiṉ vatintavin tiraṉum*
*vaṇmaiyār tēvarkaḷ kuḻuvun*
*taṭamalait taṇantu teṉpuṟa nōkkic*
*cāralka ṇativaṉan talaṅkaḷ*
*paṭartaru nāṭu muṉivara rirukkum*
*paṉṉaka cālaikaḷ piṟavuṅ*
*kaṭaleṉap puṭaicūḻ nakarelāṅ kaṭantu*
*kāñcimā nakariṉaik kaṇṭār.*

## XXIV. The Rescue of Intiran̲

### Intiran̲ Reached Kāñci

Intiran̲ who lived in the north *Mēru*
Surrounded like an ocean
By the great group of celestials,
Left the great hill and went southwards,
Crossing valleys, rivers, groves,
Pilgrim centres, vast cities, settlements
Where sages lived in leaf-roofed huts,
And reached the city of Kāñci.

(நாட்டு வளம்)

435. குன்றகோ புரங்க ளரம்பையின் வருக்கக்
குலைகடாம் பழுத்திழி கின்ற
கன்றலிற் றேனு மாவினம் பழுத்தக்
கனியினின் றொழுகுறு மதுவு
நன்றதாம் பலவி னினப்பழச் சாறு
மருதமாக் கரையினி னண்ணி
வென்றியாங் கமுகுந் தெங்கினை வளர்த்து
வேண்டிய பயிரெலாம் விளைக்கும்.

எ-து மக மேருவினை யொத்தனவாகிய கோபுரக் குன்றங்களும், வாழையினது வருக்கங்களானவை பழுத்திழிகின்ற தேன்போன்ற ரசங்களும், மாவினங்கள் பழுத்த கனிகளின் நின்றொழுகாநின்ற மதுவும், நன்மையினவாகிய பலாக்கனி பழுத்திழிகின்ற தேன் போனற ரசங்களும், ஒன்றுபட்டோடி வெள்ளமாய்ப் பரந்து, பணைகளின் கரையெல்லாம் அழகாய்ச் சூழந்திருக்கின்ற கமுக மரமாகிய தோப்புகளையும் தென்னஞ் சோலைகளையும் விர்த்திக்கச் செய்து, வெகு விதங்களாகிய பயிரினங்களை யெல்லாம் விளைவிக்கச் செய்யு மென்றவாறு (2)

அரமபை - வாழை. குலைகடாம் - குலைகள் தாம். மது - தேன் கன்றல் - நைதல், கெடுதல்.

உரை . பணை - மருதநிலம். வயல் விர்த்தி - விருத்தி - வளர்தல்.

## Nāṭṭu vaḷam

*kuṉṟakō puraṅka ḷarampaiyiṉ varukkak*
*kulaikaṭām paḻuttiḻi kiṉṟa*
*kaṉṟaliṟ ṟēṉu māviṉam paḻuttak*
*kaṉiyiṉiṉ ṟoḻukuṟu matuvu*
*naṉṟatām palavi ṉiṉappaḻac cāṟu*
*marutamāk karaiyiṉi ṉaṇṇi*
*veṉṟiyāṅ kamukun teṅkiṉai vaḷarttu*
*vēṇṭiya payirelām viḷaikkum.*

## The Rich Land

Mountainous spires, groves with juice
From plantain trees with ripe bunches
Of fruit, honey, juice from mangoes,
Also juice from jackfruits
Were all flowing together like a flood.
On the banks were betelnut and palm trees
And a variety of corn fields.

(காஞ்சியில் பிரமன் தவஞ்செய்தல்)

436. மறைபயில் பொன்னஞ் சிறகடிப் பவளத்
துண்டம்வாய் மாசறு தவளத்
திறையதா யோங்கு மெகினப்புள் ளூர்ந்த
வெம்பிரா னான்முகத் தொருவன்
குறைதவிர் வதற்காய்க் [1]காஞ்சிமா நகரின்
குண்டிகை முனிவரர் விளங்கும்
பொறைதிக ழத்தி கிரியினிற் றவஞ்செய்
மாதவன் புதல்வனைக் கண்டான்.

எ–து. வேதாத்தியாய பதக்கிரமச் சடையை ஆராய்ந்தறிந்த, பொன்மயமாய ஒளியை விரிக்காநின்ற சிறகினையுடையதாயும், பவளத்துண்டம் போன்ற மூக்கலகினையுடையதாயும், கனகரகிதமாய் அழகொளிக்காநின்ற வெண்மை நிறத்தினுக்கு முதன்மையோங்கி ஒளிராநின்ற அன்னவாகனத்தில் ஆரோகணிதமாய் நடாத்திய சுக, சொரூப, பரஞ்சித, மனோகரமாகிய நாவின் மகள், சாவித்திரி, காயத்திரி என்னும் கற்புத் தன்மையால் நற்குண நற்செய்கையை

யுடைய அருட்சத்திகளுக்கு நாயகராய், எமது கர்த்தாவாய், நான்கு திருமுகங்களையுடைய யோகசாங்கியரால் வந்திக்காநின்ற பிரமாவானவர், தனது குறையானது தீரும் பொருட்டாய்க் காஞ்சி மாநகரமென்னும் திவ்விய, ரமணிய, சுந்தரவிலாச சுகுணமான ஞானோதய தலமாகிய அத்திகிரியில் மகா தபோநிதிகளாகிய மகாரிஷிகள், தபோதனர்கள் சூழத்தக்கதாய்ச் சதுர் முகனாகிய பிரமதேவர் தவம் செய்யக் கண்டார்கள் இந்திரன் முதலாகிய தேவர்கள் என்றவாறு. (3)

எகினப்புள் - அன்னப்பறவை. மறைபயில் எம்பிரான் - பிரமன். எகினப்புள்ளூர்ந்த எம்பிரான் எனக்கூட்ட. பொன்னஞ்சிறகு, பவளவாய், தவளத்துஇறை - அன்னம் என்க. தவளம் - வெண்மை. குணடிகை - கமண்டலம். மாதவன் - திருமால்.

**உரை** - பதக்கிரமச்சடை - காலடியின் இரேகை. வேதா - பிரமன்

பா.வே. - 1. காஞ்சிமா நகரின் குண்டிகை முனிவரர் விளங்கும் முறையங்கிட் டோமம் வாசபே யமதா முதலிய யாகத்தை முடித்தான்.

## Kāñciyil Piramaṉ tavañceytal

*maṟaipayil poṉṉañ ciṟakaṭip pavaḷat*
*tuṇṭamvāy mācaṟu tavaḷat*
*tiṟaiyatā yōṅku mekiṉappuḷ ḷūrnta*
*vempirā ṉāṉmukat toruvaṉ*
*kuṟaitavir vataṟkāyk kāñcimā nakariṉ*
*kuṇṭikai muṉivarar viḷaṅkum*
*poṟaitika ḷatti kiriyiṉiṟ ṟavañcey*
*mātavaṉ putalvaṉaik kaṇṭāṉ.*

## Piramaṉ's Austerities in Kāñci

Here they saw Piramaṉ, Nārāyaṇaṉ's son,
Our god who rides the swan that is white
As rising waves, has golden wings
That beat creating the sound of scriptures.
The swan has also a mouth red as coral.
This Piramaṉ sought to overcome his faults
By undertaking austerities
In the Atti Hill of Kāñci city
Where live sages who carry water pots.

### (பிரமன், இங்கு ஏன் வந்தாய் என இந்திரனை வினவுதல்)

437. **இன்னதன் மையனாம் பிரமனைக் கண்டங்**
**கிந்திரன் சரணினை யிறைஞ்ச**
**அன்னவன் வினவு மரசவைந் தருவின்**
**[1]வண்மையும் வாரணத் தமைவும்**
**பொன்னக ரின்பப் புணர்ச்சியு மணியும்**
**பொருந்திய சுரபியு நிதியும்**
**என்னைநீ நீத்திவ் விடத்தினிற் புகுந்த**
**காரண மியம்புதி யென்றான்.**

எ-து. இத்தன்மைத்தாகிய சிருட்டி கர்த்தாவான பிரமதேவர் தவம் செய்யக்கண்ட இந்திர மகாராசனானவன், அவருடைய உபயசரணார விந்தத்தினை வந்திக்க, இந்திரனைப் பார்த்தருளிச் செய்கின்றார் : வாராய் இந்திரனே! உனது ஐந்தருவினது வளமையையும் ஐராவதம், இந்திராணி, அரம்பையர்கள், காமதேனு, சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதியாகிய வைபவச் செல்வத்தையும் விட்டு என்ன காரணத்தைக் குறித்து இவ்வுலகின்கண்ணே வந்தனை? அதைக் கூறுவாய் என்றார் பிதாமகன் என்றவாறு. (4)

சரண் - திருவடி. ஐந்தரு - தேவருலகத்து ஐந்து மரங்கள். வாரணம் - யானை, அயிராவதம் சுரபி - பசு, காமதேனு என்னை நீ நீத்தது - நீ நீத்தது என்னை? என்னை - என்ன, எதனால்? நிதி - சங்கநிதி, பதுமநிதி என்னும் இந்திரன் செல்வம். சங்கின் வடிவிலும், தாமரை வடிவிலும் இருக்கும் பொன்.

பா.வே. - 1. வளமையும்.

### Piraman̲, iṅku ēn̲ vantāy en̲a Intiran̲ai vin̲avutal

*in̲n̲atan̲ maiyan̲ām piraman̲aik kaṇṭaṅ*
*kintiran̲ caraṇin̲ai yir̲aiñca*
*an̲n̲avan̲ vin̲avu maracavaiṅ taruvin̲*
*vaṇmaiyum vāraṇat tamaivum*
*pon̲n̲aka rin̲pap puṇarcciyu maṇiyum*
*poruntiya curapiyu nitiyum*
*en̲n̲ainī nīttiv viṭattinir̲ pukunta*
*kāraṇa miyamputi yen̲r̲ān̲.*

## Piramaṉ Queries Intiraṉ

Intiraṉ saw Piramaṉ, thus intent
On his austerities,
And saluted his feet.
Piramaṉ asked: 'Why have you left
The prosperity showered
By your five divine trees,
Your elephant, the joy of union
In the heavens, the legendary jewels,
The divine cow and all the rest
And come to this place?'

(காலநேமியின் கொடுமையைக் கூறுதல்)

438. பதுமமே லவனார் மொழியினை [1]வினவு
மிந்திரன் பகருவா னடிகேள்
புதுமையா நினது பதாம்புயம் பணியாப்
புந்தியா றீவினைப் புகுந்த
சதுரினாற் கால நேமியெம் வினையாங்
குன்றுபோற் சார்ந்தன னவற்குன்
மதுமலர்த் திருவாய் மலர்ந்திடும் வரத்தான்
மாய்ந்ததெம் வளனென வகுத்தான்.

எ-து. ஆயிரத்தெட்டிதழினால் பிரகாசியாநின்ற பதும பீடிகையின் வீற்றிருக்கப்பட்ட மேலவனாகிய பிரமாவானவர், திருவாய்மலரினால் மலர்ந்தருளிய வினாவின் மொழியினாலே இந்திர மகாராசனானவன், தனக்கு விளைந்த வரலாற்றைச் சொல்கின்றான்: சிருட்டிக்கர்த்தாவாகிய என்னையனே! சுயம் பிரகாசமமைந்த உமது பாததாமரையாகிய திருவடியை அரன் முதலாகிய தேவர்கூட்டங்கள் வந்திக்காத தீவினைப் பகுப்பினால் காலநேமியென்னும் அசுரேந்திரனானவன் எனது தீவினைக் குன்றம்போல் தோன்றினான். அவன் தனக்கு நீங்கள் திருவாய் மலர்ந்தருளிய அமுத சாகரத்தினாலெனது மங்களாகர, ரஞ்சித வளங்களெல்லாம் குறைவுபட்டு வேறுபட்டேன் என்றான் இந்திர மகாராசன் என்றவாறு. (5)

பதுமம் - தாமரை. பதுமபீடிகை

உரை - தாமரை ஆசனம அடிகேள் - அடிகாள . அடிகளே. அண்மைவிளி. புந்தி - அறிவு. சதுர் - திறம்.
பா.வே. - 1 கேட்டிங்கிந்திரன்

## Kālanēmiyiṉ koṭumaiyaik kūṟutal

*patumamē lavaṉār moḻiyiṉai viṉavu*
*mintiraṉ pakaruvā ṉaṭikēḷ*
*putumaiyā niṉatu patāmpuyam paṇiyāp*
*puntiyā ṟiviṉaip pukunta*
*caturiṉāṟ kāla nēmiyem viṉaiyāṉ*
*kuṉṟupōṟ cārntaṉa ṉavaṟkuṉ*
*matumalart tiruvāy malarntiṭum varattāṉ*
*māyntatem vaḷaṉeṉa vakuttāṉ.*

## On Kālanēmi's Terror

Intiraṉ heard Piramaṉ-on-the-lotus
And said: "Lord, listen to me.
By the evil that resulted
In my not worshipping your feet,
Kālanēmi has appeared
Like a mountain of our evil past.
By the boon given through your nectarean lips
Our prosperity was destroyed.'

(பிரமன் கோலவரையின் சிறப்பைக் கூறுதல்)

439. இவ்வித மாகக் கரைந்துநைந் துருகி
இசைத்திடு மரசர்கோன் முகத்தைச்
செவ்விதின் நோக்கிப் பதுமமே லுறைவோன்
தெருட்டுவான் றீவினைச் சிமிழ்ப்பை
எவ்வித மாகக் கடப்பரான் மாக்க
ளியல்பினை நீயறி கிலதோ
நவ்விசேர் தென்பாற் காவத மைந்திற்
கோலமால் வரைநணு கிடுமால்.

எ-து. இந்திர மகாராசனானவன் இவ்விதமாய்க் கரைந்துருகி நைந்துமொழிகின்ற வார்த்தையைக் கேள்வி செய்தவராய், அவரது முகத்தைக் கருணைகூர்ந்து பங்கயமலரின்கண் வீற்றிருக்காநின்ற மேலவராகிய பிரமதேவரானவர் அருளிச் செய்கின்றார்: வாராய் தேவராசனே! இவ்வுலகத்தில் நல்வினை, தீவினை யென்னும் சங்கிலித் தொடர்பாலிறுகக் கட்டிய கட்டை எவ்விதத்தில் தப்பித்துக் கொண்டு பிழைப்பார்கள் ஆன்ம கோடிகளானவர்கள்?

ஆகையால் அந்த விதிவசமாகிய ஊழ்வினைகளைக் கடக்கத்தக்க மார்க்கத்தினை நீரென்ன அறியாதவரோ? ஆகிலும் மான் முதலாகிய மிருக சாதிகள் சஞ்சரிக்காநின்ற ஆரணியங்கள் மருவிய தெற்குத்திசையினில், அதற்கு ஐந்துகாவதமாகிய கோலாசலகிரியென்னும் தெய்வீகத்தல மொன்று உண்டு: அந்த அதிசிலாக்கியமாகிய கிரியினிட விருத்தாந்தங்களைச் சொல்லக்கேளீர் இந்திர மகாராசனே என்று சொல்லத் தொடங்கினார் பிரமதேவ ரென்றவாறு. (6)

சிமிழ்ப்பு - கட்டுதல், பிணித்தல். ஆன்மாக்கள் - சீவகோடிகள். நவ்வி - மான்குட்டி. காவதம் - காததூரம் : நான்கு கூப்பிடுதூரம்.

## Piramaṉ kōlavaraiyiṉ ciṟappaik kūṟutal

*ivvita mākak karaintunain turuki*
*icaittiṭu maracarkōṉ mukattaic*
*cevvitiṉ nōkkip patumamē luṟaivōṉ*
*teruṭṭuvāṉ rīviṉaic cimiḻppai*
*evvita mākak kaṭapparāṉ mākka*
*ḷiyalpiṉai nīyaṟi kilatō*
*navvicēr teṉpāṟ kāvata maintiṟ*
*kōlamāl varainaṇu kiṭumāl.*

## Piramaṉ on the Kōla Hill's Greatness

Looking with compassion upon the face
Of the king of kings who lamented thus,
The lotus-residing Piramaṉ said:
'How can people cut off the knot
Made of one's evil past?
Are you not aware of this natural law?
Go to the deer-rich Kōla Hill
Which is five *kāvatam*
To the south of this place.

(அரங்கனின் பெருமையைக் கூறுதல்)

440. அம்மலை காணின் தீவினை மலையு
மழிந்திடு மதனைவந் தித்துச்
செம்மலே துதிக்கின் நவரசப் பேரின்
பத்தினைச் சேர்குவை செல்வக்

கொம்மைவெம் முலையாள் புலோமிசை முதலாங்
கோமள வைபவம் பெற்று
நம்மையா ளுடைய வரங்கனா ரடியார்
நயகுண நன்மைநன் குறுமால்.

எ-து. அந்தக்கிரியை யாதாமொருவர் அதிதூரமாயினும், சமீபத்தாயினும் இருந்து பத்தியொடும் சேவைசெய்வார்களாகில் தீவினையாகிய பஞ்சுமலையானது தரிசன அக்கினியால் தகனமாவதுமல்லாமல், அக்கிரியை ஒருதரமாவது சிரத்தையாய்த துதிக்கப் பெறின், ஒன்பது வகையாயுள்ள நவரச வைபவ பேரின்பமாய், நம்மையெல்லாம் அஞ்ஞானத்தினின்றெடுத்துக் காருணியத்தால் திருத்திப் பணிகொண்டருளிய ஸ்ரீ அரங்கநாயகருடைய அடியார்களிட நயகுண நன்மையாகிய சாத்வீக ஞானத்தைப் பெற்றுச் சீவன் முத்தர்களாய் வாழ்வார்கள் என்றருளிச் செய்தார் பிரமதேவ ரென்றவாறு. (7)

தீவினைமலை - தீவினைகளின் தொகுதியாகிய மலை உருவகம். வந்தித்தல் - புகழ்தல். துதித்தல் கொம்மை - இளமை. திரட்சி. புலோமிசை - புலோமசை - இந்திராணி. புலோமன் என்னும் அரக்கனின் மகள். இந்திரன் புலோமனைவென்று புலோசையைக் கவர்ந்து சென்று மணந்தான் கோமளம் - இளமை மாணிக்கமணி.

## Araṅkaṉiṉ perumaiyaik kūṟutal

*ammalai kāṇiṉ tīviṉai malaiyu*
*maḻintiṭu mataṉaivan tittuc*
*cemmalē tutikkiṉ navaracap pēriṉ*
*pattiṉaic cērkuvai celvak*
*kommaivem mulaiyāḷ pulōmicai mutalāṅ*
*kōmaḷa vaipavam peṟṟu*
*nammaiyā ḷuṭaiya varaṅkaṉā raṭiyār*
*nayakuṇa naṉmainaṉ kuṟumāl.*

## On Araṅkaṉ's Greatness

'If one sees that Hill
The mountain of one's evil past
Gets destroyed. King! If you worship
That Hill, you will gain
The superior joy of nine pleasures.
You will gain Intirāṇi endowed
With youthful breasts and other joys,
And also the good gained by the devotees
Of Araṅkaṉ who guards us.

(அந்த மலையில் வசிப்போர்)

441. வாலகில் லியர்கள் சித்தர்க ளியோக
வண்மையர் ஞானியர் வனசக்
கோலமா முனிவர் குண்டிகைக் கரத்தர்
மரவுரி திரிதண்டக் கோலர்
மூலமா மேக தண்டத்தர் காவி
யரையினர் முடிவின்வே தாந்தஞ்
சீலமாஞ் சித்தாந் தஞ்சம ரசமாய்த்
தெளிந்தவ ரம்மலை யுறைவார்.

எ-து. வாராய் தேவ ராசனே! அந்தப்புனித பாவனமாகிய கிரியில் எவ்வகைப் பட்டவர்கள் வாசம் பண்ணுவார்கள் என்றால், வாலகில்லிய ரென்னும் தபோதனர்களும், ஒன்பது வகையாயுள்ள சித்தர்கூட்டங்களும், பத்தி யோக சாங்கியர்களும், ஞானியர்களும், தாமரைக் கர்ணிகை மாலையணிந்த பாகவதப்பரர்களும், குண்டிகை தாங்கிய கராம்புய மலரையுடையவரும், மரவுரியைத் தரித்த திரிதண்ட, ஏகதண்டம் தாங்கிய தபோநிதிகளும், காவி வஸ்திரத்தைக் கவினாகப் புனைந்தவர்களும், சித்தாந்த வேதாந்தங்களைச் சமரச, யூக, சாத்வீக ஞானத் தாலுணர்ந்தவர்களும், அந்தக்கிரியில் வாழ்வார்கள் என்று அருளிச் செய்தார் பிதாமக னென்றவாறு. (8)

வாலகில்லியா - பிரமனுடைய உள்ளத்தால் தோன்றிய புத்திரர் (மானசபுத்திரர்) அறுபதின்மர் அவர்களுள ஒருவா கிருது எனபவர் அக் கிருதுவின் மக்களாய்த் தோன்றி இருடியர்களாய் வாழநதவாகள வாலகிலலியா எனபபடடனர். வால - இளமை கில்லம் - கழுத்து; குறுகிய கழுத்தையுடையவா குண்டிகை - கமண்டலம் சமரசஞானம் - நடுவுநிலையோடு அறியும் அறிவு; வேறுபாடின்றித் தொகுத்து அறியும தன்மை. யூகஞானம் - உள்ளத்தாலறியும் அறிவு. ஆய்ந்தறியும் தனமை சாதவீக ஞானம் - ஐம்பொறியடக்கி, பொறையும் வாய்மையும் கொண்டு அறியும் அறிவு.

## Anta malaiyil vacippōr

*vālakil liyarkaḷ cittarka ḷiyōka*
*vaṇmaiyar ñāṉiyar vaṉacak*
*kōlamā muṉivar kuṇṭikaik karattar*
*maravuri tiritaṇṭak kōlar*
*Mūlamā mēka taṇṭattar kāvi*
*yaraiyiṉar muṭiviṉvē tāntañ*
*cīlamāñ cittān tañcama racamāyt*
*teḷintava rammalai yuṟaivār.*

## Residents on the Hill

'The Vālakilliyā's, Cittās, yōgis,
Wise men, sages with lotus garlands,

Those who carry water pots,
Sages carrying the triple-stick
And garmented in bark,
Renunciates carrying the single stick,
People wearing the ochre robe,
Philosophers who have gained realisation
And attained clarity of thought:
All these reside on the Hill.

**(அரங்கரைக் கண்டால் உன்துயர் நீங்கும் எனல்)**

442. **அவர்தமைக் காணிற் றுறக்கவை பவமே**
**லாசையு நீங்கிடு மதனால்**
**தவமதி னுயர்ந்த தத்துவ ஞானஞ்**
**சார்குவை யனந்தனார் பரித்தக்**
**குவலய மதிக்கு மாயிர முடியுங்**
**கவித்திடக் குறைவில்பூ ரணமாங்**
**கவலைதீ ரரங்க னியோகநித் திரையைக்**
**காண்குவைக் கசடறு மன்றே.**

எ-து. நாமருளிச் செய்த எவ்வகைப்பட்ட பெரியோர்களையும் நீ காண்குவையாகில். மேன்மையாகிய துறக்க வைபவ ஆசைகள் உம்மைவிட்டு நீங்கிடும் அதனால் மெய்யறிதலாகிய தத்துவ ஞானத்தைச்சார்ந்திடப் பெறுவாய் அதனால் இவ்வுலகெல்லாம துதித்து சரணாகதியடைகின்ற அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற செந்தாமரைக் கண்ணனாகிய அரங்க நாயகனைக் காணப்போகிறாய்; அதனால் நீ செய்த துன்பங்களெல்லாம் உன்னை விட்டு நீங்குமென்றார் பிரமதேவ னென்றவாறு. (9)

துறக்கவைபவம் - விண்ணுலக இன்பம். அனந்தனார் - ஆதிசேடன் பரித்த - தாங்கிய. கசடறும் - கசடு + அறும் - குற்றங்கள் நீங்கும்; துன்பங்கள் நீங்கும்.

## Araṅkaṉaik kaṇṭāl uṉtuyar nīṅkum eṉal

*avartamaik kāṇiṟ ṟuṟakkavai pavamē*
*lācaiyu nīṅkiṭu mataṉāl*
*tavamati ṉuyarnta tattuva ñāṉañ*
*cārkuvai yaṉantaṉār parittak*

*kuvalaya matikku māyira muṭiyuṅ*
*kavittiṭak kuṟaivilpū raṇamāṅ*
*kavalaitī raraṅka ṉiyōkanit tiraiyaik*
*kāṇkuvaik kacaṭaṟu maṉṟē.*

## Araṅkaṉ will Remove your Sorrow

'If you see these people,
You will be freed of desires.
Go there to attain true knowledge
Which is superior to austerities.
You will see the Lord in yōgic sleep
As an auspicious form
On the serpent-bed
That has a thousand hoods,
To whom the world pays obeisance.
Your sorrows will cease.'

(பிரமன், தான் தவம் செய்வதன் காரணம் கூறுதல்)

443. உலகெலா முமது திருவரு ளதனால்
ஓங்கிடு மறம்பொரு ளின்பந்
திலகம்போன் றொளிருந் தேவரீர் தவஞ்செய்
திச்சையை யருள்கென வினவ
அலகிலாப் புகழ்சே ரச்சுவ மேதஞ்
செய்தவர் பொன்னடி காணத்
தலமதி னுயர்ந்த சத்திய விரதஞ்
சார்ந்தனன் றவம்புரி வதற்காய்.

எ-து. இப்படியாக அருளிசசெய்த சதுர்முகனுடைய பாதத் தாமரையிலே அனந்தமான தெணடன் சமர்ப்பித்து இந்திரனானவன் விண்ணப்பம் செய்கின்றான் இந்தப் பதினாலு லோகஙகளுக்கும் பிதாவாகிய உமக்குத் தவம் செய்யவேண்டிய காரண முண்டோ? சமஸ்தமாகிய தாமார்த்த, காம, மோக்ஷங்களும் உமது திருவருளினாலே நடத்துகின்ற திரிமூர்த்திகளிலும சிருட்டிகர்த்தாவாய்த் திலதம் போலொளிரும படியாகிய நீர் தவம் செய்கின்ற காரணத்தை அனுககிரகிக்க வேணுமென்று விண்ணப்பம் செய்ய, வாராய் தேவராசனே! எண்ணுகைக்கு அசக்கியமாகியும், அனந்த கலியாணகுண விபூதி விக்கிரக

விசேடராய் விளங்குகின்ற ஸ்ரீமன் நாராயணருடைய திவ்விய திருவடிகளைக் காண வேண்டி, அரிதாகிய அசுவமேத முதலாகிய யாகங்களைச் செய்ததனாலே, அவருடைய கிருபா நோக்கத்துக்குப் பாத்திரனாக வேண்டி, அதி சிரேட்டமாகிய இந்தச் சத்திய விரதத்தைச் சார்ந்தோமென்று அருளிச் செய்தார் பிதாமக னென்றவாறு. (10)

திலகம் - பொட்டு; நெற்றியணி. அச்சுவமேதம் - அசுவமேதயாகம்

## Piramaṉ, tāṉ tavam ceyvataṉ kāraṇam kūṟutal

*ulakelā mumatu tiruvaru ḷataṉāl*
*ōṅkiṭu maṟamporu ḷiṉpan*
*tilakampōṉ ṟoḷirun tēvarīr tavañcey*
*ticcaiyai yaruḷkeṉa viṉava*
*alakilāp pukaḻcē raccuva mētañ*
*ceytavar poṉṉaṭi kāṇat*
*talamati ṉuyarnta cattiya viratañ*
*cārntaṉaṉ ṟavampuri vataṟkāy.*

## Piramaṉ on his Austerities

Intiraṉ said: 'All these worlds
Are your creation. You are the brilliant
Image of Dharma, wealth and joy.
Do tell me what need makes you
Perform such austerities.'
'Having completed famous horse sacrifices
I have come to this Cattiyavirata city
To undertake austerities
For envisioning the golden feet
Of Araṅkaṉ.'

(இந்திரன் கோலவரை நோக்கிச் செல்லுதல்)

444. என்றனன் பதும மேலுறை பகவ
னெழிற்சர ணாம்புய மலரைக்
குன்றம்போற் பணிந்து வினையெனுங் குன்றைத்
தொலைத்தன னின்மலர் வாயாம்

பொன்றலி னமுத சாகர மதனா
லெனப்புகழ்ந் [1]துருகியே போந்தான்
மன்றலந் துளப மாலையான் மருவு
மாதல நோக்கியே [2]மகிழ்ந்தார்.

எ-து. அதிசிலாக்கியமாகிய கோலாசலப் பெருமையைக் கூறக்கேட்ட இந்திர மகாராசனானவன், சுபகரமங்கள இலக்கணம் அமைந்த தாமரை மேலவனுடைய திவ்விய சரணாம்புயமலரை நினைந்து உருகிக் கூறுகின்றான்: நினது மலர்போன்ற திருவாய் மொழியாகிய அமுதசாகரப் பிரதாப அனுக்கிரகத்தினாலே அடியேன் செய்த பாபமாகிய குன்றத்தைக் கடந்தேன் என்றவர் திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து, திவ்விய பரிமள மணங்கமழ்கின்ற துளபமாலை அணிந்த அரங்கநாயகன் யோக நித்திரை செய்கின்ற பரம பவித்திரமாகிய தலத்தினைக் குறித்து நடக்கத்தக்கதாய் யோசித்துப் பிதாமகனருள் பெற்றவனாய்த் தேவர்க் கூட்டங்களுடனே நடந்தான் இந்திர மகாராசன் எனறவாறு. (11)

பதுமமேலுறை பகவன - பிரமதேவன. பொன்றல - அழிதல்

பா.வே, - 1 துருகினினபோந்தான் 2 நடந்தார்.

இந்திரன் மீண்ட அத்தியாயம் முற்றும்.

## Intiraṉ kōlavarai nōkkic cellutal

*eṉṟaṉaṉ patuma mēluṟai pakava*
*ṉeliṟcara ṉāmpuya malaraik*
*kuṉṟampōṟ paṇintu viṉaiyeṉuṅ kuṉṟait*
*tolaittaṉa ṉiṉmalar vāyām*
*poṉṟali ṉamuta cākara mataṉā*
*leṉappukaḻn turukiyē pōntāṉ*
*maṉṟalan tuḷapa mālaiyāṉ maruvu*
*mātala nōkkiyē makiḻntār.*

## Intiraṉ Goes to Kōla Hill

So said the lotus-residing Piramaṉ.
Intiraṉ saluted his lotus feet
And said: 'By the nectarean words
From your gracious lips
I have destroyed the mountain
Of my evil past.' Having praised him
He proceeded towards the residence
Of the Lord who wears *Tuḷaci* garlands.

## 25. இருபத்தொன்றாவது இந்திரன் நாடுகண்ணுற்ற அத்தியாயம்

காஞ்சிமாநகரைவிட்டு நீங்கிய இந்திரன் முதலாகிய தேவர்கள், நெருங்கிய மரங்களடர்ந்த வனத்தில் பறவைக்கூட்டங்களின் வேத ஒலிகளைக் கேட்டவர்களாய் நடந்தார்கள். மேலும் அப்பறவைகள் தங்கள் படைகளோடு சென்று மானத மடுவை அடைந்தன. அங்குத் தங்கியிருந்த தம் இனப்பறவைகள் அரங்கநாயகனுடைய புகழினைக் கூறாமல் வாளாவிருந்தன. அதனால் மனம் வருந்தித் தங்கள் இடத்தை அடைந்து, அங்கே அரங்கநாயகரின் புகழ்பாடும் பறவைகளைக் கண்டு மகிழ்ந்தன. அந்தத் தன்மைகளைக் கண்டு போற்றினார்கள். அவ்வனத்தில் விளங்கிய தடாகங்களில் மலர்ந்து காணப்பெற்ற மலர்களையும், குளக்கரைகளில் மலர்களோடு விளங்கிய மரங்களையும் கண்டு மகிழ்ந்தார்கள். யசுர் வேதத்தின் உத்தரபாகத்தில் கூறப்பெற்ற வராகப் பெருமாளின் திருமுகத்திலும், திருப்பாத கமலங்களிலும் தோன்றிய வராகநதியினைக் கண்டு, அதில் முழுகி மகிழ்ந்திருந்தார்கள். அப்போது இந்திரனின் வாகனமாகிய மேகமானது, கடல்நீரை உண்டு, இடியினை முழக்கி, மின்னலைத் தோற்றுவித்து மழைபொழியத் தொடங்கியது. மலையினின்று வெள்ளருவி பெருகியது. அவ்அருவியாகிய பெண்ணை முல்லையாகிய இரண்டாந்தாய் வரவேற்றாள். தன்னிடம் வளரும் பசுக்களின் பாலை ஊட்டி வளர்த்து காலால் நடக்குமாறு செய்தாள். காலால் நடக்கும் பருவமடைந்த அப்பெண், காட்டின் கால்வாய் வழியாக நடந்து மருதமாகிய மூன்றாந்தாயிடம் அடைந்தாள். அம்மூன்றாந்தாய் பாத்திகளாகிய தொட்டிலை அமைத்துச் சீராட்ட, வளர்ந்து பெதும்பைப் பருவத்தை அடைந்தாள். குவளை கண்ணாக, தாமரை முகமாக, சங்கு கண்டமாக, செவ்வாழை தொடையாக செவ்விளநீர் கொங்கையாக மூங்கில் தோளாக . . . விளங்க நுரையாகிய வெண்பட்டு அணிந்து வளர்த்தாள் அத்தாய். நான்காம் தாயாகிய நெய்தலானவள், செவ்வாம்பலாகிய தன் வாயைத் திறந்து வண்டின் ஓசையாகிய மொழியால் வரவேற்றாள். அத்தாயை வந்து அடைந்த வெள்ளமாகிய அப்பெண், சந்தனம் முதலிய மணப்பொருள்களால் அலங்கரிக்கப்பெற்றாள். திருமணக்கோலத்தை உண்டாக்கிய அத்தாய் தன் மகளுக்கேற்ற கணவனாக வருணராசனை அழைத்தாள். திருமணம் நடத்திவைத்தாள். மணமக்களாகிய இருவரும் சங்குக்கூட்டங்கள் ஒலிக்கும் கடலில் முழுகி அரங்கநாதனின் திருவடிகளை வணங்கி மகிழ்ந்தார்கள். இந்த நானிலங்களின் முதல், கரு, உரிப்பொருள்களை விளக்கி, திணை தோறும் பொருந்தி நிற்கும் பதினான்கு பொருளையும் விளக்கும் அகப்பொருள் ஆராய்ச்சியற்ற அடியேன் அந்நிலங்களின் மேன்மைகளை இதற்குமேல் எவ்வாறு கூறுவேன்?

### (இந்திரன் காஞ்சியை விட்டு நீங்குதல்)

445. இந்திரன் முதலோர் அந்நகர் நீங்கி
இருள்செறி சோலையிற் புகுந்து
வந்தனர் கடல்போ லஃதினிற் கண்ட
வளமையை யார்வகுத் துரைப்பார்
பந்திய தான சையத்தி னின்ற
பாதவக் கிளைகளின் மஞ்ஞை
முந்திய பூவை முனிவர ரியோக
முயற்சியை முடித்திடக் கண்டான்.

எ-து. இந்திரமகாராசன் முதலாகியபேர்கள் காஞ்சியாகிய அத்திகிரியை விட்டுநீங்கி, இருளானது மூடியிராநின்ற சோலையின்கண் புகுந்து, கடலெனவளைந்து வந்தவர்கள் அந்த வனத்தினிற் கண்ட வளப்பத்தினை யாவராலே கூறமுடியும்? பந்தியாய் அந்த வனத்தின்கண் மருவிய பர்வதததினிடத்திற் பொருந்திய சண்பக, மந்தார, பாரிசாத விருட்சக் கிளைகளில் வாசஞ்செய்கின்ற மயில், குயில், கிளி, நாவணாத்திப் பட்சிகள, முனிவரால் ஓதப்பட்ட வேதாத்தியயனங்கள் சொல்லக் கண்டான் இந்திரமகாராசன் என்றவாறு (1)

சையம் - மலை பாதவம் - தோபபு, மரங்கள் - பொது. மஞ்ஞை - மயில் பூவை - நாகணவாயபுள், கிளி, குயில் எனவும்

உரை வேதாததியயனஙகள் - வேதம ஓதுதல்

### Intiraṉ kāñciyai viṭṭu nīṅkutal

*Intiraṉ mutalōr annakar nīṅki*
*iruḷceṟi cōlaiyiṟ pukuntu*
*vantaṉar kaṭalpō laḵtiṉiṟ kaṇṭa*
*vaḷamaiyai yārvakut turaippār*
*pantiya tāṉa caiyatti ṉiṉṟa*
*pātavak kiḷaikaḷiṉ maññai*
*muntiya pūvai muṉivara riyōka*
*muyaṟciyai muṭittiṭak kaṇṭāṉ.*

## XXV. Intiraṉ Sees the Land
## Intiraṉ Leaves Kāñci

Intiraṉ and others left the city
And entered the very dark grove
Like an ocean. Who can describe

The sights discovered by them?
Those hill ranges had gardens
With trees, where dwelt peafowl,
And bush mynahs. The chants by sages
Reciting scriptures were also heard.

(வழியில் பறவைக் கூட்டக் காட்சி)

446. வனங்களின் மிகுந்த மயில்குயி லன்ன
சாலங்கள் பெடையொடு மருவி
இனங்களோ டேகி மானத மடுவி
னிலகிய தத்தம தினத்தைக்
கனமதாய்க் கண்டு களித்திடுங் காலை
அரங்கனார் புகழினைக் காணா
மனமெலிந் துருகித் தத்தம திடத்தின்
மருவிய புட்களை மதித்தார்.

எ-து. அந்த ஆரணியங்களின்கண் மிகுந்த மயில் வர்க்கங்கள், குயில் தொகுதிகள், அன்ன சமூகங்கள் முதலானவை எல்லாம் தத்தம் பேடையினைக் கூட்டிக்கொண்டு வர்க்கங்களுடனே பொருந்தி, மானத தீரத்தின்கண் தத்தம் இனங்களைக் கண்ணுற்று அதிசயமடைந்த காலத்தில், அரங்கநாயகர் புகழினைக் கூறக்கேளாதபடியினாலே மனம் மெலிந்து உருகி யவ்விடத்திலிருக்கச் சகியாத புட்குலங்களானவை மீட்டுந் தமதிடஞ் சேர்ந்து அரங்கநாயகர் புகழினைக் கூறுகின்ற பட்சி சாலங்களைப் பார்த்து மகிழ் சிறந்திருத்தலை மதித்தா னென்றவாறு. (2)

சாலம் - கூட்டம். மானதமடு - மானதம் என்னும் பொய்கை; பிரமலோகத்திலுள்ளது புட்கள் - புள் + கள் - பறவைகள்.

## Vaḻiyil paṟavaik kūṭṭak kāṭci

*vanaṅkaḷin mikunta mayilkuyi lanna*
*cālaṅkaḷ peṭaiyoṭu maruvi*
*inaṅkaḷō ṭēki mānata maṭuvi*
*ṉilakiya tattama tinattaik*
*kanamatāyk kaṇṭu kaḷittituṅ kālai*
*araṅkanār pukaḻinaik kāṇā*
*manamelin turukit tattama tiṭattin*
*maruviya puṭkaḷai matittār.*

## Flight of Birds

In those woods were many peafowl,
*Kuyils* and swans that went about
With their beloveds. They moved
In groups to the Māṉaca Lake
To watch their likes with joy.
As the other birds did not praise
Araṅkaṉ's greatness, they grew sad
And went back to their own place
And were happy.

(சோலையும் சுனையும்)

447. அந்தமா வனத்தி னழகிய சோலை
யருஞ்சுனை பெருகிய தடாகம்
பந்தமா கியபொற் றாமரை யல்லிப்
படர்ந்தநல் லாம்பல்கள் [1]பரவுஞ்
சந்ததஞ் சுகந்தம் வீசுபுன் னாகஞ்
சண்பகஞ் சார்ந்திடக் கண்ட
இந்திர னுலகை வெறுத்துநற் பரம
பதமென வின்பமுற் றனனே.

எ-து. அந்த வனத்தின்கண் அழகிய சோலைகளானவை அருகே சுனையின்கண் பெருகிய, சல சமுர்த்தியாகிய தடாக பந்திகளின்கண், பொன்னந் தாமரைகள், அல்லிகள், ஆம்பல்கள் முதலானவை அலர்ந்து பிரகாசிக்கும். அதன் கரையின்கண் புன்னாக விருட்சங்களும், சண்பக விருட்சங்களும் மலர்ந்து அழகாய்த் துலங்குதலைக் கண்டு, இந்திர மகாராசனானவன் தனது தேவலோக பஞ்சதாரு முதலாகிய வளங்களை வெறுத்திசைத்தா னென்றவாறு. (3)

சுகநதம் - நறுமணம். புன்னாகம் - புன்னைமரம்.

பா.வே. - 1. அலரும்

## Cōlaiyum cuṉaiyum

*antamā vaṉatti ṉaḻakiya cōlai*
*yaruñcuṉai perukiya taṭākam*
*pantamā kiyapoṟ ṟāmarai yallip*
*paṭarntanal lāmpalkaḷ paravuñ*

*cantatañ cukantam vicupuṉ ṉākañ*
*caṉpakañ cārntiṭak kaṇṭa*
*intira ṉulakai veṟuttunar parama*
*patameṉa viṉpamuṟ ṟaṉaṉē.*

## Groves and Shallow Ponds

In that immense wood there were
Lovely groves, rich ponds and lakes
With streams. Here blossomed bright
Lotus, lilies and blue lilies.
Sweet scented mastwood and champak
Were also there. Seeing all this
Intiraṉ grew weary of his heaven
And was overjoyed that
This was indeed the Divine's abode.

(வராகநதியில் மூழ்குதல்)

448. இரண்டதா மறையி னாதியாம் பருச்ச
மூன்றனு வாகத்தி னிசைந்த
பரவுசெஞ் சொல்லிற் பூருவ பாகப்
பயிற்சியைப் [1]பாரமார்த் திமமாம்
விரவுப நிடத மிசைத்திடும் பரமாம்
வராகநன் [2]முகத்தினின் விளங்கிச்
சரணதி னுதித்த வராகநன் னதியிற்
குடைந்துபின் னிந்திரன் அழைத்தான்.

எ-து இரண்டாம் வேதமாகிய யசுர் வேதத்தின் முதற்பருச்சத்தின், மூன்றாம் அனுவாகத்தில் சொல்லுகின்ற பூருவ பாகத்துக்கு உத்தரபாகமாகிய பாரமார்த்திம மென்னும் உபநிடதமும், பரத்துவமாய்ச் சொல்லுகின்ற வராகப்பெருமாள் திருமுகத்தினில் தோன்றி, யதன் பின்பு திருப்பாத கமலத்தின் அவதரிக்காநின்ற வராகநதியைக் கண்டு, தழைத்த தேவர் கூட்டங்களுடனே வந்து, நதியிலே மூழ்கிக் களைதெளிந்து இன்பமுற்று ஆனந்தப் பரவசர்களாய் வீற்றிருந்தாகள் இந்திரன் முதலாகிய தேவர்கள் என்றவாறு. (4)

ஆதியாம் பருச்சம - ஆதி - முதல்; பருச்சம் - பரிச்சம் - பரிச்சேதம் - நூலின் ஒரு கூறுபாடு ஒரு பகுதி. அனுவாகம் - ஒரு பிரிவு; வேதப்பிரிவு. பூருவம் - ஆதி, முதல். உததரபாகம் - பிற்பகுதி

உரை - களை - களைப்பு, சோர்வு

பா.வே. - 1. பாரமார்ததிகமாம். 2 மகத்தினின்

## Varākanatiyil mūḻkutal

*iranṭatā maṟaiyi ṉātiyām parucca*
*mūṉṟaṉu vākatti ṉicainta*
*paravuceñ colliṟ pūruva pākap*
*payiṟciyaip pāramārt timamām*
*viravupa niṭata micaittiṭum paramām*
*varākanaṉ mukattiṉiṉ viḷaṅkic*
*caraṇati ṉutitta varākanaṉ ṉatiyiṟ*
*kuṭaintupiṉ ṉintiraṉ aḻaittāṉ.*

## Bathing in Varāka River

The visage of the Great Boar
Is praised by the Upanishad
Of philosophical disquisition
That forms the earlier part
Of the third Anuvāka in the first division
Of Yajur Vēda. Seeing the river
That streamed from this visage
And flowed at the Lord's feet,
Intiraṉ bathed in it and felt rejuvenated.

வேறு

(மேகக்கூட்டம்)

449. பரவை நீரினை மேகங்க ளுழக்கியே பருகித்
திரம தாகிய கிரியினிற் றங்கியே சென்று
பரவி வானிடைத் தடித்துப்பின் னிடியினைப் பயிற்றிச்
சரம தாமெனக் கான்றன தாரையின் கணங்கள்.

எ-து அப்படிப் பிரமாவினுடைய அனுக்கிரகம் பெறற இந்திரமகாராசனானவன், சஞ்சீவிகிரியைக் குறித்து வரும்போது அவனுடைய வாகனமாகிய மேகமானது இரங்கிப் பரந்த கடலினது நீராகி, அதைச் சேற்றுடனே கலக்கி உண்டு, நிலை பெறுகின்ற மலை நிலஙகளில் இளைப்பாறி, மறுபடியும் ஆகாயத்தில் சென்று இடிகளானவை முழக்க, இடையிடைகளின் மின்னி, இடிககின்ற சப்தங்களானவை சுத்த வீரனது காண்டீபவோசை போன்றும், அவனது சரமாரியைப் போலவுஞ் சொரிந்து நின்றன சலதாரையின் கூட்டங்கள் எனறவாறு (5)

பரவை - கடல். பயிற்றி - உண்டாக்கி. சரமதாம்என - சரம் அதாம் என - சரம் - அம்பு; அம்புமாரியினைப்போல. கான்றன - சொரிந்தன; காலுதல் - உமிழ்தல், பொழிதல். தாரை - மழைத்தாரை.

## Vēṟu

## Mēkak kūṭṭam

*paravai nīriṉai mēkaṅka ḷuḻakkiyē parukit*
*tirama tākiya kiriyiṉiṟ ṟaṅkiyē ceṉṟu*
*paravi vāṉiṭait taṭittuppiṉ ṉiṭiyiṉaip payiṟṟic*
*carama tāmeṉak kāṉṟaṉa tāraiyiṉ kaṇaṅkaḷ.*

## Clouds

The Clouds had drunk sea water,
Later rested on mountain peaks,
Rose up in the sky, thundered
Flashing lightnings, and poured down
Like a shower of arrows.

(மலை வெள்ளம்)

450. **குன்றம் வீழரு வித்திரள் கல்லெனக் குறுகி**
**மன்றல் தங்கிடு முல்லையா கியமரு வியதாய்க்**
**கன்றி னஞ்செறி பசுவின்பா லருந்தியே கவினாய்ச்**
**சென்ற கால்கொடு மருதமாந் தாயினைச் சேர்ந்தாள்.**

எ-து. அந்தச் சஞ்சீவி கிரியினின்றும் விழாநின்ற வெள்ளருவியினது பெருக்கானது, கல்லென்ற ஓசையுடனே அதைவிட்டுப் பெயர்ந்து திவ்விய பரிமளங்களைக் கமழுகின்ற காட்டகமென்னும் முல்லைத் திணையாகிய இரண்டாந்தாய் வருவிக்கப் போய்க் கன்றுகள், பசுக்கள் முதலானவை வாசம் பண்ணுகையால் அந்தப்பசுவின் பாலை இந்தப் பெண்ணுக்கு ஊட்டுவித்து அழகாய் வளர்க்க, வளர்ந்து பொருந்திய கால் வழியாய் நடக்கும் பருவமாக்கியனுப்ப, முல்லைத்திணையாகிய காட்டினுடைய கால்வாய்களிலே நடந்து சென்று, மூன்றாந்தாயாகிய மருதமான வயல் நிலத்திலே வந்து சேர்ந்தாள் மலைவெள்ளப் பெருக்காகிய பெண் ணென்றவாறு. (6)

வீழருவி - வினைத்தொகை; விழுந்த, விழுகின்ற, விழும் - அருவி. கல்லென - 'கல்' என்னும் ஒலியை உண்டாக்கி : ஒலிக்குறிப்புச் சொல். மனறல் - மறு மணம் கவின் - அழகு. அருவித்திரளாகிய பெண் மருதமாந்தாயினைச் சேர்ந்தாள்.

## Malai veḷḷam

*kuṉṟam viḻaru vittiraḷ kalleṉak kuṟuki*
*maṉṟal taṅkiṭu mullaiyā kiyamaru viyatāyk*
*kaṉṟi ṉañceṟi pacuviṉpā laruntiyē kaviṉāyc*
*ceṉṟa kālkoṭu marutamāṉ tāyiṉaic cērntāḷ.*

## Floods from the Hill

The water-falls from the peaks
Rushed down noisily like a girl
Towards her second mother,
The *mullai* region; drinking the milk
Of cows with calves here,
She grew strong and joined
Her third mother, the *maruta* region.

(மருதநிலம்)

451. பண்ணை யாகிய பலபல தொட்டில்கள் பரப்பிப்
பெண்ணைப் பம்பையால் விளிந்திடப் பெரிது [1]வந்தே
தண்ணி யங்ஙனந் திருவிளை யாட்டினை நயந்து
கண்ண [2]தாமுத லாகிய உறுப்பெலாங் கலந்தாள்.

(எ-து) மலைவெள்ளமாகிய பெண்ணை, மூன்றாம் தாயாகிய வயல்நிலமானவள் தன் பெணணுக்குப் பெரும் பாத்தியாகிய பலபல தொட்டில்களை அமைத்து வைத்தாள். அதன் பின்பு அந்தப பெண்ணானவள்வரப் பம்பையினாலே அழைக்கப் பெரிதாகிய சந்தோஷத்துடன் வநது சேர்ந்தாள் அந்தத் தொட்டிலிலே அனேகம் திருவிளையாடலைச் செய்து, கண் முதலாகிய உறுப்புகளெல்லாம் பருவத்துக்கடுத்ததாய்த் தழைக்கப் பாராட்டினாள் மருதநிலமாகிய தாயானவள். அதனாலே பெதும்பைப் பருவத்தைக் கடந்தாள் என்றவாறு. (7)

பணணை - வரப்போடு கூடிய பெரும்பாத்தி, தளை என்னும் நிலப்பகுதி பம்பை - பறை, முலலை நிலபபறை

பா.வே - 1 வந்தெய்து. 2 தாமுதலுறுப்பெலாங் கவினுறக் கலந்தாள்.

## Maruta nilam

*paṇṇai yākiya palapala toṭṭilkaḷ parappip*
*peṇṇaip pampaiyāl viḷintiṭap peritu vantē*
*taṇṇi yaṅṅaṉan tiruviḷai yāṭṭiṉai nayantu*
*kaṇṇa tāmuta lākiya uṟuppelāṅ kalantāḷ.*

## Maruta Land

Here were several cradles
In the shape of fields for the girl.
Invited by the sounds of drums
She played a variety of games
And grew up in loveliness.

(வெள்ளமாகிய பெண்)

452. **குவளைக் கண்ணதாய்த் தாமரை முகமதாய்க் குணத்த**
**தவளச் சங்கமே கண்டமாய்த் தழைத்தமாந் தளிர்க**
**ளுவமை யில்லதோ ருருவமா யூருவா ழைகளாய்க்**
**கவலை யின்றிய கொடியின மிடையதாய்க் கவின.**

எ-து. மூன்றாம் நிலமான மருதமாகிய தாய் வளர்க்க வளர்ந்து, பெதும்பையாகிய பருவமமைந்த வெள்ளமாகிய பெண்ணுக்குக் குவளைமலர்கள் கண்ணாகவும், தாமரைக் கமலங்கள் முகமாய் விளங்கவும், நல்ல குணத்தினையுடைய வெண்மையாகிய சங்கங்கள் கண்டமாய் விளங்கவும், தென்றல் காற்றினால் தழைக்காநின்ற மாந்தளிர்களானவை உருவத்தினது அழகாய் விளங்கவும், செவ்வாழைகள் தொடையாய் விளங்கவும், மங்கள சுக சொரூபமாகிய கொடியினமாய்ப் படர்கின்றது இடையினது அழகைக் காட்டவும் பெதும்பைப் பருவம் நிறைந்த பெண்ணானவள் வளர்ந்தாள் என்றவாறு. (8)

குணத்த - நல்லிலக்கணம் உடைய. தவளச்சங்கம் - வெண்சங்கு. ஊரு - தொடை.

## Veḷḷamākiya peṇ

*kuvaḷaik kaṇṇatāyt tāmarai mukamatāyk kuṇatta*
*tavaḷac caṅkamē kaṇṭamāyt taḻaittamān taḷirka*
*ḷuvamai yillatō ruruvamā yūruvā ḻaikaḷāyk*
*kavalai yiṉṟiya koṭiyiṉa miṭaiyatāyk kaviṉa.*

## The Flood as a Girl

The lilies were her eyes; lotus,
The face; the white conch, throat;
The plentiful mango shoots
Formed an unrivalled body;
The plantains were the thighs;
The creepers were the waist.
Such was the lovely girl.

(மருத நிலத்தின் வளர்ச்சி)

453. தெங்கி னிற்சிறந் தருளிய செவ்விள நீர்கள்
இங்கி தக்கொங்கை யெழிலதா [1]யிசைந்தவேய்த் தோளாய்ப்
பங்க மின்மணி மலரின மாலைகள் பயிலத்
தங்கு மோர்பெண்ணை நுரையெனும் போர்வைக [2]டழைக்க.

எ-து. தென்னஞ் சோலைகளில் சிறப்பாய் ஓங்குகின்ற குலைகளில் சிறப்புற்ற செவ்விளநீர்கள், ரமணீயமான தன தடக்கொங்கையாய் விளங்கவும், அழகிய பச்சை மூங்கிலானது தோளாய் விளங்குவும், இலக்கணம் அமைந்த மணிகளெல்லாம் இரத்தின மாலையாய் அழகு செய்யவும், மலர்க்கூட்டங்கள் பத்தி மாலைகளாய் அழகெறிப்பவும், இத்தன்மையாய் அந்தப் பெண்ணை அலங்காரம் செய்து, கண்திட்டி நீங்கத்தக்கதாய் நுரையென்னும் வெண்பட்டுடையைப் போர்வையாகத் தரித்து வளர்த்தாள் மருதநிலமாகிய மூன்றாம் தாய் என்றவாறு. (9)

வேய் - மூங்கில்

உரை - கணதிட்டி - (திருஷ்டி) கண்ணேறு

பா.வே. - 1 வேயினந் தோளாய். 2 பயங்க

## Maruta nilattiṉ vaḷarcci

*teṅki ṉiṟciṟan taruḷiya cevviḷa nīrkaḷ*
*iṅki takkoṅkai yeḻilatā yicaıntavēyt tōḷāyp*
*paṅka miṉmaṇi malariṉa mālaikaḷ payilat*
*taṅku mōrpeṇṇai nuraiyeṉum pōrvaika ṭaḻaikka.*

## The Luscious *Maruta* Land

The sweet tender coconuts in the groves
Were the tender breasts; tender bamboos
Formed the shoulders; on the chest
Gem-studded necklaces and garlands
Of a variety of flowers gleamed;
She was veiled by the garment
Of white foam.

(வெள்ளம் நெய்தலையடைதல்)

454. அலங்க ரித்தபின் னான்கெனுந் தாயதா யடைந்து
பலங்க ளீய்பவள் குமுதவா யினிற்பரந் தோங்குங்
குலம்ப யின்றிடு வண்டினத் தோசையாற் கூவ
நலம்ப யின்றவள் வந்தனள் நானிலந் தழைக்க.

எ-து. இத்தன்மையாய் மூன்றாம் தாயாகிய மருதத் தாயலங்கரித்த பின்பு நான்காம் தாயைச் சார்ந்து மங்கைப் பருவப் பலத்தைக் கொடுக்காநின்ற நெய்தல் நிலமாகிய கழிநிலமென்று சொல்லப்பட்டவள், செவ்வாம்பல் என்னும் வாயைத் திறந்து, வண்டினோசையாகிய தொனியைக் கொண்டு தன் பெண்ணை வரவழைக்க, நன்மையெல்லாமோர் வடிவு கொண்ட வெள்ளமாகிய பெண்ணானவள் அவளிடத்திலே வந்து சேர்ந்தாள் இந்தப் பூமிகளெல்லாம் தழைத்தோங்க என்றவாறு. (10)

## Veḷḷam neytalaiyaṭaital

*alaṅka rittapiṉ ṉāṉkeṉun tāyatā yaṭaintu*
*palaṅka ḷiypavaḷ kumutavā yiṉiṟparan tōṅkuṅ*
*kulampa yiṉṟitu vaṇṭiṉat tōcaiyāṟ kūva*
*nalampa yiṉṟavaḷ vantaṉaḷ nāṉilan taḻaikka.*

## The Flood Reaches the *Neytal* Land

After being decorated thus
She reached her fourth mother.
The *neytal* land opened her mouth
That was lily-like, and called out
Through the drone of the bees.
The richly-endowed Flood-maid came
To spread prosperity on the earth.

(வருணன் வருகை)

455. **வந்த பெண்ணினை மணத்தினுக் குரியன வணிந்து**
**கந்த மோங்குசந் தனமுதற் கமழ்தரும் பொருளை**
**நிந்தை யில்லவ ளணிந்தபின் வருணனை நினைக்கப்**
**புந்தி கொள்பவன் புகுந்தனன் கடிமணம் புரிந்தாள்.**

எ-து. நான்காம் தாயாகிய கழிநிலம் என்று சொல்லப்பட்டவள், திருமணத்துக்கு உரித்தாகிய செய்கைகளால் அலங்கால சம்பிரமம் செய்து சந்தன, களபம் முதலான திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற வாசனாதி திரவியத்தைப் பூசிக் குற்றமற்ற தாயானவள் திருமணப்பெண் வடிவமாக்கி இவள் அழகுக்கொத்த அழகினையுடைய வருணராசனை நினைத்தாள் அவளுடைய நினைவை அறிந்து மகிழ்ந்தவனாய் வந்து சேர்ந்தான். அவனுக்குத் தன் பெண்ணை வேதவிதிப் பிரகாரங் கலியாணச் சடங்கினைச் செய்து நிறைவேற்றினாள் நான்காம் தாய் என்றவாறு. (11)

கந்தம் - நறுமணம். சம்பிரமம் - இடம்பம், பெருமை.

### Varuṇaṉ varukai

*vanta peṇṇiṉai maṇattiṉuk kuriyaṉa vaṇintu*
*kanta mōṅkucan taṉamutaṟ kamaḷtarum poruḷai*
*nintai yillava ḷaṇintapiṉ varuṇaṉai niṉaikkap*
*punti koḷpavaṉ pukuntaṉaṉ kaṭimaṇam purintāḷ.*

### The Coming of Varuṇaṉ

Ornamenting the maid who had come
With wedding jewels, and applying
Sandal paste and other sweet scents,
The faultless lady thought of Varuṇaṉ.
He heard her aspiration and came.
She celebrated the wedding.

### (வெள்ளம் கடலில் சேர்தல்)

456. கடிமணஞ் செய்த பின்னரே வரிசைகள் கணக்கிற்
படியி னல்கியே யனுப்பிட விருவரும் படர்ந்து
குடவ ளைக்குலங் குமுறுமோர் கடலிடைக் குறுகித்
தடம லர்ப்பொய்கை யாடினர் மலர்களைத் தரித்தார்.

எ-து அப்படித் திருக்கலியாணம் முடிந்தபின் வரிசைகளானவை கணக்கில்லாத தாய்க்கொடுத்து இருவரையும் மங்களமாய் அனுப்பிவிக்க, வழிகொண்டு நடத்த இருவராகிய திருமணக் கோலம் செய்து மீண்டு வரும் அவர்கள், குடத்தைப் போன்ற சங்கக் கூட்டங்கள் ஆர்பபரித்துச் சஞ்சரிக்கா நின்ற கடலிடத்தே போய்ச் சேர்ந்து விசாலமாகிய தடப்புனலில் குளித்துக் களிகூர்ந்தும், பூஞ்சோலை மலரையெடுத்தணிந்தும், சுபகர மங்களமாய் விளங்கிக் களிகூர்நதும், ஸ்ரீ அரங்க நாதனுடைய சரணார விந்தங்களைப் பணிந்து மகிழ் சிறநதாாகளெனறவாறு. (12)

வளைககுலம - சங்குக்கூட்டம். குமுறுதல் - ஒலித்தல்

### Veḷḷam kaṭalil cērtal

*kaṭimaṇañ ceyta piṉṉarē varicaikaḷ kaṇakkiṟ*
*paṭiyi ṉalkiyē yaṉuppiṭa viruvarum paṭarntu*
*kuṭava ḷaikkulaṅ kumuṟumōr kaṭaliṭaik kuṟukit*
*taṭama larppoykai yāṭiṉar malarkaḷait tarittār.*

## The Flood Reaches the Sea

After the wedding was over
Innumerable gifts were given
And they were sent off. Together
The couple reached the ocean
Full of thundering conches,
Bathed in lakes filled with blooms
And wore the flowers.

(நானிலக் காட்சி)

457. நான்க தாகிய திணையினின் முதற்பொரு ணயந்த
பான்மை யாகிய கருப்பொருள் பகர்ந்திடு முரித்தா
மேன்மை யாகிய பொருளெலா மகப்பொருள் விளக்கு
ஞான மில்லவ னெவ்வணங் கூறுவ னயந்தே.

எ-து. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கென்று சொல்லப்பட்ட திணைகளின் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்னும் மேன்மைகளை யெல்லாம் விரித்து ஒவ்வொரு திணைக்கும் பதினான்கு பொருளாய் விரித்துரைக்கும் அகப்பொருள் என்னும் மூன்றாம் இலக்கணமாய தவ் வாராய்ச்சியாகிய ஞானமில்லாதவன் எவ்விதமாய் அறிந்து சொல்வா னென்றவாறு. (13)

இந்திரன் நாடுகண்ணுற்ற அத்தியாயம் முற்றிற்று.

## Nāṉilak kāṭci

*nāṉka tākiya tiṇaiyiṉiṉ mutaṟporu ṇayanta*
*pāṉmai yākiya karupporuḷ pakarntiṭu muritta*
*mēṉmai yākiya poruḷelā makapporuḷ viḷakku*
*ñāṉa millava ṉevvaṇaṅ kūṟuva ṉayantē.*

## The Earth Scene

It is not possible for me to coment
Upon the four-fold aesthesis,
Especially when one lacks the knowledge
To bring out the in-laid whorls
Of interior significance.

## 26. இருபத்திரண்டாவது
## கோலாசலகிரி சிறப்புரைத்த அத்தியாயம்

கோலாசலம் என்னும் மலையைச் சூழ்ந்து விளங்கிய சோலைகள், தோப்புகள், சாலைகள் ஆகிய இடங்களில் சூழ்ந்திருக்கும் வண்டுகள், குயில்கள், மயில்கள், பூவைகள் ஆகியவற்றின் இனிய ஓசைகள் அரங்கநாயகனின் புகழைப்பாடின. அந்நகரிலுள்ளார் அணிந்துள்ள மாலைகளின் மணம் எங்கும் பரவியது. மங்கையர் மொழி இனிமையாக இருந்தது. வண்டுகளின் சுருதியும், குயில்களின் பாடலும், மயில்களின் ஆடலும், பூவைகளின் மகிழ்ச்சியும் பரதநாடக இலக்கணத்திற்கு இலக்கியமாய் விளங்கின. இதற்குச் சரக்கொன்றை மரங்கள் தம் மலர்களைச் சொரிந்து பரிசு வழங்கின. தாமரைக் குளங்களில் விளையாடிய அன்னங்களின் மீது பாசிகள் படிந்து வெண்மைநிறம் மாறியிருந்தது. அதைக் கண்ட அன்னப்பேடுகள் பிணங்கின. அன்னங்கள் சிறகை உதறிப் பழைய வெண்ணிறமடைய இரண்டும் கூடி மகிழ்ந்தன. மரங்களில் வசித்த பறவைக் கூட்டங்கள் முனிவர்கள் ஓதும் வேத ஒலியைக் கேட்டு அதைப் போலவே ஒலிக்கத் தொடங்கின. சந்தன மரங்கள் நிறைந்த வனங்களிடையே வலம்புரிச்சங்குகள் நிறைந்த தாமரைத் தடாகங்கள் விளங்கின. சந்தனத்தின் மணத்தை உண்டு, மலையருவியின் குளிர்ச்சியில் படிந்து வந்த தென்றல் உலவும் சந்திரகாந்த மண்டபம், மாடமாளிகைகள், சந்திரன் தவழும் கோபுரங்கள் ஆகியவை நகரத்திற்கு அழகூட்டி நின்றன. இலக்குமியை நிகர்த்த மகளிர் நிறைந்திருந்தனர். மலரை உடைய பலவகை மரங்களிடையில் மந்தாரம், பாரிசாதம் ஆகியவை மலர்ந்திருந்தன. அது உடுக்களின் இடையே விளங்கும் சந்திரனைப் போலக் காணப்பட்டது. முத்தொழிலுக்கும் முதல்வராகிய திருமால் அரங்கநாயகர் வடிவாய், திருமகளுடன் இந்தக் கோலாசலமலையிலே எழுந்தருளியுள்ளார் என்றால், இதன்மேலும் அந்த மலையின் பெருமையை யாரால் கூறமுடியும்?

தொண்டை மண்டலத்தில், செஞ்சி என்னும் நகரத்தில் நானில வளமும் பொருந்தியிருந்தன. பன்னிரு சமயங்களும் தழைத்தன. இவ்வாறாக எல்லா வகை வளமும் பெற்றதும், அரங்கநாயகருக்கு இருப்பிடமாக விளங்கியதுமாகிய இந்த நகரத்தினைக் கண்டு, இந்திரன் முதலாகிய தேவர்கள் அனைவருமே மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். இந்திரன் தன் நாடாகிய தேவலோகத்தையே வெறுத்தான்.

**(கோலவரையின் நாற்புறக்காட்சி)**

458. **சோலையெலாம் வண்டினங்க டோப்பெல்லாங்**
**குயிலினங்கள் சோலை சூழ்ந்த**
**சாலையெலா மயிலினங்க டாருவெலாம்**
**பூவையினஞ் சாற்று மோதை**

**மாலையெலாங் கடிமணங்கள் மாந்தாதா**
**வனையரம்மா ளிகையின் மாதர்**
**பாலையெலாம் பழிப்பிக்கு நவரசமாய்**
**விளம்பியிடும் பயிற்று மோதை.**

எ-து. அந்த அதி சிலாக்கியமாகிய மகமேருவினது புத்திரனாகிய கோலாசலகிரியின் நான்கு திக்குகளிலும் விளங்கிப் பிரகாசிக்கின்ற கூப தடாகங்களைச் சூழ்ந்த பூஞ்சோலைகளிலெல்லாம் வண்டு, தேன், சுரும்பு, ஞிமிறென்னும் நான்கு வகையாகிய இனமுங் காலினால் வருடி, சிறகினா லடித்து, மூக்கினால் உழுது, பண்களைப் பாடாநின்ற இசைப் பாட்டுகளும், தோப்புகளிலெல்லாம் குயிலினங்களானவை பண்பாய் இசைக்கின்ற பொன்னரங்கனுடைய புகழினை விளம்புகின்ற ஓசையும், அந்தச் சோலையினது இன்ப வைபவத்தைக் குறித்துச் சாலைப் பந்திகளிலெல்லாம் மயிலினங்கள் கலாபியை விரித்தாடாநின்ற அழகும், சண்பக, புன்னாக தாருக்களிலெல்லாம் பூவையென்னும் நாவணாத்திப் பக்ஷிகள் சுகுண சுரசொலித் துல்லியமாகிய இசைகளை இசைக்கா நின்ற ஓசையும், அந்நகரிலுள்ளார் மாலைகளெல்லாம் திவ்விய மணம் நாறுகின்ற வாசனையும், மாந்தாதாவைப் போலொத்த அரசர் கூட்டங்கள் மனையாகிய மாணிக்க உப்பரிகையின் வாழ்கின்ற அரசமங்கையர் பாலைப் பழிக்காநின்ற நவரச அலங்காரமாய்க் கூறுகின்ற மேன்மையாகிய மொழி, ரம்மிய, ரஞ்சித, உசித சுபகரமாயிருந்ததனால் தேவாமிர்தத்தினுஞ் சிறந்தன என்றவாறு. (1)

சாலை - மரங்கள் அடர்ந்த பாதை. தாரு - மரம். பூவை - நாகணவாய்ப்புள் மாந்தாதா - யுவநாசுவன் மகன். சூரியவமிசத்தில் மிகுபுகழ்பெற்ற அரசன்.

**உரை** - கலாபி - கலாபம் - மயில் தோகை. நாவணாத்தி - நாகணவாய்ப் பறவை

## Kōlavaraiyin nārpurakkāṭci

*cōlaiyelām vaṇṭinaṅka ṭōppellāṅ*
*kuyilinaṅkaḷ cōlai cūḻnta*
*cālaiyelā mayilinaṅka ṭāruvelām*
*puvaiyinaṅ cāṟṟu mōtai*
*mālaiyelāṅ kaṭimaṇaṅkaḷ māntātā*
*vaṉaiyarammā ḷikaiyiṉ mātar*
*pālaiyelām paḻippikku navaracamāy*
*viḷampiyiṭum payiṟṟu mōtai.*

## XXVI. The Glory of Kōla Hill

### The Scenic beauty of Kōla Hill

Bees all over the groves;
The gardens replete with *kuyils*;
In the road girting the groves
Peacocks; on all the trees
The *nākaṇavāy* birds chirp sweetly;
The garlands spread scent;
In the palace where live kings
Rivalling Māntātā, women's voices
Sweeter than milk, full of the nine rasas
Were heard everywhere.

(வரை சூழ்ந்த சோலைகள்)

459. கோகிலம் பாட வண்டினஞ் சுருதி
கூட்டிடக் கோலமா மஞ்ஞை
நாகிளங் கமுகின் நீழலி னடன
நவின்றிட நாகண வாய்ப்புட்
சாகைக டோறுந் தனிப்பெடை யோடுஞ்
சரசசல் லாபத்தைச் சாரு
மீகையே கடுப்பக் கொன்றைபொன் சொரியு
மெழின்மலர்ச் சோலையெண் ணிலவால்.

எ-து. பூத்த மலர்ச்சமூகத்தினையுடைய பூஞ்சோலைகளிலே குயிலினங்கள் பாடவும், வண்டினஞ் சுருதி கூட்டவும், அழகிய மயிலினங்களானவை கமுகஞ்சோலை முதலிய தோப்புகளில் ஆடரங்கமாய்ச் சத்த சுரங்களையும் சதிகளையும் தழுவி நடிக்கின்ற பரத நாடக விநோதங்களை நடிக்கவும், நாகணவாத்திப்பக்ஷியானது கமுகஞ்சோலைகளினின்று தனது ஸ்திரீ கூட்டங்களுடனே மகிழ் சிறந்து களிகூர்ந்திருக்கவும், இந்தப் பரத நாடக இலககணத்தைப் பார்த்துப் பரிசு கொடுக்கும் தியாகிகளைப் போலச் சரக்கொன்றை தன் புடபஙகளைப பொன்போல் சொரிந்து அந்தக் கோலாசல கிரிகளெங்கினும் விளங்கிப் பிரகாசிதத தென்றவாறு. (2)

கோகிலம் - குயில் நாகு - இளமை, துளிர்மரம் சாகை - தங்குமிடம். கடுப்ப - ஒப்ப, போல

## Varai cūḻnta cōlaikaḷ

*kōkilam pāṭa vaṇṭiṉañ curuti*
*kūṭṭiṭak kōlamā maññai*
*nākiḷaṅ kamukiṉ niḻali ṉaṭaṉa*
*naviṉṟiṭa nākaṇa vāypput*
*cākaika ṭōṟun taṉippeṭai yōṭuñ*
*caracacal lāpattaic cāru*
*mīkaiyē kaṭuppak koṉṟaipoṉ coriyu*
*meliṉmalarc cōlaiyeṉ ṉilavāl.*

## Groves Encircled by Hill Ranges

As the *kuyils* sing with the bees
Keeping up the drone, the lovely peacocks
Dance in the shade of betel-nut trees
Which are young; in every branch
The *nākaṇavāy* birds perch in pairs
Engaged in love-play.
Watching this the *koṉṟai* trees
Generously shower golden blooms;
Such were the many lovely gardens.

(வரையில் தாமரைத் தடாகங்கள்)

460. கமலம தலருந் தடாகசை வலத்திற்
கலந்திடு மரசவன் னங்க
ளமலமாஞ் சிறகிற் சைவலம் படிய
வதுதனைக் குமரியன் னங்க
ணமர்தரு மூட லஃதினைக் கண்டு
சிறகினை யுதறிட வழகா
நிமலமா யொளிரக் கூடியே மகிழு
நியதியைக் கண்டுள மகிழ்ந்தான்.

எ–து. தாமரைக் கமலங்கள் மலராநின்ற தடாகங்களில் உற்பவித்துப் பிரகாசிக்கின்ற சைவலமாகிய பாசிக்கொத்திற் கலந்து விளையாடாநின்ற அரச அன்னங்களினுடைய பரிசுத்த வெண்மையான சிறகெங்கினும் பாசிக்கொத்துகள் மூடிக்கொண்டிருப்பதனைப் பெட்டை

அன்னமானது கண்ணுற்றுக் கோபம் கொண்டு, பிணங்குந் தன்மையை அரச அன்னங்கள் கண்டு, அச்சிறகினை உதறிடப் பாசிக் கொத்துகளுதிர்ந்து, முன்போல வெண்மையான சுந்தரமாய் விளங்குவதைக் கண்டு களிகூர்ந்து, இரண்டும் கூடி மகிழ்சிறப்பதனைக் கண்ணுற்றான் இந்திரமகாராசன் என்றவாறு. (3)

சைவலம - பாசி அமலம் - வெண்மை, தூய்மை. குமரியன்னம - பெண் அன்னம். நிமலம் - தூயமை. அழுக்கின்மை.

## Varaiyil tāmarait taṭākaṅkaḷ

*kamalama talarun taṭākacai valattiṟ*
*kalantiṭu maracavaṉ ṉaṅka*
*ḷamalamāñ ciṟakiṟ caivālam paṭiya*
*vatutaṉaik kumariyaṉ ṉaṅka*
*ṇamartaru mūṭa laḵtiṉaik kaṇṭu*
*ciṟakiṉai yutaṟita vaḷakā*
*nimalamā yoḷirak kūṭiyē makiḻu*
*niyatiyaik kaṇṭuḷa makiḻntāṉ.*

## Lotus Ponds on the Hill

Lotuses bloomed in the ponds;
The royal swans swam in the moss,
Their white wings covered by it;
The lady swans grew angry at this;
Hence, the swans flapped their wings
To be rid of the moss.
The wings now gleamed pure again
And the swans achieved togetherness.
Intiraṉ saw this and was happy.

(பறவை ஒலி)

461. சண்பகக் கிளையிற் பாதிரிக் கொம்பிற்
பலாசத்திற் சார்ந்தசா கையினும்
வண்பயின் மாவி னிடத்தினிற் பயின்ற
குயில்கிளி பூவைக்கண் மறையோர்

**பண்பயில் சந்தை யோதிடக் கேட்டு**
**நாவினாற் றழைத்திட வோது**
**முண்மையைக் கேட்டங் குளமகிழ்ந் துருகி**
**யும்பர்நாட் டினைவெறுத் திசைத்தான்.**

எ-து. அந்தக் கோலாசலகிரியிலே விளங்கிப் பிரகாசிக்கின்ற சிறப்புற்ற சண்பக மரத்தினது கிளைகளினும், பாதிரி மரத்தினது கொம்புகளினும், முருக்க மரத்தினுடைய கிளைகளினும், வண்மையான மாமரங்களினும் களிகூர்ந்து வாசம் செய்கின்ற குயில் கூட்டங்கள், அன்ன வர்க்கங்கள், கிளிகள், நாவணாத்தித் தொகுதிகள் ஆகியவை அந்தக் கிரியில் வாசம் செய்கின்ற மறையோராகிய முனிவர்கூட்டங்கள், வால கில்லியர் முதலாகிய மகாரிஷிகள் ஓதுகின்ற வேதாத்தியான சந்தையைக் கேட்டு இசை ரசங்களை யமுதத்தாரையால் இசைக்கா நின்றன. அவ்வொலியைக் கேட்டுத் துறக்க நாட்டின் வைபவ சுகவின்பத்தை வெறுத்தான் இந்திர மகாராச னென்றவாறு. (4)

பலாசம் - முருக்கமரம். சாகை - கொம்பு. சந்தை - கூட்டம், ஒலி.

## Paṟavai oli

*caṇpakak kiḷaiyiṟ pātirik kompiṟ*
*palācattiṟ cārntacā kaiyiṉum*
*vaṇpayiṉ māvi ṉitattiṉiṟ payiṉṟa*
*kuyilkiḷi pūvaikkaṇ maṟaiyōr*
*paṇpayil cantai yōtiṭak kēṭṭu*
*nāviṉāṟ ṟaḻaittiṭa vōtu*
*muṇmaiyaik kēṭṭaṅ kuḷamakiḻn turuki*
*yumparnāṭ ṭiṉaiveṟut ticaittāṉ.*

## Bird Chirpings

On the branches of the *caṇpakam*,
The *pātiri* tree, the *palācam* branches,
And on the luscious mango trees
Sat *kuyils*, parrots, *nākaṇavāy* birds,
All chirping musically,
Following the sounds of scriptures
Recited by the sages. Intiraṉ heard it,
His heart melted and he began
To reject the joys of heaven.

(சஞ்சீவிபுரம்)

462. மகரதோ ரணங்கள் நான்குதிக் கெங்கும்
பூப்பந்தர் மருவிட அதன்கண்
திகழ்மணி யார மிடையிடை வீக்கித்
திகழ்ந்திடு தரிசனஞ் கண்டிங்
கிகமதிற் பரம பததரி சனந்தா
னீந்தன னீர்ங்கம லத்தோன்
சுகமலர் வாயா னறைந்தஇன் பம்போல்
துறக்கத்திற் கண்டில மென்றால்.

எ-து அந்தக் கோலாசலத்தின் கிழக்கு முதலாகிய நான்கு திசைகளிலேயும். பூப்பந்தலின் நடுப்பிரதேசத்தின் முத்தின் மாலைகளை இடையிடையாய்த் தூக்கியிருக்கின்ற அனந்த சிங்கார வளப்பத்தை ஆயிரம் கண்ணினாலும் கண்டு களிகூர்ந்து உரைக்கின்றான்: இந்தச் சஞ்சீவி புரத்தில் கண்ட அகண்ட சாம்பிராச்சிய சுகவினோதத்தைப்போல நமது பொன்னுலகினும் காணோமாகையால். இந்தப்பரம பததரிசனத்தைக் கொடுத்து இரட்சித்த சிருட்டிகர்த்தாவாகிய பிரம தேவர் சுக சொருபத்தியால் நிறைந்த வாய்மலரான் அருளிச்செய்த இன்பத்தை இன்று அனுபவித்தோம் என்றான் இந்திர மகாராசன் என்றவாறு. (5)

மகரதோரணம் - வாயிலில் தூக்கும் தோரணம் மகரம் - அரசசின்னங்களுள் ஒன்று. வீக்குதல் - கட்டுதல இகம் - இவ்வுலகம். பூமி. ஈர்ங்கமலம் - குளிர்ச்சி பொருந்திய தாமரை.

## Cañcīvipuram

*makaratō raṇaṅkaḷ nāṉkutik keṅkum*
*pūppantar maruviṭa ataṉkaṇ*
*tikaḻmaṇi yāra miṭaiyiṭai vīkkit*
*tikaḻntiṭu taricaṉañ kaṇṭiṅ*
*kikamatiṟ parama patatari caṉantā*
*nīntaṉa nīrṅkama lattōṉ*
*cukamalar vāyā ṉaṟaintaiṉ pampōl*
*tuṟakkattiṟ kaṇṭila meṉṟāl.*

## Cañcīvipuram

In all four directions could be seen
*Tōraṇams* with canopies of flowers
That were decorated with pearl-strings
Dangling in between; watching the sight
Intiraṉ felt that it was indeed

The very heavens above and thought
That Piramaṉ had created this supreme joy
And announced it with his own lips.

(மாடமாளிகைகள்)

463. சந்தனச் சாரல் நந்தன வனங்கள்
சாரளி யிசையினை மிழற்றுங்
கந்தம தலருங் கமலத்தி னிடையின்
வலம்புரி கண்டுயில் தடாக
மந்தமா ருதஞ்சே ரிந்துகாந் தத்தின்
மண்டப மாளிகை வாயிற்
சந்திரன் தவழுங் கோபுரக் குன்ற
மிவையெலாஞ் சார்ந்திடக் கண்டான்.

எ-து. சந்தனச் சாரல்கள் சூழ்ந்திருக்கின்ற கோலாசலத்தின் நந்தனவனங்களாகிய பூஞ்சோலைகள் வருக்கமாய் நிறைந்து கமழ்கின்றன. அளிகளாகிய வண்டினங்கள் சேர்ந்திசைப் பாட்டுகளைப் பாடுகின்றன. வாசனை நீங்காத கமலமலர் நடுப்பிரதேசத்தின் வலம்புரிச் சங்கினங்களானவை நித்திரை செய்யாநின்ற தடாகசமூகங்களும், கோலமால்வரையில் இருக்கின்ற சந்தனத் தோப்பின் வாசனையைக் கிரகித்து, மலையருவியினது குளிர்ச்சியில் படிந்தும், அந்தக் கதியாய்ப் பிரவேசிக்காநின்ற தென்றல் நுழைந்து உலவப்பட்ட சந்திர காந்தத்தின் மண்டபமும், மாடமாளிகை யினுடைய வாசலி னழகும், சந்திரன் தவழுகின்ற கோபுரங்கள் முதலாகிய சன்னிதானங்களும் சுபகர சுந்தர விலாசமாய்ப் பிரகாசித்திருப்பதனைக் கண்டான் இந்திர மகாராசன் என்றவாறு. (6)

சாரளி - சார் + அளி - சார்ந்துள்ள வண்டு. வலம்புரி - வலம்புரிச்சங்கு. இந்துகாந்தம் - சநதிரகாந்தக்கல், ஒருவகை மணி.

**Māṭamāḷikaikaḷ**

*cantaṉac cāral nantaṉa vaṉaṅkaḷ*
*cāraḷi yicaiyiṉai miḻaṟṟuṅ*
*kantama talaruṅ kamalatti ṉiṭaiyiṉ*
*valampuri kaṇṭuyil taṭāka*
*mantamā rutañcē rintukān tattiṉ*
*maṇṭapa māḷikai vāyiṟ*
*cantiraṉ tavaḻuṅ kōpurak kuṉṟa*
*mivaiyelāñ cārntiṭak kaṇṭāṉ.*

## High Rise Buildings

Valleys with sandal trees, groves,
Bees droning sweet tunes,
Conches sleeping in lotuses
Spreading scent; southern breeze
Waving on the high-rise buildings
Made of moonstone; lovely *verandahs*;
Upward rising spires on which strolled
The moon; all this he saw.

**(சுனைகள்)**

**464.** **விண்டேடிய மதிலின்புடை விரிநீர்ச்சுனை யதிலே**
**தண்டாமரை வனமுமதிற் றனிப்பொற்சிறை யனமும்**
**கண்டார்மனங் களிகூர்ந்திடுங் கமலைப்பல வுருவுங்**
**கொண்டாலென வழகார்திரு கோலாசல கிரியே.**

எ-து. ஆகாயமளாவிய மதிலின் புறம்பிலே விரிந்தநீரால் சலசமுர்த்தியாகிய சுனையின்கண் குளிர்ந்த சுகத்தினையுடைய தாமரை வன சமுகங்களையும் அதில் வீற்றிருக்காநின்ற ஒப்பற்ற பொற்சிறகினையுடைய அன்னங்களையும், கண்டார் மனங்களெல்லாம் களி கூரத்தக்கதாகிய ஸ்ரீமகாலட்சுமி தேவியினுடைய உருவம் பலவாய் விரிந்து விளங்குதல் போன்ற மடந்தையர்கள் நெருங்கிய நிவாமுத்தங்களோடும் கூடிவீற்றிருக்கா நின்ற கோலாசல நகர மென்றவாறு. (7)

விண்டேடிய - விண + தேடிய - ஆகாயத்தைத் தேடிச்சென்ற; ஆகாயத்தை அளாவிய. தண்டாமரை - தண + தாமரை அனம - அன்னம். கமலை - திருமகள், இலக்குமி.

## Cuṉaikaḷ

*viṇṭēṭiya matiliṉpuṭai virinīrccuṉai yatilē*
*taṇṭāmarai vaṉamumatiṟ ṟaṉippoṟciṟai yaṉamum*
*kaṇṭārmaṉaṅ kaḷikūrntiṭuṅ kamalaippala vuruvuṅ*
*koṇṭāleṉa vaḻakārtiru kōlācala kiriyē.*

## Ponds

Ponds there were with plentiful water
Beside the fortwalls that went in search
Of the skies; in them a veritable

Garden of lotus blossoms where rested
Lovely swans with golden wings;
Countless damsels too, the very image
Of the Goddess of Wealth
Resided in the Kōla Hill.

(வானளாவிய் தாவரம்)

465. வானோங்கிய பூவைத்தரு மலர்போயதில் தோயத்
தேனோங்கிய சோலைத்திகழ் துவரைக்கதி பதியான்
கானோங்கிய வாயர்செறி கடைவெண்ணையைக் கவருங்
கோனோங்கிய முனியோர்புகழ் கோலாசல கிரியே.

எ-து. ஆகாயமளாவி வளர்கின்ற பூவைத்தருவாகிய காயாம்பூ மரமானது அலர்கின்ற புட்ப வருக்கங்களானவை, சந்திர மண்டலத்தினை அளாவிப் பிரகாசித்துத் தேன்களைப் பொழிகின்ற பூஞ்சோலை யினங்களோங்கா நின்ற துவாரகை யென்னும் திருநாட்டுக்கு அதிபதியானவன். சிறுகாட்டின்கண் மருவிய பிரதாபம் மிகுந்த ஆயர்பாடிகளில் ஆய்ச்சியர் கடைகின்ற வெண்ணையை எடுத்தருந்தி, சிரேட்டமாய் ஓங்கிய முனிவர்களாலே சகல மங்கலகுண சாம்பிராச்சிய வந்தனை யோக்கிய பாத்திரனாகிய அரங்கநாயகருக்கிடமாகிய கோலாசலகிரி என்றவாறு. (8)

பூவை - காயாமரம். கானோங்கிய - கான் + ஓங்கிய - கான் - காடு. ஆயர் - இடையர்.

## Vāṉaḷāviya tāvaram

*vāṉōṅkiya pūvaittaru malarpōyatil tōyat*
*tēṉōṅkiya cōlaittikaḻ tuvaraikkati patiyāṉ*
*kāṉōṅkiya vāyarceṟi kaṭaiveṇṇaiyaik kavaruṅ*
*kōṉōṅkiya muṉiyōrpukaḻ kōlācala kiriyē.*

## Sky-teasing Trees

*Kāya* trees that rose up to the sky;
This was the Kōla Hill praised by sages
Where resided the Lord who stole butter
From the cowherdesses in the groves
Of Tuvārakai that has gardens
Where honey from the flowering trees
Spread everywhere.

### வேறு

### (முந்திரியும் பலாவும்)

466. முந்திரி வருக்கை புன்னை மொய்த்தசண் பகம சோகு
மந்தரை பாரி சாதம் வயின்வயி னிலங்குந் தோற்றத்
தந்தரத் திலங்கு பன்மீ னரும்பிய குழுவி னாப்பண்
சந்திர விம்பம் போன்று தனித்தனி யிருந்த மாதோ.

எ-து. முந்திரி விருக்கமும் பலாவிருக்கமும் புன்னாக தாருவும், சண்பகப் பாதவங்களும் சூழ்ந்து மலர்ந்திருப்ப, அதன் நடுவின்கண் மந்தார, பாரிசாத விருட்சங்களானவை நடுப்பிரதேசங்களில் மலர்ந்து விளங்கும் தன்மை எத்தன்மைத்தெனின், ஆகாயமார்க்கத்தின் பல உடுக்கணங்கள் அலர்ந்து விளங்கிப் பொலிய, அதன் நடுவின்கண் சோடசக் கலையினை விரித்தொளிராநின்ற சந்திரனது விம்பத்தினது பிரபையினைப் போன்று விளங்கின வென்றவாறு. (9)

வருக்கை - பலா. வயின்வயின் - இடையிடையே மீன் - நட்சத்திரம். நாப்பண் - இடையில். பாதவம் - மரம். உடு - விண்மீன் சோடசக்கலை - பதினாறு கலை. கலை - சந்திரன் - பங்கு.

### Vēṟu

### Muntiriyum palāvum

*muntiri varukkai puṉṉai moyttacaṇ pakama cōku*
*mantarai pāri cātam vayiṉvayi ṉilaṅkun tōṟṟat*
*tantarat tilaṅku paṉmī ṉarumpiya kuḻuvi ṉāppaṇ*
*cantira vimpam pōṉṟu taṉittaṉi yirunta mātō.*

### Cashew, Jackfruit

Cashew and jackfruit with mastwood,
*Caṇpakam, mantāram, pāricātam* and other trees
In between, appeared like the sky
With innumerable stars that also has
The illumed image of the moon.

### (அரங்கனின் காட்சி)

467. அங்கண்மா ஞால மளித்தழித் தருளும்
அமலனாங் கமலனைப் பயந்த
செங்கண்மா லரங்க நாதனார் தாமுந்
திருவினோ டந்நகர் சேர்ந்தார்

துங்கமாங் கோலா சலத்துறை வானேல்
சூரிய சந்திரர் சூழுஞ்
சிங்கமா புரத்துப் பெருமையை யொருவர்
சொல்லுதற் கரியவா மன்றே.

எ-து. அழகினுக்கிடமாகிய அகிலத்தின்கண் மருவிய சராசரங்களை எல்லாம் படைத்தும், விருத்தியடைய அவைகளைக் காத்தும், காத்ததனை யொடுக்கிய லீலையையுடைய அமலனான நாராயண மூர்த்தியாய், பிரமாவை யுந்திக்கமலத்தில் தோற்றுவித்தருளிய செங்கண்மாலாகிய அரங்கநாயக உருவமாய் ஸ்ரீமகாலட்சுமி தேவியாருடனே அந்தக் கோலாசலகிரியிலே பூரணாங்கிசையாய் வீற்றிருந்து அருளினார் என்றால் சூரிய சந்திரர்களாலே சூழப்பட்ட சிங்கபுரத்தினது பெருமையை எவ்வகை மேம்பட்டவர்களும் சொல்லுதற் கரிதாம் என்றவாறு. (10)

அளித்தழித்தருளும் - முத்தொழில்களை உணர்த்தும் தொடர். கமலன் - பிரமன். திரு - திருமகள், இலக்குமி. துங்கம் - உயர்வு, பெருமை.

**உரை** -பூரணாங்கிசை - முழுஅமிசம்; முழுமையான கோலம்.

## Araṅkaṉiṉ kāṭci

*aṅkaṇmā ñāla maḷittaḻit taruḷum*
*amalaṉāṅ kamalaṉaip payanta*
*ceṅkaṇmā laraṅka nātaṉār tāmuṉ*
*tiruviṉō ṭannakar cērntār*
*tuṅkamāṅ kōlā calatturai vāṉēl*
*cūriya cantirar cūḻuñ*
*ciṅkamā purattup perumaiyai yoruvar*
*collutaṟ kariyavā maṉṟē.*

## Araṅkaṉ

He gave birth to the pure Piramaṉ;
He creates the worlds, guards them
And brings them to an end as well.
The lord with eyes like the red lotus,
Araṅkaṉ, came here with Lakṣmi

To reside on the high Kōla Hill.
Who can praise adequately the glory
Of Ciṅkapuram encircled
By the sun and the moon?

(செஞ்சி மாநகரம்)

468. தொண்டைநன் னாட்டி னானில வளனுந்
திணைகடான் மயங்குறு தொழிலு
மெண்டிசை யிடத்தும் பன்னிரு சமய
மெய்திய விறைவர்தங் கோயில்
பண்டுளோ ரறுப தாயிர மாகப்
பகருமந் நகர்பரப் பெல்லாங்
கண்டுளோர் மகிழு மாறுகட் டாகப்
பந்திகள் கயங்களெண் ணிலவால்.

எ-து. தொண்டைமண்டலமாகிய செஞ்சி மாநகரத்தில் நானில வளப்பமாகிய குறிஞ்சி என்னும் பர்வதச்சாரமாகிய நிலங்களின் வளப்பமும், முல்லைத் திணையாகிய சோலை சூழ்ந்த நிலத்தின் வளப்பமும், மருதத்திணையாகிய வாழை, கமுகு, பலா, புன்னை, செந்நெல் முதலாகிய விளை நிலத்தின் வளப்பமும், நெய்தற் திணையாகிய கழிக்கடல் வளப்பமும், இந்நான்கு திணையானவை ஒன்றோடொன்று கூடிய திணைமயக்கமும், அப்படி அதி சிலாக்கியமாகிய நகரின் அஷ்ட திக்குகளிலும் விளங்குகின்ற உட்சமயம் ஆறு, புறச்சமயம் ஆறாகிய பன்னிரண்டு சமயங்களுக்கும் அதி தேவதைகள் வாசம் பண்ணாநின்ற சன்னதிகளானவை அறுபதினாயிரம் விளங்குமென்று ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டராகிய சூத புராணிகர் அருளிச்செய்த நகரினது வளப்பமும் புண்ணிய மகா நதிகளும், தடாக பந்திகளும், எண்ணிறந்தனவாகிய கயங்களும், சோலையினது வளப்பமும் ஆகியவற்றை இந்திரன் முதலாகிய தேவர்கள் கண்டு அதிசயித்து ஆனந்த வைபவத்தை அடைந்தார்க ளென்றவாறு. (11)

**உரை** - உட்சமயம் ஆறு - வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன சைவதத்திற்கு உடபடட சமயங்கள் என்பர். புறச்சமயம் ஆறு - உலகாயதம், சமணம், புத்தம், பாஞ்சராத்திரம, பாட்டாசாரியம், மீமாம்சை என்பனவாகும். பொது - சைவம், வைணவம், சாத்தம், சௌரம், கணாபத்தியம், கௌமாரம என்பன.

**கோலாசலகிரி சிறப்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

## Ceñci mānakaram

*toṇṭainaṉ nāṭṭi ṉāṉila vaḷaṉun*
*tiṇaikaṭāṉ mayaṅkuṟu toḻilu*
*meṇṭicai yiṭattum paṉṉiru camaya*
*meytiya viṟaivartaṅ kōyil*
*paṇṭulō raṟupa tāyira mākap*
*pakaruman nakarparap pellāṅ*
*kaṇṭuḷōr makiḻu māṟukaṭ ṭākap*
*pantikaḷ kayaṅkaḷeṉ ṉilavāl.*

## Ceñci City

In Toṇṭai Nāṭu where the soil is rich
And nature smiles through the four
Divisions of land;[1] where the twelve
Religions[2] hailing from eight directions
Have temples to sixty thousand gods,
The city's spaces are vast indeed.
Here serried formations of countless tanks
Pleased the eye of the beholder.

---

1. Kuṟiñci, mullai, marutam and neytal
2. Bhairavam, Vāmam, Kāḷamukam, Māviratam, Pācupatam, Saivam, Lōkayatam, Jainism, Buddhism, Pāñcharatram, Bhattacharyam and Mimamsa.

## 27. இருபத்து மூன்றாவது
## இந்திரன் சரணாகதி அடைந்த அத்தியாயம்

நகரத்தின் அழகில் மூழ்கித் திளைத்த இந்திரன் தேவர்கூட்டங்களுடன் எழுந்தருளி, அங்கு உள்ள சம்பீரம் என்னும் எலுமிச்சமரத்தினைக் கண்டு பணிந்தான். பிறகு திருமகள், அவளுடைய அருள் பெற்றுவிளங்கும் அனந்தன், கருடன் முதலான நித்திய சூரியர் ஆகியோரைப் பணிந்தான்; ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகியோரால் வணங்கப்படுகின்ற அரங்கநாயகரை வணங்கித் துதித்தான்.

பாணினியின் இலக்கணத்திற்கு உரைகண்டு புகழ்பெற்ற இந்திரனானவன் ஆதிசேடனாகிய பாம்பினைப் படுக்கையாகக் கொண்டவனும், நடுக்கடலிலே பள்ளிகொண்டவனுமாகிய திருமாலைப்பணிந்து உருகிநின்றான். உலக முதல்வனே! அடியேனை ஆட்கொள்ளத் திருமகளோடு இத்தலத்தில் எழுந்தருளியுள்ள காயாம்பூமேனியனே! திருப்பாற்கடலைக் கடைந்த காலத்து செகன்மோகினி வடிவாகி, அசுரர்களை அழித்துத் தேவர்களுக்கு அமுதளித்த அமுதசாகரமே! உபேந்திரனை அழித்தவனே! நரசிங்கமாகி இரணியனை வதைத்தவனே! வராகமாகி இரணியாக்கதனைக் கொன்று உலகைக் காத்தவனே! மச்சவடிவாகி சோமுகனை அழித்து வேதத்தை மீட்டவனே! சிஞ்சுமாரச் சக்கரத்தால் முதலையைப் பிளந்து கசேந்திரனைக் காத்தவனே! பீதாம்பரமணிந்து கவுததுவம் விளங்க, பஞ்சாயுதம் ஏந்தி, வாமனனாகி மாபலியை அழித்தவனே! என்னைக் காத்தருள்வீராக! என்று உருகி நின்றான். வணங்கிய இந்திரனிடம் கருணைகொண்ட அரங்கநாயகர், அவனுக்கு விசுவ ரூபத்தைக்காட்டி ஞானக்கண்களைத் தந்தருளினார். அவ்வடிவமானது, உலகப்பொருள்கள் நிழலாகவும், தேவர்களும் அசுரர்களும் வலக்கை, இடக்கைகளாகவும், சிவனும் பிரமனும் விலாக்களாகவும் அண்டகோளம் முடியாகவும், பாதளம் முதலிய உலகங்கள் திருவடிகளாகவும் அமைய விளங்கியது. இயக்கர், வித்தியாதரர், திக்குப்பாலகர், கருடர், கந்தருவர், கின்னரர், கிம்புருடர், சித்தர், சாரணத்தலைவர், பூதகணங்கள், நாவலர் ஆகியோர் அவ்வடிவிற்கு ஞானேந்திரிய கன்மேந்திரிய வடிவாய் விளங்கினர். கால அளவைகளாகிய ஆண்டு, அயனம், ருது, மதி, திதி, வாரம், கரணம், யோகம், நட்சத்திரம் ஆகியவை ஒரு கையிலே விளங்கின. முனிவர்கள் மார்பிலும், மற்கடம், மாற்சாலம் ஆகிய இருஞானங்களும் திருமுகத்திலுமாக விளங்கின. வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள், பதினெண் சாத்திரங்கள், பதினெண் புராணங்கள், பதினெட்டு உபபுராணங்கள், ஸ்மிருதிகள், சங்கிதைகள், ஆறு சாத்திரங்கள், இசைநூல், தனுநூல் இவையாவும் அவ்வடிவின் திருமேனியில் திகழ்ந்தன.

இத்திரு உருவினைக் கண்டு களித்த இந்திரனானவன் அரங்கநாயகருடைய அருட்பார்வையினால் மருள்வடிவம் நீங்கி மீட்டும் பிரணவ வடிவமாய் விளங்கினான். அதனால் மகிழ்ச்சியடைந்த இந்திரன் அபக்குவனான தன்னைத் தடுத்தாட்கொண்ட அரங்கநாயகரின் கருணையைப் போற்றித் துதிக்கிறான். 'ஐயனே! காமக்கடலில்

மூழ்கிக்கிடந்த அடியேன் நினது திருவடிவினைக் காணப்பெற்றேன். நான் செய்வது எது; நீக்குவது எது என்று பகுத்தறிய இயலாமல் மயங்குகிறேன். எனது பாபமே காலநேமி என்னும் அசுரனாய்த் தோன்றி என்னை வருத்துகிறது. உனது திருவடியைத் துதிக்காத தீவினையால் நேர்ந்தது இவ் வினைப்பயன்' என்று கூறி வருந்தினான்.

குழந்தையின் மழலைமொழிக்கு இரங்கும் பெற்றோரைப்போல, இந்திரன்மீது இரக்கம் கொண்ட அரங்கநாயகர் தன்திருக்கரத்தால், அஞ்சல்! என்று கூறி அபயமளித்தார். அதனைக் கண்டு வணங்கிய இந்திரனும் தேவர்களும் வறியவன் செல்வம் பெற்றது போல மகிழ்ச்சியடைந்தார்கள். தீவினைகள் எல்லாம் நீங்கிச் சுகத்தை அடைந்த இந்திரன் முதலாகிய தேவர்களும், முனிவர்கள் முதலாகிய பிறரும் அந்த மலையில் தங்கியிருந்து அதனை வலம் வந்தார்கள்.

**(இந்திரன் அரங்கனையடைதல்)**

**469. கோலமால் வரையி னாலய மதனிற்**
**குறைவிலாக் கோபுரக் குன்றைச்**
**சாலவா யிரங்கண் களித்திடக் கண்டு**
**சம்பிர விருக்கத்தைச் சார்ந்து**
**சீலமாம் பிராட்டி யினைத்தொழு தேத்திச்**
**சிறந்திடு கருணையின் சிறப்பின்**
**பாலதாங் கருட துவசனைப் பணிந்து**
**பாயிர மறையினாற் றுதித்தான்.**

எ-து. அந்தக் கோலமால் வரையானது ஆயிரத்தெட்டு மாற்று அபரஞ்சி சொர்ணமாய் விளங்கிப் பிரகாசிக்கின்ற திசைகளெல்லாம் இரத்தினமயமாகிய மகாமண்டபங்களும், கோபுரங்களும் யாககுண்டங்களும் குறைவில்லாமல் நிறைந்திருக்கின்ற, விலாசம பொருந்திய வைபவங்களை, இந்திரனானவன் தனது ஆயிரம் கண்களும் களிகூரத்தக்கதாகக் கண்டு ஆனந்த பரவசனாய் இன்பசாகரத்தில் மூழ்கி அமரர்க்கூட்டங்களுடனே எழுந்தருளி, மிகுந்த சிலாக்கியமாகிய சம்பீரமென்று சொல்கின்ற எலுமிச்சை விருட்சத்தினைக் கண்டு பணிந்து, இந்த அகில லோகநாயகியாகிய ஸ்ரீமகாலட்சுமியினிட திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து, அவளுடைய திவ்விய குணானுபவங்களைத் துதிசெய்து, அந்த லோக ரக்ஷகியினுடைய சிறந்த கருணாநேத்திரக் கிருபாநோக்கப் பரிபூரண விலாசத்தைப் பெற்ற அனந்தன், கருடன், விசுவச்சேனன், சனகன், சனந்தன், சனக்குமாராளாகிய நித்திய சூரியரிட பொற்பாத கமலங்களைப் பணிந்து, அனுக்கிரக விசேடத்தால் நிறைந்த ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்னும் திவ்விய மகிஷிகளால் இடைவிடாது உபாசிக்கின்ற ஸ்ரீஅரங்கநாயகரிட கமலம் போன்ற உபய சரணார விந்தங்களைக் கண்டு, இந்திரன் முதலாகிய தேவர்கள் வேத வேதாந்தங்களால் துதி செய்து வணங்கினவர்களாய் வந்தித்தார்கள் என்றவாறு. (1)

சீலம் - அழகு. நற்பண்பு. கருடதுவசன் - கருடக்கொடியோன் - அரங்கநாயகன். துவசம் - கொடி.

உரை - நித்தியசூரியர் - துவாதசாதித்தர் - துவாதச ஆதித்தர் - பன்னிருசூரியர் - 12 இராசிகளில் வரும் சூரியர்

## Intiraṉ Araṅkaṉaiyaṭaital

*kōlamāl varaiyi ṉālaya mataṉiṟ*
*kuṟaivilak kōpurak kuṉṟaic*
*cālavā yiraṅkaṇ kaḷittiṭak kaṇṭu*
*campira virukkattaic cārntu*
*cīlamām pirāṭṭi yiṉaittoḻu tēttic*
*ciṟantiṭu karuṇaiyiṉ ciṟappiṉ*
*pālatāṅ karuṭa tuvacaṉaip paṇintu*
*pāyira maṟaiyiṉāṟ ṟutittāṉ.*

## XXVII. Intiraṉ's Surrender

### Intiraṉ comes to Araṅkaṉ

Happily looking at the mountainous spire
Of the temple on the Kōla Hill
With his thousand eyes, Intiraṉ approached
The lemon tree and worshipped
The image of the Goddess of Wealth,
And saluted the feet of the Lord
Who is compassionate and sports
Karuṭaṉ on his flag; Intiraṉ praised
The Lord with scriptural verses.

(அரங்கனின் காட்சி)

470. பாணினி பகர்ந்த இலக்கண மதற்குக்
காண்டிகை விருத்தியாய்ப் பகருங்
காணரும் பொருளாம் பொதுவுரை யென்ற
மூன்றினை விரித்திடுங் கருத்தைச்
சேணுளோர் புகழு மனந்தனா யிரமாஞ்
சுடிகையி னெழில்விளக் கெடுக்கு

**மாணரும் பொருளா யோகநித் திரைசெய்**
**மால்திக ழரங்கனைக் கண்டான்.**

எ-து. பாணினியென்கின்ற மக்ரிஷியானவர் அருளிச் செய்த வியாகரணத்திற்குக் காண்டிகை உரை, விருத்தியுரை, பொது உரை என்னும் முத்திறமும் தோன்ற உரை செய்தருளிய திறத்தினால் தேவர்கூட்டங்கள் புகழாநின்ற, அனந்தனாரென்னும் திருத்தொண்டிற்கு முதன்மையானவர் ஆயிரம் சிரோரத்தினம் அமைந்த பணாமுடி விளங்கிப் பிரகாசித் தழகு செய்கின்ற, நடுப்பிரதேசத்தினில் யோக நித்திரை செய்யாநின்ற ஸ்ரீ அரங்கநாயகனை, யாவராலும் காணுதற்கு அருமையாகிய கருணையே உருவமாய் எழுந்தருளிய திவ்விய திருமேனி வடிவழகினை ஆயிரம் கண்களும் களிக்கத்தக்கதாய் உடம்பெல்லாம் கண்ணாய் உருகினான் தேவராசன் என்றவாறு. (2)

பாணினி பகர்ந்த இலக்கணம் - (பாணிநி) பாணிநீயம்; எட்டு அத்தியாயங்களை உடையது; அஷ்டாத்தியாயி என்றும் பெயர் பெறும். பதஞ்சலி முனிவரால் எழுதப்பட்ட மஹாபாஷ்யம் என்னும் விரிவுரை உடையது. சுடிகை - உச்சி.

**உரை** - பணாமுடி - பாம்பின் முடி; பணம் - பாம்பின் படம்.

## Araṅkaṉiṉ kāṭci

*pāṇiṉi pakarnta ilakkaṇa mataṟkuk*
*kāṇṭikai viruttiyāyp pakaruṅ*
*kāṇarum poruḷām potuvurai yeṉṟa*
*mūṉṟiṉai virittituṅ karuttaic*
*cēṇuḷōr pukaḻu maṉantaṉā yiramāñ*
*cuṭikaiyi ṉeḻilviḷak keṭukku*
*māṇarum poruḷā yōkanit tiraicey*
*māltika ḻaraṅkaṉaik kaṇṭāṉ.*

## The image of Araṅkaṉ

As the gods stood praising the significance
Of the tri-fold commentary - Kāṇṭikai,
Virutti and Potu - on the grammar
Gifted by Pāṇiṉi,[1] Intiraṉ saw Araṅkaṉ

1. Pāṇiṉi's grammar has eight cantos and was commented upon by Sage Patañcali. The commentary is known as Mahāpāṣyam.

Who appeared handsome in his yogic sleep,
Even as the jewels in the hoods of Aṉantaṉ
Showered brilliance.

(திருவடிகளில் வணங்குதல்)

471. மூவுல காளு முதல்வனெம் பொருட்டாய்
முன்னிவந் திம்மலை யமர்ந்து
பூவுறை பிராட்டி மார்பினில் விளங்கப்
புடையினிற் கவுத்துவந் துலங்க
நாவுரைப் பரிதா மனந்தனார் விமான
சேகர நாப்பணி னமர்ந்த
பூவைபோற் பச்சை மரகதம் போன்ற
புயல்வண்ணா வென்றடி [1]பணிந்தான்.

எ-து. திரிலோகமாகிய சராசரங்களுக்கெல்லாம் கர்த்தனாகிய முதல்வனே! தேவரீர் அடியேனைத் திருத்திப் பணிகொள்ளும் பொருட்டாய் இந்த லீலா விபூதியில் அவதரித்து அருளிய உமது திருமார்பில், செந்தாமரைக் கமலத்தினுதித்த ஸ்ரீமகாலட்சுமி விளங்கிப் பிரகாசிக்கின்ற இருபககங்களினும் கவுத்துவா பரணமானது இலங்க, நாவினால் சொல்வதற்கரிதாகிய அனநத விமான நடுப்பிரதேசத்தில் காயாம் பூவை யொத்த திவ்விய திருமேனிகளானது, மரகத மலை போன்ற வடிவழகினையுடைய கிருபையோடும் யோக நிததிரை செய்கின்ற அரங்கநாயகனைக் கண்டு களிகூர்ந்தவனாய் அவரிடபொற்பாதகமலங்களில் அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து சரணாகதி அடைந்தான் இநதிர மகாராசன் என்றவாறு. (3)

புடை - பககம், இருபுறம். நா உரைப்பு அரிதாம் அனந்தனார் எனப்பிரிக்க. கவுத்துவம் - திருமாலின மார்பணி, துளசிமணி பூவை - காயாமரம், (காயாம்பூ).

பா.வே. - 1 புகழ்ந்தான்

## Tiruvaṭikaḷil vaṇaṅkutal

*mūvula kāḷu mutalvaṉem poruṭṭāy*
*muṉṉivan timmalai yamarntu*
*pūvuṟai pirāṭṭi mārpiṉil viḷaṅkap*
*puṭaiyiṉiṟ kavuttuvan tulaṅka*
*ṉāvuraip paritā maṉantaṉār vimāṉa*
*cēkara ṉāppaṇi ṉamarnta*
*pūvaipōṟ paccai marakatam pōṉṟa*
*puyalvaṇṇā veṉṟaṭi paṇintāṉ.*

## Saluting the Lord's Feet

The Lord of the three worlds has come
To stay on this hill for our sake;
Lakṣmi on the lotus and the *Kavuttuvā* gem
Are on his chest; he is resting
On the Aṉanta vimāṉa which defies
Verbal description. Intiraṉ saluted the Lord
Whose complexion rivals the blue lily,
Emerald and the cloud.

(அரங்கனைப் போற்றுதல்)

472. பாற்கடல் கடைந்த ஞான்றசு ரர்களை
மோகினிப் படிவமாய்ப் படுத்து
மார்க்கமா மமரர் தமக்கமு தீய்ந்தா
யுபேந்திர [1]மாநிறி யாகி
நாற்கடல் சூழு மசுரர்வே ரறுத்தாய்
நாரசிங் கத்திரு வுருவாய்த்
தாக்குறு பொன்னன் றனைப்பிளந் திட்ட
தந்தைதாய் குருவெனத் தாழ்ந்தான்.

எ-து. திருப்பாற் கடலைக் கடையத்தக்கதாய் மந்திரகிரி மத்தாகவும், வாசுகி கயிறாகவும் கடைந்து அமுதம் உண்டாக்கிய காலத்தின், செகன்மோகினி வடிவாய் அவதரித்து அந்த அசுரர்க்கூட்டங்களை மயக்கி அமுதமாக்கிய பின்பு நன்மார்க்கங்களை யுடைய தேவர்கூட்டங்களுக்கு அமுதத்தை அருள்கூர்ந் தளித்த அமுத சாகரமே! அது வன்றியும் உபேந்திரன் என்னும் திருஉருவமைந்து அசுர வெள்ளங்களைக் களைந்து தேவலோகத்தைப் பாதுகாத்ததுமன்றி நரசிங்கமாகத் திருவுருவெடுத்து, இவ் உலகத்தைத் திடுக்கிடச் செய்த இரணியா சுரனைப் பிளந்து, அகிலமான லோகங்களுக் கெல்லாம் பீசப் பிரதானப் பிதாவும் மாதாவுமாக இரக்ஷிக்கின்ற எமது குருவாகிய தயாநிதியே! அடியேன் சரணாங்கதனான என்னைக் காப்பது உமது கடன் என்றான் இந்திரமகாராசன் என்றவாறு. (4)

உபேந்திரன் - விஷ்ணுவின் அவதாரமாகக் கச்சியப பிரசாபதியின் தவத்தால அதிதியின் வயிற்றிற் பிறந்தவர். இந்திரனுக்குத் துணையாய் இருப்பவர். பொன்னன் - பொன்னவன் - இரணியன்.

உரை - பீசப்பிரதானப் பிதா - உலகங்களுக்கெல்லாம் மூலப் பொருளாயமைந்த தந்தை. பீசம் - அண்டம், உலகம். சரணாங்கதன் - சரணாகதன் - அடைக்கலம் புகுந்தவன்.

பா.வே. - 1. மாயவனாகி.

## Araṅkan̲aip pōr̲r̲utal

*pār̲kaṭal kaṭainta ñān̲r̲acu rarkaḷai*
*mōkin̲ip paṭivamāyp paṭuttu*
*mārkkama mamarar tamakkamu tīyntā*
*yupēntira mānini yāki*
*nār̲kaṭal cūḻu macurarvē rar̲uttāy*
*nāraciṅ kattiru vuruvāyt*
*tākkur̲u pon̲n̲an̲ r̲an̲aippiḷan tiṭṭa*
*tantaitāy kuruven̲at tāḻntān̲.*

## Hailing Araṅkan̲

"When the milky sea was churned
You manifested as Mōkin̲i, cast a spell
On the Acuras and gave the nectar
To the gods; besides, you manifested
As Upēntiran̲ and uprooted the Acuras
Encircled by the seas; as Naraciṅkam
You clove the chest of Iran̲iyan̲.
You are the father, mother, teacher!"
So saying, he saluted.

(அவதாரங்களைக் கூறுதல்)

473. வராகமாய்ப் பூமி வவ்விய இரணி
யாக்கனைப் பாதல வரையிற்
காரம்புய மலரால் கடிந்தவ னுடலைப்
பிறந்தபின் கருதியே கடுகித்
தராதல மதனைத் துகளதாய்க் கோட்டிற்
றந்தபின் மறைவிதித் தருளும்

புராதனப் பொருளாய்ப் பொருந்திய பரனே
பொன்னடி யடைந்தனன் புகழால்.

எ-து. வராகமாகிய பன்றியினது உருவெடுத்துப் பூமியினைப் பாயாய்ச்சுருட்டி யொளிக்காநின்ற இரணியாக்கனைப் பாதலத்தின்கண் கராம்புய மலராகிய கரதல கமலங்களால் அவனுடலைப் பிளந்த பின்பு, மீட்டு முனதிச்சையினாலே அந்தப் பூமண்டலத்தினை உனது கூர்ங்கோட்டி னுண்டுகளாய் ஏந்திவந்து நிறுத்தி இரட்சித்தாய். சோமுகாசுரனை மச்ச அவதார மாயெடுத்து அவனைப் பிளந்து, அவனால் கிரகிக்காநின்ற வேதத்தினை மீட்டு வந்து பிரமாவுக்கு அன்ன உருவமாய்த் திருவாய் மலர்ந்தருளினாய். இத்தன்மையனவாகிய உனது புகழினை விரும்பி உனது திருவடிக் கமலங்களுக்குச் சரணாகதி அடைந்தேன் என்றவாறு. (5)

வவ்வுதல்-கவர்தல். தராதலம்-பூமி. துகள்-புழுதி, சிறுதுண்டு. கோடு-கொம்பு.

## Avatāraṅkaḷaik kūṟutal

*varākamāyp pūmi vavviya iraṇi*
*yākkaṉaip pātala varaiyiṟ*
*karāmpuya malarāl kaṭintava ṉuṭalaip*
*piṟantapiṉ karutiyē kaṭukit*
*tarātala mataṉait tukaḷatāyk kōṭṭiṟ*
*ṟantapiṉ maṟaivitit taruḷum*
*purātaṉap poruḷāyp poruntiya paraṉē*
*poṉṉaṭi yaṭaintaṉaṉ pukaḻāl.*

## On Incarnations

"As the Boar you destroyed with your hands
That were like the lotus, Iraṇiyaṉ
Who stole the earth; again, speedily
You raised by your tusk the earth
As if it were but a speck of dust
And saved it. You then taught
The scriptures to Piramaṉ. O Supreme!
I have approached your golden feet
Seeking your grace.

(யானையைக் காத்த சிறப்பு கூறுதல்)

474. பங்கய மலர்ந்த விங்கித மடுவிற்
பாய்ந்திடு [1]கராவினாற் பயந்தங்
கிங்கிதமான கராசல மாதி
முதல்வனை நினைத்திட விசைந்து
பொங்கிய வடவை யாழியை விட்டு
யிடங்கரைப் பிளந்தபின் போற்றித்
தங்கிய களிறு தனித்துள மகிழ்ந்து
சரணினை யடைந்திடும் பரனே.

எ-து. பங்கய சமூகங்களானவை அலராநின்ற இங்கிதமாகிய சவுந்தரியத்தோடுங் கூடிய தடாகத்தின்கண் வதியாநின்ற முதலையானது பற்றியிழுக்கக் கசேந்திரன் என்கின்ற யானையானது பயப்பிராந்தியை அடைந்து, ஆதிமூலமே யென்று வீறிட, அப்பொழுதே அதனது சிறுமையறிந்து வடவா வனலைச் சுவாலிக்காநின்ற கிஞ்சுமாரச் சக்கரத்தை விட்டு அந்த முதலையைப் பிளந்து, யானையைப் பாதுகாத்துத் திருவடிச் சம்பந்தத்தை விட்டு நீங்காமல் வழித்தொண்டாக்கும்படியாகிய பரமனே! உனது திருவடிக்கண் சரணாகதி யடைந்தேன் என்றான் என்றவாறு. (6)

கரா - முதலை. கராசலம் - கரம்+அசலம் - கரம்- கை, துதிக்கை; அசலம் - மலை; யானை: உருவகம். வடவை - ஊழித்தீ. ஆழி - சக்கரம். இடங்கர் - முதலை

பா.வே. - 1 கராவிறை.

## Yāṉaiyaik kātta ciṟappu kūṟutal

*paṅkaya malarnta viṅkita maṭuviṟ*
*pāyntiṭu karāviṉāṟ payantaṅ*
*kiṅkitamāṉa karācala māti*
*mutalvaṉai niṉaittiṭa vicaintu*
*poṅkiya vaṭavai yāḻiyai viṭṭu*
*yiṭaṅkaraip piḷantapiṉ pōṟṟit*
*taṅkiya kaḷiṟu taṉittuḷa makiḻntu*
*caraṇiṉai yaṭaintiṭum paraṉē.*

## On Saving the Elephant

"In the lovely lotus pond, the crocodile
Dragged the elephant that appealed
To the Primal Lord. Immediately

You left the ocean that holds within it
The Vaṭavai fire, and killed the crocodile.
You are the Lord to whom the elephant
Surrendered, and praised in great joy.

(வாமன அவதாரச் சிறப்பு கூறுதல்)

475. உலகெலா மளிக்க வல்லவ னாகி
யுயர்ந்தபீ தாம்பர உடையும்
பலர்புகழ் திருவுங் கவுத்துவ மணியும்
படர்தரு பஞ்சவா யுதத்தோன்
சலமிலா தமரு மாவலி தன்பா
லிரவலர் போலவே சார்ந்து
நிலமதி னொளிக்கப் பதத்தினா னிறுத்த
நித்திய நின்மல வென்றான்.

எ-து. இவ்வுலகத்தை யெல்லாம் இரக்ஷிக்க வல்லவ னென்கின்ற காரணக் கிரிகையினை யாவரும் உணர, உயர்வாகிய பீதாம்பரம் தரித்த அரையும், பலரும் போற்றுகின்ற ஸ்ரீமகாலட்சுமி தேவியும் கவுத்துவமும் அணிந்த மார்பகமும், பஞ்சாயுதம் தரிக்காநின்ற புயங்களு முடையவ ரெப்பொழுதும் அழிவின்றி விளங்காநின்ற மாபலியாகிய புவன சக்கிரேசுவரனிடத்தில் இரவலனைப்போல மூவடி தானமாகிய மண்ணினைத் தானமாய் வாங்கி, ஆகாயம் ஓரடியாயும், பூமி ஓரடியாயும் அளந்து அவனது சிரத்தின்கண் திருவடித்தாமரையினைச் சூட்டிப் பாதல வரையினிறுத்தாநின்ற நிமலனே என்று பணிந்தான் தேவராசன் என்றவாறு. (7)

இரவலர் - யாசிப்பவர்; வாமனவடிவம். மாவலி - மாபலிச் சக்கரவர்த்தி; விரோசனன், தேவி என்பாரின் மகன். பிரகலாதனுடைய பேரன். திருமாலுக்கு மூன்றடி மண் கொடுத்து, மூன்றாவது அடி இடமாகத் தன் தலையைக் காட்டியவன்.

## Vāmaṉa avatārac ciṟappu kūṟutal

*ulakelā maḷikka vallava ṉāki*
*yuyarntapī tāmpara uṭaiyum*
*palarpukaḻ tiruvuṅ kavuttuvā maṇiyum*
*paṭartaru pañcavā yutattōṉ*

*calamilā tamaru māvali taṉpā*
*liravalar pōlavē cārntu*
*nilamati ṉoḷikkap patattiṉā ṉiṟutta*
*nittiya niṉmala veṉṟāṉ.*

## The Vāmaṉa Incarnation

"Capable of giving away the worlds
In charity, yet you gave up rich garments,
Far-famed Lakṣmi, the kavuttuvā gem,
And the five weapons carried by you,
Came to Māpali as a mendicant
And measured with your feet the earth
And the sky. O Eternal! O Pure One!"

**(இந்திரனுக்கு விசுவரூபத்தைக் காட்டியருளுதல்)**

476. **கலங்கிநைந் துருகிக் காவலன் விமானத்**
**தமர்தரு கண்ணனைக் கண்டு**
**தலங்களி னுயர்ந்த கோலமால் வரையில்**
**தயாபரத் தலைவனைத் துதிப்ப**
**நிலவுறு முயர்ந்த வுருவத்தைக் காட்டி**
**நிறைந்தஞா னக்கண்க ளளித்தான்**
**குலவுறு வரம்பி னின்பத்திற் குளித்துக்**
**குறைவிலா மகிழ்ச்சியின் மலர்ந்தான்.**

எ-து. இந்தப் பிரகாரமாக இந்திர மகாராசனானவன் மனது கலக்கப் பட்டவனாய் உருகி அனந்த விமான சேகரரா யோகநித்திரை செய்கின்ற தாமரைக் கண்ணனாகிய அரங்கநாயகரிட திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து வணங்குகின்ற தேவராசனுக்கு இரங்கித் தமது பூரணாவதாரமாய் இருக்காநின்ற விசுவரூபத்தைக் காட்டி நிறைவாகிய ஞானக் கண்களை அனுக்கிரகித்தார். அந்தக் கண்களால் கண்டு வரம்பில்லாத இன்ப வெள்ளத்திலே குளித்து ஆனந்தப்பரவசனாய்க் குறைவில்லாத மகிழ்ச்சியினாலே மலர்ந்தான் தேவராசன் என்றவாறு. (8)

நைதல் - தளர்தல். தயாபரன் - அருட்குணமுடையவன்.

## Intiraṉukku vicuvarūpattaik kāṭṭiyaruḷutal

*kalaṅkinain turukik kāvalaṉ vimāṉat*
*tamartaru kaṇṇaṉaik kaṇṭu*
*talaṅkaḷi ṉuyarnta kōlamāl varaiyil*
*tayāparat talaivaiṉait tutippa*
*nilavuṟu muyarnta vuruvattaik kāṭṭi*
*niṟaintañā ṉakkaṇka ḷaḷittāṉ*
*kulavuṟu varampi ṉiṉpattiṟ kuḷittuk*
*kuṟaivilā makiḻcciyiṉ malarntāṉ.*

## Cosmic Form Revealed to Intiraṉ

As Intiraṉ felt greatly moved to see
The Lord in the vimāṉa on the Kōla Hill
Famed among pilgrim centers, and prayed
To the compassionate Supreme,
The Lord showed his cosmic form
And also gave the eye of knowledge to see.
Bathing in an immesurable joy,
The king felt undiminishing joy.

(விசுவரூபத் தோற்றம்)

477. அழிவிலா வாற்ற லுடையபே ருருவின்
[1]அலகிலா சராசர மனைத்து
நிழலதாய்த் தோன்ற வமரர்க ளியாரும்
வலக்கர நீளசு ரேசர்
தழைவுறு மிடக்கை வுருவமாய்த் தோன்றத்
தாணுவும் பிரமனும் விளாவாய்ப்
பழையதோ ரண்ட கோளகை [2]முடியாய்ப்
பாதலம் பாதம தாக.

எ-து. அத்தன்மைத்தாகிய என்றும் அழிவில்லாத நித்தியனாகிய [illegible] விசுவ ரூபமானது எப்படிப் பிரகாசிக்குதென்றால், இந்தப் பூலோகத்தி லிருக்கின்ற சராசரங்க ளெல்லாம் அவ்வடிவில் பிரதிபிம்பமாய்த் தோன்றவும், தேவர்களெல்லாம் [illegible] வலக் கராம்புய மலராகவும், அசுரக்கூட்டங்க ளெல்லாம் இடக் கரமாகிய [illegible] தோன்றவும், பரமசிவனும் பிரமாவும் இரண்டு விலாக்களாய்ப் பிரகாசிக்கவும், பூமண்டலம் [illegible]

வண்ட கோளகையானது முடியாய் விளங்கித் தோற்றம் செய்யவும், பாதலம் முதலாகிய லோகங்களெல்லாம் இரண்டு பாதகமலங்களாய்த் தோன்றவும் செய்தது என்றவாறு. (9)

அலகிலா - அளவிடமுடியாத. தாணு - சிவபெருமான். விலா-பழு; விலாவெலும்பு.

பா.வே. - 1. அகிலசராசரம். 2. முடிவாய்.

## Vicuvarūpat tōṟṟam

*aḻiviḻā vāṟṟa luṭaiyapē ruruviṉ*
*alakilā carācara maṉaittu*
*niḻalatāyt tōṉṟa vamararka ḷiyārum*
*valakkara niḷacu rēcar*
*taḻaivuṟu miṭakkai vuruvamāyt tōṉṟat*
*tāṇuvum piramaṉum vilāvāyp*
*paḻaiyatō ranta kōḷakai muṭiyāyp*
*pātalam pātama tāka.*

## The Cosmic Form

The form that has indestructible power
Was so brilliant that the entire creation
Seemed but a shadow; all the gods
Were his right hand; all the Acurās
His left hand; Civaṉ and Piramaṉ
Were the ribs; the ancient universe
Was the crown; the nether worlds, his feet.

(அரங்கனுடன் தேவர் கூட்டம்)

478. முனிதலி லியக்கர் விஞ்சையர் சித்தர்
திக்கினிற் காவலாய் முந்தி
நினைதரு மேலோர் கருடகந் திருவர்
கின்னரர் நிலைத்தகிம் புருடர்
தனியதாய் விளங்கு நவந்தரு சித்தர்
சாரணத் தலைவர்கள் பூதர்
புனைதரு நூலோர் முதலினோர் ஞானக்
கரும[1]விந் திரியங்களாய்ப் பொலிய.

எ-து. சாந்தகுண சவுமியராகிய இயக்கர்க்கூட்டங்களும், வித்தியாதர ராசாக்களும், அட்டதிக்கைக் காக்கின்ற திக்குப் பாலகரும், கருட கந்திருவர்களும், கின்னர கிம்புருடரும், ஒப்பற்ற ஒன்பது வகையாய் உள்ள சித்தர்கூட்டங்களும், சாரணத்தலைவர்களும், பூத கணங்களும், நாவலர் முதலாகிய பேர்களெல்லாம் ஞானேந்திரிய கன்மேந்திரிய உருவமாய் விளங்கினார்கள் என்றவாறு. (10)

முனிதல் - சினத்தல். இயக்கர் - கந்தருவர். விஞ்சையர் - வித்தியாதரர்.

**உரை** - சவுமியர்-சௌமியர்-அமைதியுடையோர்.

பா.வே. - 1. விந்தியங்களாய்.

## Araṅkaṉuṭaṉ tēver kūṭṭam

*muṉitali liyakkar viñcaiyar cittar*
*tikkiṉiṟ kāvalāy munti*
*niṉaitaru mēlōr karuṭakan tiruvar*
*kiṉṉarar nilaittakim puruṭar*
*taṉiyatāy viḷaṅku navantaru cittar*
*cāraṇat talaivarkaḷ pūtar*
*puṉaitaru nūlōr mutaliṉōr ñāṉak*
*karumavin tiriyaṅkaḷāyp poliya.*

## Gods with Araṅkaṉ

Yakshas free of anger; Vittiyātaras;
Cittas; the guardians of directions;
The immortal Karuṭas, Kantaruvas;
Kiṉṉaras and associated Kimpuruṭars;
The unequalled nine classes of Cittas;
Cāraṇa leaders; Pūtas;
Scholars and the rest were there
Like the sense organs.

(அரங்கனின் உறுப்புகள்)

479. ஆண்டய னங்கள் இருதுமா மதிய
மைவகைப் பஞ்சவங் கங்கள்
காண்டரு நாழி நிமிடமே முதலாங்
காலபே தங்களின் தத்துவ

நீண்டதோர் கரத்தின் விளங்கிட முனிவர்
பேதங்க ளுரத்தினி னிகழ
மாண்டதோர் ஞான முகத்தினின் விளங்கு
மாயவன் வடிவினை மதித்தான்.

எ-து. வருடமுமாறு மதியாகிய அயனங்களும், இரண்டு மாதமாகிய ரிதுக்களும், ஒரு மாதமாகிய மதிகளும், பஞ்சாங்கமாகிய திதி, வார, கரண, யோக நட்சத்திரங்களுமாகிய காலத் தத்துவங்களெல்லா மொரு கரதல கமலங்களிலே தோன்றிப் பிரகாசிக்கவும், முனிவர் பேதங்களெல்லாம் மார்பினில் விளங்கவும், மற்கடஞான, மாற்சால ஞானமாகிய இரண்டும் திருமுக மண்டலத்தில் விளங்கிப் பிரகாசிக்கவும் எழுந்தருளினார் அரங்கநாயகர் என்றவாறு. (11)

ஆண்டயனங்கள் - ஆண்டு + அயனங்கள்; அயனம் - அரை ஆண்டு. பஞ்சவங்கங்கள் - பஞ்சம் + அங்கங்கள் - பஞ்சம் - ஐந்து; அங்கங்கள் - சோதிடத்திற்குரிய உறுப்புகள். அவை - கரணம், திதி, நட்சத்திரம், யோகம், வாரம் என்பன. உரம் - மார்பு.

உரை - மற்கடஞானம் - விடாப்பிடிக்கொள்கை. மாற்சால ஞானம் - ஐயவுணர்வுடைக் கொள்கை.

## Araṅkaṉiṉ uṟuppukaḷ

*āṇṭaya ṉaṅkaḷ irutumā matiya*
*maivakaip pañcavaṅ kaṅkaḷ*
*kāṇṭaru nāḻi nimiṭamē mutalāṅ*
*kālapē taṅkaḷiṉ tattuva*
*nīṇṭatōr karattiṉ viḷaṅkiṭa muṉivar*
*pētaṅka ḷurattiṉi ṉikaḻa*
*māṇṭatōr ñāṉa mukattiṉiṉ viḷaṅku*
*māyavaṉ vaṭiviṉai matittāṉ.*

## Araṅkaṉ's Limbs

The year, the two halves of the year,
The seasons, the five parts[2], hours,
Minutes and such divisions of Time
Appeared on the one long hand;
The group of sages were on the chest;
The two philosophies[3] illumined the face.
Such the Lord's image whom Intiraṉ saluted.

2. Titi, vāram, karaṇam, yōkam, naṭcattiram
3. The Path of the Monkey and the Path of the Kitten

(அரங்கன் திருமேனியின் அமைப்பு)

480. மறைகள்வே தாந்த வருக்கபாஞ் சாத்திர
வகையும்வை கானச விதியு
முறையதாந் தரும சாத்திர புராண
முபபுரா ணத்தினின் முடிவு
மறைதரு மிருதி யறிவுளோர் அறைந்த
சங்கிதை யாறங்க மழகாய்
நிறைதரு மிசைநூல் தருமநூல் பிறவு
நிறைந்துளோன் வடிவத்திற் கண்டான்.

எ-து. இருக்கு முதலாகிய நான்கு வேதமும், தயித்திரிய முதலாகிய முப்பத்திரண்டு உபநிடதங்களும், அரங்கநாயகர் திருவாய் மலர்ந்தருளிய பாஞ்சராத்திரமும், வைகானசமுனிவர் கூறாநின்ற ஆகம விதிகளும், வாதிட்ட முதலாகிய தரும சாத்திரம் பதினெட்டும், பிரம முதலாகிய புராணங்கள் பதினெட்டும், பார்க்கவம் முதலாகிய உபபுராணங்கள் பதினெட்டும், முனிவரர் அறைந்த மிருதிகளும், சங்கிதைகளும், தருக்கம், இலக்கணம், சோதிடம், சந்தோபிசிதம், நிருத்தம், நிகண்டென்னும் ஆறு சாத்திரங்களும், இசைநூலும், அரசவித்தையாகிய தனுநூலும் இவையெல்லா மெங்கும் நிறைந்த பரிபூரண திவ்விய திருமேனிகளில் விளங்கிப் பிரகாசிக்கக் கண்டு களித்தான் இந்திர மகாராசன் என்றவாறு. (12)

பாஞ்சாத்திரம் - பாஞ்சராத்திரம் - வைணவ ஆகமம். திருமால் பிரமனுக்கு உபதேசிக்க, பிரமதேவன் மூலம் நாரதர் அறிந்து முனிவர்களுககுக் கூறினார் என்று கூறப்படுவது; வைண ஆலயப் பிரதிட்டை, கொடிக்கம்பம், ஆராதனம், பூசை, பஞ்சகவ்யம், உற்சவங்கள், யாகசாலை போன்ற பலவகை விதிகளைக் கூறுவது. வைகானசர் - விகனசரிஷி - திருமாலின் மனத்தில் பிறந்தவர். இவர் செய்த சூத்திரங்களும், இவருடைய மாணவர்களாகிய மரீசி, அத்திரி, பிருகு, காச்யபர் என்னும் நால்வரும் செய்த சூத்திரங்களும் வைகானசம் என்று பெயர் பெறுகின்றன.

**தருமநூல் பதினெட்டு:** அத்திரி, ஆங்கீரசம், ஆபத்தம்பம், உசனம், ஔரிதம், காத்தியாயனம், கௌதமம், சங்கலிதம், சமவர்த்தம், சாதான்மம், தக்கம், பராசரம், பிறகற்பதி, மனு, யமம், யாஞ்சவற்கியம், வசிட்டம், விட்டுணு, வியாசம் என்பனவாகும். இவற்றுள் 19 நூல்கள் காணப்படுகின்றன எல்லா அகராதிகளும் இவற்றையே குறிப்பிடுகின்றன. உட்புராணம் - சனற்குமாரம் முதல் பார்க்கவம் ஈறான 18 புராணங்கள்; கருத்தாவின் பெயரால் பெயர் பெற்றவை. மிருதி - தருமசாத்திரம் 18 - மநுமுதல் வசிட்டம் ஈறான 18. சங்கிதை - வரலாறு, பாகம்

## Araṅkaṉ tirumēṉiyiṉ amaippu

*maṟaikaḷvē tānta varukkapāñ cāttira*
*vakaiyumvai kāṉaca vitiyu*

*muṟaiyatāṉ taruma cāttira purāṇa*
*mupapurā ṇattiṉiṉ muṭivu*
*maṟaitaru miruti yaṟivuḷōr aṟainta*
*caṅkitai yāṟaṅka maḻakāy*
*niṟaitaru micainūl tarumanul piṟavu*
*niṟaintuḷōṉ vaṭivattiṟ kaṇṭāṉ.*

## The Image of Araṅkaṉ

The Vēdas, the Upanishads,
The *Pāñcārāttira* statement, the ritualism
Of Sage Vaikāṉacan; the Taruma Cāttiras;
The Purāṇas; the minor Purāṇas;
The smritis composed by learned scholars;
The six-fold shastras; the music shastra
And that of archery; all these
He found blazing in the image of Araṅkaṉ.

(இந்திரனின் ஆனந்தம்)

481. மதித்தவ னிருளின் வடிவினை நீங்கி
மருள்வடி வகன்றபின் மாயோன்
விதித்தநல் லருளாற் பிரணவ வடிவாய்
விளங்கியே யருள்வடி விளைவைத்
துதித்தவ னாகி மூவுல காண்டு
பொருளினைத் துகளதாய்ப் பெருக்கிக்
கதித்தவின் பத்தின் மூழ்கிய வெளியேற்
கருணையா னுருகினை யெந்தாய்.

எ-து. அந்த அனந்த கலியாண குண விபூதிவிக்கிரக விசுவசொரூப நிராமயப் பரம்பொருளாகிய ஸ்ரீ அரங்கநாயகருடைய கிருபா நேத்திர விசேடத்தினாலே இருள் வடிவானது நீங்கிப் பிரம பாவனையைச் சுருதி வழியினறிகின்ற மருள் வடிவானான். அந்த மருள் வடிவம் நீங்கி மீட்டும் பிரணவ வடிவமாய்த் தோன்றினான். அப்படி ஆனந்தப் பரவசனாய்ச் சேவிக்கும்போது, அறிவே சொரூபமாய் விளைந்த இன்பத்தால் துதிக்கின்றான். இந்த மூன்றுலகத்தையும் அரசாட்சி செய்து மித்தையாகிய திவியத்தைப் பாவத்துக்கஞ்சாமற்

பெருக்கிச் சிற்றின்பமாகிய காமக்கடலிலே மூழ்கித் தடுமாறுகின்ற அபக்குவனாகிய அடியேனை ஒரு பொருளாய் மதித்துக் கருணையினாலே தடுத்தாட் கொண்ட காருண்ணியத்தை யாவராலும் கூறுதற்கு அரிதாமென்றான் அருள் வடிவத்தைக் கண்ட இந்திர மகாராசன் என்றவாறு. (13)

பிரணவ வடிவம் - இறைவடிவம். துகள் - குற்றம். கதித்தல் - மிகுதல்.

**உரை** - மித்தையாகிய திரவியம் - பொய்யாகிய செல்வம். மித்தை - பொய். அபக்குவன் - தகுதியற்றவன்.

## Intiraṉiṉ āṉantam

*matittava ṉiruḷiṉ vaṭiviṉai niṅki*
*maruḷvaṭi vakaṉṟapiṉ māyōṉ*
*vitittanal laruḷāṟ piraṇava vaṭivāy*
*viḷaṅkiyē yaruḷvaṭi viḷaivait*
*tutittava ṉāki mūvula kāṇṭu*
*poruḷiṉait tukaḷatāyp perukkik*
*katittaviṉ pattiṉ mūḻkiya veḷiyēṟ*
*karuṇaiyā ṉurukiṉai yentāy.*

## Intiraṉ's Joy

The king who gained the vision was freed
From darkness; by the grace of Nārāyaṇaṉ
He appeared as the piraṇava image;
As he saluted with joy regarding this,
He said: "I ruled the three worlds,
Increased my material possessions
And drowned in sensual pleasures.
Out of compassion you have saved me now
O Father.

(அரக்கரை அழிக்க வழி வேண்டுதல்)

482. நினதருள் வடிவை யகத்தினிற் கண்டு
நிகழ்ந்தபே ரின்பத்தை யருந்து
முனிவரர்க் கன்றி மோகசா கரத்தின்
மூழ்கிய மூர்க்கன்றன் கண்ணாற்

பனிவரு கண்க ளானந்தம் படரக்
காணினு மவர்பெறு பயன்போற்
வினையினேன் பெற்று விளங்குவ தரிதா
லரக்கரெவ் [1]வணமவிந் திடுவார்.

எ-து. இந்திர மகாராசன் தோத்திரம் செய்கின்றான் நினது திருவடிவாகிய பேரின்ப வைபவ இன்பத்தை அறிவினாலே சொரூப சாட்சாத்காரமாய்க் கண்டு நிகழாநின்ற பேரின்பமாகிய அமிழ்தத்தை உண்ணுகின்ற தத்துவ ஞானிகளுக்கன்றி, மோக சாகரத்தின் அழுந்திய மூர்க்கனுடைய கண்ணினாலே கண்டு ஆனந்த வாரியொழுகத்தக்கதாய், யான் கண்டு களிகூர்ந்தாலும், அந்த முனிவர்கள் கண்ட காட்சியினாலே கண்டுணரும் இன்பமாகிய கருப்பிரசம் போலாகுமோ? வினையினேன் புறவிடையத்தாலே கண்டு களித்தாலும், ஆடு தின்னுகின்ற இலைகளைப் போலாகுவதல்லது வேறில்லை. ஆகவே அரக்கர் எவ்வண்ணம் அழிந்திடுவார் என்றான் இந்திர மகாராசன் என்றவாறு. (14)

மோகசாகரம் - காமக்கடல். மூர்க்கன் தன் கண்ணால் எனப் பிரிக்க. பனி - நீர். வினையினேன் - ஊழ்வினையுடைய அடியேன். அவிதல - அழிதல்.

உரை - வாரி - கடல. கருப்பிரசம் - கரும்புச்சாறு. புறவிடையம் - புறவிடயம் - வெளிப்பார்வை (புறக்கண்)

பா.வே. - 1. வண்ணம் வீய்ந்திருவார்.

## Arakkarai aḻikka vaḻi vēṇṭutal

*niṉatarul vaṭivai yakattiṉiṟ kaṇṭu*
*nikaḻntapē riṉpattai yaruntu*
*muṉivarark kaṉṟi mōkacā karattiṉ*
*mūḻkiya mūrkkaṉṟaṉ kaṇṇāṟ*
*paṉivaru kaṇka ḷāṉantam paṭarak*
*kāṇiṉu mavarpeṟu payaṉpōṟ*
*viṉaiyiṉēṉ peṟṟu viḷaṅkuva taritā*
*larakkarev vaṇamavin tiṭuvār.*

## Plan for Destroying Acuras

"Only great sages can envision
Your form in the heart and drink deep
The joy; not for me who am immersed
In the ocean of sensuality the privilege
To see you with eyes streaming tears;

Yet have I gained the good fortune.
Do tell me of a plan to destroy
The Acuras.

(எனது பாவச்செயலே காலநேமியாய் வடிவெடுத்தது எனல்)

483. தேவர்கள் குலக்கு வருமருந் தன்னா
யென்னைகொல் தெளிந்தில னடியேன்
பாவகா ரணமாங் காலநே மிப்பேர்
பகர்ந்திடிற் பல்லுயிர்த் தொகையும்
நாவறந் தொழியும் புயமெலிந் திடுமென்
னாதனின் பொன்னடிக் கமலச்
சேவக மில்லாச் செய்தியான் விளைந்தத்
தீவினை தீர்த்தருள் கென்றான்.

எ-து. தேவர்கூட்டங்களுக்கு அரிய அமுதம்போன்ற அரங்கநாயகனே! என்ன காரணத்தினாலோ செய்காரியம், தவிருங்காரியம் அறியாதவனாய் மயங்குகின்றேன். எனது பாவ காரணமானது காலநேமியென்னும் அசுரனாய்ப் பிறந்திருக்கின்றது. அவன் பெயர்க்கூறினும் நாவானது வரண்டு போகிறது; புயமானது துரும்பாய் மெலிகின்றது எதனாலென்றால், உனது பதுமம் போன்ற பாதத்தைப் பணிந்து யாங்கள் சேவகம் செலுத்தாத் தீவினைப் பகுப்பால் விளைந்த வினைப்பயனென்றான் இந்திர மகாராசன் என்றவாறு.(15)

குலக்கு - குலத்திற்கு, கூட்டத்திற்கு. அருமருந்து - சாவாமருந்து, அமிழ்தம்.

## Eṉatu pāvacceyalē kālanēmiyāy vaṭiveṭuttatu eṉal

*tēvarkaḷ kulakku varumarun taṉṉā*
*yeṉṉaikol teḷintila ṉaṭiyēṉ*
*pāvakā raṇamāṅ kālanē mippēr*
*pakarntiṭiṟ palluyirt tokaiyum*
*nāvaṟan toḻiyum puyamelin tiṭumeṉ*
*ṉātaṉiṉ poṉṉaṭik kamalac*
*cēvaka millāc ceytiyāṉ viḷaintat*
*tīviṉai tīrttaruḷ keṉṟāṉ.*

## My Sins have Come as Kālanēmi

"Lord who is nectar for the gods!
I am in dire confusion. My own sins

Have taken birth as this Kālanēmi.
The mere utterance of his name
Dries the throat of living beings;
And their shoulders grow thin.
Do bring to an end this evil
Which has been raised by my failure
To worship your feet.

(அரங்கநாயகர் அருள்புரிதல்)

484. மழலைவாய்க் குதலைச் சிறார்மெலிந் துரைத்த
வார்த்தையைத் தந்தையாய் மதித்தக்
குழவியிற் குருகி வணைத்துச்சி மோந்து
குறைவினை யகற்றுதல் போல
வழகனார் மதித்தங் கிந்திரன் றன்னை
யஞ்சலென் றழைத்தன னதனாற்
பழையதீ வினைபோய் வறியவன் செல்வம்
படைத்ததைக் கடுத்தன னன்றே.

எ-து. மழலைவாய்க் குதலையினாலே கூறுகின்ற சிறார், மனமெலிந்துருகிய இரக்க மொழியைக் கேட்கின்ற தந்தை, தாயார் அவ்விரக்கத்திற்கு ஆலோசித்திரங்கி, அந்தக் குழந்தையை எடுத்தணைத்து, உச்சிமோந்து, நல்லின்பத்தை வருவிக்கும் வரலாறுபோல, அரங்கநாயகனாகிய புருடோத்தமன் மிகுந்த கருணையால் தமது கராம்புயமலரால் ஆதரவு காட்டினார். அதைச் சேவித்த இந்திரன் முதலாகிய தேவர்கள் தரித்திரன் செல்வம் பெற்றது போலக் களிகூர்ந்து மகிழ்சிறந் தானந்தம் அடைந்தார்கள் என்றவாறு. (16)

மழலை - குழந்தை குதலை - முழுமைபெறாதசொல். யாய் - அன்னை. குழவியிற்குருகி - குழவியினுக்கு உருகி வறியவன் - தரித்திரன். கடுத்தல் - ஒத்திருத்தல் (போல).

## Araṅkanāyakar aruḷpurital

*maḻalaivāyk kutalaic ciṟārmelin turaitta*
*vārttaiyait tantaiyāy matittak*
*kuḻaviyiṟ kuruki vaṇaittucci mōntu*
*kuṟaivinai yakaṟṟutal pōla*
*vaḻakaṉār matittaṅ kintiraṉ ṟaṉṉai*
*yañcaleṉ ṟaḻaittaṉa ṉataṉāṟ*
*paḻaiyatī viṉaipōy vaṟiyavaṉ celvam*
*paṭaittataik kaṭuttaṉa ṉaṉṟē.*

## Arankan's Grace

Like the father who listens to the words
Of anxiety spoken by his little son
And embraces him, kisses him
And chases away the evil, Arankan
Took pity on Intiran and asked him
Not to fear. By this gesture
Intiran's evil past was nullified
And he was like a poor man
Who had gained immense riches.

(தேவர்களின் தீவினை விலகுதல்)

485. அந்தமால் வரையி னழகிய முனிவர்
அருந்தவம் புரிதலோ [1]வனந்தம்
இந்திரன் சயந்தன் சசிமுதல் அமரர்
இருந்தனர் பெரும்புக ழடைந்து
சந்ததங் கோல வரைதனை வலமாய்ச்
சார்ந்தனர் சராசர மீன்ற
சுந்தர மிகுந்த இலக்குமி யருளால்
தீவினை போக்கியே சுகித்தார்.

எ-து. அந்த அழகிய கிரியின்கண் அழகுபொருந்திய முனிவர்கூட்டங்களும், அரிய தவத்தினைப் புரிகின்ற அனந்தமாம் இந்திரமகாராசனும், அவனது புத்திரனாகிய சயந்தமகாராசன் முதலாகிய பேர்களும் வசித்துப் பெரிய புகழினையடைந்தார்கள். அதுவன்றியும் திரிபுவன ஆன்மகோடிகளாகிய சராசரங்களை ஈன்றருளிய, சுந்தர, ரஞ்சித, மனோகரம் பொருந்திய ஸ்ரீ மகாலட்சுமி தேவியினுடைய அனுக்கிரக சுகுணத்தினாலே தீவினைகளெல்லாம் நீங்கிச் சுகத்தை அடைந்தார்கள் தேவேந்திரன் முதலாகிய தேவர்கூட்டங்களும் முனிவர்கூட்டங்களு மென்றவாறு. (17)

மால்வரை - பெருமை மிக்க மலை. திருமால் எழுந்தருளியமலை யெனினுமாம். சயந்தன் - இந்திரகுமாரன். சசி - இந்திராணி.

பா.வே. - 1. அளவில.

இந்திரன் சரணாகதி யடைந்த அத்தியாயம் முற்றிற்று.

## Tēvarkaḷiṉ tīviṉai vilakutal

*antamāl varaiyi ṉaḻakiya muṉivar*
*aruntavam puritalō vaṉantam*
*intiraṉ cayantaṉ cacimutal amarar*
*iruntaṉar perumpuka ḻaṭaintu*
*cantataṅ kōla varaitaṉai valamāyc*
*cārntaṉar carācara mīṉra*
*cuntara mikunta ilakkumi yaruḷāl*
*tīviṉai pōkkiyē cukittār.*

## The Gods Relieved of Evil

On that hill great sages performed
Austerities manifold, as also Intiraṉ,
Cayantaṉ, Caci Tēvi and the gods
And all of them gained fame.
They circumambulated the hill
And by the grace of Lakṣmi,
Mother of all universes,
Were relieved of their evil past
And became very happy.

# 28. இருபத்து நான்காவது
# நாரதர் காலநேமியைக் கண்ணுற்ற அத்தியாயம்

அரங்கநாயகரின் அருளைப்பெற்ற இந்திரன் கோலமலையில் மகிழ்ந்திருந்தான். அப்போது இந்திரபுரியை ஆண்ட காலநேமி என்னும் அசுரன், தூதுவரை அழைத்து, இந்திரன் முதலாகிய தேவர்கள் எங்கே திரிகின்றார்கள் என்பதைக் கண்டு வருமாறு பணித்தான். தூதுவர் புறப்பட்டனர். வடமேரு முதலாகிய மலைகள், கடல்சூழ் தீவாந்திரங்கள், புண்ணியத் தலங்கள், பொன்னுலகம், இருளுலகம், தீவு முதலாகிய பகுதிகள் எங்கும் தேடியலைந்து இறுதியாகக் கோலமலையில் அரங்கநாயகர் ஆலயத்தில் இந்திரன் முதலாகிய தேவர்களைக் கண்டார்கள். உடனே விரைந்து சென்று காலநேமியைக் கண்டு வணங்கி, செய்தியைச் சொன்னார்கள். காலநேமியானவன் மகிழ்ந்து அந்தத் தூதுவர்களுக்கு வேண்டிய பரிசுகளைக் கொடுத்து, அரசு வீற்றிருந்தான். ஆடை அணிகளால் அலங்கரித்து, மணப்பொருள்கள் மணம் வீச வீற்றிருந்தான். காமதேனு அவன் ஏவலின்படி வழங்கிக் கொண்டிருந்தது. சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி ஆகியவையும் அவ்வாறே வாரி வழங்கின. அரம்பையர் கவரி வீசினர். சந்திர வட்டக்குடை நிழற்ற இரத்தின சிங்காசனத்தில் வீற்றிருந்தான். அசுர ராசாக்கள் சூழ்ந்திருந்தனர்.

அரங்கநாயகரின் கருணையினால் நாரதமுனிவரானவர், காலநேமி வீற்றிருந்த இந்திர சபைக்கு வந்து சேர்ந்தார். நாரதரை வணங்கி வரவேற்ற காலநேமி ஆசனத்தில் இருத்தி உபசாரம் செய்தான். இதுவரை நாரதமுனிவர் தன் சபைக்கு வராததன் காரணத்தை அறிய விரும்பிய அவன் அக்காரணத்தைக் கூறுமாறு வேண்டினான்.

பிரமாவைக் குறித்து நீ செய்த தவத்தினால் இந்த இந்திர பதவியைப் பெற்றாய். ஆயினும் அகத்தியர் முதலான இருடியர் தாங்கும் சிவிகைச் செல்வத்தைப் பெற்றாயில்லை. மேலும் இந்திராணியையும் அடைந்து சுகித்தாயில்லை. நீ இந்திர செல்வம் பெற்றும், இவ் இரண்டு சுகத்தையும் பெறாத குறையை நினைத்து வருந்தியே நான் இங்குவரத் தாமதித்தேன்' என்று காரணத்தைக் கூறினார் நாரதமுனிவர். மேலும் இந்த இரண்டு சுகத்தைப் பற்றி நீ அறியவில்லை என்றாலும், உனது ஆசாரியராகிய சுக்கிராச்சாரியும் உனக்கு அறிவிக்கத் தவறிவிட்டார். இனியேனும் இவற்றைப் பெற முயற்சிசெய்க என்றும் கூறினார்.

பிரமதேவன் எனக்கு வரம் கொடுத்தது வஞ்சனையாகவே காணப்படுகிறது. எனது ஆசாரியரும் என்மீது அன்பில்லாதவராகக் காணப்படுகிறார். எனவே பரம்பரனே அருள்வடிவு கொண்டாற்போல என்முன் தோன்றிய தாங்களே இவற்றைப் பெறுவதற்கான வழிமுறைகளை அருள்புரிய வேண்டும் என்று வேண்டினான் காலநேமி.

காலநேமியை நோக்கி, அசுரேந்திரனே! நான்முகனாலும் துதிக்கப்படக் கூடிய தலம் காஞ்சிபுரம் ஆகும். வீர இலக்குமியைத் தன் தோள்களில் தாங்கிய **சிங்கவர்த்தனன்** என்னும் அசுரராசன் அந்நகரத்தின் அரசனாய் விளங்கினான். அவன் நாராயண

மூர்த்தியினாலே அழிந்துபட்டான் என்பார்கள். சிங்கவர்த்தனன் வதை செய்யப்பட்ட இடம் சிங்கபுரம் என்று பெயர்பெற்றது. அங்கு உள்ள மலை கோலாசலம் என்று பெயர் பெற்றது. அம்மலையில் எழுந்தருளியுள்ள அரங்க நாயகரின் அருளைப்பெற்று, அசுரர்களை அழிக்க முயற்சி செய்து வருகிறான் தேவேந்திரன். இந்திராணி தேவியும் இந்திரனின் வெற்றிக்காக அம்மலையிலிருந்து அரியதவம் செய்து வருகிறாள்' என்று கூறினார் நாரத முனிவர். அந்த இந்திரனை வென்று இந்திராணியை அடையும் வழியையும், இருடியர் சிவிகை தாங்கும் முறையையும் அருளிச் செய்யுமாறு காலநேமி மேலும் வேண்டினான். 'இந்திராணியை மணம்புரிந்த காரணத்தாலேயே இந்திரன் பெருஞ்செல்வபோகத்தை அடைந்தான். அவன் பெருமையடையக் காரணமாயிருந்த அவளை நீயடைவாயாயின் நீயும் துருவனுக்குச் சமமாக விளங்குவாய். அந்த இந்திரனைக் காட்டிலும் வலிமிகுந்தவன் அவன் மகன் சயந்தன். அவர்கள் இருவருக்கும் அருள்புரிந்து வருபவர் அந்த அரங்கநாயகர். நீ சிவபெருமானிடம் பெற்ற வரத்தினால் அவர்கள் மூவரையும் நலியச் செய்வாயானால் நீ விரும்பியவாறு இந்திராணியை அடைவதோடு இருடியர் சிவிகை தாங்கும் பேற்றினையும் பெறுவாய்' என்று கூறியருளினார் நாரதமுனிவர்.

**(இந்திரன் எங்குள்ளான் என அறியச் செய்தல்)**

486. **அந்தவே ளையினிற் காலநே மிப்பே**
**ரசுரன்றான் தூதரை விளித்தங்**
**கிந்திரன் முதலோ ரெவ்வழிப் போந்தார்**
**அவர்தமைக் கண்டிவண் மீண்டு**
**விந்தைய தான வவர்செய லறிந்து**
**விளம்பிடின் வெகுமதி யனந்தம்**
**நுந்தமக் களிப்ப னென்றலுந் தூதர்**
**நொடியினி றேடுத னுவன்றார்.**

எ-து. இந்தப் பிரகாரம் இந்திரமகாராசனானவன் சஞ்சீவி மலையிலிருக்கின்ற பூரணாவதாரமாய் அனந்த கல்யாணகுண விபூதி விக்கிரக விசேடரான அரங்க நாயகருடைய கிருபாகடாட்ச அருளைப்பெற்று மனோரஞ்சித சீலனாயிருக்கும்போது, இந்திரபுரியை அரசாட்சி செய்கின்ற காலநேமி யென்னும் அசுரேந்திரனானவன், வாயுவேக மனோ வேகமாய்ச் சஞ்சரித்துத் திரிகின்ற தூதரை வரவழைத்து இந்திரன், சயந்தன் முதலாகிய தேவர் கூட்டங்களெங்கே திரிகின்றார்களோ அதை நீங்கள் பரிசோதிக்கும் படியாய்த் தீவாந்திரங்களிலேயும், நவகண்டங்களிலேயும் அவர்கள் நிலையை அறிந்து கூறுவீராகில் உங்கட்கு வெகுமானம் அனந்தமாகச் செய்வேனென்ற ராச சூடாமணியை வணங்கி நொடிப்பொழுதில் தேடத் துவங்கினார்க ளென்றவாறு. (1)

போந்தார் - அகன்றார். இவண் - இவ்விடம், இங்கு. அனந்தம் - அளவற்ற. அளிப்பன் - அளிப்பேன் - தன்மை ஒருமை முற்று.

**Intiraṉ eṅkuḷḷāṉ eṉa aṟiyac ceytal**

*antavē ḷaiyiṉiṟ kālanē mippē*
*racuraṉṟāṉ tūtarai viḷittaṅ*
*kintiraṉ mutalō revvaḻip pōntār*
*avartamaik kaṇṭivaṉ mīṇṭu*
*vintaiya tāṉa vavarceya laṟintu*
*viḷampiṭiṉ vekumati yaṉantam*
*nuntamak kaḷippa ṉeṉṟalun tūtar*
*noṭiyiṉi ṟēṭuta ṉuvaṉṟār.*

## XXVIII. Nāratar Sees Kālanēmi Searching for Intiraṉ

That was when the Acura Kālanēmi
Commanded his ambassadors:
'If you discover the path
Taken by Intiraṉ and others,
Then return to tell me of their doings,
I shall give you countless gifts'.
Immediately the ambassadors set out
On the search.

(காலநேமியின் சாரணர் தேடித் திரிதல்)

487. வடவரை முதலாங் கிரிகளிற் சென்றா
ரங்கணுங் காண்கிலா வண்மைப்
புடைபெயர் சத்த சாகரத் துலகம்
புண்ணியத் தலமெலாம் புகுந்தங்
கிடமதிற் காணா மயங்கினர் பொன்னம்
பூமியு மிருளுல கத்துந்
திடமதா மண்டப் பித்திகை யதினுந்
தேடின ருலைந்தனர் திகைத்தார்.

எ-து. வடமேருகிரி முதலாகிய வட்டகுலாசல மெல்லாம் தேடினார்கள். அதன் பின்பு சத்தசாகர தீவாந்திரங்களெல்லாம் புகுந்து சஞ்சரித்தும் காணாதவர்களாய், அதன் பின்பு புண்ணியத் தலங்கள் முதலான இடங்களெல்லாம் சோதனை செய்தும் காணாதவர்களாய் மயங்கிப், பொன்னம் பூமியினும் போய்க் காணாமல், இருளுலகம் புகுந்து அண்டப் பித்திகை

முதலாகிய லோகங்க ளெல்லாம் தேடிக் காணாமல் நலிந்து வாடினார்கள் சுகசாரணர்க ளென்றவாறு. (2)

சத்தசாகரம் - எழுகடல். பொன்னம்பூமி - சுவர்க்கலோகம். அண்டப்பித்திகை - பூலோக எல்லைச் சுவர். இருளுலகம் - நரகலோகம்.

உரை - அட்டகுலாசலம் - எட்டு குலமலை. அவை - இமயம், ஏமகூடம், கந்தமாதனம், கயிலை, நிடதம், நீலமலை, மந்தரம், விந்தம் என்பன.

## Kālanēmiyiṉ cāraṇar tēṭit tirital

*vaṭavarai mutalāṅ kirikaḷiṟ ceṉṟā*
*raṅkaṇuṅ kāṇkilā vaṇmaip*
*puṭaipeyar catta cākarat tulakam*
*puṇṇiyat talamelām pukuntaṅ*
*kiṭamatiṟ kāṇā mayaṅkiṉar poṉṉam*
*pūmiyu miruḷula kattun*
*tiṭamatā maṇṭap pittikai yatiṉun*
*tētiṉa rulaintaṉar tikaittār.*

## Kālanēmi's Spies Search Around

They went to mountains like North Mēru
But found them not; the famed
Seven seas and places of pilgrimages
Were scoured but they found none.
Not in heavens, nor in hell,
Nor anywhere on the earth
Encircled by its own border walls.
They searched and grew despondent.

(கோலவரையில் காணுதல்)

488. நாவலந் தீவா முதலிய தீவில்
நடந்திளைத் தனரதன் பின்னர்
பூவலர் கோலா சலமதிற் புகுந்தப்
புண்ணியன் சன்னதி யதனின்

காவலன் றனையும் அமரர்கள் கடற்போற்
கலந்ததைக் கண்ணினாற் கண்டு
தாவரு மகிழ்வு கூர்ந்தபின் புகுந்தார்
தாழ்விலாத் துறக்கநா டகத்தின்.

எ-து. நாவலந்தீவு முதலாகிய நவ கண்டங்களும் தேடித் திரிந்தவர்களாய்ச் சோர்வு பட்டு, மனமருண்டு வருகின்ற காலையில், கோலாசலமென்கின்ற சொர்ண பர்வதத்தைக் கண்டதிலே எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ அரங்கநாதனுடைய சன்னிதானத்தில், இந்திரன் முதலாகிய தேவர்களுடனே மிகுந்த உல்லாச இன்பத்துடனே இருக்கக் கண்டு, களி கூர்ந்தவர்களாய்ச் சுகசாரணர்கள் ஒரு நொடிப் பொழுதில் துறக்க நாட்டினை அடைந்தார்கள் என்றவாறு. (3)

## Kōlavaraiyil kāṇutal

*nāvalan tīvā mutaliya tīvil*
*naṭantiḷait taṉaratan piṉṉar*
*pūvalar kōlā calamatir pukuntap*
*puṇṇiyaṉ caṉṉati yataṉiṉ*
*kāvalaṉ ṟaṉaiyum amararkaḷ kaṭaṟpōṟ*
*kalantataik kaṇṇiṉāṟ kaṇṭu*
*tāvaru makiḻvu kūrntapiṉ pukuntār*
*tāḻvilāt tuṟakkanā ṭakattiṉ.*

## Found in Kōla Hill

They grew tired walking through Islands
Including the Nāvalam Island.
Then they came to the Kōla Hill
Where the Lord has a temple.
Here they detected Intiraṉ and the gods
And were happy. Speedily
They went back to heaven.

(சாரணர் காலநேமியிடம் கூறுதல்)

489. வாயுவே கத்தாற் புகுந்தவர் கால
நேமியின் வண்மையா ரடியிற்
றாயினு மிகுந்த வன்பினான் வணங்கிச்
சாற்றுவார் தயாபர நிதியே

**சேயுய [1]ருலகி னெங்கணுந் துருவிக்**
**காண்கிலந் தேர்ந்தவர் புகழு**
**நாயக னரங்கக் கருணையங் கடல்வாழ்**
**கோலமால் வரையினண் ணினரால்.**

எ-து. அந்தச் சுகசாரணர்களான பேர்கள் வாயுவேகம் மனோ வேகமாய்க் காலநேமியின் சன்னிதானத்தைக் கண்டு களி கூர்ந்தவர்களாய், அந்த இந்திர சபையின் வீற்றிருக்காநின்ற அசுர சூடாமணியாகிய காலநேமியைக் கண்டு, மிகுந்த வணக்கத்துடனே அவன் பாதத்தில் தெண்டன் சமர்ப்பித்துச் சொல்லுகின்றார்கள். வாராய் இராசராசப் பிரபுடீக சத்திரபதியே! யாங்கள் தேவரீரிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு சத்த சாரகங்களும், திக்குத் தீவாந்திரங்களும், பொன்னுலகம், இருள்உலகம், அண்டப்பித்திகை முதலாகிய நவகண்டங்களும் தேடிக் காணாமல், இந்தப் பூமண்டலத்திலே மிகுந்த சிலாக்கியமாகிய தொண்டை மண்டலத்தில் கோலாசலமென்கின்ற சொர்ணபர்வதத்தில் எழுந்தருளிய கருணைக் கடல் போன்ற அரங்கநாயகரிடம் பரிபூரண இன்பத்தில் களித்தவர்களாய் இந்திரன், சயந்தன், ஸ்ரீதேவி முதலாகிய அமரர் கூட்டங்களுடனே வாசம் செய்வதைக்கண்டோம் என்றார்கள் என்றவாறு. (4)

காலநேமியினது வண்மை ஆர் அடியில் தாயினும் மிகுந்த அன்பினால் வணங்கினர். வண்மை - புகழ், அழகு.

**உரை** - செலவு - உத்தரவு.

பா.வே. - 1 ருலகமெங்கணுந்.

## Cāraṇar kālanēmiyiṭam kūṟutal

*vāyuvē kattāṟ pukuntavar kāla*
*nēmiyiṉ vaṇmaiyā raṭiyiṟ*
*ṟāyiṉu mikunta vaṉpiṉāṉ vaṇaṅkic*
*caṟṟuvār tayāpara nitiyē*
*cēyuya rulaki ṉeṅkaṇun turuvik*
*kāṇkilan tērntavar pukaḻu*
*nāyaka ṉaraṅkak karuṇaiyaṅ kaṭalvāḻ*
*kōlamāl varaiyiṉaṇ ṇiṉarāl.*

## The Spies to Kālanēmi

Entering with the speed of wind
They saluted the strong feet of Kālanēmi
With maternal affection and said:
"O compassionate one! We searched

All over the high heavens
And did not find them. But came to know
That by the grace of compassionate Araṅkan̲
They had found refuge in Kōla Hill.

(சாரணருக்குப் பரிசு வழங்குதல்)

490. என்றவர் கூற மகிழ்சிறந் திருந்தா
னிவர்தமக் கேற்றபட் டாடைக்
குன்றம்போ னிதியங் குறைவிலா தளித்துக்
கோலமா மணிமுடி தரித்த
மன்றலங் [1]கமழும் பஞ்சதா ருவினின்
மலர்மணங் [1]கமழ்ந்தமா ருதந்தான்
வென்றியார் முகத்தின் வீசிடத் தேனு
வேண்டினர் வேண்டியாங் குதவ.

எ-து. இந்தப் பிரகாரம் சுகசாரணர்கள் கூறக்கேட்டு, மனங் களிகூர்ந்தவனாய் அவர்கட்கு வெகுமதியாக வேண்டிய பட்டுப் பட்டாடைகளும், மலை போன்ற திரவியங்களும் கொடுத்து, அந்த அசுர சூடாமணியானவன் சிரசிலே இரத்தின கிரீடம், மயூர குண்டலம், புசகீர்த்தி முதலாகிய சர்வாபரண பூசித அலங்கார ரூபலாவண்ணியம் பிரகாசிக்கத்தக்கதாய், திவ்விய பரிமளம் கமழா நின்ற சந்தனம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பக விருட்சமென்னும் பஞ்சதாருவினுடைய மலர் மணங்களைத் தென்றல் கவர்ந்து வெற்றியாகிய அசுரபிரான் முகத்தில் வீசி நிற்கவும், காமதேனுவானது அவர்கள் எதை விரும்பிடினும், அதை அரசன் ஏவற்படி வழங்கிக் கொண்டிருந்தது அந்த ராசசபையினிடத்தில் என்றவாறு. (5)

மாருதம் - காற்று, தென்றல். தேனு - காமதேனு.

பா.வே. - 1. கவர்ந்து.

## Cāraṇarukkup paricu val̲aṅkutal

*en̲ravar kūr̲a makil̲ciran̲ tiruntā*
*n̲ivartamak kēr̲rapaṭ ṭāṭaik*
*kun̲rampō n̲itiyaṅ kur̲aivilā tal̲ittuk*
*kōlamā maṇimuṭi taritta*
*man̲r̲alaṅ kamal̲um pañcatā ruvin̲in̲*
*malarmaṇaṅ kamal̲ntamā rutantān̲*
*ven̲r̲iyār mukattin̲ vīciṭat tēn̲u*
*vēṇṭin̲ar vēṇṭiyāṅ kutava.*

## Gifts for the Spies

Kālanēmi was delighted with their words.
He gave them hillocks of silks.
As he heled court wearing his crown
Scented breeze blew from the five trees.
The heavenly cow gifted all their desires.

(காலநேமி அரசு வீற்றிருத்தல்)

491. இருநிதிக் கடைக்க ணேவலி னிற்ப
மணிநவ மணியினை யியக்க
வரமன வரம்பைக் கூட்டங்கள் கவரிக்
காலினை முகத்தினின் [1]வீசத்
திருமதிக் குடைக ணிழற்றிட ஆல
வட்டங்க டிசைதொறு மெடுப்பப்
பருமணிச் சிங்க பீடமீ திருந்தா
னரக்கர்தம் பார்த்திபர் சூழ.

எ-து. சங்கநிதி, பதுமநிதி என்கின்ற இரண்டு வகையாயுள்ள நிதிகளானவை அசுரன் கடைக்கண் ஏவற்படி வெள்ளிரசிதத்தைச் சங்கநிதி வழங்கவும், சொர்ணத்தைப் பதுமநிதி யளிக்கவும், சிந்தாமணி நவரத்தினத்தைக் கொடுக்கவும், அசுரராச கூட்டங்கள் சித்தமானது களித்து மோகப்படுத்துகின்ற அரம்பையர்கள் இருபக்கத்தினும் கவரித்தொகைகளை ஆயிரமாயிரமாகத் திருமுக மண்டலத்திரட்டவும், மங்களாகரமாய்ச் சொர்ணக்காம் பினையுடைய சந்திர வட்டக்குடைகள் நிழற்றவும், பருமணி இரத்தினத்தானிழைத்த சிங்காதனத்தின்மேல் எழுந்தருளிய காலநேமியாகிய இராசகண்டீரவனை அசுர ராசாக்கள் சூழ்ந்திருந்தார்கள் எனறவாறு. (6)

மணி - சிந்தாமணி

உரை - ரசிதம - வெள்ளி, ஒளிமிக்க வெள்ளி என்க.

பா.வே. - 1 அசைப்ப.

## Kālanēmi aracu vīṟṟiruttal

*irunitik kaṭaikka ṇēvali ṉiṟpa*
*maṇinava maṇiyiṉai yiyakka*
*varamaṉa varampaik kūṭṭaṅkaḷ kavarik*
*kāliṉai mukattiṉiṉ vīcat*

*tirumatik kuṭaika ṇilaṟṟiṭa āla*
*vaṭṭaṅka ṭicaitoṟu meṭuppap*
*parumaṇic ciṅka piṭamī tiruntā*
*ṉarakkartam pārttipar cūḻa.*

## Kālanēmi as King

The two riches[1] stood ready to do
His bidding and produced the nine gems;
Heavenly damsels waved the fans
For his face; the umbrella
Was raised; with fans moving
In all directions, the king of Acuras
Sat on the gem-studded lion-throne,
Surrounded by kings.

(நாரதர் வருகை)

492. அவ்வேலைப் பரமபத மணுகியநா
ரதமுனிவ னறிவா னந்தச்
செவ்வேலை யானதிரு மாலருளா
னிந்திரனார் சிறந்த லோகத்
தவ்வாத பேரருளாற் சார்ந்திடவே
மதித்தனனாற் றழைத்த வேதத்
தொவ்வாத பேரசுரர் தங்கிடுமோ
லக்கமிடை யுறுவ தானான்.

எ-து. அப்படிக் காலநேமியென்னும் அசுரபிரான் வீற்றிருக்கின்ற கொலுச்சபைக்கு எழுந்தருளத்தக்கதாய்ப் பரமபதமென்னும் திருநாட்டில் வாசம் செய்கின்ற நாரத முனிவரானவர், அறிவே சுகசொரூபமாகிய அருட்கடலான நாராயண மூர்த்தியினுடைய அனுக்கிரகத்தால், இந்திர மகாராசனுடைய சிறப்பாகிய சபையினிடத்திலே வீற்றிருக்காநின்ற அசுரர் கூட்டத்தி னோலக்கமாகிய வேதவொழுங்கில், மறுதலைப்படுகின்ற அரசனை நோக்கி வருகின்றார் ரிஷிகளுக்கெல்லாம் அதிசிரேட்டராகிய நாரத மகாமுனிவர் என்றவாறு. (7)

வேலை - சமயம், பொழுது. செவ்வேலை - சிறந்த கடல், அருட்கடல். அவ்வாத பேரருளால் - முன்பின் விரும்பாது - இறையருளால். ஒவ்வாத - பொருந்தாத ஓலக்கம் - அரசவை.

---

1. Caṅkaniti, Patumaniti

## Nāratar varukai

*avvēlaip paramapata maṉukiyanā*
*ratamuṉiva ṉarivā ṉantac*
*cevvēlai yāṉatiru mālaruḷā*
*ṉintiraṉār ciṟanta lōkat*
*tavvāta pēraruḷāṟ cārntiṭavē*
*matittaṉaṉāṟ ṟaḷaitta vētat*
*tovvāta pēracurar taṅkiṭumō*
*lakkamiṭai yuṟuva tāṉāṉ.*

## Nāratar's Arrival

Nārata who lives in the Supreme's abode
Came towards the heavens of Intiraṉ
Where now sat the king by the grace
Of Nārāyaṇa; this king ruled
Against the commands of the Vēdas.
He entered the royal court.

(நாரதரைக் காலநேமி வரவேற்றல்)

493. சார்ந்தமறை நாரதனைத் தாழ்தடக்கை
யசுரகுலச் சழக்கன் கண்டு
வார்ந்தமணி யரியணையை யிழிந்துசென்றங்
கடிபணிந்தா னவனை நோக்கிச்
சேர்ந்தவவ னசுரனுக்குச் சுபகரமங்
கலமொழிந்தான் செயங்கொண் மேலோய்ப்
பேர்ந்திலைநீ நெடுங்கால நமதரசு
பொருந்திடத்திற் புகறி யென்றான்.

எ-து. அப்படி எழுந்தருளி வருகின்ற நாரத முனிவரைக்கண்டு, கால நேமியானவன் இரத்தின சிம்மாசனத்தை விட்டு எழுந்து, எதிர் கொண்டவருடைய திவ்விய திருவடிகளிலே தீர்க்க தெண்டன் சமர்ப்பித்தான். அந்த அசுரனுக்குச் சுபகர மங்கல மாயிருக்கக் கடவதென்று ஆசீர்வதித்தருளிய மகாரிஷியைச் சிம்மாசனத்தின் எழுந்தருளச் செய்து அர்க்கிய, பாத்திய முதலாகிய சோடசவுபசாரங்களும் செய்து, விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் மகானுபாவரே! தேவரீர் இங்கு எழுந்தருள யான் என்ன பாக்கியம் செய்தேன்! ஆகிலும் நெடுங்காலமெல்லா மிங்கு வாராமலிருந்த காரணக்குறியை அறிவிக்க வேண்டுமென்றான் அரசன் என்றவாறு. (8)

சழக்கன் - கொடியவன், அரக்கனாகிய காலநேமி. இழிந்து - இறங்கி. பேர்ந்திலை - போந்ததில்லை, புகுந்ததில்லை, வந்ததில்லை. புகறி - புகல்தி - புகல்வாயாக, சொல்லுக.

## Nārataraik Kālanēmi varavēṟṟal

*cārntamaṟai nāratanait tāḻtaṭakkai*
*yacurakulac caḻakkaṉ kaṇṭu*
*vārntamaṇi yariyaṇaiyai yiḻintuceṉṟaṅ*
*kaṭipaṇintā ṉavaṉai nōkkic*
*cērntavava ṉacuraṉukkuc cupakaramaṅ*
*kalamoḻintāṉ ceyaṅkoṉ mēlōyp*
*pērntilainī neṭuṅkāla namataracu*
*poruntiṭattiṟ pukaṟi yeṉṟāṉ.*

## Kālanēmi Welcomes Nāratar

The Acura leader with long, strong
Shoulders saw Nāratar who is ever
Associated with scriptures.
He got down from the jewelled throne
And saluted his feet. Nāratar
Blesed the Acura. "O gracious sage!
You have not come here for a long time,
Where I have been ruling. Do tell me why."

(காலநேமிக்கு நாரதர் கூறுதல்)

494. இவ்வண்ண மசுரகுல மணிதீப
னியம்புதலு மியலார் செஞ்சொற்
செவ்விபெறு நாரதமா முனியறைவா
னிந்திரன்றான் சிறந்த யாக
மிவ்வுலகி னூறியற்றி யமரர்தமக்
கிறையவனா யிசைவு பெற்றா
னவ்விகண்போ லொளிபரப்பு நாமகடன்
காதலனை நயந்த நீயும்.

எ-து. இவ்விதமாக அசுரர் குலத்துக்கு இரத்தின தீபம் போன்றவன் கூறக்கேட்ட இயல்பால் நிறைந்த அமுர்த வார்த்தையையுடைய முனிசிரேட்டர் அருளிச் செய்கின்றார். இந்திரன் இந்த உலகத்தின்கண் ணூறாகிய பரிமேத யாகத்தை முடித்த காமிய பலத்தால்

தேவலோகத்துக்கு அரசபிரானானா னதுவன்றியும், மான்கண்போ லொளிபரப்பாநின்ற கண்ணையுடைய நாவின் மகளை விரும்புகின்ற பிரமாவைக் குறித்துச் செய்கின்ற தவத்தினாலே நீயும் இந்த இந்திர உலகத்துக்கு அரசனானாயாகிலும், உன்னைக் குறித்துக் கூறுகின்ற வசனமொன்றுண்டாம் என்று அனுக்கிரகித்தார் முனிபுங்கர் என்றவாறு. (9)

மணிதீபன் - இரத்தினமணிபோலும் ஒளிபொருந்தியவன். இயலார் செஞ்சொல் - இயல்பு நிறைந்த இனிய சொற்கள். நவ்வி - இளமான். நாமகடன் - நாமகள்தன்.

உரை - பரிமேதயாகம் - அசுவமேதயாகம். காமியபலம் - விரும்பியபலன்.

## Kālanēmikku Nāratar kūṟutal

*ivvaṉṉa macurakula maṇitīpa*
*ṉiyamputalu miyalār ceñcoṟ*
*cevvipeṟu nāratamā muṉiyaṟaivā*
*ṉintiraṉṟāṉ ciṟanta yāka*
*mivvulaki ṉūṟiyaṟṟi yamarartamak*
*kiṟaiyavaṉā yicaivu peṟṟā*
*ṉavvikaṉpō loḷiparappu nāmakaṭaṉ*
*kātalaṉai nayanta nīyum.*

## Nārata to Kālanēmi

As the jewelled lamp of the Acura clan
Spoke thus, the sage Nāratar who by nature
Had nectarean speech said:
"Intiraṉ became the king of heavens
By performing the great sacrifice.
As for you who approached Piramaṉ,
The consort of the Goddess of speech,
Things are being said.

(இழந்தது சிவிகைச் செல்வம்)

495. செய்ததவப் பயத்தாலே யிந்திரனாய்ச்
சிறந்தனைநீ செயமார் சத்தப்
பொய்மையிலாத் தவத்தோர்கள் சிவிகையினைத்
[1]தாங்கினர்க ளஃதைப் புந்தி
நையும்வகை நினைந்துருகி நாடினமியா
மதுவன்றி நளினச் செல்வித்

தையலரிற் சிறந்தமோ கினிஇரதி
தானென்னுந் தழைத்த மெய்யாள்

எ-து. வாராய் இராசனே! நீ செய்த தவப் பிரயோசனத்தினாலே இந்திரனைப் போல் இவ்வுலகில் சிறந்திருந்தாய். ஆனாலும் இரண்டு குறைவாகிய போக பாக்கியத்தை நீ மதிக்காமல் போனாய்; ஆகினும் நான் அறிவிக்கின்றேன். அது யாதென்றால், பொய்மையில்லாத நிறைந்த தவத்தினையுடைய அகத்தியர் முதலாகிய இருடிகள் தாங்குகின்ற சிவிகைச் செல்வத்தை முதலிலிழந்தாய். அதை நோக்கி ஆலோசிக்குந் தோறும் உருகியுருகி என்னுள்ளமானது கொதிக்காநின்றது. அதுவன்றியும், கன்னியர்களுக்குள்ளே திவ்விய, கோமள, சவுந்தரிய, சுக சொரூபமாகிய இலக்குமி தேவியும், அழகில் பூஷணமாயுள்ள மோகினி மாதும் இரதியென்னும் பெண் அமுதமும் திரண்டு அவதரித்தால் எத்தன்மையோ அத்தன்மையனவாகிய ஒரு ஸ்திரீயானவள் உண்டென்று அனுக்கிரகித்தார் என்றவாறு. (10)

புந்தி - அறிவு. நைதல் - வருந்துதல். நளினம் - தாமரை.

பா.வே. - 1. தாங்கிலர்கள்.

## Iḻantatu civikaic celvam

*ceytatavap payattālē yintiraṉāyc*
*ciṟantaṉaini ceyamār cattap*
*poymaiyilāt tavattōrkaḷ civikaiyiṉait*
*tāṅkiṉarka ḷaḵtaip punti*
*naiyumvakai niṉainturuki nāṭiṉamiyā*
*matuvaṉṟi naḷiṉac celvit*
*taiyalariṟ ciṟantamō kiṉiirati*
*tāṉeṉṉun taḻaitta meyyāḷ.*

## Loss of Riches

"By your austerities you have gained
The position of Intiraṉ.
But his palanquin was borne by sages
Who were blameless; this makes me
Quite disappointed. Besides,
There is a damsel who is like Lakṣmi,
And appears like the heavenly Mōkiṉi and Rati.

(மற்றொரு செல்வம் இந்திராணி)

496. காரளகப் பிறைநுதலாள் கவின்சிலையி
னொளிபுருவக் கருங்கட் செவ்வாய்
மூரலிள நிலவொழுகக் கபோலமெனுங்
கண்ணாடி முளரி காட்ட
வேரலிளந் தோள்காட்டச் சக்கரவா
கத்தைவியன் முலைகள் காட்டச்
சீரரம்பைத் தொடைகாட்டுங் கமலபதச்
சசிநலத்தைச் சிறக்கத் துய்க்காய்.

எ-து அந்த ஸ்திரீயினுடைய சவுந்தரியமானது கருத்த மேகத்தைப் போன்ற அளக பாரத்தையும், பிறையைப் போன்ற நுதலையும், எழிலாகிய வில்லைப் போன்ற புருவத்தையும், கரிய நீலோற்பலம் போன்ற கண்ணினையும், செவ்வாம்பல் போன்ற சிறந்த வாயினையும் உடைய அவளுடைய மூரலாகிய தநதபந்தியானவை இளநிலவின் பிரகாசத்தை ஒழுகவும், கபோலமென்கின்ற இரு கண்ணாடியினை முகமாகிய தாமரையானது காட்டவும், பச்சை மூங்கிலினை இரண்டாகிய தோள்கள் காட்டவும், சக்கரவாகப் பட்சியினைப் பருவமமைந்த முலைகள் காட்டவும், சிறந்த அரம்பையாகிய செவ்வாழையைத் தொடைகள் காட்டவும், கமலம் போன்ற பாதார விந்தத்தையுடையவளாகிய இந்திராணியினது சுகரஞ்சித லீலையாகிய சரச சல்லாபத்தினைச் சிறப்பாய் அனுபவித்தவனுமல்லை. ஆகையால் நீ இந்திர செல்வம் பெற்று இவ்விரண்டு பிரயோசனமும் அனுபவிக்க வரபாலனம் பெறாத குறைவை நெடுங்காலமாய் யான் ஆலோசித்திரங்குகின்றேன் என்றார் நாரதமுனிவர் என்றவாறு. (11)

அளகம் - கூந்தல் சிலை - வில மூரல் - பல், கபோலம் - கன்னம், வேரல் - மூங்கில். சக்கரவாகம் - ஒரு பறவை; இரவில் இணைபிரிந்து வருந்தும் பறவை அரமபை - வாழை. சசி - இந்திராணி

## Maṟṟoru celvam Intirāṇi

*kāraḷakap piṟainutalāḷ kaviṉcilaiyi*
*ṉoḷipuruvak karuṅkaṭ cevvāy*
*mūraliḷa nilavoḻukak kapōlameṉuṅ*
*kaṇṇāṭi muḷari kāṭṭa*
*vēraliḷan tōḷkāṭṭac cakkaravā*
*kattaiviyaṉ mulaikaḷ kāṭṭac*
*cīrarampait toṭaikāṭṭuṅ kamalapatac*
*cacinalattaic ciṟakkat tuykkāy.*

## On Intirāṇi

With tresses like rain-bearing clouds,
Her forhead is like the crescent;
Her eye-lashes are beautiful bows;
With dark eyes, her red lips
Contain teeth that shower moonlight.
Her lotus-face has twin cheeks
Like mirrors; her shoulders
Appear like tender bamboos;
Her lovely breasts are verily
A pair of cakkaravāka birds.

**(இந்தச் செல்வங்களைச் சுக்கிராச்சாரியார் குறிப்பிடவில்லை)**

497. **எனமனதி னினைந்துருகி நின்சபையின்**
**வாராது யேந்த லேயா**
**னனையதனை நினைந்திருந்தே னானாலும்**
**புகரினையா னவம தித்துச்**
**சினமதனைப் புரிந்தனன்பின் சீரிதா**
**நின்றனக்கே செப்பா நின்றேன்**
**கனமதனை மதித்துணர்ந்த நின்றனைப்போ**
**லிந்திரனைக் காண்ப லோயான்.**

எ-து. இந்த இரண்டு காரணங்களையும் மனதினில் ஆலோசிக்குந்தோறும் உருகிக் கரைந்த காரணத்தால், உனது சபையினிடத்து யான் வராமல் போன காலம் அனேகமாய்ப் போச்சுது. என்றாலும் நினதாசாரியனாகிய சுக்கிராசாரியை அவமரியாதையா யெண்ணினேன் அது ஏது காரணத்தினாலே என்றால், முனிவர் தாங்கும் கீர்த்தியும், இந்திராணி போக சரசசல்லாபமும் நீ அறியாதிருந்தாலும், உமக்கறிவியாதிருந்த இழிவைக் குறித்து உனக்கறிவிக்க வந்தேன். அகந்தையாகிய பிரயோசனத்தை மதித்தறிகின்ற உன்னைக் கண்ட கண்களாலே அந்த இந்திரனைக் காண எவ்வளவு மென்கண்கள் குறியாதென்றார் நாரத மகாமுனிவர் என்றவாறு. (12)

ஏந்தலே - அண்மைவிளி; ஏந்தல் - அரசன். புகர் - சுக்கிரன் சீரிது - சிறப்பானது.

## Intac celvaṅkaḷaic Cukkirāccāriyār kuṟippiṭavillai

*eṉamaṉati niṉainturuki niṉcapaiyiṉ*
*vārātu ỵēnta lēyā*
*ṉaṉaiyataṉai niṉaintiruntē ṉāṉālum*
*pukariṉaiyā ṉavama tittuc*
*ciṉamataṉaip purintaṉaṉpiṉ cirītā*
*niṉṟaṉakkē ceppā niṉṟēṉ*
*kaṉamataṉai matittuṇarnta niṉṟaṉaippō*
*lintiraṉaik kāṇpa lōyāṉ.*

## Cukkirāccāriyār's Failure to Mention Them

"I grew faint thinking of these
And so avoided coming to your court;
I thought ill of your preceptor
And grew angry and now came
To tell you of these riches.
Having seen you who care for respect,
I shall not look on Intiraṉ anymore.

(இந்தச் செல்வங்களைப் பெறுக என்று கூறுதல்)

498. மனனெகிழ்ந்து மதிமருண்டு முகம்புலர்ந்த
வாறதனால் வந்தே னின்றன்
சினமதனைத் துறந்தொழிந்து சேர்குவாய்
முனிவர்புணர் சிறப்பை யென்று
கனமகலா நாரதமா முனியிசைப்பக்
கமலமலர் கடவு ளீந்த
வினமதனை யான்காணின் வஞ்சனையா
மின்பமாந் தந்தை தாய்நீ.

எ-து இந்தக் காரணங்களெல்லாம் குறித்தாலோசிக்குந் தோறும், என் மனமானது இளகி உருகியதுமன்றி புத்தியானது ஸ்திரமில்லாமல் மருட்கையை அடைந்து, முகமானது வாட்டத்தையுற்ற வரலாற்று முறைமையினாலே நினது சபையிலே வந்தேன் ஆகையால் என் வார்த்தையை மதிததுணாந்துனது தாமதத்தை நீங்கினவனாய்ச் சாந்த சித்தத்தினால் அறிந்து சத்த இருடியர் உனது சிவிகையினைத் தாங்கும் முறைமையினையும், மேற்கூறுகின்ற

இந்திராணியினது சரசசல்லாப போக வைபவத்தினையும் நீ பெறக் கருதினோம். அவைகட்கு நீ முயற்சி செய்து இவ்விரண்டு செல்வத்தையும் பெறக் கடவையென்று நாரத முனிவரானவர் சொல்லக்கேட்ட அசுரேந்திரன் விண்ணப்பம் செய்கின்றான். கமலமலர் மேலவனாகிய பிரமதேவரானவர் என்னைக் குறித்துக் கொடுத்த வரபாலனத்தை யான் நோக்குந்தோறும் வஞ்சனையாய் முடிந்தது. இந்த இன்பத்தை வருவிக்கின்ற தாயும் தந்தையும் நீரே என்றான் காலநேமி என்னும் அசுரபிரான் என்றவாறு. (13)

மனன் - நெகிழ்ந்து - மனம் என்பதன் ஈறு னகரப் போலியாயிற்று. மதி - அறிவு. புலர்தல் - வாடுதல்.

## Intac celvaṅkaḷaic peṟuka eṉṟu kūṟutal

*maṉaṉekiḻntu matimaruṇṭu mukampularnta*
*vāṟataṉāl vantē niṉṟaṉ*
*ciṉamataṉait tuṟantoḻintu cērkuvāy*
*muṉivarpuṇar ciṟappai yeṉṟu*
*kaṉamakalā nāratamā muṉiyicaippak*
*kamalamalar kaṭavu ḻinta*
*viṉamataṉai yāṉkāṇiṉ vañcaṉaiyā*
*miṉpamāṉ tantai tāynī.*

## Gain These Riches

"With heart a-melting, growing faint
In mind, and face all wilting, I have come.
Give up your angry ways and gain
Closeness to the sages", said Nāratar.
"Remembering the boons given
By the lotus-faced Piramaṉ,
I find that I have been cheated.
You are my father, my mother.

(காலநேமி, நாரதரைப் போற்றுதல்)

499. குருவைநோக் கிடினவரோ வறமிகவும்
கொடியர்குரு நீரே யானீ
ரருவுருவாம் பரம்பரநீ யாகையா
னின்கழற்கே யன்பு பூண்டேன்

திருவுருவத் தாற்சிறந்த நின்மொழியே
யென்றனுக்குச் செயங்கொ டுப்பக்
கருதியுன்றன் வாசகமாங் கருணைசா
கரம்படிந்தேன் கடையே னென்றான்.

எ-து வாரீர் மகானுபாவரே! ஆசாரியராகிய சுக்கிராசாரியருடைய கருத்தை ஆலோசிக்குமிடத்தில், அன்பில்லாது அடுத்துப் பகை செய்கின்ற கொடியவராய் இருக்கின்றார். இவையெல்லாம் மதித்தறியும் இடத்தில் இருமையினும் இதம் செய்கின்ற அருளாசாரியர் நீரே நீர் அருவாயும் உருவாயும் அருவுருவாயும் இருக்கின்ற பரம்பரனே அருள் வடிவு கொண்டவர் நீராகையால் யான், உமது பாத பதுமங்களுக்கே அன்பு செய்கின்றேன். திருவுருவத்தினால் இலக்கணம் அமைந்த நினது திருவாய்மொழியாகிய அமுத ரசமே எனக்குச் செயங்களை யெல்லாம் எக்காலத்திலும் வருவிக்கும் என்பதை அறிந்து அதை நினைத்துத் துணிந்தறிகின்ற யானுனது வாய்மொழியாகிய அமுத சாகரத்தில் மூழ்கிக் களிப்புற்றேன் இழிவாகிய அசுரப்பிறவியினை யுடையவன், என்றவரைக் குறித்து விண்ணப்பம் செய்தான் காலநேமி என்றவாறு. (14)

குரு - அசுரகுரு - சுக்கிராச்சாரியாா அற - அடியோடு, மிகவும். பரம்பரன் - மேலானவன், கடவுள் கழல - திருவடி

## Kālanēmi, Nārataraip pōṟṟutal

*kuruvamōk kiṭiṉavarō vaṟamikavum*
*koṭiyarkuru nīrē yāṉī*
*raruvuruvām paramparanī yākaiyā*
*ṉiṉkaḷaṟkē yaṉpu pūṇṭēṉ*
*tiruvuruvat tāṟciṟanta niṉmoḻiyē*
*yeṉṟaṉukkuc ceyaṅko ṭuppak*
*karutiyuṉṟaṉ vācakamāṅ karuṇaicā*
*karampaṭintēṉ kaṭaiyē ṉeṉṟāṉ.*

## Kālanēmi Hails Nāratar

"Speaking of my preceptor, Cukkirā,
I find him evil. You are my teacher now.
You are the formless Supreme.
I have streaming devotion for your feet.
Your words that are so well pronounced
Will give me victory: such my hope.
Though born as a lowly Acura,
I am immersed in your kindness."

### (நீ மேலும் புகழ் பெறுவாய் என்று நாரதர் கூறுதல்)

500. இந்தவண்ணஞ் சொன்னஅசு ரேசனையே
மிகவிரும்பி யிசைப்பக் கேண்மோ
கந்தமல ரவன்பழிச்சுங் காஞ்சிநகர்க்
காவலனாய்க் கவின்பெற் றோங்கும்
விந்தைபுயந் தணவாத சிங்கவர்த்த
வினோதனெனு மேலோன் முன்னாள்
செந்திருவைத் தணவாத மேலவனால்
கிலமானான் சிறந்தோ னென்றும்.

எ-து. வாராய் அசுரனே! இவ்விதமாய்ச் சொல்லுகின்ற திவ்விய பரிமளங்களைக் கமழப்பட்ட, தாமரைப் பீடத்தினிருக்காநின்ற நான்முகனும் வந்தித்துத் தோத்திரம் செய்கின்ற சத்திய விரதமென்னும் மேலாகிய காஞ்சி மண்டலத்துக்கரசனாய், அழகு சிறந்தோங்குகின்ற வீரலட்சுமியைப் புசத்தை விட்டு நீங்காமல் தரிக்கின்ற சிங்கவர்த்த வினோதனென்னும் அசுரராச கண்டீரவனானவன், முற்காலத்தில் அழகிய இலக்குமி தேவியை மார்பினிடத்தில் விட்டு நீங்காத சீதரனாலே யதப்பட்டுப் போனான் என்று சொல்வார்கள் பெரியோர்கள் என்று அருளிச் செய்தார் நாரத முனிவர் என்றவாறு. (15)

தணவாத - நீங்காத, கிலம் - அழிவு, சிறுமை.

**உரை** - கண்டீரவம் - சிங்கம். சீதரன் - சீ - இலக்குமி. தரன் - தரித்தவன், இலக்குமியை மார்பில் தரித்த திருமால்.

### Nī mēlum pukaḻ peṟuvāy eṉṟu Nāratar kūṟutal

*intavaṇṇañ coṉṉaacu rēcaṉaiyē*
*mikavirumpi yicaippak kēṇmō*
*kantamala ravaṉpaḻiccuṅ kāñcinakark*
*kāvalaṉāyk kaviṉpeṟ ṟōṅkum*
*vintaipuyan taṇavāta ciṅkavartta*
*viṉōtaṉeṉu mēlōṉ muṉṉāḷ*
*centiruvait taṇavāta mēlavaṉāl*
*kilamāṉāṉ ciṟantō ṉeṉṟum.*

### Nārata Blesses Kālanēmi

To the king of Acuras who spoke thus
Nāratar replied: "Listen! In Kāñci
Worshipped by the lotus-seated Piramaṉ

There is the strong-shouldered Ciṅkavarttaṉaṉ
Ruling as king. They say he was defeated
By Nārāyaṇaṉ in olden days.

(இந்திரனின் நோக்கம்)

501. சிங்கனையே வதைத்தருளுங் காரணத்தாற்
சிங்கபுரச் செல்வ மோங்கு
மந்தநகர் வைபவமாங் கோலமால்
வரையென்ன வணுகா நிற்கு
மிந்தமலை தனையடுத்தா னின்றனையு
மெளிதாக விடித்து யீசல்
பந்தமென அசுரர்களைப் படுத்திடவே
இந்திரன்றான் படரா நின்றான்.

எ-து சிங்கனெனகின்ற அசுர புவன சக்கிரேசுவரனை வதை செய்கின்ற காரணத்தினாலே. சிங்கபுரமென்கின்ற நாமதேயத்தையுடைய அந்த நகரமானது விபவமாய்க் கோலாசலபர்வதமெனகின்ற நாமதேயத்தினைப் பெற்று, இவ்வுலகத்தில் சிறந்தோங்கி நிற்கிறது. அம்மலையிலிருக்கின்ற அரங்கநாயகனது அருளைக் குறித்தடுத்து எளியவனைப்போலி ருந்து வலியவனாயிருக்கின்றான் இந்திரன். புவனசக்கிரேசுவரனே! உன்னையும் உனது அசுர சேனைகளையும் புற்றிலெழுகின்ற ஈசலினது கூட்டங்களை வேடர்கள் பிடிததுக்கொண்டால் எத்தன்மைத்தோ அத்தன்மையாய்ப் புலி பின்வாங்கி முன்பாய்ந்து மான் கூடடஙகளைத் தாக்குமாறுபோல, அசுரர்க் கூட்டமாகிய களைகளையெல்லாம் பிடுங்கித் தேவர் கூட்டமாகிய பயிரை வளர்த்து, முயற்சி செய்ய நினைத்திருக்கின்றான் அவ் இந்திரன். அமமுயற்சியும் கைகூடுமென்றார் நாரத மகாமுனிவர் என்றவாறு. (16)

அடுததல - அடைதல், சேர்தல் பந்தம - கூட்டம, படுததல் - துன்பப்படுததுதல
படாதல - நடததல

## Intiraṉiṉ nōkkam

*ciṅkaṉaiyē vataittaruḷuṅ kāraṇattāṟ*
*ciṅkapurac celva mōṅku*
*mantanakar vaipavamāṅ kōlamāl*
*varaiyeṉṉa vaṇukā niṟku*
*mintamalai taṉaiyaṭuttā ṉiṉṟaṉaiyu*
*meḷitāka viṭittu yīcal*
*pantameṉa acurarkaḷaip paṭuttiṭavē*
*intiraṉṟāṉ paṭarā niṉṟāṉ.*

## Intiraṉ's Aim

Due to the destruction of Ciṅkaṉ
The rich city of Ciṅkapuram
Came to be known as Kōla Hill.
Intiraṉ has reached this mountain
And worshipped Nārāyaṇaṉ there.
He has been relieved of his weakness
And is now ready to destroy the Acuras.

(கோலவரையில் இலக்குமி தவம்)

502. இன்னமொரு காரணந்தா னின்றனக்கே
யெளிதாக வியம்பக் கேட்டி
யன்னநடைச் சசிதேவி யம்மலைமே
லருந்தவந்தா னயரா நின்றாள்
பின்னையருந் தவஞ்செய்தவ் வரங்கநா
யகனுரத்திற் பெற்ற பேற்றை
யன்னவளுந் தன்கணவ னசுரர்களைக்
களைந்திடவே யடைந்து நின்றாள்.

எ-து. வாராய் அரசனே! இன்னமொரு காரண வினோதத்தைக் குறித்துச் சொல்லுகின்றேன். இந்திராணி தேவியானவள் அரிய தவத்தைச் சஞ்சீவி கிரியிற் செய்து, இலக்குமிதேவி அரங்கநாயகன் மார்பில் வீற்றிருக்கப்பெற்றதுபோலத் தனது நாயகனானவன் அசுரராகிய களைகளைக் களைந்து, தேவராகிய பயிரை வளர்க்கும் பொருட்டாய் அந்தக் கிரியிலே வீற்றிருந்து அரிய தவத்தைச் செய்கின்றாள் என்றவாறு. (17)

கேட்டி - கேள்தி - கேட்பாயாக. பின்னை - இலக்குமி உரம் - மார்பு. களைதல் - அழித்தல்.

## Kōlavaraiyil ilakkumi tavam

*iṉṉamoru kāraṇantā ṉiṉṟaṉakkē*
*yeḷitāka viyampak kēṭṭi*
*yaṉṉanaṭaic cacitēvi yammalaimē*
*laruntavantā ṉayarā niṉṟāḷ*
*piṉṉaiyarun tavañceytav varaṅkanā*
*yakaṉurattiṟ peṟṟa pēṟṟai*
*yaṉṉavaḷun taṉkaṇava ṉacurarkaḷaik*
*kaḷaintiṭavē yaṭaintu niṉṟāḷ.*

## Lakṣmi's Austerities on the Kōla Hill

Another reason also I have to make clear.
Listen. The swan-gaited Caci tēvi
Performed austerities on that Kōla Hill.
Like Lakṣmi who had engaged in tapasya
To gain the chest of Nārāyaṇaṉ,
She wants her husband to destroy the Acuras".

(இந்திரனை வெல்லும் உபாயம் வினவுதல்)

503. எனப்புகலு மறைமொழிநா ரதன்பதத்தை
யடிக்கடிதாழ்ந் திறைஞ்சி யேற்றி
மனக்கவலை யில்லாத அசுரபிரா
ணிந்திராணி மருவு மாறுங்
கனத்தசத்த விருடியர்கள் கவிகையினைத்
தாங்குகனச் செல்வந் தானு
மினத்தினுறு மிந்திரனைச் செயங்கொள்வ
தெவ்வணநீ யிசைத்தி யென்றான்.

எ-து. இந்தப் பிரகாரம் சொல்லாநின்ற வேத விதியமைந்த நாரத மகாமுனிவருடைய பாதத்தில் தெண்டன் சமர்ப்பித்து, எக்காலும் தணியாத சீற்றம் கொள்கின்ற அசுர ராச சேகரனானவன், இந்திராணியினது சரசசல்லாப வினோத சம்பிரமத்தை அடைகின்ற விதமும், பெருமை பொருந்திய சத்த இருடியர் சிவிகையினைத் தாங்குகின்ற செல்வமும், தேவர்கூட்டங்களுடனே போய்ச் சஞ்சீவிகிரியிலிருக்கின்ற அரங்கநாயகர் அனுக்கிரகத்தைப் பெற்ற இந்திரனைச் செயிக்கும் வரலாறும் எனக்கருளிச் செய்ய வேணுமென்றான் காலநேமியாகிய அசுரராசன் என்றவாறு. (18)

ஏற்றுதல் - உயாததுதல (ஏததுதல் - துதித்தல) மருவுமாறு - மருவும் + ஆறு - மருவுதல் - தழுவுதல. ஆறு - வழி. எவ்வணம் - எவ்வாறு இசைத்தி - கூறுக.

### Intiraṉai vellum upāyam viṉavutal

*eṉappukalu maṟaimoḻinā rataṉpatattai*
*yaṭikkaṭitāḻn tiṟaiñci yēṟṟi*
*maṉakkavalai yillāta acurapirā*
*ṉintirāṇi maruvu māṟuṅ*

*kaṉattacatta viruṭiyarkaḷ kavikaiyiṉait*
*tāṅkukaṉac celvan tāṉu*
*miṉattiṉuṟu mintiraṉaic ceyaṅkoḷva*
*tevvaṉanī yicaitti yeṉṟāṉ.*

## Plan to Overcome Intiraṉ

Kālanēmi repeatedly bowed at the feet
Of Nāratar who spoke thus.
He requested him to map out a plan
For the Acura king to gain Intirāṇi,
And the status of the seven sages
Bearing his palanquin to overcome Intiraṉ.

**(இந்திராணியால் இந்திரன் உயர்ந்தான்)**

504. **அந்தக்கா ரணமதனை யறைவனீ**
**கூர்த்தவறி வதனாற் கேட்டி**
**சந்தவின்பப் பாற்கடலின் வந்துதித்த**
**சசிமணத்த வாறா னிந்திரன்**
**சிந்தனையின் படியட்ட மங்கலந்தான்**
**பொருந்திபுகழ்ச் செல்வ மோங்கு**
**மந்தமடக் கொடிசரசச் சல்லாப**
**மடைந்திடுநீ துருவ னாவாய்.**

எ-து. அவ்வசுரசூடாமணியைப் பார்த்து நாரத முனிவரானவர் அருளிச் செய்கின்றார். மேற்சொல்லிய இந்திர மகாராசனுக்கு வைபவம் வந்த காரணத்தைக் கூறுகின்றேன். அதை உனது நுட்ப அறிவினாலே கேட்பாயாக. அழகிய இன்பத்தினையுடைய பாற்கடலின்கண் தோன்றிய அமுதம் போன்ற இந்திராணி தேவியினது கடிமணம் புணர்ந்த வரலாற்று முறைமையினாலே இந்திர மகாராசனானவன் தனது மனோரஞ்சிதப் பிரகாரம் அஷ்டலட்சுமி மனோகர ரம்மியத்தைப் பெற்றவனாய்ப் புகழ்ச் செல்வமோங்கினான். அவன் விர்த்திக்கக் காரணமாகிய அந்த மடக்கொடியான சீதேவியினது சரச சல்லாப ரஞ்சித வினோத சுரத லீலையைப் புரிகுவையாயின் அண்ட சூத்திரதாரியாய் அசைக்காநின்ற மகாராசராசப் பிரபுடிக க்ஷத்திர பதியாகிய துருவ மகாராசனே நீயாகுவை என்று அருளிச் செய்தார் நாரத முனிவர் என்றவாறு. (19)

சந்த இன்பம் - அழகிய இன்பம். மணத்தவாறு - மணம் புரிந்த வரலாறு. அட்டமங்கலம் - சாமரம், நிறைகுடம், கண்ணாடி, கொடி, தோட்டி, முரசு, விளக்கு, இணைக்கயல் என்பன. துருவன் - உத்தானபாதன் - சுநீதி என்பவர்களின் மகன். நாரதரிடம் உபதேசம்பெற்றுப் பெருந்தவம் இயற்றித் **'துருவபதம்'** என்னும் ஒரு தனிப்பேற்றினைப் பெற்றவன் தவநிலை நீங்கிப் பலகாலம் அரசு புரிந்தவன்.

### Intirāṇiyāl Intiraṉ uyarntāṉ

*antakā raṇamataṉai yaṟaivaṉī*
*kūrttavaṟi vataṉāṟ kēṭṭi*
*cantaviṉpap pāṟkaṭaliṉ vantutitta*
*cacimaṇatta vāṟā ṉintiraṉ*
*cintaṉaiyiṉ paṭiyaṭṭa maṅkalantāṉ*
*poruntipukaḻc celva mōṅku*
*mantamaṭak koṭicaracac callāpa*
*maṭaintiṭunī turuva ṉāvāy.*

### Intiraṉ Raised by Intirāṇi

"I shall speak to you of a plan
Listen with your sharp intelligence.
By marrying Caci tēvi who was born
In the joy-spreading milky sea,
Intiraṉ gained the eight auspicious objects[1]
As desired by him. If you gain
The love of that goddess,
You will be another Turuvaṉ.

(சிவன் தந்த வரத்தால் அவர்களை வெல்லுக எனல்)

505. அந்தவர லாறதனை யானறைவன்
கூர்த்தவறி வதனாற் கேட்டி
இந்திரனில் வலியுடையன் சயந்தனா
மிவர்தமக்கு வரங்கத் தீசன்
சிந்தனையால் மிகமகிழ்ந்து வலக்கைகொடுத்
திருக்கின்றான் சிவன்வ ரத்தா
னொந்திடவே செய்தியெனில் முனிவர்புலோ
மிசைநலத்தை நொய்தாய்த் துய்ப்பாய்.

எ-து மேலும் அந்த வரலாற்று முறையினைக் கூறுகின்றேன் வலிய பாய்ச்சலைக் குறித்துப் பின்னிடுகின்ற புலியைப்போன்ற இந்திரமகாராசனைப் பார்க்கிலும் காண்டீபத்

---

1. The chaurie, filled pitcher, mirror, flag, goad, drum, lamp, fish.

தொழிலில் மிகுந்தவன். அவன் புத்திரனாகிய சயந்த மகாராசன். இருவருக்கும் அரங்கநாயகர் என்கின்ற ஈசுவரரானவர், இருவரையும் பாதுகாக்கவேணும் என்கின்ற அன்புமேற்பட்டு மனமகிழ்சிறந்து, தமது வலக்கரந்தந்து, இந்திரனுக்குப் பூர்வம்போல மகுடாபிஷேகம் பண்ண நினைந்து துணிந்திருக்கின்றார். ஆகையால் நீ சிவன் கையில் பெற்ற வர பாலனத்தால் இம் முத்திறத்தாரையும் நலிந்திடச் செய்வாயாகில், சத்தவிருடிகள் சிவிகைதாங்கப் பெறுவதோடு, புலோமிசை இன்பவைபவ போகத்தையுஞ் சிறப்பாயனுபவிப்பாய் காலநேமியாகிய புவனேசுவரனே யென்றார் நாரதமகாமுனிவர் என்றவாறு. (20)

கூர்த்த அறிவு - கூரிய புத்தி, நுட்பமான அறிவு, நொய்து - மென்மை, விரைவு.

**நாரதர் காலநேமியைக் கண்ணுற்ற அத்தியாயம் முற்றிற்று.**

## Civan̲ tanta varattāl avarkaḷai velluka en̲al

*antavara lāṟatan̲ai yān̲araivan̲*
*kūrttavaṟi vatan̲āṟ kēṭṭi*
*intiran̲il valiyuṭaiyan̲ cayantan̲ā*
*mivartamakku varaṅkaṭ tīcan̲*
*cintan̲aiyāl mikamakiḻntu valakkaikoṭut*
*tirukkin̲ṟān̲ civan̲va rattā*
*n̲ontiṭavē ceytiyen̲il mun̲ivarpulō*
*micainalattai noytāyt tuyppāy.*

## Overcome them by Civan̲'s Boon

"I will speak some more.
Listen with your sharp intelligence.
Stronger than Intiran̲ is Cayantan̲.
The Lord of Araṅkan̲ has desired
To guard them and assured his help.
If you disturb them with Civan̲'s boon
You will gain the sages as slaves
And joyous togetherness with Pulōmicai.[1]

---

1. Intirāṇi

# 29. இருபத்து ஐந்தாவது
# காலநேமி சமர்குறித்த அத்தியாயம்

நாரதரின் உரையைக் கேட்ட காலநேமி காம மிகுதியால் நாரதரை நோக்கி, ஐயனே! உமது அருளால் இப்பொழுதே இந்திரனை வென்று, இந்திராணியை மணந்து, உமது திருவடியை அடைகிறேன் என்று கூறி வணங்கிப் புறப்பட்டான். நால்வகைப் படைகளையும் திரட்டினான். அசுரர்படை பெருந்திரளாகச் சேர்ந்தது. வெண்கொற்றக்குடை முதல் பலவகை ஆயுதங்களும் தாங்கிப் புறப்பட்டனர். வீரர்கள், படைவீரர், படைத்தலைவர், தேர்ப்படையினர் போன்றவர்கள் பலவகையாகத் திரண்டனர். பல உலகங்களையும் கடந்துவரும் யானைப்படை வியக்கத்தக்கதா யிருந்தது. வீரர்கள் மிகக் கொடூரமாக விளங்கினார்கள். கண்டுமகிழ்ந்த காலநேமி தன்தேரினை வரவழைத்தான். பலவகை மணிகளாலும் பொன்னாலும் செய்யப்பட்ட அவனது தேரானது சிங்கம், யானை, குதிரை, பூதகணம் ஆகியவை நான்கு வரிசைகளாகப் பூட்டப்பட்டு விளங்கியது.

பலவகை அணிகளோடு போர்க்கோலம் பூண்ட காலநேமி பூசைமுறைகளை யெல்லாம் முடித்து அத்தேரில் ஏறினான் பேரிகை, சங்கு முதலாகிய சின்னங்களும் இசைக்கருவிகளும் ஒலித்தன. பெரும்படையுடன் இவ்வாறு புறப்பட்ட காலநேமி பலநாடுகளையும் கடந்து கோலாசலத்தை அடைந்தான். காலநேமியின் படையைக் கண்ட இந்திரன், சயந்தன் முதலாய தேவர்களுடனே சென்று அரங்கநாதரின் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தான்.

### (சசியை மணப்பேன் என்ற உறுதி)

506. [1]பந்த மகன்ற நாரதனார்ப்
 பகர்ந்த மொழியைக் கேட்டளவிற்
சிந்தை கலங்கிக் காமவிடம்
 தலைக்கொண் டோங்கச் செப்பிடுவான்
உந்த னருளால் இந்திரனை
 ஒழித்துச் சசியை மணம்புணர்ந்து
வந்திங் குமது மலர்ப்பாதம்
 வணங்க வருள்செய் மாமுனியே.

எ-து. பந்தபாசப் பற்று நீங்கிய நாரதமுனிவரானவர் அருளிச் செய்த மொழியைக் கேட்ட மாத்திரத்தில் மனது கலங்கிக் காம விடமானது தலைக்கேறக் காமாந்தகனாய் விண்ணப்பம் செய்கிறான் உம்முடைய கிருபையினாலே இந்தச் சணமே அந்த இந்திரனைச் செயித்துச் சசிதேவியை மணம் புணர்ந்து உமது தாமரைக் கமலம் போன்ற திருவடிகளிலே அடியேன் சேவிக்கத் தக்கதாய் அனுக்கிரகம் செய்யவேணு மென்றவர் திருவடிகளிலே சாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்தான் காலநேமி என்னும் அசுரேந்திரன் என்றவாறு. (1)

[1] பந்தம் - உறவு, ஆசை

பா.வே. - 1. விந்தை யான தூதர்தமை.
விளித்து நமது விரிவான
சொந்த சேனை தங்கிடத்திற்
றிரிந்து செல்வீ ரெனவிடுத்தான்.

## Caciyai maṇappēṉ eṉṟa uṟuti

*panta makaṉṟa nārataṉārp*
*pakarnta moḻiyaik kēṭṭaḷaviṟ*
*cintai kalaṅkik kāmaviṭam*
*talaikkoṇ ṭōṅkac ceppiṭuvāṉ*
*unta ṉaruḷāl intiraṉai*
*oḻittuc caciyai maṇampuṇarntu*
*vantiṅ kumatu malarppātam*
*vaṇaṅka varuḷcey māmuṉiyē.*

## XXIX. Kālanēmi's War

## Firm on Marrying Caci tēvi

Listening to the words of Nāratar
Who has no desire whatsoever,
Kālanēmi's thoughts were troubled;
The poison of lust rose high in him.
He spoke: "By your grace
I shall destroy Intiraṉ, marry Caci,
And come here to salute your feet.
Grant the fulfilment of this wish."

(அசுரர் கூட்டத்தைத் திரட்டுதல்)

507. வாயு வேக மனோவேக
மதனால் [1]தூதர்க் குரைத்தருளப்
பாயுந் திரைசேர்க் கடலிடத்திற்
பயின்ற வசுரர் பனிவானிற்
றோயு மசுரர் பாதலத்திற்
றோன்றும் வெள்ளப் பரப்பெல்லாங்
காயுஞ் சூலங் கணிச்சிமுத
லேந்தி வந்தார் கணிதமிலார்.

எ-து. காலநேமியாகிய அசுரேந்திரனானவன் சாரணாளைப் பார்த்துச் சொல்லுகின்றான். திக்குத் தீவாந்திரங்களி லிருக்கப்பட்ட நம்மிட இரத, கச, துரக, பதாதியாகிய நால்வகைச் சேனைகளையும் ஒரு க்ஷணப்போதிலே அழைத்துக் கொண்டு வருவீர்களென் றாக்கியாபிக்க, அப்படியே அந்தத் தூதரானவர்கள் வாயுவேக மனோ வேகமாய்ப்போய், அலைகளை மாறிப் பாய்கின்ற கடல் தீவாந்திரங்களில் இருக்கின்ற சேனை வெள்ளங்களும், குளிர்ந்த ஆகாயத்தில் சஞ்சரிக்காநின்ற சதுரங்க தளங்களும், பாதாள லோகத்தில் வாசம் பண்ணாநின்ற சேனைத்திரள் வெள்ளங்களுமெல்லாம் திரண்டு வரத்தக்கதாய் அரசனாக்கினையை அறிவித்த மாத்திரத்தின் யுத்த சன்னாகங்கிடையாமல் அவர்கள் தோள் தினவு கொள்கின்ற அதிசூரர்கள், அக்கினி சொலிக்காநின்ற திரிசூலங்கள் ஏந்தி அகண்ட கோடரி முதலாகிய ஆயுத பாணிகளாய்க் கணக்கிறந்த பேர்கள் வந்தார்க ளென்றவாறு. (2)

கணிச்சி - கோடரி, மழு, அங்குசம் முதலிய படைகளைக் குறிக்கும். கணிதமிலார் - எண்ணமுடியாத அளவினர்

**உரை** - சன்னாகம் - போர்க்கவசம், இங்கு - கவசம் அணிய வேண்டிய போர்த்தொழில் கிடைக்காமையால் - எனக்கொள்க

பா.வே - 1. தூதர் வணமையதாய்ப்

## Acurar kūṭṭattait tiraṭṭutal

*vāyu-vēka maṉōvēka*
*mataṉāl tūtark kuraittaruḷap*
*pāyun tiraicērk kaṭaliṭattiṟ*
*payiṉṟa vacurar paṉivāṉiṟ*
*ṟōyu macurar pātalattiṟ*
*ṟōṉṟum veḷḷap parappellāṅ*
*kāyuñ cūlaṅ kaṇiccimuta*
*lēnti vantār kaṇitamilār.*

## Gathering the Acuras

He sent word to his emissaries;
"With the speed of wind and thoughts
Get here the Acuras who live in islands
Surrounded by the wave-tossed seas,
In the cold skies above,
And in the nether worlds".
Countless army formations gathered
Speedily, carrying fiery lances and axes.

(பலவகை ஒலிகளோடு அசுரர் கூட்டம்)

508. கொடிகள் குடைகள் கவரிகள்செங்
கோலத் தோட்டி முரசமதா
மிடியார் வாத்திய வகையினங்கள்
ஆல வட்ட மியற்சுருட்டிச்
செடிதீர் விராணத் தொகையினங்கள்
செழிந்த வீரச் சின்னங்கள்
படியார் புள்ளங் குழனாக
சுரங்கள் தொனிக்கப் படர்ந் தனரால்.

எ-து. அந்த ராட்சத சதுரங்க வெள்ளக் கூட்டங்கள் கடல் போலப் பரந்து முழங்கிக் கொண்டு வரும்போது, அனேகக்கொடிக் கூட்டங்களும், தவளச் சத்திரக் குடையின் வருக்கங்களும், சிவந்த அக்கினியைக் கக்காநின்ற தோட்டிகளாகிய அங்குசமும், முரசம் முதலாகிய இடிகளைப்போல முழங்காநின்ற வாத்தியக் கூட்டங்களும், ஆலவட்டத் தீட்டங்களும், இயல்பாகிய சுருட்டியினங்களும், வீராணத் தொகையினங்களும், செழித்த பெருங்கொடிகளினுடைய மேம்பாடுகளும், உலகத் துயர்ந்தோர் மதிக்காநின்ற புல்லாங் குழல்களும், நாகசுரங்களினுடைய சமூகங்களுமாய்த் தொனித்துக் கொண்டு பிரவேசித்தார்கள் அசுர வெள்ளங்கள் என்றவாறு (3)

தோட்டி - குடாரி என்னும் ஆயுதம், இது அரசசின்னங்களுள் ஒன்று. ஆலவட்டம் - விசிறி. சுருட்டி - ஆலவட்டத்தில் ஒருவகை. விராணம் - வீராணம் - ஒரு வாத்தியம். புள்ளங்குழனாகசுரம் - புல்லாங்குழல், நாகசுரம் எனக் கொள்க.

## Palavakai olikaḷōṭu Acurar kūṭṭam

*koṭikaḷ kuṭaikaḷ kavarikaḷceṅ*
*kōlat tōṭṭi muracamatā*
*miṭiyār vāttiya vakaiyiṉaṅkaḷ*
*āla vaṭṭa miyaṟcuruṭṭic*
*ceṭitīr virāṇat tokaiyiṉaṅkaḷ*
*ceḻinta vīrac ciṉṉaṅkaḷ*
*paṭiyār puḷḷaṅ kuḻaṉāka*
*curaṅkaḷ toṉikkap paṭarn taṉarāl.*

## The Army's Uproar

They came carrying flags, umbrellas,
Fly-whisks, fire-spitting goads, drums,
A variety of thunderous instruments,

Umbrellas of different kinds,
Various musical instruments,
Symbols of heroism like flags,
Flutes and Nākacuram.
All of them made roaring sounds.

(அமைச்சர் முதல் வீரர் வரை கூடுதல்)

509. மந்திரி மார்கள் பிரதானிச்
சேனா பதிகள் மதித்தவணிச்
சிந்தா தாக்கம் பெறவமைந்த
வணியார் தலைவர் சிறப்புற்று
நந்தா தொளிரும் யூகத்தின்
தலைவர் நயமில் படைத்தலைவர்
கொந்தார் பட்ட வர்த்தனர்கள்
மகுட வர்த்தக் கொடியோர்கள்.

எ-து. அப்படி வாராநின்ற நான்கு வகைச் சேனைகளாகிய வெள்ளங்களில் வந்த தலைமையானவர்கள் யாரென்றால், மந்திரிமார்களும், பிரதானியர் கூட்டங்களும், சேனாதிபதியர் வருக்கமும அணிவகுதத படைக்கூட்டங்கள் சிந்தியோடாமல் வலியைச் செலுத்தி, வீர நிலமையைப் பெற விளங்க அமைக்காநின்ற அணித்தலைவர்க ளீட்டமும், சிறப்புற றென்றும் வீரம் நீங்காத யூகத்தலைவர் சமூகங்களும், குரூரமா யிருள்இருந்த இடங்களினும குடியிருந்தறியாத படைத்தலைவர்கள் அக்குரோணிகளும், இதழ் அவிழ்ந்து மணம் வீசுகின்ற மாலையையுடைய பட்டவர்தனர், மகுடவர்தன ரீட்டங்களும் வெகுவாய்ப் பரநது நிறைந்து வந்தார்கள என்றவாறு (4)

பிரதானி - நிதியதிகாரி அணி - படைவகுப்பு சிந்தாமல் - சிதறி ஓடாமல். நந்துதல் - அழிதல். யூகம - படை கொநது - பூஙகொத்து பட்டவர்த்தனர் - பட்டந்தரித்த அரசர் மகுடவர்த்தனர் - முடிதரித்த மனனா

## Amaiccar mutal vīrar varai kūṭutal

*mantiri mārkaḷ piratāṉic*
*cēṉā patikaḷ matittavaṇic*
*cintā tākkam peṟavamainta*
*vaṇiyār talaivar ciṟappuṟṟu*

*nantā toḷirum yūkattiṉ*
*talaivar nayamil paṭaittalaivar*
*kontār paṭṭa varttaṉarkaḷ*
*makuṭa varttak koṭiyōrkaḷ.*

## Ministers, Soldiers

Ministers, cashiers, army commanders,
Heads of brigades with the ability
To keep their soldiers together,
Leaders of arrays containing
Indestructible heroes, army lieutenants,
Regal leaders wearing flower garlands
And crowns came' waving flags.

(பலவகை வீரர்)

510. வென்றி யார்ந்த மகாரதர்கள்
சமமாய் விளங்கும் வியன்ரதர்கள்
கன்றா தொளிரு மதிரதர்கள்
அர்த்த ரதர்கள் கனமான
குன்றா மென்னு நிவாதகவ
சப்பேர் கொடியர் கூறரிதாய்
நன்றாய்த் திகழு நான்குபடைச்
சூழ நகரை நண்ணினரால்.

எ-து வெற்றி பொருந்திய மகாரதர்களாகிய சுத்த வீரர்களும், பெருமை பொருந்திய சமரதர்களாகிய சூரர்களும், ஒரு காலத்திலும் பின்னிடாத செய சாலிகளாகிய வதிரதர்களும், காம்பீரியமுள்ள வர்த்தரதர்களாகிய சாக சவல்லபத்தோடுங் கூடினவர்களும், கனமான மலைபோன்ற நிவாத கவசகால கேயர்களும் இப்படிச்சொல்லப்பட்ட அதிசூர வீரபடர்களெல்லாம், சேனையைக் காவல் செலுத்திவரப் பிரவேசித்தார்கள் இராட்சத வெள்ளங்கள் என்றவாறு. (5)

மகாரதர் - பதினோராயிரம் தேருக்குத் தலைவர் வியன்ரதர் - பெருமையுடைய தேர்ப் படை வீரர். கன்றுதல் - அழிதல் அதிரதர் - முழுத்தேர் மன்னன். அர்த்தரதர் - போர்த் திறனற்றவர். நிவாதகவசர் - காற்றுப்புகாத போர்க்கவசத்தினை அணிந்தவர் நிவாதம் - காற்று இல்லாமை.

உரை - காலகேயர் - எமனைப் போன்ற கொடியவர்கள்.

## Palavakai vīrar

*Veṉṟi yārnta makāratarkaḷ*
*camamāy viḷaṅkum viyaṉratarkaḷ*
*kaṉṟā toḻiru matiratarkaḷ*
*artta ratarkaḷ kaṉamāṉa*
*kuṉṟā meṉṉu nivātakava*
*cappēr koṭiyar kūṟaritāy*
*naṉṟāyt tikaḻu nāṉkupaṭaic*
*cūḻa nakarai naṇṇiṉarāl.*

## Variety of Soldiers

Makāratars[1] of chariots ever victorious,
Viyaṉratar of equal fame,
Atiratar who were indestructible,
Arttaratars, vicious soldiers
Called Nivāta Kavacar who appeared
Like immense mountains;
Difficult was it to describe in detail
The four-fold army that reached the city.

(யானைப் படை)

511. முகபடாங் கரட மதமிழிந் தொழுகு
கவுட்டுளை முறச்செவி முரணார்
தகதக வென்னுங் கிம்புரிக் கோட்டுச்
சிந்துர மெழுதிய தகைசால்
நிகளம தான துதிக்கைக ணிகழும்
படுமணி நீள்கிலாக் கண்கள்
சகமதி னடக்கு முரலடித் தந்திச்
சமனெனக் குரூரமாய்ச் சார்ந்த.

எ-து யானை வெள்ளங்கள் பிரவேசித்தது எத்தன்மைய வென்றால், இரத்தின மயமாகிய முக படாங்கள் பிரகாசிக்கவும், கரடமத மிழிந்து தாரைபோல் ஒழுகாநின்ற

1. Makāratar, Viyaṉratas, Atiratar and Arttaratar are various designations of comannders in charge of chariots.

கர்ணத்துளைகளையும், முறத்தை யொத்தனவாகிய கர்ண சாமரைச் செவிகளையும், வலி மிகுந்து தகத்தகாயமாய் விளங்காநின்ற தங்க மயமாகிய கிம்புரிக் கோட்டினையும், சிந்துரத்தால் அழகாய் எழுதாநின்ற விசாலமாகிய துதிக்கையையும், மாறி ஒலிக்காநின்ற இணை மணிகளையும், சிறுத்த கண்களையும், உரல் போன்ற அடிகளையுமுடைய யானைக் கூட்டங்கள் தண்டங்களை வீசி எமனைப்போலப் பிரவேசித்தன என்றவாறு. (6)

முகபடாம் - யானையின் முகத்திலிடும் அலங்காரத்துணி. கரடமதம் - யானைமதம். கரடம் - யானைமதம். கவுட்டுளை - கவுள் + துளை - யானையின் உள்வாய்த்துளை. கிம்புரிக்கோடு - பூணுடைய தந்தம். கிம்புரி - யானைக் கொம்பின்பூண். தந்தி - ஆண்யானை.

## Yāṉaip paṭai

*mukapaṭāṅ karaṭa matamiḻin toḻuku*
*kavuṭṭuḷai muṟaccevi muraṇār*
*takataka veṉṉuṅ kimpurik kōṭṭuc*
*cintura meḻutiya takaicāl*
*nikaḷama tāṉa tutikkaika ṇikaḻum*
*paṭumaṇi nīḷkilāk kaṇkaḷ*
*cakamati ṉaṭakku muralaṭit tantic*
*camaṉeṉak kurūramāyc cārnta.*

## Army of Elephants

Adorned with forehead ornaments,
The elephants had rut streaming forth,
Their winnow-ears flanking the cheeks,
The tusks were gleaming with gold,
And the saffron-painted trunk was lovely.
Bells dangled from them all a-clang,
And the elephants with small eyes
Moved forward with their mortar-like feet.

(படைகளின் காட்சி)

512. திக்கினிற் றிரிவ கடலிடைச் செல்வ
சேணினன் முகட்டினி னடப்ப
முக்கிய மான வண்டகோ ளகையின்
முடுகுவ பாதல முந்துஞ்

செக்கரஞ் சடையான் கயிலையிற் சேரு
மனோவதி நகரத்திற் செறிவ
தக்கமால் பதத்திற் சரிப்பன வசுரர்
நடாத்திய தாழ்விலா விரதம்.

எ-து. யூகத்தலைவர், படைத்தலைவர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், மந்திரிமார்கள், நிவாதகவச காலகேயர்கள், அதிரதர்கள் முதலாகிய வீராதி வீரர்கள் ஏறி நடாத்துகின்ற இரதங்கள் வாயு வேகம், மனோ வேகமாய்த் திக்குத் திகாந்தங்களிலே திரியுந்தன்மையைப் போலிருக்கும். கடலில் காணப்படும். கடலில் தோன்றுவது போல, அண்ட முகட்டிலே காணப்படும். அங்கே திரிவது போலப் பாதாள லோகத்தி னுலாவித் திரியும். அங்கே கண்டது சிவந்த சடையினையுடைய பரமசிவன் வாழ்கின்ற கயிலையில் வாசம் பண்ணும். அப்படிக் கயிலையிற் சாரிதிரிந்து, பிரமாவின் உலகமாகிய மனோவதியிற் காணும் அப்படிக்கண்டது திருப்பாற்கடலில் சஞ்சரிக்கும் என்றவாறு. (7)

சேண் - ஆகாயம். திரிவ, செல்வ, நடப்ப, முடுகுவ, முந்தும், சேரும், செறிவ, சஞ்சரிப்ப என்பன தேர்ப்படைகளின் செயல்களைக் குறிக்கும் அஃறிணைப் பன்மை வினைகள். அண்ட கோளகை - ஆகாயமாகிய கூடம்; முகடு. செக்கர் - சிவந்த மனோவதி - பிரமன்நகரம். இரதம் - தேர்.

## Paṭaikaḷiṉ kāṭci

*tikkiṉiṟ tiriva kaṭaliṭaic celva*
*cēṇiṉaṉ mukaṭṭiṉi naṭappa*
*mukkiya māṉa vaṇṭakō ḷakaiyiṉ*
*muṭukuva pātala muntuñ*
*cekkarañ caṭaiyāṉ kayilaiyiṟ cēru*
*maṉōvati nakarattiṟ ceṟiva*
*takkamāl patattiṟ carippaṉa vacurar*
*naṭāttiya tāḻvilā viratam.*

## The Army

They walked in the directions, on the sea,
Appeared to march in the skies,
Or spreading in the universes,
Or streaming in the nether worlds,
Or reaching out to Kailas
Where resides Civaṉ with matted hair;
They group together in the Maṉōvati city,
Or even go up to the Supreme's abode.
Such was the march of the Acuras.

(குதிரைப் படை)

513. கலியுக முடிவிற் றோன்றிய கற்கி
யிஃதெனச் சாற்றிய துரக
நலிதலிற் கவரி யிருபுறம் விளங்கக்
கல்லணை நலமதா யொளிரக்
கலிதரு வெண்ட யங்களின் தொகுதிக்
கல்லென வொலித்திடக் கதியான்
வலியொடுந் திரியுந் துரகபந் திகளின்
வண்மையை யார்வகுத் [1]துரைப்பார்.

எ-து. குதிரைப் பந்திகளின் வெள்ளங்கள் எப்படிப்பட்ட தென்றால், கலியுக முடிவிலே நாராயண மூர்த்தியானவர் குதிரையின் வடிவெடுத்தால் எப்படியோ அப்படியானது ஒவ்வொரு குதிரை. அப்படிப்பட்ட வெள்ளங்க ளிருபுறமும் சாமரைகள் விளங்கவும், கல்லணையாகிய சீனிகள், கடிவாளங்கள் முதலானவை பிரகாசிக்கவும், சத்திக்காநின்ற வெண்டையங்கள் கல்லென்றிரங்கி ஆரவாரிக்கவும், சதங்கை தாரமணி முதலியவற்றைக் கண்டத்திலே உடைய துரக பந்திகளானவை வலியோடு சுழன்று திரிந்து நடந்து வந்தன என்றவாறு. (8)

கற்கி - குதிரை திருமாலவதாரம். துரகம் - குதிரை. கல்லணை - குதிரைமேலிடப்படும் இருக்கை வெண்டயம் - காலில் கட்டப்படும் சதங்கை சத்தித்தல் - ஒலித்தல். கல் - கலீர் என்னும் ஒலிக்குறிப்பு.

உரை - சீனி - குதிரைச்சேணம்

பா.வே. - 1. திசைப்பார்.

## Kutiraip paṭai

*kaliyuka muṭivir̲ r̲ōn̲r̲iya kar̲ki*
*yiktenac cār̲r̲iya turaka*
*nalitalir̲ kavari yirupur̲am viḷaṅkak*
*kallaṇai nalamatā yoḷirak*
*kalitaru veṇṭa yaṅkaḷin̲ tokutik*
*kallen̲a volittiṭak katiyān̲*
*valiyoṭun tiriyun turakapan tikaḷin̲*
*vaṇmaiyai yārvakut turaippār.*

## Cavalry

As if it were Kalki incarnation
That appears at the end of Kaliyukam,
The horses moved with fly-whisks

Waving on their sides,
The seat on their back shining bright.
The strings of bells tied to their feet
Clanged; who can describe
The power of this cavalry?

(காலாட் படை)

514. சிவந்தகுஞ் சியினர் முரண்டபார் வையினர்
தெளிவிலா இதயத்தர் சேர்ந்த
வவந்தன மெனச்செய் யவலத்தர் பாணி
யமைந்திடு மந்திரப் படையர்
நிவந்தயாக் கையினர் யமனையு மருட்டு
நிலமையர் நீள்குடைக் கரத்தர்
பவம்புரி கலாள் வெள்ளங்கள் சூழ்ந்து
படர்ந்தனர் நானிலப் பரப்பின்.

எ-து. அப்படி யுத்த சன்னாகமாய் வருகின்ற வீரபடர்கள் எப்படிப்பட்டவர்கள் என்றால், சிவந்த செம்பட்ட மயிரை யுடையவர்களாயும், நெறித்த பார்வைகளை யுடையவராயும், அஞ்ஞான மயமாகிய மனத்தினை உடையவர்களாயும், கேடுகளைச் செய்யும் அவலத் தொழிலை உடையவர்களாயும், கைகளில் தாங்கிய மந்திரப்படைகளை உடையவர்களாயும், கம்பீரமான உடம்பை உடையவர்களாயும், யமதர்மனையுந் திடுக்கிடச் செய்கின்ற நிலமையை உடையவர்களாயும், நீண்ட குடைகளைத் தாங்கிய கைகளையுடையவராயும், பாவத்தை யெல்லாங் குறைவற முடிக்கும் படியாகிய, காலாட்களென்கின்ற வெள்ளப் பரப்புகள் உலகெல்லாம் நிறைந்து வந்தன என்றவாறு. (9)

குஞ்சி - குடுமி அவந்தனம் - வீண் செயல், கேடு. அவலம் - கேடு. பாணி - கை. நிவந்தயாக்கை - நிமிர்ந்த உடல்; பவம் - பாவம், அழிவு.

**உரை** - வீரபடா - வீரமுடைய போர் வீரர்கள், ஏவலர்.

## Kālāṭ paṭai

*civantakuñ ciyiṉar muraṇṭapār vaiyiṉar*
*teḷivilā itayattar cērnta*
*vavantaṉa meṉaccey yavalattar pāṇi*
*yamaintiṭu mantirap paṭaiyar*

*nivantayāk kaiyiṉar yamaṉaiyu maruṭṭu*
*nilamaiyar nīḷkuṭaik karattar*
*pavampuri kalāḷ veḷḷaṅkaḷ cūḻntu*
*paṭarntaṉar nāṉilap parappiṉ.*

## Infantry

The soldiers had russet hair;
Their look struck terror;
Their hearts remained confounded;
They were capable of performing all evil;
Their hands carried dire weapons;
Their bodies were ram-rod stright;
They could frighten even Yamaṉ;
They carried high umbrellas.
This army, ready for sinful acts,
Spread all over the earth.

(வீரர்களின் தோற்றம்)

515. முகங்களைந் ததற்குக் கரம்ப துள்ளார்
ஆனன மைம்பது முறக்கர
மகங்கைநூ றைஞ்ஞூறு முகக்கர மிரட்டு
மாயிர முகக்கர மிரட்டுத்
தகும்புய மலைகள் அழல்தரு கண்ணார்
காத்திர தேகர்மா மலைபோ
லகன்றமூக் குள்ளா ரலைகள்பாய் நாவோ
ராயிர மியானைகொள் வாயர்.

எ-து. ஐந்து கரமும் பத்து முகமும், ஐம்பது முகமும் நூறு கைகளும், ஐந்நூறு முகமும் ஆயிரம் கைகளும், ஆயிர முகமும் இரண்டாயிரங் கைகளும் உடையவர். அதுவன்றியும் புயமாகிய மலையினையுடையவர்; அக்கினி பொழிகின்ற கண்ணினையுடையவர்; காத்திர வுன்னதமான சரீரத்தை உடையவர்; மகத்தாகிய பிறங்கலை யொத்த அகன்ற மூக்கினை யுடையவர்; அலைகளைப் பாய்கின்ற நாவினையுடைய ஆயிரம் யானையைத் தின்னுகின்ற வாயினையுடையவர்கள் என்றவாறு. (10)

ஆனனம் - முகம். காத்திரம் - பருமை, வலிமை.

**உரை** - பிறங்கல் - சிறுமலை. உரையின் தொடக்கத்தில் ஐந்து முகமும் பத்து கரமும் என்றிருத்தல் வேண்டும்.

## Vīrarkaḷiṉ tōṟṟam

*mukaṅkaḷain tataṟkuk karampak tuḷḷār*
*āṉaṉa maimpatu muṟakkara*
*makaṅkainū raiññūṟu mukakkara miraṭṭu*
*māyira mukakkara miraṭṭut*
*takumpuya malaikaḷ aḻaltaru kaṇṇār*
*kāttira tēkarmā malaipō*
*lakaṉṟamūk kuḷḷā ralaikaḷpāy nāvō*
*rāyira miyāṉaikoḷ vāyar.*

## The Sight of Heroes

There were men with five faces
And ten hands; fifty faces
And hundred hands; five hundred faces
And thousand hands; Thousand faces
And two thousand hands.
They had mountainous shoulders,
Eyes spitting fire, strong bodies,
Vast noses and wavy tongues
That could devour a thousand elephants.

(காலநேமி படைகளைக் கண்டு மகிழ்தல்)

516. இப்பெருஞ் சேனை வரவினைக் குறித்த
வியலுணர் மந்திரர் விளம்பச்
செப்பரும் புகழார் காலநே மிப்பேர்
அசுரன்றான் கோபுரச் செம்பொன்
வைப்பினி னிவர்ந்து கண்ணினாற் கண்டு
மகிழ்களி கூர்ந்தனன் மனத்தி
னற்புதம் பெருகி வலவனை விளித்து
வயம்பெறு தேர்தரு கென்றான்.

எ-து. இததன்மைத்தாகிய நான்கு வகைச் சேனைகளும், பெரும்புறக் கடலணை புரண்டு வருமாறுபோல வருகின்ற சேனாசமூக வெள்ளங்களை மந்திரிகள் அரசனுக்கறிவிப்ப, அம்மந்திரரோடுங்கூடிய காலநேமி யென்னும் அசுர ராசனானவன் சபாமண்டபக் கொலுக் கோபுர உச்சியின்றும் பார்த்து மனம் களிகூர்ந்து புளகித்தவனாய் அற்புத ஆனந்தம் பெருகித்

தேர்ச்சாரதியை அழைத்து நமது இரதத்தை அலங்கரித்து நிறுத்துவாயாக என்றான் அரசன் என்றவாறு. (11)

இயல் - இயல்பு, நடைமுறை. மந்திரர் - அமைச்சர். வைப்பினினிவர்ந்து - வைப்பினில் - இவர்ந்து; (வைப்பினின்) வைப்பு - இடம். இவர்தல் - ஏறுதல். வலவன் - தேர்ப்பாகன். வயம் - குதிரை, வெற்றி.

## Kālanēmi paṭaikaḷaik kaṇṭu makiḻtal

*ipperuñ cēṉai varaviṉaik kuṟitta*
*viyaluṇar mantirar viḷampac*
*cepparum pukaḻār kālanē mippēr*
*acuraṉṟāṉ kōpurac cempoṉ*
*vaippiṉi ṉivarntu kaṇṇiṉāṟ kaṇṭu*
*makiḻkaḷi kūrntaṉaṉ maṉatti*
*ṉaṟputam peruki valavaṉai viḷittu*
*vayamperu tērtaru keṉṟāṉ.*

## Kālanēmi is Happy

As the ministers told him of the coming
Of this vast army, the Acura Kālanēmi
Of indescribable fame, came to the top
Of his palace and saw with his eyes
The sight that made him happy.
His mind full of wondrous joy
He called out to his charioteer
And commanded him to bring his chariot
Meant for victory.

(காலநேமியின் தேர்)

517. வலவனுஞ் சென்று தேரலங் கரித்த
வகையினை வியாதனார் வகுப்பர்
புலமையிற் சிறியோன் கல்வியி னடங்கா
தாயினு மறிந்ததைப் புகல்கேன்
நலிதலி னச்சு மச்சுகள் கொடுங்கை
நாட்டிடு முருளைசிங் கவணைப்
பலர்புகழ்ப் பரப்பான் வளைத்துசா தரங்கக்
குருவிந்த மாலைகள் படர.

எ-து. அந்த இரத சாரதியானவன் அசுர பிரான் கட்டளைப் பிரகாரம் தேரை அலங்காரம் செய்த விதியை யாரால் கூறலாமென்றால், வேதாந்த மார்க்க தரும சாத்திர புராணமும், புராண இதிகாச முதலியதும் தோத்திரம் செய்கின்ற வியாசமகாமுனிவராகிய வாதராயணன் வல்லவன். அவனல்லது நவரச அலங்கார இலக்கண நற்காவியத்தினது நலத்தினை அறிகின்ற புத்தி நுட்பம் இல்லாதவனானாலும், அவரது கீர்த்தி வழங்கும் எல்லையில் வசைச் சொல்லாவது வழங்குவது அமையும் என்னும் ஆசை என் பிடரியினைப் பிடித்துத் தள்ள அதன் வசமாய், அலங்காரமாய்ச் சில சொல்லுகின்றேன். அந்த இரதமானது அச்சும், அச்சுக்கொடுங்கை, உருளைப்பரப்பு, சிங்கவணை முதலானதினாலே பிரகாசிக்கப்பட்டது. சாதரங்க, குருவிந்த, சவுகாந்திக கோவாங்க மாகிய நான்கு வகையாயுள்ள மாணிக்க மாலைக ளிடை யிடையிலே தூக்கி அலங்காரமாய்ச் சிங்காரிக்கப்பட்டது அந்த இரதம் என்றவாறு. (12)

அச்சு - தேரச்சு. வியாதனார் - வேதவியாசர். கொடுங்கை - தேரின் மரச்சுற்று. சிங்கவணை - சிங்காசனம், இருக்கை. சாதரங்கம் - பதுமராகம், மாணிக்கத்தின் முதற்சாதி. குருவிந்தம் - செம்மணி, மாணிக்கத்தின் இரண்டாவது சாதி. சவுகாந்திகம் - சௌகந்திகம் - பதுமராகம், மாணிக்கத்தின் மூன்றாவது சாதி. கோவாங்கம் - செம்மணி, மாணிக்கத்தின் நான்காவது சாதி.

## Kālanēmiyi<u>n</u> tē<u>r</u>

*valavanuñ ce<u>nr</u>u tē<u>r</u>alaṅ karitta*
*vakaiyi<u>n</u>ai viyāta<u>n</u>ār vakuppar*
*pulamaiyi<u>r</u> ci<u>r</u>iyō<u>n</u> kalviyi <u>n</u>aṭaṅkā*
*tāyi<u>n</u>u ma<u>r</u>intataip pukalkē<u>n</u>*
*nalitali <u>n</u>accu maccukaḷ koṭuṅkai*
*nāṭṭiṭu muruḷaiciṅ kavaṇaip*
*palarpukaḻp parappā<u>n</u> vaḷaittucā taraṅkak*
*kuruvinta mālaikaḷ paṭara.*

## Kālanēmi's Chariot

Perhaps only Vyācar can describe
The glorious chariot that was decorated
By the charioteer; I have little ability
And less intelligence; but shall describe
What I saw. Unbreakable axles,
Body built of wood, firm wheels;
A lion-throne at the centre;
Decorated with strings of four-fold gems
And rubies all over its body.

(தேரில் கொடி)

518. சல்லிகள் கவரி தூக்கியே வச்சிரச்
சட்டங்கள் சேர்த்துசோ பானம்
வில்லிடு மணியின் கூட்டத்தான் விளங்க
அபரஞ்சி மணிகளான் விரும்பு
நல்லஓ வியத்தின் பதுமைகோ டிகளை
யிடையிடை நாட்டிதேர்ச் சீலை
[1]வில்லிடுங் கொடியாந் துசபடம் விருதுக்
கொடிகளான் விதம்விதம் விளங்க.

எ-து. சல்லிகளையும் சாமரைகளையும் இடையிடையிலே தொங்கவிட்டு, வச்சிரத்தினாலே சட்டங்கள் சேர்த்துப் படிகளானவை நவமணியினாலே இழைத்திருக்க, அபரஞ்சித் தங்கத்தினால் உருவமைத்த சித்திரப் பதுமைகள் அந்த இரதத்தில் சிங்காரம் செய்து, தேர்ச்சிலையால் அலங்கரித்து, நான்கு வாசலிலேயும் சிவந்த சிறு கொடிகளைத் தாரையாய்க் கட்டிப் பெருங்கொடி அருகெல்லாம் தரள மாலை அசைந்தாடி விளங்கப் பிரகாசித்தது காலநேமியினுடைய இரதம் என்றவாறு. (13)

சல்லிகள் - தொங்கல்கள், தொங்கவிடும் அலங்காரப் பொருள்கள். சோபானம் - படிகள். அபரஞ்சி - புடமிட்ட பொன். துசபடம் - கொடி, திரைச்சீலை.

பா.வே - 1. வில்லிடுங் கொடியாந் துசபட தரள
முதலிய மாலையான் விளங்க.

## Tēril koṭi

*callikaḷ kavari tūkkiyē vaccirac*
*caṭṭaṅkaḷ cērttucō pāṉam*
*villiṭu maṇiyiṉ kūṭṭattāṉ viḷaṅka*
*aparañci maṇikaḷāṉ virumpu*
*nallaō viyattiṉ patumaikō ṭikaḷai*
*yiṭaiyiṭai nāṭṭitērc cīlai*
*villiṭuṅ koṭiyāṉ tucapaṭam viruttuk*
*koṭikaḷāṉ vitamvitam viḷaṅka.*

## The Flag of the Chariot

Lovely strings and fly-whisks
Were hung from it. A ladder-frame

Of diamonds was there too,
Encrusted with gems. Crores
Of lovely statues cast in burnished gold
Were set up at intervals.
Curtains were hung while the flag
Was raised on the victorious flagstaff.

**(தேர் அலங்காரம்)**

519. **நிலையதா முகுரகண் ணாடிக ணிறுவி**
**நான்குவா யிலினிரை தோறும்**
**பலர்புகழ் சிங்க மோர்புறங் கந்து**
**கத்திர ளோர்புறங் கரிகள்**
**சிலைவலோர் துதிக்கும் பூதமா நிரைகள்**
**பூட்டினன் சிறந்தகா வலர்கள்**
**பலவித வுருளை தொறுந்தொறுங் காப்ப**
**மணிநிரை பலபல கறங்க.**

எ-து. நான்கு வாயிலி னிருபுறமும் நிலைக்கண்ணாடிகள் அமைத்து, ஒரு வாசலிலே சிங்க நிரைகளைப் பூண்டும், மற்றொரு வாசலில் கந்துகப் பந்திகளைப் பூட்டியும், மற்றொரு புறத்தில் யானைவருக்கங்களைக் கட்டியும், மற்றொரு வாசலில் பூதத் தொகைகளை வகுத்துமிராநின்ற தேர்பண்டில்களின் காவலராகப் பல அசுரர் கூட்டங்கள் காக்க, அனேக கண்ட நாத மணிகள் கலகலவென்று சத்திக்கத் தக்கதாய் விளங்கும் அந்த இரதம் என்றவாறு. (14)

முகுரம் - கண்ணாடி, பளிங்கு நிரை - கூட்டம், வரிசை. கரி - யானை. சிலை - வில். கறங்குதல் - ஒலித்தல். கந்துகத்திரள் - குதிரைப்பந்தி.

## Tēr alaṅkāram

*nilaiyatā mukurakaṉ ṇāṭika ṇiṟuvi*
*nāṉkuvā yiliṉirai tōṟum*
*palarpukaḻ ciṅka mōrpuṟaṅ kantu*
*kattira ḷōrpuṟaṅ karikaḷ*
*cilaivalōr tutikkum pūtamā niraikaḷ*
*pūṭṭiṉaṉ ciṟantakā valarkaḷ*
*palavita vuruḷai toṟuntoṟuṅ kāppa*
*maṇinirai palapala kaṟaṅka.*

## Decorations for the Chariot

Large mirrors on the four sides;
On one side lions praised by all,
On another were several horses;
On yet another side, elephants;
On the fourth were spirits hailed by archers;
Capable guards were in charge of the wheels;
The jewelled bells clanged
As the chariot rolled forward.

(காலநேமியின் வழிபாடுகள்)

520. கலசகும் பத்தை யுச்சியி னிறுவிக்
கதித்தசிங் கத்திரள் கவினச்
சலமிலா வலவன் தேரலங் கரித்துத்
தலைவன்முன் னிறுத்திடச் சார்ந்த
குலதில கமதா மசுரன்றான் பூசைத்
திறனெலாங் குறைவிலா தமைத்து
நலமிகு மகுடங் கவித்துகுண் டலங்கள்
காதினி னயந்திட வணிந்து.

எ-து. அப்படி அலங்காரம் செய்து பிரகாசிக்காநின்ற இரதத்தினிட உச்சியில் கனகமயமாய் இரத்தினத்தால் இழைத்திராநின்ற கலச கும்பத்தைத் தாபித்து, அதற்கு மேலே தவளசத்திரக் குடையை அழகாய் அலங்கரித்துத் தேர்ப்பாகன் அசுரத்தலைவன்முன் நிறுத்திட, அதன்கண் சார்ந்த குலத்துக் கெல்லாம் திலகனாகிய அசுரராசன் தான் வழிபடு கடவுளுக்குரிய விதிப்பிரகாரம் அருச்சனை முதலாகிய சோடச உபசாரம் செய்து, நன்கமைந்த இலக்கணத்தோடுங்கூடிய ஒன்பது வகையாயுள்ள நவமணியால் இழைத்த மவுலி புனைந்து, மகர குண்டலங்களை இரண்டு காதினும் விளங்க அணிந்தான் என்றவாறு. (15)

கலசகும்பம - குடம். கதித்தல் - எழுதல், உயர்தல். சலம் - குற்றம்.

**உரை** - தவளசத்திரம் - வெண்குடை.

## Kālanēmiyin vaḻipāṭukaḷ

*kalacakum pattai yucciyi ṉiṟuvik*
*katittaciṅ kattiraḷ kaviṉac*
*calamilā valavaṉ tēralaṅ karittut*
*talaivaṉmuṉ ṉiṟuttiṭac cārnta*

*kulatila kamatā macuraṉṟāṉ pūcait*
*tiṟaṉelāṅ kuṟaivilā tamaittu*
*nalamiku makuṭaṅ kavittukuṇ ṭalaṅkaḷ*
*kātiṉi ṉayantiṭa vaṉintu.*

## Kālanēmi's Worship

Placing the sacred pot at the top
And holding above it the lovely umbrella,
The charioteer brought the chariot
And stopped it in front of the king.
The Acura king proceeded to perform
A blameless worship, wearing a crown.
His ears were ornamented too.

(கவசமணிதல்)

521. புயத்தினின் வலைய மணிந்துவச் சிரத்தின்
கவசம்பூட் டிட்டபின் புகழார்
நயத்ததோ ரார வகையெலா நண்ணச்
சந்தனப் பெருமண நயக்க
வயத்ததோ ருடைவாள் வயங்கிட வரையின்
வளைந்தபின் வில்லெனு மேரு
புயத்தினின் விளங்க வாவம ததனிற்
புண்ணியக் கணையெலாம் பொலிய.

எ-து. அந்தக் காலநேமி என்னும் அசுர குல சூடாமணியாய் விளங்குகின்றவன், இரண்டு புயத்தினும் வலையங்களை அணிந்தும், வச்சிர மணியால் செய்த கவசத்தைப் பூட்டியும், புகழினாலே நலம்மிக்க மாணிக்கம், முத்து மாலைகளைப் புனைந்தும், அதன்மேலே சந்தனம் முதலாகிய திவ்விய பரிமளங்களை நிறையப் பூசியும், விசயம் பொருந்திய உடைவாளை அரைப்பக்கத்தில் தொங்க விட்டும், வில்லென்கின்ற மகமேருவானது புயத்திலே விளங்கவும், அம்பறாப் புட்டிலின் புண்ணியமாகிய கணைகளெல்லாம் முதுகினிடைப் பிரகாசிக்க விளங்கினான் காலநேமி என்னும் அசுரராசன் என்றவாறு.
(16)

வலையம் - கைக்கடகம். கவசம் - இரும்புச் சட்டை. ஆரம் - மாலை. அரை - இடுப்பு. ஆவம் - அம்புக்கூடு.

## Kavacamaṇital

*puyattiṉiṉ valaiya maṇintuvac cirattiṉ*
*kavacampūṭ ṭiṭṭapiṉ pukaḻār*
*nayattatō rāra vakaiyelā naṇṇac*
*cantaṉap perumaṇa nayakka*
*vayattatō ruṭaivāḷ vayaṅkiṭa varaiyiṉ*
*vaḷaintapiṉ villeṉu mēru*
*puyattiṉiṉ viḷaṅka vāvama tataṉiṟ*
*puṇṇiyak kaṇaiyelām poliya.*

## The Armour

He wore the shoulder - rings
And the jewel-encrusted armour.
Wearing necklaces, he scented himself
With sandalwood, and held on his side
A handsome sword. On his shoulder
Shone a bow that appeared
Like a mountain well bent.
Holy missiles illumined his quiver.

(தேரின் மீது காலநேமி)

522. சூரபன் மாவி னிந்திர ஞாலத்
தேரிவண் சூழ்ந்ததென் றுரைக்குங்
கோரமா ரிரதத் திவர்ந்தனன் சிங்கச்
சாபமாய்க் கொண்டகோ லத்தா
னேரலர் கூற்றாந் தந்திரர் நெருங்க
அவர்தமைத் தலைவர்க ணெருங்கப்
பாரினிற் பதாதி முதலினோ ரவரை
நெருங்கியே படர்ந்தனர் பரிவால்.

எ-து. சூரபன்மாவென்னும் இராச சூடாமணி, குலசூடாமணியாய் அண்டத்தீ சுவரனாய் விளங்குகின்றவன் உகந்தேறாநின்ற இந்திரஞாலத் தேரானது இவ்வுலகத்தி னிழிந்தால் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தாகிய இரதத்தில் ஆரோகணிதமானான். சிங்கச்சாபம் போலொத்த வலியினையுடைய அவன் சத்திராதிகளுக்கு எம உருவமாகிய தந்திரத்தலைவர், மந்திரத்தலைவர் முதலாகிய பேர்கள் நெருங்க அவர்களை நான்கு வகைச் சேனைகளும் நெருங்கப் பிரவேசித்தான் காலநேமி என்றவாறு. (17)

ஞாலம் - உலகம். கோரம் - அச்சம். சிங்கச்சாபம் - சிங்கக்குட்டி. நேரலர் - பகைவர். கூற்று - எமன். தந்திரர் - படைவீரர். பதாதி - காலாட்படை. படர்தல் - பரவுதல், சூழ்தல். பரிவு - அன்பு, பக்குவம்.

## Tēriṉ mītu Kālanēmi

*cūrapaṉ māvi ṉintira ñālat*
*tērivaṉ cūḻntateṉ ṟuraikkuṅ*
*kōramā riratat tivarntaṉaṉ ciṅkac*
*cāpamāik koṇṭakō lattā*
*ṉēralar kūṟṟāṉ tantirar neruṅka*
*avartamait talaivarka ṇeruṅkap*
*pāriṉiṟ patāti mutaliṉō ravarai*
*neruṅkiyē paṭarntaṉar parivāl.*

## Kālanēmi on the Chariot

As if Intiraṉ's chariot that had been used
By Cūrapatumaṉ had now descended on earth,
This chariot glowed. Kālanēmi
Ascended it. He appeared
Like a lion-cub. A Yamaṉ to his enemies,
He went surrounded by ministers
And commanders, with his infantry
And the rest following him.

(படையொலி)

523. பேரிகை பணகந் தவளவா ரணங்கள்
திருச்சின்னம் பெரியதா ளங்கள்
தாரைகள் பூரி வீராணமல் லரிகள்
சல்லரிக் குடமுழாத் தடாரிக்
காரினி னொலிக்கும் பம்பைமத் தளங்கள்
மண்டுகம் பயிலுமா தித்தியம்
வாரிபோன் முழங்குஞ் சந்திரவாத் தியங்கண்
முதலவைங் கருவிகள் வளர.

எ-து. அப்படிப்பட்ட காலநேமி யாக்கினையால் பிரவேசித்து வருகின்ற அசுரருடைய வெள்ளத்திலே பேரிகை முதலாகிய பணக வாத்தியங்களும், இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னிய மென்னும் சங்கநாதத் தொனிகளும், வீர சின்னங்களும், பெரிய தாளங்களும்,

ஊதுகின்ற திருச்சின்னம் முதலாகிய தாரைகளும், பூரியும் வீராணங்களும், மல்லாரிகளும் சல்லரிகளும், குடமுழாவும் தடாரிகளும், மேகம்போன் றொலிக்காநின்ற பம்பைகளும், மத்தளங்களும் மண்டூக வாத்தியங்களும், ஆதித்திய வாத்தியங்களும், சமுத்திரம்போ லொலிக்காநின்ற சந்திர வாத்தியங்களும், தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி என்னும் பஞ்சநாதத் தொனிகளுடனே நடந்தார்கள் சேனை வெள்ளங்கள் என்றவாறு. (18)

பணகம் - படகம் - இரணபேரிகை. தவளவாரணம் - வெண்சங்கு. திருச்சின்னம் - வீரசின்னம் - ஒரு வாத்தியம். வீராணம் - ஒரு வாத்தியம்.

## Paṭaiyoli

*pērikai paṇakan tavaḷavā raṇaṅkaḷ*
*tiruccinṉam periyatā ḷaṅkaḷ*
*tāraikaḷ pūri vīrāṇamal larikaḷ*
*callarik kuṭamuḻāt taṭārik*
*kāriṉi ṉolikkum pampaimat taḷaṅkaḷ*
*maṇṭukam payilumā tittiyam*
*vāripōṉ muḻaṅkuñ cantiravāt tiyaṅkaṉ*
*mutalavaiṅ karuvikaḷ vaḷara.*

## Sounds of War

Beri drums, battle-drums, white conches,
High wind-instruments, clanging cymbals,
*Tārai, vīrāṇam, mallari, callari,*
All of them drums sounding like
Thunderous rain-bearing clouds,
*Pampai, mattaḷam,* and *Maṇṭūḷkam*
Which were instruments rivalling
The sounds of the sea; Cantiravāttiyam
And the rest were used by the army.

(போர்க்கருவிகளுடன் புறப்பாடு)

524. வச்சிர முசலந் தோமர மீட்டி
வாருணம் வாயுவின் படையு
நச்செயிற் றுரகங் காருட மிடப
நளினத்தோன் படைகளும் [1]விளங்க

முச்சிகை வடிவே லந்தகன் படையு
முதிர்ந்திடு மங்கியின் படையு
முச்சித மான சக்கரம் வீர
பத்திர மிவையெலா மோங்க.

எ-து. வச்சிராயுதமும் ஈட்டிகளும், காருடக்கணைகளும் இடபாஸ்திரமும், பிரம்மாஸ்திரமும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கவும், திரிசூலங்களும் அந்தகனாகிய சமன் படைகளும், அக்கினியாஸ்திரமும் கோரமான சக்கராயுதங்களும், வீர பத்திரக்கணைகளும் இவைகளெல்லாம் அக்கினியைக் கக்கப் புகையை மென்மேலும் உண்டாக்கத்தக்கதாக வந்தார்கள் அசுரர் கூட்டங்கள் என்றவாறு. (19)

முசலம் - இருப்புலக்கை, ஆயுதம். அந்தகன் - எமன். தோமரம் - எறிபடை. வாருணம் - கடல். நச்செயிற்றுரகம் - விஷப்பல் பாம்பு. காருடம் - விஷம். முச்சிகை - மூன்றுதலையுடைய திரிசூலம். அங்கி - தீ.

உரை - சமன் - எமன்.

பா.வே. - 1 மொளிர.

## Pōrkkaruvikaḷuṭaṉ puṟappāṭu

*vaccira mucalan tōmara mīṭṭi*
*vāruṇam vāyuviṉ paṭaiyu*
*nacceyiṟ ṟurakaṅ kāruṭa miṭapa*
*naḷiṉattōṉ paṭaikaḷum viḷaṅka*
*muccikai vaṭivē lantakaṉ paṭaiyu*
*mutirntiṭu maṅkiyiṉ paṭaiyu*
*muccita māṉa cakkaram vīra*
*pattira mivaiyelā mōṅka.*

## Weaponry

Thunderbolts, iron rods, missiles, lances,
Instruments with the power of the sea
And the wind, poison-fanged snake-missiles,
Kāruṭa missiles, Nanti missiles,
Pirama missiles, tridents, Yamaṉ - missiles,
*Akkiṉi* missiles and discus and *Vīrapattira*
Missiles were held by the army.

(அசுரர்படை தொண்டை நாடடைதல்)

525. [1]அமரர்தம் பதியி னெழுந்தஆ யிரமாங்
கோடியக் குரோணியென் றுரைக்குந்
தமரவா ரிதிசூ ழுலகினிற் சார்ந்து
சராசர மதிர்ந்திடத் தணியா
நிமலம தான பாண்டிய தேய
நெருங்கிதத் தளித்திட நிலையார்
கமலம தலருங் கோலமால் வரையைக்
கண்டனர் களித்தன ரன்றே.

எ-து. அப்படியாகிய காலநேமியானவன் தன்னுடைய ஆயிரங்கோடி யக்குரோணியான இரத, கச, துரக, பதாதி நால்வகைச் சேனைகளுடனே பொன்னுலகத்தை விட்டு நீங்கிச் சதுர்சாகரம் சூழ்ந்து அலைகளினாலே முழங்காநின்ற பூமண்டலங்களிலே மிகுந்த சிரேட்டமாகிய பாண்டிய தேசங்களிலே வந்து நெருங்கி, பூமி இடங்கொள்ளாமல் தத்தளிக்கத் தக்கதாய் அவ்விடம் விட்டு நீங்கி, அதற்கு உத்தர பாகமாகிய தொண்டை மண்டலத்தில் சிறந்தோங்கிய சஞ்சீவிகிரியாகிய செந்தாமரை, வெண்டாமரைக் கமலங்களால் நிறைந்திருக்கின்ற, தடாக பந்திகள் சூழ்ந்த கோலாசலக் கிரியைக் கண்டு களித்தார்கள் காலநேமி முதலாகிய அசுரராசாக்கள் என்றவாறு. (20)

தாமரவாரிதி - பேரொலியினை உடைய கடல்.

பா.வே. - 1. அமரர்தம் பதியை விட்டெழுந் தனேக
காவத மகன்றன ரசுரர்
தமரவா ரிதிசூ ழுலகினின் வந்து
தொண்டைநன் னாட்டினிற் சார
நிமலம தான சோழமண் டலத்தை
நீங்கினர் பாண்டியர் நிமலக்
கமலம தலருங் கோலமால் வரையைக்
கண்டனர் களித்தன ரன்றே.

## Acurarpaṭai toṇṭai nāṭaṭaital

*amarartam patiyi ṉeḻuntatā yiramāṅ*
*kōṭiyak kurōṇiyeṉ ṟuraikkun*
*tamaravā riticū ḻulakiṉiṟ cārntu*
*carācara matirntiṭat taṇiyā*

*nimalama tāṉa pāṇṭiya tēya*
*neruṅkitat taḷittiṭa nilaiyār*
*kamalama talaruṅ kōlamāl varaiyaik*
*kaṇṭaṉar kaḷittaṉa raṉṟē.*

## The Acura Army reaches Toṇṭai Nāṭu

A thousand crores *akkurōṇi* of army
Started from the heavens, reached
The sea-girt earth and proceeded
Shaking the worlds, reached the pure land
Of Pāṇṭiyas; even as all living creatures
Felt confounded, they reached the Kōla Hill
Where lotuses bloomed and were happy.

(படையின் தூசிப்படலம்)

526. தூளியின் கூட்ட மெழுந்தண்ட ரண்டத்
தொகையெலாம் பூழியாய்த் தோன்ற
வாழியை யடைத்தவ் வட்டநா கத்தின்
கவுட்டுளை மதத்தினை யடக்கி
நீளிரும் பிரமன் மனோவதி மருவு
மானத நிறைத்ததிவ் வுலகின்
மீளருங் கங்கைக் காசிமா நதிபோ
லறலினால் மிளிர்ந்திட வன்றே.

எ-து. அந்த அசுர வெள்ளங்கள் படையெடுத்துப் போகும்போது தூளிப் படலங்களானவை எழுந்து, அண்டரண்டத் தொகை யெல்லாம் பூழிக் கூட்டங்களாய் நிறைந்திருக்கவும், கடல்களையெல்லாம் மேடுபடத்தூர்த்து அவ் அட்டகசமாகிய அயிராவதம் முதலான யானைகளின் கவுட்டுளையாகிய கர்ணத்துளைகளின் மதத்தினை யடைத்து, நீண்ட பெருமையை யுடையவராகிய பிரமா வாசம் பண்ணாநின்ற மனோவதியாகிய நகரத்தைச் சூழ்ந்திராநின்ற மானத தீர்த்தத்தை இவ்வுலகத்தில் கலிகாலத்திலே பஞ்சமா பாதகங்களைத் தீர்க்காநின்ற காசி, கங்கை தீர்த்தம்போல மணலினாலே நிறையத்தக்கதாகச் செய்தது அத்தூளிப்படல மென்றவாறு. (21)

தூளி - புழுதி. பூழி - புழுதி. ஆழி - கடல். அட்டநாகம் - எட்டு யானை. அறல் - மணல்.

## Paṭaiyiṉ tūcippaṭalam

*tūḷiyiṉ kūṭṭa meḻuntaṉta raṉṭat*
*tokaiyelām pūḷiyāyt tōṉṟa*
*vāḻiyai yaṭaittav vaṭṭanā kattiṉ*
*kavuṭṭuḷai matattiṉai yaṭakki*
*nīḷirum piramaṉ maṉōvati maruvu*
*māṉata niṟaittativ vulakiṉ*
*mīḷaruṅ kaṅkaik kācimā natipō*
*laṟaliṉāl miḷirntiṭa vaṉṟē.*

## Dust Raised by the Army

Clouds of dust arose and covered
The serried universes above.
Everything appeared dusty, the seas
Were covered up; plugged were the ear-holes
Of the elephants of the eight directions;
The dust rose up to overwhelm Maṉōvati,
The abode of Piramaṉ. The Māṉata lake
Was filled with dust and became
Like the streams of Kaṅkai and Kāci
That flow upon the earth.

(படையொலியால் இந்திரன் அஞ்சுதல்)

527. ஆனையி னொலிகள் பெரும்புறக் கடல்போல்
முழங்கியே மும்மதத் தமருஞ்
சேனைக ளுவரிக் கடலென முழங்கித்
திகழ்ந்தன குதிரையின் தொகுதிச்
சோனைமா ரிகள்வாழ் பாற்கடல் திரைபோல்
தோன்றிய தறிந்தவிந் திரனும்
நானிலத் தமரர் சூழ்ந்திடக் கடல்போல்
நாடியே பொன்னடி யடைந்தார்.

எ-து. ஆனைக் கூட்டப் பந்திகளானவை பெரும்புறக் கடலைப்போல முழங்கி, மும்மதங்களைப் பொழிந்துநின்றன. சேனைக் கூட்டத் தொகுதிகளானவை உவர்க்கடலைப்போல முழங்கி ஒலித்துநின்றன. குதிரைக்கூட்ட வெள்ளங்களானவை

சோனை மாரியாகப் பொழிகின்ற மேகக் கூட்டங்கள் வாழப்பட்ட பாற்கடலின் அலைகளைப் போலத் தோற்றம் செய்து, நுரைநீரை யுமிழ்ந்துநின்றன. நானிலமாகிய இவ்வுலகில் தேர்ப்பந்திகளானவை மற்ற கடல்களைப்போல முழங்கிக் கொண்டு பிரவேசித்ததைக் கண்ட இந்திரனானவன் பயப்பிராந்தி கொண்டவனாய்ச் சயந்தன் முதலாகிய தேவர்கூட்டங்களுடனே அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்கநாதருடைய திருவடிகளிலே சரணாகதி அடைந்தார்கள் தேவர்கூட்டங்கள் என்றவாறு. (22)

உவரிக்கடல் - ஒருபொருட் பன்மொழி; உவரி - கடல். உவர்க்கடல் எனக்கொள்வர் உரையாசிரியர். உவர் - உப்பு. சோனைமாரி - பெருமழை, விடாமழை.

## Paṭaiyoliyāl intiraṉ añcutal

*āṉaiyi ṉolikaḷ perumpuṟak kaṭalpōl*
*muḻaṅkiyē mummatat tamaruñ*
*cēṉaika ḻuvarik kaṭaleṉa muḻaṅkit*
*tikaḻntaṉa kutiraiyiṉ tokutic*
*cōṉaimā rikaḷvāḻ pāṟkaṭal tiraipōl*
*tōṉṟiya taṟintaviṉ tiraṉum*
*nāṉilat tamarar cūḻntiṭak kaṭalpōl*
*nāṭiyē poṉṉaṭi yaṭaintār.*

## Intiraṉ Alarmed by the Uproar

The formations of elephants
Roared like the vast oceans;
From them streamed rut. The armies
Also sounded like large seas.
The cavalry created an uproar
As if they were waves on the milky sea.
Coming to hear all of this, Intiraṉ
Surrounded by the gods like the oceans
Rushed to Araṅkaṉ's feet.

(காலநேமிக்கு ஏற்பட்ட தீ நிமித்தங்கள்)

528. வெள்ளொலி யிடிக்க வானம் விதிவலி யிழுக்க முன்னந்
துள்ளிய விடமார் தோளுந் துடித்தமர்க் கலுழ விண்மீன்
கொள்ளியி லுதிர வூர்கொள் கொடுங்கதிர் சூழ மாலைக்
கள்ளறுந் துலர்ந்துங் காணா தசுரனுங் கடுகிச் சென்றான்.

எ-து. அசுரர் தலைவனாகிய காலநேமியின் முன்வினைப் பயனானது உந்திச் செலுத்த, அந்த விதியின் பயனாய், மழைபொழியாமலே வானம் பேரிடியை உண்டாக்கியது; வீராவேசங் கொண்ட அவனது இடது தோளும் மார்பும் துடிக்கத் தொடங்கின. இவை தீ நிமித்தங்களாயின. நட்சத்திரங்கள் நெருப்பு பற்றிய விறகுக்கட்டைகளைப்போல உதிர்ந்தன. மாலையில் எங்கும் வெப்பம் நிறைந்தது. காலநேமியின் மாலையானது வாடி, தேன் சொரிவதும் நின்று போயிற்று. இத் தீய சகுனங்களையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாத காலநேமி விரைந்து சென்றான். (23)

வெள்ளொலி - வெற்று ஓசை. இடமார் தோள் - இடது மார்புந் தோளும். கலுழ்தல் - வெளிப்படுத்துதல். கொள்ளி - தீ பற்றிய விறகு. கள் - தேன்.

**காலநேமி சமர்குறித்த அத்தியாயம் முற்றிற்று.**

## Kālanēmikku ērpaṭṭa tī nimittaṅkaḷ

*Veḷḷoli yiṭikka vāṉam vitivali yiḻukka muṉṉan*
*tuḷḷiya viṭamār tōḷun tuṭittamark kaluḻa viṇmīṉ*
*koḷḷiyi lutira vūrkoḷ koṭuṅkatir cūḻa mālaik*
*kaḷḷaṟun tularntuṅ kāṇā tacuraṉuṅ kaṭukic ceṉṟāṉ.*

## Evil Portents for Kālanēmi

Hollow sounds were heard: his evil past
Pulled him; his left chest and shoulder
Shook; fiery comets streaked down;
The evenings grew hot; honey became dry.
But the Acura noticed none of this
And simply proceeded forth.

# 30. இருபத்து ஆறாவது
# சயந்தன் சமர்புரிந்த அத்தியாயம்

தாயாகவும் தந்தையாகவும், ஆசாரியராகவும் விளங்கும் நாராயண மூர்த்தியே! மூர்க்கனாகிய எனக்கு அருள்புரிய வேண்டும் என்று விண்ணப்பித்த இந்திரனைப் பார்த்து, இந்திரனே! நீ உன் மகனாகிய சயந்தனுடன் உடனே புறப்பட்டுக் காலநேமியுடன் போர்புரிவாயாக என்று கூறியருளினார். அவ்வாறே இந்திரன் நினைந்து அயிராவதம், குமுதம் என்னும் யானைகளை வரவழைத்துத் தானும் சயந்தனுமாகத் தேவர் கூட்டங்கள் புடைசூழப் புறப்பட்டான். முரசுகள் ஒலித்தன. நால்வகைப் படைகளின் கொடிகளும் குடைகளும் ஆகாயத்தை மூடின. தேர், யானை, சுரர், திக்குப்பாலகர் முதலியோர் சூழ, வெற்றி மாலையினையுடைவனாய்ச் சயந்தன் விளங்கினான்.

இவ்வாறு போர்க்கோலம் கொண்ட சயந்தன் சேனையை அசுரர் சேனையானது சூழ்ந்தது. இருதிறத்திலும் பிணக்குவியல்கள் குவிந்தன. இந்த நிலையில் சயந்தன் மக மேருவை நிகர்த்த தனது வில்லினை வளைத்து அம்பு மழையினைப் பொழிந்து, பனியினைத் துரத்தும் சூரியனைப்போல அசுர வெள்ளத்தை அழித்தான். அசுரத்தலைவர்கள் மேலும் மிகுதியாகிச் சூழ்ந்து வளைத்துக் கொண்டார்கள். சயந்தன், தேவகுருவாகிய வியாழபகவான் தனக்கு உபதேசித்த தேவ மாயாமந்திரத்தை உச்சரித்தான். கோடானுகோடி சயந்தர்களும், கோடானுகோடி குமுதங்களுமாக நிறைந்தன. அதேபோல அசுரர்கள் பக்கமும் படைத்தலைவர்களும், நிவாத கவச காலகேயர்களுமாக நிறைந்து போரிட்டனர். அசுரர்களின் முடிகள் நொறுக்கப்பட்டன. தலைகள் துண்டிக்கப்பட்டன; படைகள் தூள்களாயின. திக்குகள் சுழன்றன. கடல்கள் கலங்கின. யானைகள் வீறிட்டன. உடுக்கள் உதிர்ந்தன. மலைகள் அசைந்தன. பூமி வெடித்தது.

அசுரர்களின் மந்திரத் தலைவனாகிய கும்பன் என்பவன் தன்னுடைய தேரைக் கொண்டுவரச்செய்து குமுதம் என்னும் யானையின் முன் கொண்டுபோய் நிறுத்தினான். வியாழபகவானின் மந்திரத்தால் சயந்தனும் குமுதமும் கோடி கோடிகளாய் நிறைந்திருப்பதை அறிந்த கும்பன் தனக்கு அசுரர் குருவாகிய சுக்கிராச்சாரியார் உபதேசித்த மந்திரத்தை உச்சரித்தான். சயந்தனின் மந்திரத் திறன் ஒடுங்கி சயந்தனும் குமுதமும் ஒவ்வொரு உருவமாகி நின்றார்கள். இருப்பினும் திக்குப்பாலகரும் இந்திரன் படையும் துணைநிற்க இருவருமாகக் கடும்போர் செய்து களைத்தார்கள்.

போரில் சயந்தன் கையைக் கும்பன் அறுக்க உடனே கும்பன் கையும் அறுக்கப்பட்டது. ஆனால் பிரமனிடம் கும்பன் பெற்றிருந்த வரத்தினால் கைமுன்போல வளர்ந்தது. அக்கையிலே வச்சிராயுதத்தை ஏந்திய கும்பன் சயந்தனை அடித்து வீழ்த்தச் சயந்தனும் மூர்ச்சித்து விழுந்தான். கும்பன் மகிழ வெற்றி முரசம் முழக்கப்பட்டது. சயந்தன் மூர்ச்சித்ததை அறிந்தான் சூரியன். காலநேமி முதலாகிய அசுரர்கள் நம்மீது போருக்கு வரக்கூடும் என்று பயந்தவனாய் மேற்குக் கடலிலே சென்று மறைந்தான். உலகை இருள் சூழ்ந்தது. இந்திரனுக்குத் துணையாகித் தோன்றுவது போலச் சந்திரன் தோன்றினான்.

(இந்திரனைப் போருக்குச் செல்லுமாறு அரங்கன் பணித்தல்)

529. தந்தைதாய் குருவுந் தயாபர நிதியுந்
தானென விளங்கிய தனியாய்
முந்திய பரனே நினதருண் மொழியான்
மூர்க்கனுக் கினிதருள் புரிதி
யெந்தையே யென்னு மிந்திரர்க் கிரங்கி
யியம்புவா னரங்கனா மீசன்
சிந்தனை கலங்கேல் சயந்தனோ டேகி
யமர்செய்தி சீரியோ யென்றான்.

எ-து. ஞானத்தை வருவிக்காநின்ற பிதாவாயும், தேகத்தை இரக்ஷிக்காநின்ற தாயாகியும் ஆசாரியராயும், தயாபரத்தத்துவமாயும், பேரின் அபரஞ்சிதத் தங்கமாயும் விளங்காநின்ற ஒப்பந்த மொழியாகிய அனுக்கிரக வார்த்தையினாலே இந்த மூர்க்கனாகிய எனக்கு இன்பமாகிய அருளைப் புரிவாய் எந்தையாகிய இரக்ஷகனே என்று விண்ணப்பம் செய்கின்ற இந்திர மகாராசனுக்கு இரங்கி அருளிச் செய்கின்றார் அரங்கநாயகரானவர். சிந்தனையாகிய உனதந்தக்கரணமானது கலங்கிப் பரவியாநின்ற தேவராசனே! உனது புத்திரனாகிய சயந்தனுடனே கூடினவனாய்ப் போய்க் காலநேமியை வளைந்து யுத்தம் செய்வாயாக என்றருளிச் செய்தார் அரங்கநாயகர் என்றவாறு. (1)

தயாபரநிதி - அருட்குணமுடையோன். தனியன் - ஒப்பற்றவன். சீரியோய் - சிறந்தவனே! அண்மைவிளி.

## Intiranaip pōrukkuc cellumāṟu Araṅkaṉ paṇittal

*tantaitāy kuruvun tayāpara nitiyun*
*tāṉeṉa viḷaṅkiya taṉiyāy*
*muntiya paraṉē niṉataruṇ moḻiyāṉ*
*mūrkkaṉuk kiṉitaruḷ puriti*
*yentaiyē yeṉṉu mintirark kiraṅki*
*yiyampuvā ṉaraṅkaṉā mīcaṉ*
*cintaṉai kalaṅkēl cayantaṉō ṭēki*
*yamarceyti cīriyō yeṉṟāṉ.*

## XXX. Cayantaṉ's War

### Araṅkaṉ Commands Cayantaṉ

"You are father, mother, teacher,
Treasure-trove of grace for me.

Primal Lord! Out of your compassion
Do help this hapless one, father!"
Towards Intiraṉ who prayed thus
Lord Araṅkaṉ grew compassionate.
He said: "Do not worry.
Proceed with Cayantaṉ and give battle."

(இந்திரனும், மகன் சயந்தனும் புறப்படுதல்)

530. அமுதவாய் மொழியைக் கேட்டம ரேச
னந்தரத் திருந்ததன் கரியைக்
குமுதம தென்னும் வாரண நினைந்தா
னவையறிந் திந்திரர் குறுகச்
சமுகதே வர்களைச் சயந்தனை விளித்துச்
சார்குதி போர்க்கெனச் சாற்றச்
சுமுகமாஞ் சயந்தன் குமுதத்தி னிவர்ந்தா
னிந்திரன் றன்கரி குறுக.

எ-து. இவ்விதமாக அரங்கநாயகருடைய அமுத மொழியைக் கேட்ட இந்திர மகாராசன் தழைத்த ஆகாசத்தினிருக்கின்ற தன்கரியாகிய அயிராவதத்தினையும் குமுதமென்கின்ற யானையினையும் நினைந்தான். அந்த இரண்டும் அந்நினைவினையறிந்து சஞ்சீவி கிரியாகிய கோலாசல பர்வதத்தில் வந்து சேர்ந்தன. அதைக் குறித்துத் தன் சமுகத்தின் அனவரதமும் நிறைந்திருக்கின்ற தேவர்கூட்டங்களையும், சயந்தனாகிய தன் புத்திரனையும் வரவழைத்து யுத்த சன்னாகத்துக்கு ஆரோ கணிதமாகக் கட்டளையிட்டான். அப்போது தன் புத்திரனாகிய சுபகர மங்களாகர சுசீலனாகியவன் குமுதமென்னும் யானையினேறி நடாத்தினான். இந்திர மகாராசனானவன் அயிராவதத்தின் ஏறி நடாத்திச் சென்றார்கள் யுத்த களத்தைக் குறித்தென்றவாறு (2)

அமரேசன் - இந்திரன. குமுதம் - தென்மேற்றிசையானை. சன்னாகம் - போர்க்கவசம்.

## Intiraṉum, makaṉ Cayantaṉum puṟappaṭutal

*amutavāy moḻiyaik kēṭṭama rēca*
*ṉantarat tiruntataṉ kariyaik*
*kumutama teṉṉum vāraṇa niṉaintā*
*ṉavaiyaṟin tintirar kuṟukac*

*camukatē varkaḷaic cayantaṉai viḷittuc*
*cārkuti pōrkkeṉac cāṟṟac*
*cumukamāñ cayantaṉ kumutatti ṉivarntā*
*ṉintiraṉ raṉkari kuṟuka.*

## Intiraṉ and Cayantaṉ proceed

Hearing the nectarean message
Intiraṉ thought of his heavenly elephant
And the pachyderm, *Kumutam*.
Both understood the call and reached him.
He called out to his godly race
And son Cayantaṉ, commanding them
To proceed to the battlefield.
A happy Cayantaṉ on the *Kumutam*
And Intiraṉ on his elephant sped forth.

(யுத்த களத்தில் தேவர் படை)

531. அறைந்தன படகம் பேரிகை யனைத்து
மந்தர துந்துபி யார்த்த
நிறைந்தன வமரர் கூட்டத்தி னிரத
நிமலமா முச்சுவ நிறைந்தச்
சிறந்தவா ரணங்கள் சேர்ந்தன குடைகள்
கொடிகளுற் திகழ்ந்தொளி சிறந்த
விறந்தன ரசுர ரீண்டென வெவரும்
விளம்பிடச் சமர்க்களம் புகுந்தார்.

எ-து. இத்தன்மைத்தாய் அசுர வெள்ளங்களிட யுத்தத்தைக் குறித்துத் தேவர் கூட்டங்கள் பிரவேசித்த மாத்திரத்தின் முழங்காநின்றன படகவாத்தியங்கள். ஆகாய வீதியெல்லாம் துந்துபி ஆர்ப்பரித்து முழங்கி நிறைந்தன. தேவாதிகளுடைய இரத பந்திகளானவை நிமலமாகிய உச்சுவ சொரூப கந்துகங்கள் பந்திபந்தியாய்த் திரண்டு வந்தன. சிறப்பாகிய வாரணமான யானைக் கூட்டமானது எமனைப்போலத் தண்டங்களைத் துதிக்கையினாலே வீசிக்கொண்டு பிரவேசித்தன. குடைகள், கொடிகள் முதலான தெல்லாம் ஆகாயத்தில் பரந்து மூடின. தேவர்கூட்டங்கள் அரங்கநாயகன் அனுக்கிரகத்தால்வருகின்ற கிரிகையைப் பார்த்தவர் களித்துடனே அசுரர் கூட்டங்கள் வேருடனே பறிந்து போய்விட்டதென்று சொல்லத்தக்கதாய் யுத்த களத்திலே வந்தார்கள் என்றவாறு. (3)

துந்துபி - பேரிகை. கந்துகம் - குதிரை.

## Yutta kaḷattil tēvar paṭai

*a̱raintaṉa paṭakam pērikai yaṉaittu*
*mantara tuntupi yārtta*
*ni̱raintaṉa vamarar kūṭṭatti ṉirata*
*nimalamā muccuva ni̱raintac*
*cirantavā raṇaṅkaḷ cērntaṉa kuṭaikaḷ*
*koṭikaḷuṟ tikaḷntoḷi ci̱ranta*
*vi̱rantaṉa racura riṉṭeṉa vevarum*
*viḷampiṭac camarkkaḷam pukuntār.*

## Gods in the Battlefield

The *paṭakam* and *pērikai* drums sounded.
The *tuntupi* called out. The divine army
Filled all spaces. Chariot formations
Were there and also horses of pure breed.
The best of elephants were also present.
Umbrellas and flags rose to the skies.
Even as everyone felt relieved
That the end of the Acuras had come,
The divine army entered the battlefield.

(யுத்த களத்தில் சயந்தன்)

532. தேர்கரி பதாதி சூழ்ந்திடச் சிறந்து
திக்கினர்ப் புடையினிற் சிறக்கப்
பாரினிற் பம்பைக் குடமுழாக் காளம்
வீரசின் னங்கள்பண் முழவந்
தாரினின் வண்டின் கணமெலா மருந்தித்
தெவிட்டிடச் சயந்தனாங் காளை
ஆரவா ரத்தோ டமர்தரு மசுரர்
களத்திடை யடைந்தன னன்றே.

எ-து. சயந்த மகாராசனைத் தேர்க்கூட்டங்கள் சூழ்ந்திட, அதை யானைக் கூட்டங்கள் சூழந்திட, அதை அசுரர் கூட்டங்கள் சூழ்ந்திட, அதைத் திக்குப் பாலகர் முதலிய சேனைகள் சூழ்ந்திட இவ்வுலகத்தில் பம்பை வாத்தியம், குடமுழா வாத்தியம், எக்காளை, வீர சின்னம்,

பண்பையுடைய மத்தள வாத்தியங்கள் முழங்கத்தக்கதாகப் பிரவேசித்தான். அவன் எப்படிப்பட்டவன் என்றால் மந்தார பாரிசாதமாகிய புட்பங்களை அணிந்த திவ்விய பரிமளங்களைக் குறித்து வண்டு, தேன், அரும்பு, நிமிறென்னும் நான்கு வகையினையுடைய வண்டினங்கள் இசைப்பாட்டுகளைப் பாடி மகரந்தத்தினை உண்டு தேக்கிட்டு வாசம் பண்ணா நின்ற வெற்றி மாலையினையுடைய சயந்த மகாராசனானவன் ஆரவாரத்துடன் யுத்த களத்திலே வந்து சேர்ந்தான் என்றவாறு. (4)

திக்கினர் - திக்குப்பாலகர். புடை - பக்கம், அருகு.

## Yutta kaḷattil Cayantaṉ

*tērkari patāti cūḻntiṭac ciṟantu*
*tikkiṉarp puṭaiyiṉiṟ ciṟakkap*
*pāriṉiṟ pampaik kuṭamuḻāk kāḷam*
*vīracin ṉaṅkaḷpaṉ muḻavan*
*tāriṉiṉ vaṇṭiṉ kaṇamelā maruntit*
*teviṭṭiṭac cayantaṉāṉ kāḷai*
*āravā rattō ṭamartaru macurar*
*kaḷattiṭai yaṭaintaṉa ṉaṉṟē.*

## Cayantaṉ in the Battlefield

Surrounded by chariots, elephants, infantry,
Encircled by the armies of the gods
In charge of the directions, Cayantaṉ entered
As the *pambai*, the *kuṭamuḻā, ekkaḷai*
And the *vīraciṉṉam* instruments sounded;
Wearing garlands on which the bees buzzed
Eating the pollen, the bull-like Cayantaṉ
Entered the battlefield of the Acuras.

(அசுரப்படையில் பிணக் குவியல்)

533. அடைதலு மசுர ரட்டகா சஞ்செய்
தருஞ்சிலை யத்திரம் பூட்டிக்
கடைதரு கீர சாகரம் போலக்
கலக்கின ரமரர்தங் குழுவைக்

**கொடைபயி லமர ரசுரர்தங் கூட்டக்**
**குழுவினைக் கொல்சர மதனாற்**
**படையினைப் பிணக்குன் றம்படக் குவித்தார்**
**படகங்க டூரிய மார்ப்ப.**

எ-து. இந்தப் பிரகாரம் சயந்த மகாராசன் படை வகுத்துக் கொண்டு களத்திலே யுத்தசன்னாகனாய் வந்ததைக் குறித்த அசுரர் கூட்டங்களானவர் அட்டகாசம் செய்து மான் கூட்டத்தில் பாய்ந்த வேங்கைப் புலிபோலச் சீறி வில்லை வளைத்து நாணேறிட்டுக் குணத்தொனி செய்து புங்கானு புங்கமாய் ஒரு தொடைக்கு ஆயிரம் பதினாயிரமாகிய சரமாரிகளைப் பொழிந்து திருப்பாற்கடலை மந்தரகிரி கலக்கும் தன்மையைப்போலப் பிணக்குன்று அனந்தமாய்க் குவித்திடக் குவிந்தார்கள் இரக்கமாய் யாவரையும் பாதுகாக்கறின்ற தேவர்களாலே அசுர சேனைகள் என்றவாறு. (5)

அத்திரம் - கணை சிலை - வில் கீரசாகரம் - பாற்கடல். கீரம் - பால். தூரியம் - உவகைப்பறை. முரசப்பறை.

## Acurappaṭaiyil piṇak kuviyal

*aṭaitalu macura raṭṭakā cañcey*
*taruñcilai yattiram pūṭṭik*
*kaṭaitaru kīra cākaram pōlak*
*kalakkiṉa ramarartaṅ kuḻuvaik*
*koṭaipayi lamara racurartaṅ kūṭṭak*
*kuḻuviṉaik kolcara mataṉāṟ*
*paṭaiyiṉaip piṇakkuṉ ṟampaṭak kuvittār*
*paṭakaṅka ṭūriya mārppa.*

## Corpses of the Acura Army

As he came, the Acuras set to work
Stringing their bows with missiles
And churned the army of the gods
As if churning the milky sea; retaliation
Came from the divine army with killer-arrows
Destroying the mass of capable Acuras
Raising mountains of carcasses.
The *pāṭakam* and *tūriyam* instruments sounded.

(அமரர் படையில் அழிவு)

534. இவ்வித மாக இருதிறத் தாரும்
இணையிலா திருஞ்சமர் புரியச்
செவ்விசே ரசுர [1]சேனைமந் திரர்கள்
சீறியே தேரினைச் செலுத்திப்
பவ்வம்போற் குமிறு நாணினை முழக்கிப்
பயில்சரந் தூர்த்தம ரர்களை
நவ்வியைச் சீறும் புலிசிங்கம் போலப்
பிணக்குன்ற நாட்டின ரன்றே.

எ-து. இந்தப் பிரகாரமாய் அசுரர்களும் தேவ கூட்டங்களும் ஒருவர்க்கொருவர் இளைக்காதவர்களாய் யுத்தசன்னாகம் பண்ணும் அளவில் படைத்தலைவர், யூகத்தலைவர், பட்ட வர்தனர், முதலாகிய பேர்களும், கோபித்துத் தங்கடங்கள் இரதத்தைச் செலுத்தி இரணகளத்திலே பிரளய காலஉருத்திரனைப் போலச் சீறிச் சிலையினை வளைத்து, நாணினைப் பூட்டி, குணத்தொனி செய்து, சரமாரி பொழிந்து, மான் கூட்டங்களைப் பாய்கின்ற சிங்கம், புலிபோல் சீறி அமரர் கூட்டங்களைப் பிணமலையாய்க் குவித்தார்கள் அசுரர்கூட்டங்கள் என்றவாறு. (6)

மந்திரர் - வீரர், படைத்தலைவர் முதலானோர். பவ்வம் - கடல். தூர்த்தல் - சொரிதல். நவ்வி - மான்.

பா.வே. - 1. சேனை - காவலர்கள்.

## Amarar paṭaiyil aḻivu

*ivvita māka irutiṟat tārum*
*iṇaiyilā tiruñcamar puriyac*
*cevvicē racura cēṉaiman tirarkaḷ*
*cīṟiyē tēriṉaic celuttip*
*pavvampōṟ kumiṟu nāṇiṉai muḻakkip*
*payilcaran tūrttama rarkaḷai*
*navviyaic cīṟum puliciṅkam pōlap*
*piṇakkuṉṟa nāṭṭiṉa raṉṟē.*

## Destruction of the Divine Army

As the two sides went on thus
Enacting an unprecedented war, the leaders
Of the Acura army hissed and speeded up

Their chariots; they twanged
The bow-strings making oceanic commotion;
Like tigers and lions leaping on gazelles
They aimed their arrows and built up
A parallel mountain of corpses.

(அசுரர் படையில் மீண்டும் பிணக்குவியல்)

535. அமரர்தஞ் சேனை யழிதலுஞ் சயந்த
னாடக மேருபோன் றொளிருந்
தமரம தகலா வில்லினை வணக்கிச்
சரமழை தொடுத்தவர் தம்மைத்
திமிரம ததனைத் திவாகரன் றொலைத்த
லனையவா யசுரர்தந் திரளைக்
கமலசெங் கையினாற் றொலைத்தன னசுரர்
பிணக்குன்றங் கணத்தினிற் காண.

எ-து இவ்விதமாகிய கோர ரூபிகளான அசுர சேனாதிபதிகளைக் கூட்டத்தால் தேவர்க் கூட்டங்கள் சின்னாபின்னமாய்ப் பிணக் குன்றம்படப் பார்த்துக் கோபித்தவனாகிய இந்திரபுத்திரனாகிய சயந்த மகாராசனானவன் தன்னுடைய மகமேருவைப் போன்ற வில்லை வளைத்து, நாணேறிட்டுக் குணத்தொனி செய்தம்பினைப் புங்கானு புங்கமாய் ஒரு தொடைக்கன்பதினாயிரங்கணையாய்த் தொடுத்துச் சரகூடங்கட்டிப் பனியினைச் சூரியன் துரத்துமாறுபோலக் கலக்கி ஒரு நிமிடத்திலே அசுரவெள்ளங்களைப் பிணமாலையாகக் குவித்தான் சயந்தமகாராசன் என்றவாறு (7)

ஆடகமேரு - பொன்மலை தமரம் - பேரொலி திமிரம் - இருள் திவாகரன் - சூரியன். திரள் - கூட்டம

**உ**ரை - புஙகானு புங்கம - அம்பின் பின் அம்பு தொடர்தல் சரகூடம் - அம்புகளால கட்டும் நெருக்கம்

## Acurar paṭaiyil mīṇṭum piṇakkuviyal

*amarartañ cēṉai yaḻitaluñ cayanta*
*ṉāṭaka mērupōṉ ṟoḷirun*
*tamarama takalā villiṉai vaṇakkic*
*caramaḻai toṭuttavar tammait*
*timirama tataṉait tivākaraṉ ṟolaitta*
*laṉaiyavā yacurartan tiraḷaik*
*kamalaceṅ kaiyiṉāṟ ṟolaittaṉa ṉacurar*
*piṇakkuṉṟaṅ kaṇattiṉiṟ kāṇa.*

## More Corpses in the Acura Army

As the army of gods disintegrated,
Cayantaṉ bent his bow that gleamed
Like golden Mahā Mēru; like the sun
Chasing away darkness, he destroyed
With his lotus-red hands the mass
Of Acuras. In a moment, the corpses
Of the Acuras rose mountain-high.

**(சயந்தனும் குமுதம் என்னும் அவன் யானையும்)**

536. மந்திரத் தலைவர் சேனையின் தலைவர்
வளைந்தனர் சயந்தனும் வயமார்
முந்தியதேவ மாய்கையி னாலே
யனேகராய்க் குமுதமுந் திடவே
விந்தையார் சமரை விளைத்தனன் களிறு
காலினாற் சிலவர்வீய்ந் திடவே
நிந்தையிற் கொம்பாற் குத்தியே துதிக்கைத்
தண்டத்தா னீசரை யொறுத்த.

எ-து. அந்த அசுரர்க் கூட்டங்களிலே முக்கியமான வீராதி வீரர்களாகிய மந்திரத்தலைவர்கள், சேனாபதித் தலைவர்கள் முதலாகிய பேர்கள் சயந்த மகாராசனை வந்து வளைத்துக் கொண்டார்கள். அவர்கள் கோரத்தைப் பார்த்து வியாழபகவான் அனுக்கிரகித்த தேவமாயா மந்திரத்தை உச்சரித்தான். அப்போது கோடானுகோடி சயந்த மகாராசனும், கோடானுகோடி குமுத யானையாகியும் உருவெடுத்து வெகுவிதமாய்த் தான்கற்ற தனுசு இலக்கணம் எல்லாம் காட்டி யுத்தம் செய்தான். அதுவல்லாமல் குமுத மென்கின்ற யானையானது காலினால் அனேகம் அசுரரைத் தேய்த்து நான்கு கொம்பினாலே பாய்ந்து உருட்டிக்கொண்டும் துதிக்கையால் தண்டத்தை சுழற்றியடித்து நொறுக்கியும் திரிந்தது என்றவாறு. (8)

வயம்ஆர் - தன்வயம் உள்ள. குமுதம் - யானை: தென்மேற்குத் திசைக்குரியது. வீதல் - அழிதல். நீசர் - கீழ்மக்கள்.

உரை - வியாழபகவான் - தேவகுரு.

## Cayantaṉum Kumutam eṉṉum avaṉ yāṉaiyum

*mantirat talaivar cēṉaiyiṉ talaivar*
*vaḷaintaṉar cayantaṉum vayamār*
*muntiyatēva māykaiyi ṉālē*
*yaṉēkarāyk kumutamun tiṭavē*

*vintaiyār camarai viḷaittaṉaṉ kaḷiṟu*
*kāliṉāṟ cilavarvīyn tiṭavē*
*nintaiyiṟ kompāṟ kuttiyē tutikkait*
*taṇṭattā ṉīcarai yoṟutta.*

## Cayantaṉ and his Elephant, Kumutam

Cayantaṉ was surrounded by the strategists
And commanders of the Acura army. Reciting
The magic chant of Gods, Cayantaṉ and Kumutam
Appeared as many to give wondrous battle.
Many died crushed by the elephant's feet.
The pachyderm gored with its tusks
And lashed out with its trunk.

(இரு திறப்போர்)

537. வாலினாற் சுற்றி யெறிந்திடுஞ் சிலரை
மந்தரங் கடலினை மதித்தற்
போலசு ரர்கடந் தலைவரை யுழக்கப்
புந்திறைந் துருகிமந் திரர்கள்
கோலினை யனந்தங் கோடியோர் தொடையாய்க்
கோலகாண் டீபத்தின் விடுப்ப
மாலினைச் சிறிய தந்தையா யுடையோன்
கணைகளா வையறுத் திட்டான்.

எ-து. அந்தக் குமுதமென்கின்ற யானையானது வாலினாலே சிறிதசுரரைச் சுற்றிக் கடல் முதலாகிய இடங்களிலே வீசும். சிறிது பேரை மந்தரகிரி மலையானது பாற்கடல் வயிறுளைந்தலறிடக் கலக்கினால் எத்தன்மைத்தோ அப்படிப்போல அசுரவெள்ளங்களைக் கலக்கி உழக்கி யதம் செய்யும்படியாகிய காலங்களிலே யூகத்தலைவர், பட்டவர்த்தனர், நிவாத கவச காலகேயர்கள் முதலாகிய பேர்கள் கோபித்தவர்களாய் வந்து வளைந்து சரமாரிகளைத் தொடுத்து நிற்குங் காலையில் மாதவனைச் சிறிய தகப்பனாக வுடையவன் தனது கணைகளாலே அதையெல்லாம் அறுத்துத் தூளிப்படல மாக்கிநின்றான் இந்திர மகாராசபுத்திரன் என்றவாறு. (9)

மந்தரம் கடலினை மதித்தல்போல் குமுதமானது அசுரர்கள்தம் தலைவரை உழக்க என்க. மந்தரம் - கடலைக் கடைந்தபோது மத்தாகப் பயன்படுத்தப்பட்ட மலை. மதித்தல் - கடைதல். உழக்குதல் - கலக்குதல். கோல் - அம்பு

**Iru tiṟappōr**

*vāliṉāṟ cuṟṟi yeṟintituñ cilarai*
*mantaraṅ kaṭaliṉai matittaṟ*
*pōlacu rarkaṭan talaivarai yuḻakkap*
*puntinain turukiman tirarkaḷ*
*kōliṉai yaṉantaṅ kōṭiyōr toṭaiyāyk*
*kōlakāṉ ṭipattiṉ viṭuppa*
*māliṉaic ciṟiya tantaiyā yuṭaiyōṉ*
*kaṇaikaḷā vaiyaṟut tiṭṭāṉ.*

**The Battle**

Some were bound by its tail
And thrown down. As if the Mantara Hill
Were churning the sea, the Acura leaders
Were thrown around; strategists
And other soldiers made a garland
Of thousands of arrows and released them.
But he who has Nārāyaṇaṉ[1] as the uncle
Cut them down.

(பலவகைக் கணைகள்)

538. சார்ங்கவில் வணக்கி நாணினை யேற்றிச்
சரங்களை யெய்தனர் மழைபோ
லேந்தலாஞ் சயந்த னவைகளை யறுத்து
மவுலியைத் துகள்பட வெய்து
சாந்தமில் லவர்தம் வில்லினைத் துகளாய்க்
கண்டபின் சாரதி தலையை
நேர்ந்திட வறுத்துப் பரிகளைக் கொண்டு
நீசர்தேர் நொறுக்கிநின் றார்த்தான்.

எ-து. அப்படிச் சூழ்ந்து இரதத்தை விட்டுக்கொண்டுவந்த கோரரூபிகளாகிய காலநேமியினுடைய மந்திரிமார்கள் முதலாகிய பேர்கள் காண்டீபத்தை வளைத்துச் சரமழை தூவி ஆர்ப்பரித்தார்கள். அதை இந்திர புத்திரனானவன் கண்டு கணைமாரிகளைப் பொழிந்து அந்தக் கணைகளை யெல்லாம் கண்டித்தவர்கள் மவுலியின் அனேக அக்கினி பாணங்கள்

---

1. Cayantaṉ

விட்டுப் பங்கப்படுத்தித் தள்ளியும், அவர்கள் வில்லினைக் கண்டித்து வீழ்த்தியும், அதன் பின்பு சாரதி சிரசுகளை அறுத்தும், அவர் தேரில் கட்டிய குதிரைக் கூட்டங்களைத் தூளிப்படலமாக நொறுக்கியும், வீழ்த்தான் சயந்த மகாராசன் என்றவாறு. (10)

சார்ங்கம் - திருமாலின் ஐம்படைகளில் ஒன்றான வில்லின் பெயர். மவுலி - முடி.

## Palavakaik kaṇaikaḷ

*cārṅkavil vaṇakki nāṇiṉai yēṟṟic*
*caraṅkaḷai yeytaṉar maḻaipō*
*lēntalāñ cayanta ṉavaikaḷai yaṟuttu*
*mavuliyait tukaḷpaṭa veytu*
*cāntamil lavartam villiṉait tukaḷāyk*
*kaṇṭapiṉ cārati talaiyai*
*nērntiṭa vaṟuttup parikaḷaik koṇṭu*
*nīcartēr noṟukkiṉiṉ ṟārttāṉ.*

## A Variety of Missiles

Bending the Cārṅkam bow and tightening
The string, they poured down arrows.
The hero Cayantaṉ cut them down
And pulverised their crowns,
Broke their bows to pieces,
Cut up the heads of charioteers
And decimated the yoked horses.

(கும்பனின் சீற்றம்)

539. கண்டபின் வெகுண்டான் திசையெலாங் கறங்காய்ச்
சுழன்றன சாகரங் கலங்க
அண்டகோ ளகையு மதிர்ந்தன புவன
மனைத்துமெய் வசம தாகப்
புண்டரீ கப்பெரி யானையே முதலாம்
புலம்பியே வீறிடப் புகுந்த
தண்டலி னுடுக்க ளுதிர்ந்தன கிரிக
டளர்ந்தன சாகரம் வெடித்த.

எ-து. இந்தப் பிரகாரம் சகலமான சூராதி சூரர் வீராதிவீரர் முதலாகிய பேர்களெல்லாம் உத்த சன்னாகத்தில் நிற்கமாட்டாமல் ஓட, அதைக் கண்ணாலே பார்த்த மாத்திரத்தில் கும்பனென்னும் மந்திரத்தலைவன் கோபித்தான். பிரளய கால உருத்திரன்போலத் திக்குத் திகாந்தங்க ளெல்லாம் ஓலைச்சக்கரம் போலச் சுழன்றன கடல்களெல்லாம் கலங்கின. அண்ட கோளகையெல்லாம் நடுங்கின. புவனமெல்லாம் மூர்ச்சித்தன. புண்டரீகம் முதலாகிய யானைகளெல்லாம் வீறிட்டன. தரைபடாத நட்சத்திரங்களெல்லாம் உதிர்ந்தன. அட்டகுலாசலங்கள் தளர்ந்தன. பூமிகளெல்லாம் வெடித்தன என்றவாறு. (11)

*கறங்கு - காற்றாடி, பம்பரம், ஓலைசசக்கரம் என்பது உரை புண்டரீகம் - எட்டுத்திக்கு* யானைகளுள் ஒன்று. அக்கினித்திசையாகிய தென் கிழக்குத்திசையில் காவல் புரிவது. தண்டலில் - அழிதல் இல்லாத. கிரிகள்+தளர்ந்தன சாகரம் - கடல் பூமி என்பது உரை

## Kumpaṉiṉ ciṟṟam

*kaṇṭapiṉ vekuṇṭāṉ ticaiyelāṅ kaṟaṅkāyc*
*cuḻaṉṟaṉa cākaraṅ kalaṅka*
*aṇṭakō ḷakaiyu matirntaṉa puvaṉa*
*maṉaittumey vacama tākap*
*puṇṭarī kapperi yāṉaiyē mutalām*
*pulampiyē vīṟiṭap pukunta*
*taṇṭali ṉuṭukka ḷutirntaṉa kirika*
*ṭaḷarntaṉa cākaram veṭitta.*

## Kumpaṉ's Fury

The strategist Kumpaṉ became furious
Watching the soldiers whirl around
Like kites, the oceans in an uproar,
And the universe undergoing shocks.
The entire earth went into swoon.
Elephants like Puṇṭarīkam groaned.
The indestructible stars fell down.
The mountains grew frail
While the ocean was blasted.

### (கும்பன், சயந்தன்முன் தேரைச் செலுத்தச் செய்தல்)

540. சாரதி விளிந்து தேரினைத் தூண்டிச்
சயந்தனின் வாரணமுன் முயற்றி
மாரியாய்க் கணைகள் தூண்டியே யவனை
மடித்திடல் போரமர் மாட்டிக்
கூரிய கணையும் வில்லினைத் துகளாய்ச்
செய்தபின் கூற்றனூர் புகச்செய
வேரியந் தொடையல் புனையவே வேண்டு
மென்றனன் கும்பனாம் வெய்யோன்.

எ-து. தன்னுடைய சாரதியைக் கும்பனென்கின்ற மந்திரத் தலைவன் பார்த்துக் கூறுகின்றான். . நம்முடைய தேரை நடாத்திச் சயந்தனென்கின்றவன் ஆரோகணிதமான குமுதமென்னும் யானைக்கு முன்பாகச் செலுத்துவையாகில், மாரிக்காலம்போலக் கணை மாரிகளைப் பொழிந்து அவன் இரங்கத்தக்கதாய் யுத்தம் செய்து அவனுடைய கணைகளையும் வில்லையும் வெட்டித் தூளியாக்கி அவனை எமனூர்க்கனுப்பின பின்பு, திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற வெற்றி மாலையை அணியவேண்டு மாகையால் அதிக துரிதமாய் நமது தேரினைச் செலுத்தென்றான் கும்பனென்கின்ற மந்திரத்தலைவன் என்றவாறு. (12)

முயற்றி - முயற்சிசெய்து, செலுத்தி. வேரியந்தொடையல் - வேரி - நறுமணம். தொடையல் - மாலை, வெற்றி மாலை.

### Kumpaṉ, Cayantaṉmuṉ tēraic celuttac ceytal

*cārati viḷintu tēriṉait tūṇṭic*
*cayantaṉiṉ vāraṇamuṉ muyaṟṟi*
*māriyāyk kaṇaikaḷ tūṇṭiyē yavaṉai*
*maṭittiṭal pōramar māṭṭik*
*kūriya kaṇaiyum villiṉait tukaḷāyc*
*ceytapiṉ kūṟṟaṉūr pukacceya*
*vēriyan toṭaiyal puṉaiyavē vēṇṭu*
*meṉṟaṉaṉ kumpaṉām veyyōṉ.*

### Kumpaṉ's Chariot Towards Cayantaṉ

The fiery Kumpaṉ commanded his charioteer
To draw close to the elephant of Cayantaṉ.
"I have to shower arrows like a rain

And kill him. His sharp arrows and bow
Have to be pulverised by me.
Having sent him to the abode of death
I must wear the garland of victory."

(சயந்தனின் சோர்வு)

541. என்றபின் னவனும் விரைவினிற் றேரை
எந்திரம் போலவே நடாத்திக்
குன்றம்போன் றுயர்ந்த களிற்றின்மீ திவரும்
புரந்தரன் குமரன்முன் னுய்ப்பச்
சென்றவன் புகரின் மந்திர மறைந்தான்
தேவமா மாய்கைகள் சிதைய
நின்றன ரொன்றா யானையுந் தானு
நிருதர்கோ னிவைநிகழ்த் திடுமால்.

எ-து. இந்தப் பிரகாரம் மந்திரத் தலைவன் சொல்லக் கேட்ட இரத சாரதியானவன் அதிக துரிதமாய்க் குலாலன் சக்கரத்தைப்போல இரதமானது சுழலத் தக்கதாய் நடாத்தினவனாய்ப் பர்வதாகாரமாகி உயர்ந்திராநின்ற குமுதமென்னும் வாரணத்துக்கு முன்பாகக் கொண்டு வந்து நிறுத்தினான். அப்போது சயந்த மகாராசன் பார்த்து அவன் தேவ மாய்கையினாலே அனேக கோடி சயந்தனும், அனேக கோடி குமுத யானையாய்த் தோன்றியதைக் குறித்துச் சுக்கிராசாரி தனக்குச் சொன்ன மந்திரத்தை உச்சரித்தான். அப்போதே வியாழபகவானுடைய தேவ மாய்கையெல்லாம் ஒடுங்கி, ஏக முகுர்த்தமான சயந்தனும் ஒரு குமுதமாய் ஒடுங்கி நின்றான். அதைப் பார்த்து இந்த உத்தரத்தைக் கூறுகின்றான் என்றவாறு. (13)

புரந்தரன் - இந்திரன். உய்த்தல் - சேர்த்தல். புகர் - சுக்கிராச்சாரி. அறைதல் - கூறுதல். நிருதர்கோன் - அசுரர் தலைவன்.

## Cayantaṉiṉ cōrvu

*eṉṟapiṉ ṉavaṉum viraiviṉiṟ ṟērai*
*entiram pōlavē naṭāttik*
*kuṉṟampōṉ ṟuyarnta kaḷiṟṟiṉmī tivarum*
*purantaraṉ kumaraṉmuṉ ṉuyppac*
*ceṉṟavaṉ pukariṉ mantira maṟaintāṉ*
*tēvamā māykaikaḷ citaiya*
*niṉṟaṉa roṉṟā yāṉaiyun tāṉu*
*nirutarkō ṉivainikaḻt tiṭumāl.*

## Cayantaṉ Grows Weak

Immediately the charioteer drove
The vehicle like a speeding machine
And brought it face to face
With the son of Intiraṉ who was riding
The mountainous elephant. The Acura used
Incantations to destroy the divine spell.
Cayantaṉ now stood alone with his elephant.
The Acura king began to speak.

(கும்பன் சயந்தனுக்குக் கூறுதல்)

542. விசையம தடைந்தே மென்றெணி வீறு
கொண்டனை மாய்கையின் வினோதப்
பசையகன் றனவா லென்செய நினைந்தாய்
பகருதி பார்த்திப மைந்த
திசையினர் நினக்கு வுபபல மாகித்
திகழ்ந்தனர் செலுத்துதி வீரம்
வசையினைத் துடைத்து வானவர்க் கெல்லாம்
வண்மையை நிறுத்துதி யென்றான்.

எ-து. சயந்த மகாராசனைப் பார்த்து மந்திரியானவன் சொல்கின்றான். நீ விசையத்தை அடைந்தோமென்று சிமம ஏறுபோல வீறு கொண்டாய் உனது தேவ மாய்கையானது நீங்கிற்று நீ என்ன செய்ய நினைத்திருக்கின்றாய்? அரச புத்திரனே! திக்குப் பாலகராகிய நின் தந்தை முதலினோர் உனக்கு உபபலமாகிச் செறிந்து சூழ்ந்திருக்கின்றார்கள் அவர்கள் ஒத்தாசையைப் பெற்றாவது உனது வீரத்தைச் செலுத்தாமல் வீணாளாய்க் காலம் கழிப்பது சுத்த வீரனுக்கு இயல்போ? ஆகையால் உனது வண்மையை நிறுத்தென்றான் என்றவாறு (14)

என்றெணி - என்று எணணி. பசை - ஆதரவு, துணை பார்த்திபமைந்தன் - அரச குமாரன். உபபலம் - துணை வசை - இகழச்சி.

## Kumpaṉ Cayantaṉukkuk kūṟutal

*vicaiyama taṭaintē meṉṟeṇi vīṟu*
*koṇṭaṉai māykaiyiṉ viṉōtap*
*pacaiyakaṉ ṟaṉavā leṉceya niṉaintāy*
*pakaruti pārttipa mainta*

*ticaiyinar ninakku vupapala mākit*
*tikalntanar celuttuti vīram*
*vacaiyinait tuṭaittu vānavark kellām*
*vaṇmaiyai niruttuti yenrān.*

## Kumpan to Cayantan

"You became arrogant with your victory.
Now that the magic spell woven by you
Has been nullified, what do you intend to do?
Speak, son of Intiran. The gods of directions
Surround you as your guardians.
Show your heroism. Remove this stain
On your bravery and reveal your strength."

(போரினால் உலக நடுக்கம்)

543. ஒருவருக் கொருவர் பின்னிடா ராகி
யோங்கிய சமரினை யிழைத்தங்
கிருவரு மிளைக்கா தண்டகோ ளத்தி
லெய்தியே யிருஞ்சமர் புரிந்து
கருதரு தீவிற் சென்றனர் பின்னர்
நவகண்டப் பரப்பினிற் கலந்து
வெருவியே யுலகந் திடுக்கிடச் செய்தா
ருயர்ந்ததண் டத்தினாற் பூசல்.

எ-து. இந்தப் பிரகாரம் ஒருவர்க்கொருவர் இளைக்காதவர்களாய்ச் சயந்தனும் மந்திரியும் மிகுந்த யுத்தங்களைச் செய்து அண்ட கோளகையெல்லாம் திரிந்து அருமையான தனுர் வேத பரிக்ஷையெல்லாம் தாபித்தார்கள். அதன் பின்பு கடலிடத்தில் இருக்கின்ற தீவிலேயும் போய்ச்சென்று யுத்தம் பண்ணி இளைத்தார்கள் அதன் பின்பு நாவலந் தீவாகிய உவர்க்கடல் சூழ்ந்த கடலினை நவகண்டமாக்கிக் கொடுத்த நவகண்டமெல்லாம் திரிந்து களைத்துக் கணை மழைகளைத் தூவினார்கள். அதனால், இந்த உலகமெல்லாம் திடுக்கிட்டுக் கலங்கி இந்தத் தண்டத்தின் ஓசையாகிய வலிகளைப் பார்த்து மயங்கி வலிதொலைந்தார்கள் என்றவாறு. (15)

கருதருதீவு - கருதுதற்கரிய தீவு; நினைத்தற்கரிய தீவு. நவகண்டம் - கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம் என்னும் ஒன்பது கண்டங்கள். தண்டம் - படை, ஆயுதம்.

## Pōriṉāl ulaka naṭukkam

*oruvaruk koruvar piṉṉiṭā rāki*
*yōṅkiya camariṉai yiḻaittaṉ*
*kiruvaru miḷaikkā taṇṭakō ḷatti*
*leytiyē yiruñcamar purintu*
*karutaru tīviṟ ceṉṟaṉar piṉṉar*
*naṿakaṇṭap parappiṉiṟ kalantu*
*veruviyē yulakan tiṭukkiṭac ceytā*
*ruyarntataṇ ṭattiṉāṟ pūcal.*

## The Earth is Shaken

Neither side was in a mood to withdraw.
Both fell to fierce battle; neither grew
Tired. They fought all over the universe.
They battled in remote islands mid the sea.
They spread all over the nine continents
And made the earth grow wan with shock,
Fighting with terrible armaments.

(சயந்தன் மூர்ச்சித்தல்)

544. அரக்கன்றன் கையைச் சயந்தனு மறுத்தான்
அவைகளு முன்புபோன் முளைக்கத்
தரக்கெனு மிருவர் வச்சிர மெடுத்துத்
தாழ்விலா தருஞ்சமர் தாக்க
இரக்கமிற் கும்ப னடித்தனன் சயந்தன்
மூர்ச்சினை யெய்தியே யிளைத்தான்
பரித்ததே ரேறி யசுரனு மகிழ்ந்தான்
பண்ணவர் பார்த்தன ரன்றே.

எ-து. அப்படித் தன் கையை மந்திரியாகிய கும்பன் அறுத்த பின்பு, சயந்த மகாராசனும் கும்பன் கையை அறுத்துக் கீழே தள்ளினான். அவனுக்குப் பிரமா வரத்தினாலே முன்புபோல கை முளைத்தெழுந்தது. அந்தக் கையினாலே வச்சிராயுதத்தை எடுத்து இடசாரி வலசாரியாய் வீசிச் சுழன்று வந்து இந்திரன் மகனை அடித்தான். அந்த அடியானது கோடைக்காலத்தின் இடிபோலச் சயந்தன் மார்பகத்தில் தாக்கிய மாத்திரத்திலே சயந்த

மகாராசன் மூர்ச்சை அடைந்து அந்தக்களத்திலே வீழ்ந்தான். இதைக்கண்டு மந்திரியும் மனம் களிகூர்ந்தவனாய்த் தன்னுடைய இரதத்திலே ஏறிச் சந்தோஷிக்கச் செய பேரிகை அறைவித்தார்கள் என்றவாறு. (16)

தரக்கு - புலி. வச்சிரம் - வச்சிராயுதம். பரித்ததேர் - சுமக்குந்தேர். பண்ணவர் - தேவர்கள்

## Cayantaṉ mūrccittal

*arakkaṉraṉ kaiyaic cayantaṉu maruttāṉ*
*avaikaḷu muṉpupōṉ muḷaikkat*
*tarạkkeṉu miruvar vaccira meṭuttut*
*tāḷvilā taruñcamar tākka*
*irakkamiṟ kumpa ṉaṭittaṉaṉ cayantaṉ*
*mūrcciṉai yeytiyē yiḷaittāṉ*
*parittatē rēṟi yacuraṉu makiḻntāṉ*
*paṇṇavar pārttaṉa raṉṟē.*

## Cayantaṉ in a Swoon

Cayantaṉ cut up the Acuraṉ's hand,
And had his cut by him. They grew again.
Taking up the thunderbolt swiftly
They fought an incredible battle.
Kumpaṉ pounded mercilessly.
Cayantaṉ swooned, having grown tired.
The Acura happily ascended
His horse-drawn chariot. His victory
Was announced by a beat of drums.

**(சயந்தன் மூர்ச்சிக்கச் சூரியன் பயந்து மறைந்தான்)**

545. **இந்திரன் புதல்வ னிளைத்துமூர்ச் சித்தா**
**னிரவியாம் பண்ணவ னறிந்து**
**தந்திர மான தானவர் வெகுண்டு**
**நந்தமைச் சார்குவ ரென்றே**

சிந்தனை கலங்கிப் பருதியஞ் செல்வன்
　　மேற்கடல் குளித்தல்போற் சேர்ந்தான்
சந்திர னுதித்த லிந்திரன் றாக்கற்
　　காண்பது போலவே சார்ந்தான்.

எ-து. அப்படிச் சமர் பூமியிலே இந்திர புத்திரனாகிய சயந்தமகாராசன் இளைத்து மூர்ச்சை அடைந்ததைச் சூரிய பகவான் கண்டு, காலநேமி முதலாகிய அசுராள் கோபங்கொண்டொரு வேளையில் நமது பேரில் யுத்தத்துக்கு வருவார்களென்று பயந்து, மேற்குச் சமுத்திரத்திலே போய் மறைந்தான். அப்போது இருளானது உலகங்களையெல்லாம் மூடிக்கொள்ள, அந்தச் சமயத்தில் சந்திரனானவன் உதித்தது எப்படிப் பிரகாசிக்குதென்றால் தேவராசனாகிய இந்திரனுக்குச் சகாயமாக வந்து கூடினதுபோல விளங்கியது என்றவாறு. (17)

இரவி - சூரியன் தானவர் - அசுரர். நந்தமை - நம்தம்மை ; நம்மை.

**சயந்தன் சமர் புரிந்த அத்தியாயம் முற்றிற்று.**

## Cayantaṉ mūrccikkac Cūriyaṉ payantu maṟaintāṉ

*intiraṉ putalva ṉiḷaittumūrc cittā*
*　　ṉiraviyām paṇṇava ṉarintu*
*tantira māṉa tāṉavar vekuṇṭu*
*　　nantamaic cārkuva reṉṟē*
*cintaṉai kalaṅkip parutiyañ celvaṉ*
*　　mēṟkaṭal kuḷittalpōṟ cērntāṉ*
*cantira ṉutitta lintiraṉ ṟākkaṟ*
*　　kāṇpatu pōlavē cārntāṉ.*

## Cayantaṉ Swoons, the Sun Goes Down

The sun noted that Intiraṉ's son
Had swooned. Afraid that the Acuras
Might mount an attack, the sun grew afraid
And entered the sea in the west.
The appearance of the moon seemed
As if help had come for Intiraṉ.

# 31. இருபத்து ஏழாவது
# இந்திரன் சமர்புரிந்த அத்தியாயம்

சந்திரன் ஒளிவீசும் அந்த நேரத்தில் இந்திரன் முதலாகிய தேவர்கள் சங்கநாதம் செய்தார்கள். இந்திரன், அக்கினித்தேவர் முதலாகிய தேவர்களால் அசுரர்பலர் அழிக்கப்பட்டனர். அசுரர்களும் அழற்கணை, பிரசண்டமாருதக் கணை போன்றவற்றை வீசத் திக்குப் பாலகர்கள் அவற்றை நொறுக்கினார்கள். வருணனும், எமனும் போரில் கலந்து கொண்டார்கள். யானை, குதிரை, காலாட் படைகள் பல கரிந்து போயின. நிருதியும் ஈசானியத் தேவரும் பலபடைகளை அடித்து நொறுங்கச் செய்தார்கள்.

இவ்விதமான தேவர்களின் வெற்றியைக் கண்ட அசுரர்மந்திரிகள் மோகன மாய்கையினாலே வெல்லவேண்டும் என்று திட்டமிட்டார்கள். பிரம்மன், நாராயணன, உருத்திரமூர்த்தி ஆகியோர்களின் துணையால் தேவர்கள் வெற்றிபெற்று இறுமாப்பு அடைந்துள்ளார்கள் என்று கருதிய அசுரவீரர்கள், மந்திரிகள் யாவரும் ஒன்று கூடி, இந்தத் தேவர்களின் மீது மாயக் கணைகளைத் தூவியே வெற்றிபெற வேண்டும் என்று முடிவு செய்தார்கள். மேலும் அவர்கள் நான்கு பிரிவாய்ப் பிரிந்துநிற்க அவர்களுக்குத் தெரியாமல் மாய்கை செய்து அக்கணைகளை விடவேண்டும் என்றும் திட்டமிட்டார்கள். அதன்படி தேரில் ஏறி நான்கு திசையிலும் பரவி நின்றார்கள். அப்போது கதிரவனும தோன்றினான்

அசுரர்கள் கணைமாரி பொழியத் தொடங்கினார்கள். அதையறிந்த திக்குப்பாலகர் நான்கு திக்குகளிலும் பரவிநின்று பிரசண்ட மாருதக்கணைகள், வடவாமுக அககினிக் கணைகள், தருமராசன் பகழிகள் போன்றவற்றைப் பிரயோகித்துத் தேவர்களைக் காத்தார்கள். பூமியில் உள்ள பெரிய குழிகளில் இறங்கி உடலை மறைத்துக் கொண்டு, கைகளை மட்டும் நீட்டி அவர்களின் தேர்களைப் பிடித்துக் கொணடு அசையாதபடி செய்யுமாறு தம படையினருக்குக் கட்டளை இடுகின்றனர் அசுரர் தலைவர்களான காலநேமி முதலானவர்கள் அதன்படி சிலர் குழிகளை அமைத்தார்கள். சிலர் அக்குழிகளில் இருந்துகொண்டு தேர்களைப் பிடித்து நிறுத்தினார்கள். மேலும் போரைச் செய்ய இயலாதவர்களாய்த தேவர்கள் திகைத்தார்கள். அசுரர்கள் மாய்கையால் குழியிலிருந்து நிகழ்ததிய இச்செயலை அறிந்தார்கள் திக்குப்பாலகர்கள். உடனே தேர்களிலிருந்து குதித்துச் சிங்கத்தைப்போலச் சீறி வாள், கண்ட கோடரி, வச்சிராயுதம் போன்ற ஆயுதங்களை ஏந்தியவர்களாயப் புறப்பட்டார்கள். அவ்வாறு புறப்பட்ட திக்குப் பாலகர்கள் அசுரர் கூட்டங்களை அதம் செய்தார்கள. இதையறிந்த அசுரர்தலைவர்கள் தங்களிடமிருந்த நாகக கணையாகிய பாசததினால் திக்குப்பாலகர்களின் புயங்களை இறுக்கக் கட்டினார்கள் திக்குப் பாலகர்கள கட்டுண்டு மயங்கியிருந்தபோது பிரமாஸ்திரத்தை ஏவினார்கள். அக்கணையானது தேவாமிர்தம் உண்ட வலியையும் விலக்கி அவர்கள் உயிரைக் கவர்ந்து, காலநேமி முதலாகிய அசுரர் தலைவரிடம வந்து சேர்ந்தது. மகிழ்ச்சியடைந்த காலநேமி வெற்றி நாதங்களை முழங்கச் செயது மகிழ்ந்தான். வெற்றிபெற்ற காலநேமி மந்திரிமார் சூழ, இந்திராணியை அடைய

வேண்டுமென்ற விருப்பத்தோடு வருகின்றான். இதையறிந்த கருடபகவான் மந்தர மலையானது சிறகடித்துப் பறந்ததுபோல விரைந்து வந்தார். கோலாசலத்தை அடைந்த கருடபகவான் அரங்கநாயகரை வணங்கித் தேவர்களைக் காத்து அருளுமாறு வேண்டினார்.

உடனே தமது தேர்ப்பாகனாகிய தாருகனை அழைக்குமாறு கட்டளையிட்டார் அரங்கநாயகர். அதன்படியே சென்று தேரோடு வரும்படியாகத் தாருகனிடம் கூறியருளினார் கருடாழ்வார். உடனே தாருகனும் தேருடன் கோலாசலத்தை அடைந்தான்.

**(சந்திரன் தோன்ற தேவர்கள் சங்கு முழக்குதல்)**

546. **கண்ட தேவர்கள் காவலன் காய்சினங்**
**கொண்டு மாழ்கிக் கொடிப்படை யோடுசேர்ந்**
**தண்ட மியாவு நடுங்கிட வார்த்துப்பின்**
**சண்டக் காலெனச் சங்க முழக்கினான்.**

எ-து. அந்தச் சமயத்திலே சந்திரனானவன் பிரகாசிக்கக் கண்ட இந்திரன் முதலாகிய தேவர்கூட்டங்கள் தங்கள் இரதங்களில் ஆரோகணிதராய்த் திக்குப்பாலகர் முதலான சயினியங்களுடனே கோபக் குரோதராய் அண்டரண்டங்களும் பிளக்கத்தக்கதாக ஆர்ப்பரித்து, ஊழிக்காலத்தில் வீசாநின்ற சண்ட மாருதம்போலச் சங்கத்தொனி முழக்கினார்கள் என்றவாறு. (1)

தேவாகள் காவலன் - இந்திரன். காய்சினம் - மிகுந்த கோபம். காய்தல் - கோபித்தல். சணடைக்கால - சண்டமாருதம் - கால் - காற்று

## Cantiraṉ tōṉṟa tēvarkaḷ caṅku muḻakkutal

*kaṇṭa tēvarkaḷ kāvalaṉ kāyciṉaṅ*
*koṇṭu māḻkik koṭippaṭai yōṭucērn*
*taṇṭa miyāvu naṭuṅkiṭa vārttuppiṉ*
*caṇṭak kāleṉac caṅka muḻakkiṉāṉ.*

## XXXI. Intiraṉ's War
## The Gods Blow Conches

Watching the moon rise, the chief of Gods
Grew furious, joined his flag-waving army,
Made sounds of victory shaking the earth
And blew his conch like a whirl wind.

### (இந்திரன் அசுரரை அழித்தல்)

547. இந்தி ரன்தன் விருஞ்சிலை கொட்டியே
பந்தி யாகிய சேனைப் பரப்பெலாஞ்
சிந்தி நின்று சிறந்தநால் திக்கினும்
வந்த பேரை வதைத்தனன் வண்மையால்.

எ-து. இந்திர மகாராசனானவன் தனது வில்லாகிய இந்திர தனுசை வளைத்துக் கணைமழை தூவிப் பந்திப் பந்தியாய் வந்து நிறைந்திராநின்ற சேனை வருக்கத்தின் பரப்பை யெல்லாம் ஒரு நொடிப்பொழுதிலே தூளிப்படலமாய் நூழியாடலாகிய வெறியாட்டு, சுத்த வீரதத்துவ இலட்சணங்களை ஒரு முகுர்த்தம் சமர் செய்து வெற்றி பெற்றான் மற்ற அக்கினித்தேவன் முதலாகிய பேர்கள் ஒரு திக்குக்கு இருவராய் இருந்து கணைமழை தூவி வெற்றி பெற்றார்கள். இப்படி நான்கு திக்கினும் வந்து பிரவேசித்த அசுர வெள்ளங்களெல்லாம் அவயமாய் மடிந்தன என்றவாறு. (2)

**உரை** - நூழியாடல் - நூழிலாட்டு - புறத்துறைகளில் ஒன்று. வீரன் தன் மார்பில் தைத்த அம்பைப் பிடுங்கித் தன் பகைவர் மேல் எறியும் வீரச்செயல் புரியும் நிலை.

வெறியாட்டு - புறத்துறைகளில் ஒன்று.

### Intiraṉ acurarai aḻittal

*inti raṉtaṉ viruñcilai koṭṭiyē*
*panti yākiya cēṉaip parappelāñ*
*cinti niṉṟu ciṟantanāl tikkiṉum*
*vanta pērai vataittaṉaṉ vaṇmaiyāl.*

### Intiraṉ Destroys Acuras

Intiraṉ bent his bow and showered arrows
And pulverised the enemy formations.
He mercilessly destroyed all those
Who gathered from the four directions.

### (திக்குப்பாலர்கள் அம்புமாரி பொழிதல்)

548. அங்கி மாப்படைக் காற்றி னரும்படைப்
பொங்கிச் செல்லும் வயிரப் பொரும்படைச்
சிங்க மன்ன வசுரர்தஞ் சேனையை
நுங்கித் தூளாய் நொறுக்கி முடுக்கினார்.

எ-து. அக்கினிப் பிழம்பினையும் சூறாவளிக் காற்றினையும், விஷச் சுவாலையையும் பொழிந்து கொடூரமாய்ப் பிரகாசிக்காநின்ற அழற்கணைகளும், பிரசண்ட மாருதக் கணைகளும், எமனைப்போன்ற வச்சிரச் சிலீமுகங்களும் ஆகிய பாணங்களை யெல்லாம் தங்கள் காண்டீபத்தில் பூட்டிப் புங்கானு புங்கமாய்த் தூவிச் சிங்கம்போ லிராநின்ற அசுர சேனைகளையெல்லாம் முழுங்கிடச் செய்து தூளிப் படலமாக நொறுக்கினார்கள் திக்குப் பாலகர்கள் என்றவாறு. (3)

அங்கி - நெருப்பு. படை - கணை. நுங்குதல் - விழுங்குதல்

உரை - சிலீமுகம் - அம்பு.

## Tikkuppālarkaḷ ampumāri poḻital

*aṅki māppaṭaik kāṟṟi ṉarumpaṭaip*
*poṅkic cellum vayirap porumpaṭaic*
*ciṅka maṉṉa vacurartañ cēṉaiyai*
*nuṅkit tūḷāy noṟukki muṭukkiṉār.*

## Guardians of the Directions

The gods of directions pulverised
The lion-like Acura enemy formations
By aiming missiles of fire, wind,
And thunderbolt that were unstoppable.

(வருணனும் இயமனும் போரிடல்)

549. வருண னந்தகன் வார்சிலை பூட்டியே
கருணை யில்லவர் தேரைக் கரிகளைப்
பெருகு கின்ற துரங்கப் பலத்தினைக்
கருது சேனைக் கணக்கில மாய்த்தனர்.

எ-து. இவ்விதமாகிய வருண மகாராசனும் எமதர்ம ராசனும் நீண்ட வில்லினை வளைத்து அனேகமாகிய கணைகளைப் புங்கானு புங்கமாய்க் கரோவேகம் சரோவேகமாய்த் தூவி இரக்கமில்லாத அசுர வெள்ளங்களையும், தேர்ப்பந்திகளையும், நீலகிரியைப் போன்ற யானைத்திரட் கூட்டங்களையும், பாற்கடலைப் போன்ற குதிரைப் பந்திகளையும், கணக்கில்லாத அசுர வெள்ளங்களையும் எரிந்து கரிந்து போகச் செய்து, பிணக்குன்றமாய்க் குவித்தார்கள் என்றவாறு. (4)

அந்தகன - அழிப்பவன், எமன். துரங்கம் - குதிரை.

### Varuṇaṉum Iyamaṉum pōriṭal

*varuṇa ṉantakaṉ vārcilai pūṭṭiyē*
*karuṇai yillavar tēraik karikaḷaip*
*peruku kiṉṟa turaṅkap palattiṉaik*
*karutu cēṉaik kaṇakkila māyttaṉar.*

### Varuṇa and Yama

Varuṇa and Yama readied their bows
And destroyed the illimitable army
Of the pitiless Acuras which consisted
Of chariots, elephants and cavalry.

(நிருதிக்கும் ஈசானியனுக்கும் போர்)

550. நிருதி யீச னிருவர் நிருமலம்
பெருகு கின்ற சிலையிற் பெருங்கணைக்
குருதி கக்கிடக் கூடிய சேனையைப்
பொருது வென்று புகழினை நாட்டினார்.

எ-து. நிருதி என்பவரும், ஈசானியத் தேவருமாகிய விருவரும் தங்கள் கையினேந்திய நின்மலமாய் உரைக்காநின்ற வில்லையொரு திசையிலே வளைத்துப் பெரிய கணைகளைப் புங்கானு புங்கமாய்த் தூவி, நான்கு வகைச் சேனைகளையும் உதிர வெள்ளங்கள் கக்கிப் பெருகி வீழ்ந்தலறத் தக்கதாகச் செய்து தங்கள் செயத்தினை நாட்டினார்கள் என்றவாறு. (5)

நிருதி - தென்மேற்குத்திசைக்குரிய திக்குப்பாலகர். ஈசன் - ஈசானியத் தேவர். வடகிழக்குத் திசைக்கு உரியவர். நிருமலம் - குற்றமற்ற.

### Nirutikkum Icāṉiyaṉukkum pōr

*niruti īca ṉiruvar nirumalam*
*peruku kiṉṟa cilaiyiṟ peruṅkaṇaik*
*kuruti kakkiṭak kūṭiya cēṉaiyaip*
*porutu veṉṟu pukaḻiṉai nāṭṭiṉār.*

### Niruti, Īcāṉiyaṉ[1]

Both Niruti and Īcāṉiyaṉ took up
Their blameless bows, released

---

1. Niruti : Guardian of the South - West; Icāṉiyaṉ : Guardian of the North - East.

Sharp arrows and gained fame
By battling and positing a victory
Over the army that now vomitted blood.

**(அசுரர் சூட்சி)**

551. **வண்மைத் தேவர்கள் வார்சிலை மாட்சியு**
**முண்மை நீங்கு மரக்கர்க ளோர்ந்தபின்**
**மண்ணின் மாய்கைச் சிறிது மதித்துள**
**வெண்மைப் புந்தி வெறுத்திவை கூறுவார்.**

எ-து. பெருமை பொருந்திய தேவாதிகள்வெற்றி பெற்ற சந்தோஷமும், அவர் வில் வளைந்து செயங்கொண்டுக்காநின்ற காலத்தையும் குறித்த உண்மைக்கு விரோதமாகிய கொடூரசாலிகளான அசுர மந்திரியர்கள் முதலாகிய பேர்கள் ஆலோசித்து, இந்த விசையத்தினால் இறுமாக்காநின்ற இவரை மோகன மாய்கையால் வெல்வோம் என்ற அறிவினாலே மதித்துணர்ந்தவர்களாய் வெளுத்த அறிவினையுடைய தங்கள் அசுரக் கூட்டத்தைப் பார்த்துச் சொல்லுவார்கள் என்றவாறு. (6)

மாட்சி - பெருமை. ஓர்தல் - தெளிதல்.

## Acurar cūṭci

*vaṇmait tēvarkaḷ vārcilai māṭciyu*
*muṇmai nīṅku marakkarka ḷōrntapiṉ*
*maṇṇiṉ māykaic ciṟitu matittuḷa*
*veṇmaip punti veṟuttivai kūṟuvār.*

## The Acuraṉ Machinations

When the untruthful Acuraṉs realised
The strength of the handsome bows divine,
They decided to win by trickery
And spoke to their guileless army thus:

**(அசுரர் வருத்தம்)**

552. தேவ ராக்கச் சிறப்பினைத் தேர்ந்திடின்
மூவர் மூலமாய் முந்திய தென்னலாங்
காவ லாமசு ரேசர் கலங்கினார்
நாவு லர்ந்து நடுங்கின மியாமென்றார்.

எ-து. மந்திரி முதலாகிய பேர்கள் ஒருவருக்கொருவர் கூறுகின்றார்கள். தேவர்க்கூட்டம் சிம்ம ஏறுபோல சந்தோஷித்து இருப்பதை அறியின், அன்னவர்கள் அச்சிறப்பமைந்த சிருட்டிகர்த்தாவாகிய பிரம்மாவும், கருடவாகனத்தையுடைய இரட்சகக் கர்த்தாவான நாராயண மூர்த்தியும், இடப வாகன மூர்ந்த சம்மாரக் கர்த்தாவாகிய உருத்திர மூர்த்தியும், இவர்களுக்கு ஆதரவு சொல்லிய காரணத்தால் இந்த வெற்றியைப் பெற்றார்கள். ஆகையால் நமது சேனைக்கு இத்தலைமையான நிவாதகவச காலகேயர்கள், பட்டவர்த்தனர்கள், மகுடவர்த்தனர்கள், அணித்தலைவர்கள், யூகத்தலைவர்கள் முதலாகிய பேர்களெல்லாம் கலங்கி இடருழந்து நைந்தோடினார்கள். நாமெல்லாம் நாவுலர்ந்தவர்களாய் இருக்கும் தன்மையைப் பெற்றோம் என்றார்கள் என்றவாறு. (7)

ஆக்கம் - பெருக்கம், சிறப்பு. மூவர் - சிவன், திருமால், பிரமன் ஆகிய மூவர்

## Acurar varuttam

*tēva rākkac cirappinait tērntițin*
*mūvar mūlamāy muntiya tennalāṅ*
*kāva lāmacu rēcar kalaṅkinār*
*nāvu larntu națuṅkina miyāmenrār.*

## The Acurās are Sad

Listening to the victory-sounds of gods
It was obvious that they gained in the war
With the help of the Trinity.
The commanders of the Acura army
Felt confounded. Their tongues were dry
And they quaked.

**(அசுரர் சிந்தனை)**

**553. என்ற மந்திர ரியாவரு மெய்தியே**
**குன்றம் போலக் குறுகிக் குறைவிலா**
**மன்றல் தங்கிய வானவ ரியாரையு**
**நின்று வெற்றிசெய் நேயம் நினைந்தனர்.**

எ-து. இந்தப் பிரகாரம் ஆலோசனை செய்யா நின்ற மந்திரர் முதலாகிய அனைவரும் ஒருங்கெய்தி, குற்றமாகிய வட்டக்குலாசல பர்வதம்போல வந்து இரணகளத்தில் நிறைந்து குறைவில்லாத மந்தார பாரிசாத மாலையானது திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற வென்றி

மாலையினை அணிந்த சிங்கம்போல விருத்தி அடைந்த தேவர் கூட்டங்களை யெல்லாம் எதிர்த்து நின்று வெற்றியைப் பெறுகின்ற அறிவை நினைந்தார்கள் மந்திரித் தலைவர் முதலாகிய பேர்கள் என்றவாறு. (8)

மன்றல் - மணம், வாசனை. நேயம் - முறை.

## Acurar cintaṉai

*eṉṟa mantira riyāvaru meytiyē*
*kuṉṟam pōlak kuṟukik kuṟaivilā*
*maṉṟal taṅkiya vāṉava riyāraiyu*
*niṉṟu veṟṟicey nēyam niṉaintaṉar.*

## The Acura's plan

The Acura stretegists came together
Like big mountains and began to plan
The methods of gaining victory over the gods
Gathered in the battlefield.

**(அசுரரின் மாயக் கணைகள்)**

554. **நம்மி னத்தி னடாத்திய சூட்சிதான்**
**விம்மி தம்பெற வெல்லின் வினோதமாந்**
**தம்மை மாய்கையின் றன்படை தன்னினால்**
**வெம்மை யீந்திடின் வென்றி விளைக்குமால்.**

எ-து. இந்தப் பிரகாரம் ஆலோசிக்காநின்ற மந்திரர் முதலாகிய அனைவோர்களும் சூட்சியாகிய உபாய தந்திரங்களைச் செய்து நமக்குச் சந்தோஷ வைபவங்களைப் பெறும் வண்ணமாய்ச் செயங்கொள்ளுதுமாயின் நம்மிட மரபிலே நடக்கையாவது தேவர்களைச் செயங்கொள்ளும் வரலாறு மாய்கை செய்து வெல்வதல்லது வேறு அல்லாத படியினாலே நாம் விருத்தியடையும் பொருட்டொரு செய்கை செய்ய வேண்டும். அது யாதென்றால் இந்த தேவர் கூட்டத்தின் மீது மாயா கணைகளை விட்டு அதனாலே வெம்பிப் புழுங்கி வருத்தப்படச் செய்தால் அதுவே நமக்கு வெற்றியைக் கொடுக்கும் என்று ஆலோசித்தார் மந்திரிமார்கள் முதலாகிய பேர்களென்றவாறு. (9)

விம்மிதம் - பெருமை. வியப்பு.

## Acurarin māyak kaṇaikaḷ

*nammi ṉatti ṉaṭāttiya cūṭcitāṉ*
*vimmi tampeṟa velliṉ viṉōtamāṉ*
*tammai māykaiyiṉ ṟaṉpaṭai taṉṉiṉāl*
*vemmai yīntiṭiṉ veṉṟi viḷaikkumāl.*

## Missiles of Acuric Illusion

"For the tricky ways of our Acuric clan
To win, we must take to illusory tactics
And get their entire army feel choked
That alone would ensure victory".

(அசுரரின் மாயச் சேனை)

555. ஆசு தீர்ந்த வனிக மவையெலாந்
தேசு பொங்குநாற் றிக்கினுஞ் சென்றுபோர்க்
காசு நீங்கிடப் பூசைசெய் காலையின்
மாசின் மாய்கையா மாப்படை யுய்த்துமால்.

எ-து. மறுபடியும் மந்திரி முதலாகிய பேர்கள் ஒரு கூட்சியாகிய ஆலோசனை செய்து குற்றம் தீர்ந்த நான்கு வகையாகிய இரத, கச, துரக பதாதிகளான சேனைகளை யெல்லாம் அழகெறிக்காநின்ற நான்கு திக்கினும் நிலைபெறச் செய்து அணியாகிய யூகம் வகுத்து அவர்கள் யுத்த சன்னாகம் பண்ணும்படியாய்ச் செய்த அந்தக் காலத்திலே நாமும் நான்கு பிரிவாய்ப் பிரிந்திருந்த அசுர மாய்கையினாலே அவர்களுக்குத் தெரியாமல் மாய்கை செய்து கணைகளைவிட்டுக் கட்டி மயங்கச் செய்வதே நமக்கு வெற்றி வருகிறதற்குக் காலம் என்று எண்ணினார்கள் என்றவாறு. (10)

ஆசு - குற்றம். அனிகம் - அனீகம் - படை.

## Acurarin māyac cēṉai

*ācu tīrnta vaṉika mavaiyelāṉ*
*tēcu poṅkunāṟ ṟikkiṉuñ ceṉṟupōrk*
*kācu nīṅkiṭap pūcaicey kālaiyiṉ*
*māciṉ māykaiyā māppaṭai yuyttumāl.*

## The Acuric Army of Illusion

Planning yet another trick when
The blameless armies would be settled

In the four directions, they targetted
The unsuspecting formations for attack
And thus decided to confound tham all.

(நான்குபுறமும் அசுரர் படை)

556. என்றி சைந்தசு ரேச ரியற்பெறு
குன்றம் போன்ற இரதத்திற் கூடியே
வென்றி யெய்திட நாற்றிசை வேறுபோய்க்
[1]கன்றி செங்கதிர் தோன்றக் களித்தனர்.

எ-து. இந்தப் பிரகாரம் யாவரும் மந்திராலோசனை செய்து இசைவு பெற்ற அசுரர்கள் யாவரும் அழகினையுடைய பொன்னங்குன்றம் போன்ற இரதத்தின் ஆரோகணிதராய்க் கூடித் தாங்கள் வெற்றி பெறும் பொருட்டாய்க் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் நான்கு திசையினும் பிரிந்து போய் நிற்க, அப்போது கிரணங்களைச் சொலிக்கா நின்ற சூரிய தேவனுதிக்கக் களித்தார்கள் என்றவாறு. (11)

பா.வே. - 1. கன்றி விற்கணை தூவிக் களித்தனர்.

## Nāṉkupuṟamum Acurar paṭai

*eṉṟi caintacu rēca riyaṟpeṟu*
*kuṉṟam pōṉṟa iratattiṟ kūṭiyē*
*veṉṟi yeytiṭa nāṟṟicai vēṟupōyk*
*kaṉṟi ceṅkatir tōṉṟak kaḷittaṉar.*

## Acura Forces Everywhere

Having decided upon the strategy
The Acura commanders ascended their chariots
That were mountainous. In pursuit of victory,
They spread to all directions
And were delighted when the sun arose.

(அசுர வெள்ளமும் தேவர் படையும்)

557. நாற்றி சைக்க ணயந்த வமரர்கள்
காற்றின் வெம்படைக் கன்றிய வங்கிதன்
மாற்ற லன்றன் மருவு பெரும்படைக்
கூற்றின் வெம்படை வில்லினிற் கூட்டியே.

எ-து. இந்தப் பிரகாரமாய் அசுர வெள்ள யூகத்தினிராநின்ற சேனாதிபதிகள், அணித்தலைவர், யூகத்தலைவர், பட்டவர்தனர், மகுடவர்தனர், நிவாத கவசகால கேயர்கள் முதலாகிய பேர்கள் விடுகின்ற சரமாரிகள் வந்து தாக்கின மாத்திரத்திலே மன நினைந்து அமரர் கூட்டங்கள் கலங்கும்போது, அட்டதிக்குப் பாலகர் நான்கு திக்கினும் பிரிந்து காண்டிபங்களை வளைத்து நாணேறிட்டுக் குணத்தொனி செய்து பிரசண்ட மாருதக் கணைகள் அனந்தமும், வடவா முகாக்கினி, சிலீ முகங்கள் அனந்தமும், கொல்லுந்தன்மையிலே குரூரமாகிய தர்மராசன் பகழிகள் வெகு விதமாகவும் வில்லினில் பூட்டி எய்தந்த அசுரப் பிரமுகர்களை யெல்லாம் நொறுக்கித் தேவர்கள் நடுக்கத்தைத் தீர்த்தார்கள் என்றவாறு. (12)

நயத்தல் - நிறைதல்.

## Acura veḷḷamum Tēvar paṭaiyum

*nāṟṟi caikka ṉayanta vamararkaḷ*
*kāṟṟiṉ vempaṭaik kaṉṟiya vaṅkitaṉ*
*māṟṟa laṉraṉ maruvu perumpaṭaik*
*kūṟṟiṉ vempaṭai villiṉiṟ kūṭṭiyē.*

## Acura Flood, Divine Army

As the Acura army spelt havoc everywhere,
The divine commanders released from bows
Missiles of wind, fire and of dire Yamaṉ,
Thus helping the gods overcome their fear.

**(குழியில் மறைந்து நின்று தேர்களைப் பிடிக்கச் செய்தல்)**

**558.** **பூமி தன்னி னொளித்திடும் புங்கவர்**
**கானிற் றேரைக் கரங்களிற் கட்டியே**
**நாணி லாதவர் தம்மை நலிந்திடிற்**
**காணி யாகிய வென்றி கலக்குமால்.**

எ-து. அசுரர் கூட்டங்களைப் பார்த்துக் காலநேமி என்னும் இராச சூடாமணியானவன் சொல்லுகின்றான். அது என்னென்றால்: நமது சுற்றத்தாரே! நீங்கள் பூமிக்குள் இராநின்ற பெருங்குழியிலே உங்கள் சரீரத்தை மறைவு செய்து, ஆகாசத்திலே கையை நீட்டித் தேவாதிகளுடைய இரத பந்திகளை இரண்டு கைகளினாலே தேர் அசையாமல் வளைத்து இறுக்கிப் பிடித்தால் கல்லைப்போல் அசையாது. அப்போது லச்சையில்லாத தேவர் கூட்டங்கள் நலிவுபட்டுக் கலங்கித் தியங்கிப் போவார்கள். நமது காணியாகிய வென்றியானது நம்மைக் கலந்து பிரபலிக்கப் பண்ணும். அந்தக் காரியத்தைத் தொடங்கிச் செய்யக் கடவீர்கள் என்றாக்கியாபித்தான் அரசன் என்றவாறு. (13)

புங்கவர் - வானோர், தேவர்கள். கான் - காடு. நாண் - நாணம். நலிதல் - வருத்துதல்.

**உரை** - லச்சை - நாணம், மானம்.

## Kuḻiyil maṟaintu niṉṟu tērkaḷaip piṭikkac ceytal

*pūmi taṉṉi ṉoḷittiṭum puṅkavar*
*kāṉiṟ ṟēraik karaṅkaḷiṟ kaṭṭiyē*
*nāṇi lātavar tammai nalintiṭiṟ*
*kāṇi yākiya veṉṟi kalakkumāl.*

## Capturing Chariots from the Underground

The Acura chief commanded his soldiers;
"Hide yourself under the ground
And with your hands prevent
The movement of the chariots of the gods.
The shameless gods will be helpless.
Our victory will have a brighter sheen."

(குழிகள் அமைத்தல்)

559. என்று காலநே மிப்பெய ரேந்தலு
[1]நன்று நன்றென னக்கன்ன னேவிடக்
குன்ற லில்லதோர் பூமி குறுகியே
வென்றி யாங்கரம் வானின் விளங்கவே.

எ-து. இந்தப் பிரகாரம் காலநேமியாகிய அசுர சூடாமணியானவன் கூறியவண்ணத்திற் கிசைந்த அசுர கண்டீரவராகிய பேரெல்லாம் அனேக விசாலமாய் ஆழமுள்ளதாகிய குழிகளை அவரவர் சரீரத்திற்கு ஏற்றதாய் அமைக்கத் தகுதியான வாள் அமைத்து வைத்தார்கள். அந்தக் குழியிடங்கள் தோறும் மறைந்திருந்த அசுரர் கூட்டங்கள் ஆசானு பாகுவாகிய கைகளை ஆகாசத்தினீட்டி விளங்கிடச் செய்தார்கள் என்றவாறு. (14)

பா.வே. - 1. னன்று சொல்லசு ரேசர ரும்படை.

## Kuḻikaḷ amaittal

*eṉṟu kālanē mippeya rēntalu*
*naṉṟu naṉṟeṉa ṉakkaṉṉa ṉēviṭak*
*kuṉṟa lillatōr pūmi kuṟukiyē*
*veṉṟi yāṅkaram vāṉiṉ viḷaṅkavē.*

## Digging Pits

As the king named Kālanēmi said so,
The idea was welcomed as just fine.
Commanded, the Acurās dug holes
And hid themselves in them.
Only their hands were visible.

**(தேவர் தேர்களைப் பிடித்தல்)**

**560. அமரர் தேரை வளைத்தங்கை தன்னினாற்**
**கமரின் வீழ்ந்த கடம்புதைத் தன்னவே**
**விமல மாகிய தேரசை யாவித**
**மமர்செய் தானவ ராங்கவை பற்றினார்.**

எ-து. தேவர்களுடைய தேர்ப்பந்திச் சமூகத்தை யெல்லாம் ஆகாயத்தினிறைந்த கைகளினாலே வளைத்து இறுக்கி அசையாமல் பந்தித்தார்கள். அதனாலே தேவாதிகள் இரதங்களெல்லாம் நின்று போச்சு. அதெப்படி யென்றால் கமரிலே கவிழ்க்கப்பட்ட குடமாகியது புதைந்து போனதுபோல அசைவற்று நின்றது. அதனாலே சமர்புரிதற்கு மனவெழுச்சி இல்லாதவர்களாய்த் தேவாதிகள் மயங்கினார்கள் என்றவாறு. (15)

கமர் - நிலவெடிப்பு. கடம் - குடம்.

## Tēvar tērkaḷaip piṭittal

*amarar tērai vaḷaittaṅkai taṉṉiṉāṟ*
*kamariṉ vīḻnta kaṭamputait taṉṉavē*
*vimala mākiya tēracai yāvita*
*mamarcey tāṉava rāṅkavai paṟṟiṉār.*

## Capturing the Chariots of the Gods

Capturing the chariots of the gods
Tightly with their hands, they made
The chariots look like pots
Stuck in cracked earth. Thus they made
The blemishless chariots immoveable.

(தேரோட்டிகள் திகைத்தல்)

561. தேர்செ லுத்திடு பாகர்க டேர்ந்ததா
லார வாரத் தசுரர்தம் மாய்கையாம்
போரி தென்னப் புயபல வீரர்க்குச்
சீரி தாய்ச்செப்பத் தேர்ந்தனர் திக்கினோர்.

எ-து. தேரை வாயுவேக மனோவேகமாய் நடாத்துகின்ற சாரதிகளானவர்கள் இரதத்தைத் திருப்புந் தோறும் திரும்பாமையால் திகைத்தனர். இந்த வரலாற்று முறைமையை எண்ணிப் பார்க்குந்தோறும் ஆரவாரத்தையுடைய அசுரர் செய்த மாய்கையினாலே இந்த இரதம் அழுந்தி இருப்பதென்று தெளிந்தவர்களாய்த் தங்கள் தலைவர்களைப் பார்த்துக் கூறுகின்றார்கள். இராக்ஷத மாய்கையினாலே பூமியிலே குழிபறித்து அதில் மறைந்திருந்து கைகளினாலே தேர்பந்தி அசையாமல் இறுக்கிப் பிடித்துக் கொண்ட காரணத்தினாலே இந்தப் பொல்லாங்கு வந்ததென்று சொல்லக் கேட்டார்கள் திக்குப் பாலகர் என்றவாறு. (16)

## Tērōṭṭikaḷ tikaittal

*tērce luttiṭu pākarka ṭērntatā*
*lāra vārat tacurartam māykaiyām*
*pōri teṉṉap puyapala vīrarkkuc*
*cīri tāycceppat tērntaṉar tikkiṉōr.*

## Charioteers Confounded

The charioteers guiding the vehicles
Could not turn them. They realised
This was due to the tricks of the enemy.
They said so to their commanders.
The gods of directions took note of it.

(மீண்டும் தேவர்கள்)

562. இரதம் விட்டுக் குதித்தபின் இந்திரன்
சரத மாகிய வங்கிபின் சார்ந்துளோர்
கரத லங்களின் வாள்கள் கணிச்சிகள்
முரணு றும்வச்சிர மேமுதற் றாங்கினார்.

எ-து இந்தப் பிரகாரம் அவரவர்கள் சாரதிகள், அவரவர் தலைவர்களுக்கு அசுரர் செய்த மாய்கைத்திறமெல்லாம் அறிவிக்க, அறிந்த மாத்திரத்தின் அந்தத் தேர்ப் பந்திகளை விட்டுக் குதித்து சிம்மத்தைப் போலவும், புலியைப் போலவும், சர்பப்பட்சியைப்

போலவும் சீறிக் கோபித்து வாளாயுதத்தை விதிர்த்தும், கண்டகோடரிகளைத் தாங்கியும், வச்சிராயுதம் முதலாகியதைச் சுழற்றியும் இந்தப் பிரகாரம் சமர்க்களத்தில் சாரி திரிந்தார்கள் என்றவாறு. (17)

சரதம் - உண்மை. அங்கி - சட்டை. கணிச்சி - கோடரி.

## Miṉṭum Tēvarkaḷ

*iratam viṭṭuk kutittapiṉ intiraṉ*
*carata mākiya vaṅkipiṉ cārntuḷōr*
*karata laṅkaḷiṉ vāḷkaḷ kaṇiccikaḷ*
*muraṇu ṟumvaccira mēmutaṟ ṟāṅkiṉār.*

## The Gods Again

Intiraṉ and the other gods jumped out
Of their chariots. Wearing their armour
They held in their hands swords, axes,
And thunderbolts and prepared for battle.

(அசுரர் சீற்றம்)

563. சாரி வந்தசு ரேசர்தன் றானைமேற்
போரி யற்றிப் புயங்கள் சிரங்களை
வேர றும்படி வீசினர் மந்திரர்
பாரி னோர்களைப் பாசத்திற் கட்டினார்.

எ-து. இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாய்வு, குபேரன், ஈசானியன் என்கின்ற அட்டதிக்குப் பாலகரானவர்கள் முன்னடி வைத்துப் பின்னடி வாங்கி மண்டலாகாரமாய்ச் சுழன்று, சாரிகை திரிந்து, சுரருடைய சேனைகள்மேல் போர் புரிந்து அவர்கள் சிரங்கள், புசங்கள், மார்பகங்கள் கண்டதுண்டப்படத் துண்டித்தும், அசுரர் கூட்டங்கள் தூளிப்படலமாக விசையம் பண்ணும்படியாகிய ஆரவாரத்தை அசுரமந்திரிகள் பார்த்து, அதிக கோபம் பிறந்து திக்குப் பாலகரை வந்து வளைத்துக்கொண்டு சர்ப்பக் கணையாகிய நாக பாசத்தினால் அவர் புயங்களை இறுகக் கட்டினார்கள் என்றவாறு. (18)

பாசம் - பாசக்கயிறு. மண்டலாகாரம் - வட்டவடிவமாய்.

## Acurar ciṟṟam

*cāri vantacu rēcartaṉ ṟāṉaimēṟ*
*pōri yaṟṟip puyaṅkaḷ ciraṅkaḷai*
*vēra ṟumpaṭi vīciṉar mantirar*
*pāri ṉōrkaḷaip pācattiṟ kaṭṭiṉār.*

## Acurās in a Fury

The Acurās battled with the gods
Who came in large formations. they cut up
Shoulders, plucked heads from the roots,
And bound them with the noose.

(திக்குப் பாலகர் மூர்ச்சை)

564. உரக பாச முயர்புயங் கட்டவே
தரையிற் சாய்ந்தனர் தானவர் மந்திரர்
பிரம னார்படை விட்டிடப் பின்பவர்
முரண்டொ லைத்துயிர் கொண்டு முடுகிற்றால்.

எ-து காலநேமியின் மந்திரிமார்கள் திக்குப் பாலகர்களை சர்ப்பக் கணைகளால் புயங்களை இறுகக் கட்டின மாத்திரத்திலே மூர்ச்சை அடைந்தவர்களாய் அலைமாரக மில்லாமல் சாய்ந்தார்கள். அந்தக்காலம் குறித்திருந்து பார்த்த செய சாலிகளாகிய மந்திரிகளானவர்கள் தயவில்லாத குரூர குணங்களால் பாவத்துக்கு அஞ்சாமல் பிரம்மாஸ்திரத்தை விட்டு ஆர்ப்பரித்தார்கள். அந்தக் கணையானது தேவாமுதம் அருந்திய வலியைத் தொலைத்து அவர்கள் உயிரை உணவாக உண்டு மந்திரியர் கையின் மீட்டும் போய்ச் சேர்ந்தது பிரமாஸ்திரம் என்றவாறு. (19)

உரகம - பாம்பு அலைமாரகம் - மரணம்

## Tikkup pālakar mūrccai

*uraka pāca muyarpuyaṅ kaṭṭavē*
*taraiyiṟ cāyntaṉar tāṉavar mantirar*
*pirama ṉārpaṭai viṭṭiṭap piṉpavar*
*muraṇṭo laittuyir koṇṭu muṭukiṟṟāl.*

## The Gods of Directions Swoon

As the serpent noose bound the shoulders,
The gods fell on the earth. The commanders
Of the Acurās went on to release
The Piramaṉ missile. The missile destroyed
Enemy lives and returned home.

(காலநேமியின் ஆரவாரம்)

565. அந்த வேலை யசுரர்தங் காவலன்
சிந்தை யின்மகிழ் கொண்டு சிறந்துளான்
முந்து பேரிகைச் சங்க முழங்கிட
வந்து தோன்றி மகிழ்சிறந் தானரோ.

எ-து. அப்படித் தேவர் கூட்டங்களானவர் உயிர் நீங்கிப் பிரேதம்போல சமர்க்களத்திலே வீழ்ந்திருக்கின்றதை அசுரர் கூட்டங்களுக்கெல்லாம் மகுட சூடாமணியாகிய காலநேமியானவன் வந்து பார்த்தான் பினபு மனம் பூரித்துச சந்தோஷ சாகரத்தில் குளித்தவனாய்ப் பேரிகை முதலாகிய தோல்கருவி. துளைக் கருவி, கஞ்சக் கருவி. மிடற்றுக் கருவி, நரப்புக் .கருவி முதலாகிய பஞ்ச நாதங்களும் தொனி செய்யத தக்கதாய் மகிழ் சிறந்து களிப்பாகிய சுககர மஙகளாகர சுந்தரமாய் முகமலர்சசியாய் விர்த்தியடைந்தான் என்றவாறு (20)

## Kālanēmiyiṉ āravāram

*anta vēlai yacurartaṅ kāvalaṉ*
*cintai yiṉmakil koṇṭu ciṟantuḷāṉ*
*muntu pērikaic caṅka mulaṅkiṭa*
*vantu tōṉṟi makilciṟan tāṉarō.*

## Kālanēmi's Victory-Shout

The king of the Acuras was happy
In his thoughts, waxed strong,
And proceeded, being hailed
By the sounds of conches
And beri drums to express joy.

(இந்திராணியின் மீதே நினைவு கொண்ட காலநேமி)

566. சிந்தை யிற்களி கொண்டனன் சீர்பெறு
விந்தை யாகிய கோலவெற் பெய்தியே
சுந்த ரச்சரி போகத்தைத் துய்த்திட
மந்தி ரத்தவர் தம்முடன் வந்துளான்.

எ-து இந்தப் பிரகாரமாகிய சுபகர மங்களாகரப் பொலிவு பெற்ற காலநேமி என்னும் அதிவீர சத்திரபதி யானவன் அனேக வைபவ சுகுணமாகிய சஞ்சீவிகிரி யென்றும்

சொல்லப்பட்ட மலையடிவாரத்திலே மந்திரி சமூகங்கள் மகமேருகிரியை அட்டகுலாசலங்கள் சூழ்ந்தால் எப்படியோ அப்படி வளைந்து வரத்தக்கதாக வந்துசேர்ந்து அதிக சவுந்தரியமாகிய ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலாகிய மடந்தையர்கள் அழகெல்லாம் ஒருவடிவாய் வந்துதித்த இந்திராணியினுடைய சரச சல்லாப வினோத சாம்பிராச்சிய விபவமாகிய போகத்தை அனுபவிக்க நினைந்து வருகின்றான் என்றவாறு. (21)

## Intirāṇiyiṉ mītē niṉaivukoṇṭa Kālanēmi

*cintai yiṟkaḷi koṇṭaṉaṉ cīrpeṟu*
*vintai yākiya kōlaveṟ peytiyē*
*cunta raccari pōkattait tuyttiṭa*
*manti rattavar tammuṭaṉ vantuḷāṉ.*

## Kālanēmi Pines for Intirāṇi

He was happy. Accompanied
By his ministers, approaching the wondrous,
Rich Kōla Hill, he was ready to enjoy
The pleasures of flesh with the damsel.

(கருடனின் தோற்றம்)

567. இந்த வாசகங் கண்டங் கியற்பெறு
சுந்த ரக்கலு ழப்பெயர்த் தோன்றலு
மந்த ரஞ்சிற கைக்கொடு மாநில
முந்திற் றென்ன முடுகின னென்பவே.

எ-து. தேவர் கூட்டங்கள் இறந்தாகள் என்று காலநேமி என்னும் அசுரபிரான் இந்திராணியினுடைய சரச சல்லாப இன்பத்தை விரும்பிச் சஞ்சீவிகிரி அடிவாரத்தில் தளதந்திரத்துடன் வளைந்துநின்ற வைபவங்களை யெல்லாம் கண்டார் அதிவீர சூர பராக்கிரமத்தினையும நறசெய்கையினையு முடைய கருட பகவானானவர் உடனே அதி வேகமாய் மந்தர கிரியானது சிறகடியைக் கொண்டு ஆகாயத்தில் பறந்து வந்தால் எத்தன்மையோ அப்படியாக இவ்வுலகததின்கண்ணே அதிவிரைவாய் வந்துசேரத் தொடங்கினார் என்றவாறு (22)

சுந்தரம் - அழகு. கலுழன் - கருடன் மநதரம் - மந்தரகிரி மாநிலம் - நிலவுலகம்

## Karuṭaṉiṉ tōṟṟam

*inta vācakaṅ kaṇṭaṅ kiyaṟpeṟu*
*cunta rakkalu ḻappeyart tōṉṟalu*
*manta rañciṟa kaikkoṭu mānila*
*muntiṟ ṟeṉṉa muṭukiṉa ṉeṉpavē.*

### Karuṭa

The lovely bird called Karuṭa
Learnt of these goings-on. At once
He flew on his wings to the earth
Verily like the Mantāra Mountain in flight.

(அரங்கன் திருவடியில் கருடன்)

568. மலையை மூன்று வலஞ்செய்து வந்தடி
பரவிச் சென்றங் கரங்களைப் பார்த்துளான்
கரவி லாதபே ரன்பைச் செலுத்தியே
வரவு நீர்க்கட லோங்கு முயர்ச்சியான்.

எ-து. அந்தக் கருட பகவானானவன் அந்த அனந்த விமான சேகரர் யோக நித்திரை செய்கின்ற அரங்கநாயகரது சஞ்சீவி கிரியை மூன்று தரம் வலம் செய்து வணங்கி அவரருளைப் பெற்றுப் பரப்பிரம்மமாய் விளங்காநின்ற அவருடைய பாதத் தாமரையைக் கண்டு சேவித்தார். அவர் எத்தன்மையரென்றால் எப்பொழுதும் திருவடித்தாமரையினை நீங்காத மெய்யன்பைச் செலுத்துகின்ற காரணத்தால் குணக்குன்றாய் ஏத்தப்பட்ட முயற்சியையுடைய கருட பகவான் என்றவாறு. (23)

### Araṅkaṉ tiruvaṭiyil karuṭaṉ

*malaiyai mūṉṟu valañceytu vantaṭi*
*paravic ceṉṟaṅ karaṅkaḷaip pārttuḷāṉ*
*karavi lātapē raṉpaic celuttiyē*
*varavu nīrkkaṭa lōṅku muyarcciyāṉ.*

### Karuṭa at the feet of Araṅkaṉ

Circumambulating the hill thrice,
With prayers he drew close to Araṅkaṉ.
He was one image of grace who had
Unsurpassable love for the Supreme's feet.

(தேவர்களைக் காப்பீராக எனக் கருடன் வேண்டுதல்)

569. கால நேமிக் கடியவன் றன்படை
யால காலத்தால் தேவர் அயர்ந்தனர்
மூல நோக்கி யசுர முதல்வன்றான்
சால வுஞ்சசி தன்னை யடையவே.

எ-து. காலநேமி என்னும் அசுரனானவன் இந்திரன் முதலாகிய தேவர் கூட்டங்களை யெல்லாம் மடித்து மிகுந்த சந்தோஷத்தினாலே சசிதேவியினுடைய போகத்தை இச்சித்தவனாய் ஆலகால விஷம்போல் அதி வேகமாய் இரத, கச துரக, பதாதிகளுடனே கோலாசலத்தை நோக்கி வருகின்றான். ஆகிலும் தேவரீர் அறியாத காரியங்களும் உண்டோ? கிருபை செய்து தேவர்களை இரக்ஷிக்க வேண்டும் என்றான் கருட பகவான் என்றவாறு. (24)

## Tēvarkaḷaik kāppirāka eṉak karuṭaṉ vēṇṭutal

*kāla nēmik kaṭiyavaṉ ṟaṉpaṭai*
*yāla kālattāl tēvar ayarntaṉar*
*mūla nōkki yacura mutalvaṉṟāṉ*
*cāla vuñcaci taṉṉai yaṭaiyavē.*

## Karuṭaṉ's Prayer

"By the Ālakāla poison of the forces
Of fierce Kālanēmi, the gods grow faint.
The Acura is drawing close to this place
Desirous of taking Intirāṇi."

(அரங்கன், தேரினைக் கொணர்க எனல்)

570. தாரு கப்பெயர் சார்ந்திடு தாழ்விலாத்
தேர்செ லுத்தும் வலவன்சென் றெய்திட
நீர ழைக்குதி ரென்றலு நேரிலான்
போர்கு றித்தவன் றன்னைப் புகுகென்றான்.

எ-து. இவ்விதமாய்க் கருடனானவன் விண்ணப்பம் செய்ய அருளிச் செய்கின்றார். நமது இரத சாரதியாகிய தாருகனை அதிக துரிதமாய் அழைக்கக் கடவீரென்றாக்கி யாபித்தருள, அந்த க்ஷணமே பரம பதத்தின் வசியாநின்ற தாருகனிடத்துக்கு எழுந்தருளி கூறுகின்றான். வாராய் தாருகனே! காலநேமி யுத்தத்தைக் குறித்து இரதத்தை அதிக துரிதமாய்க் கொண்டு வரும்படியாக்கியாபித்தருளினார் ஸ்ரீ அரங்க நாயகர் என்றருளிச் செய்தார் என்றவாறு. (25)

வலவன் - தேர்ப்பாகன்.

## Araṅkaṉ, tēriṉaik koṇarka eṉal

*tāru kappeyar cārntiṭu tāḻvilāt*
*tērce luttum valavaṉceṉ ṟeytiṭa*
*nīra ḻaikkuti reṉralu nērilāṉ*
*pōrku ṟittavaṉ ṟaṉṉaip pukukeṉṟāṉ.*

## Araṅkaṉ's Command

"Go and call the charioteer Tārukaṉ
Who is expert in guiding the vehicle
To come here." Immediately Karuṭaṉ
Rushed to Tārukaṉ and told him
That the Lord wants him for battle.

(தேர் கோலவரை யடைதல்)

571. கலுழ னார்விளிக் கக்கரு ணைக்கடல்
திருவு லாவிய சீதரன் வாழ்பதத்
துருகி நின்றிடு தாருக வுத்தமன்
மருவு தேரினை மாண நடாத்தினான்.

எ-து. அப்படி கருட பகவானானவன் அருளிச் செய்ய, கருணா நிதியாகிய ஸ்ரீலட்சுமிபதி வாசம் செய்கின்ற பரமபதத்தில் நித்திய சூரியர்களுடனே புகழ்ந்துருகுகின்ற தாருகனானவன் அதிவேகத்துடனே இரதத்தை நடாத்திக் கொண்டு கோலாசலகிரியின் உச்சியில் வந்து சேர்ந்தான் தாருகன் என்றவாறு. (26)

இந்திரன் சமர்புரிந்த அத்தியாயம் முற்றிற்று.

## Tēr kōlavarai yaṭaital

*kaluḻa ṉārviḷik kakkaru ṇaikkaṭal*
*tiruvu lāviya cītaraṉ vāḻpatat*
*turuki niṉṟiṭu tāruka vuttamaṉ*
*maruvu tēriṉai māṇa naṭāttiṉāṉ.*

## Charioteer Reaches Kōla Hill

As Karuṭaṉ called out so, the good Tārukaṉ
Who is ever in prayerful attention
At the feet of compassionate Nārāyaṇaṉ,
Directed the chariot to the Kōla Hill.

# 32. இருபத்து எட்டாவது
# மந்திரிகள் யுத்தம் புரிந்த அத்தியாயம்

தாருகன் தேரைக் கொண்டுவந்து கோலாசல மலையில் நிறுத்தினான். அத்தேரின் உச்சி கனகக் கும்பத்தா லாகியிருந்தது. மேலே தவளச்சக்கிரக்குடை நிழலைத் தந்தது. முப்பத்திரண்டு உபநிடதங்களும் அத்தேரின் குத்துக்கால்களாக விளங்கின. நான்கு வேதங்களும் அதன் நான்கு வாயில்களாயின. உச்சுவ வருக்கங்கள் குதிரைகளாயின. அதன் படிகள் நவரத்தினங்களால் அமைந்தன. எட்டு கபாண்டங்கள் சொர்ண மயமாய் விளங்கின. பாகு பலகைகள் வச்சிர மணிகளால் ஆயின. சட்டங்கள் மாணிக்கத்தால் இயன்றிருந்தன. கொடிகள், சல்லி, சவிரிகள் முத்தினங்களால் அமைக்கப்பட்டிருந்தன. தரும சாத்திரங்களே கொடுங்கைகளாகவும், புராண, உபபுராணங்கள் தேர்ப்பரப்பாகவும், ஸ்மிருதிகள், சங்கிதைகள் ஆகியவை பிரதமைகளாகவும், நியாய சாத்திரங்கள் நிலைக்கண்ணாடிகளாகவும், வேதாந்த, சித்தாந்தங்கள் தேர்ச்சீலையாகவும் விளங்கின. வியாச சூத்திரங்களாகிய பூர்வ. உத்தர மீமாம்சைகள் இரண்டு பீடங்களாய் அமைந்தன. புறச்சமய ஆகமங்கள் உருளைகளாயின. பிரணவ மந்திரமே அச்சாணியாயிற்று. சுக்கிரீபம், மேகபுட்பம், சயினியம், வாலகம் என்னும் குதிரைகள் பூட்டப்பட்ட அத்தேரானது மகமேருவினை ஒத்த உயரமும் பரப்பும் உடையதாயிருந்தது. அதன் துசபடமாகிய கொடியாகக் கருடபகவான் அமர்ந்தருளினார். அரங்க நாயகர் போர்க்கோலம் பூண்டு தேரில் அமர, பஞ்சநாதங்களும் முழங்கின.

தேவர்கள், முனிவர்கள் போன்றோர் மலர்மாரி பொழிந்து சங்கநாதம் செய்து, செயசெய வென்று துதி செய்தார்கள். சனகர், பரத்துவாசர், வாமதேவர், கவுடபாதர், கவுதமர், கண்ணுவர், பிருகு, புட்பதந்தன, இடபசிங்கன், அகத்தியர், புலத்தியர், நாரதர், செமதக்கினி, மார்க்கண்டேயர், தூருவாசர், சாண்டிலியர், சகடாயர், கணுசி, சனந்தரன், சனாதரன், சதாநந்தன், ஆங்கீரன், காசிபர், வாரிடர், வியாசர், காத்தியாயன், குமுதன், உரோமசன், குமுதாக்கன், கவுசிகன், வைசம்பாயன், பயிலவன் போன்ற முனிவர்கள் ஆனந்தப் பரவசராய் உபநிடதங்களால் தோத்தரித்து அருச்சித்து வாழ்த்தினார்கள்.

(தேருடன் தாருகன்)

572. சஞ்சீவி கிரிகோல மால்வரையாய்
மேலோர்கள் சாற்று நாம
மெஞ்சலிலா வரையுச்சி மீதிவரத்
தேர்செலுத்தி யெய்தா நின்றான்
கஞ்சமல ரவன்றானும் படைப்பரிய
விரதத்தின் கவினைச் செப்பத்
தஞ்சமென வடியாருக் கருள்புரியும்
அனந்தனே சாற்றுந் தானே.

எ-து. இந்தப் பிரகாரம் கருட பகவான் உத்தரத்தால் பரமபத வாசியாகிய நாராயண மூர்த்தியினுடைய சாரதியாகிய தாருகனானவன் தன் தேரை வாயுவேகம், மனோ வேகமாய் நடாத்திக் கொண்டு கோலாசல மென்கின்ற சஞ்சீவி கிரியின் உச்சியிலே நிறுத்தினான். தாமரைக் கமலத்தில் இருக்கின்ற மேலவனும் சிருட்டிப்பதற்கு அருமையான தரிசன சிங்கார வளப்பத்தை யாவரால் சொல்லலாமென்றால் வியாகரன் உரை நூலாசிரியராகிய பாகவதர்களுக்கு அருட்கண் பார்வையால் அனுக்கிரகிக்காநின்ற சேஷசாயி யொருவன் கூறத்தகுமே அல்லது மற்ற யாவராலும் கூறி முடியாது என்றவாறு. (1)

இவர்தல் - ஏறுதல். கஞ்சமலர் - தாமரைமலர். கவின் - அழகு, சிறப்பு. சேஷசாயி - திருமால்

## Tēruṭaṉ Tārukaṉ

*Cañcīvi kirikōla mālvaraiyāy*
*mēlōrkaḷ cāṟṟu nāma*
*meñcalilā varaiyucci mītivarat*
*tērcelutti yeytā niṉṟāṉ*
*kañcamala ravaṉṟāṉum paṭaippariya*
*viratattiṉ kaviṉaic ceppat*
*tañcameṉa vaṭiyāruk karuḷpuriyum*
*aṉantaṉē cāṟṟun tāṉē.*

## XXXII. The War of the Ministers

## Tārukaṉ with the Chariot

He brought the chariot to a stop
On the blemishless crest of Kōla Hill
That was like the Cañcīvi Mountain.
Who can describe the loveliness of the land
That was too good even for Piramaṉ's creation?
Perhaps Aṉanta can do so, who guards safely
All those who seek refuge in him.

(தேரின் வடிவம்)

573. ஞானமெலாம் பொதிந்திடுமோர் கனகக்கும்பஞ்
சிகரத்தின் மருவா நிற்கு
மேனியர்க ளறிவெல்லாந் தவளசத்திரப்
பெயர்க்குடையாய் முடியி னின்ற

தேனனைய வேதாந்தங் குத்துக்கால்
நால்வேதந் திகழும் வாயில்
மானமுறு முச்சுவத்தின் வருக்கமெலாங்
கந்துகத்தின் [1]வருக்க மாக.

எ-து சவிகற்ப, நிருவிகற்ப மாகிய இருவித ஞானாமிழ்தம் பூரித்து, ஆயிரத்தெட்டு மாற்றாகிய அபரஞ்சிப்பொன் கனகக் கும்பமான சிகர உச்சியிலே பிரகாசிக்கவும், உன் மோன பராபர அறிவெல்லாம் அதற்கு மேலாகிய தவள சத்திரக் குடையால் நிழலைப் பரப்பவும், உபநிடத முப்பத்திரண்டும் குத்துக்கலாக விளங்கவும், நான்கு வேதமும் அதற்கு நான்கு வாயிலாகவும, திருப்பாற்கடலிலே பிறந்த உச்சுவச் சொரூப வருக்கங்கள் குதிரைப்பந்தியாகவும் விளங்கிற்று அந்தத் தெய்வீக இரதம் என்றவாறு. (2)

மோனியர் - மௌனிகள், முனிவாகள்

உரை - சவிகற்பஞானம் - சவிகற்பககாடசி - ஒரு பொருளின் பெயர், சாதி, குணம் முதலிய எல்லாத் தன்மைகளும் புலப்படும் ஞானம், நிருவிகற்பஞானம - நிருவிகற்பக்காட்சி - வேறுபாடின்மை, தான், பிற என்னாது, எல்லாவற்றையும ஒருமையாய் அறியும் ஞானம்

பா.வே. - 1 வடிவதாக

## Tēriṉ vaṭivam

*ñāṉamelām potintiṭumōr kaṉakakkumpañ*
*cikarattiṉ maruvā niṟku*
*mēṉiyarka ḻarivellān tavaḷacattirap*
*peyarkkuṭaiyāy muṭiyi ṉiṉṟa*
*tēṉaṉaiya vētāntaṅ kuttukkāl*
*nālvētan tikaḻum vāyil*
*māṉamuṟu muccuvattiṉ varukkamelāṅ*
*kantukattiṉ varukka māka.*

## The Chariot

All knowledge gleamed atop the spire
In the golden pitcher; all intelligence
Had taken the image of the umbrella
Shining white; honey-sweet Vētānta
Formed the upright stands for the cover;
The door imaged the four Vēdas;
All those belonging to the sea-born horse
Became the horses to draw this chariot.

(தேரின் சிறப்பு)

574. நவரத்தின சோபான நான்கிரட்டி
கபாடங்க ணலத்த பொன்னாம்
உவமையிலா வச்சிரத்தின் பாகுபல
கையின் பரப்பங் குயர்ந்து தோன்றப்
புவனமதித் திடுநான்கு பிரிவாய
மாணிக்கம் புரியுஞ் சட்டந்
தவமிகுத்த சிறுகொடிகள் சாதரங்கந்
[1]தரளகொடி தழைத்தங் கோங்கும்.

எ-து. அந்த இரதமானது நவரத்தின மயமாகிய படித்துறையும், சொர்ணமாகிய எட்டு கபாடமும், ஒப்பற்ற வச்சிர மணிகளினாலே பாகுபலகையின் பரப்பானது உயர்ந்த சொர்க்கலோக பரியந்தம் மிகுந்த உன்னிதத்துடனே தோன்றிப் பிரகாசிக்கவும், திரிபுவனங்களும் மதிக்காநின்ற நான்கினமான மாணிக்கங்களானவை சட்டமாய்ப் பிரகாசிக்கவும், தவத்தினானுயர்ந்த சிறு கொடிகள் தேர்முகப்பிரதேசத்தினில் நன்று பிரகாசிக்கவும், ஆணிமுத்தினங்களால் சல்லி சவிரிக ளிடையிடைகளிலே விளங்கிப் பிரகாசிக்கும் என்றவாறு (3)

சோபானம் - கற்படி. பாகுபலகை - கரைகளாக விளங்கும் உயர்ந்த பரப்பு. மாணிக்க வகை நான்கு - பதுமம், நீலம், படிதம், விந்தம் என்பன சாதரங்கம் - பதுமராகம், மாணிககத்தின் முதற்சாதி

பா.வே. - 1. தரளசல்லி.

## Tērin ciṟappu

*navarattiṉa cōpāṉa nāṉkiraṭṭi*
*kapāṭaṅka ṇalatta poṉṉām*
*uvamaiyilā vacciratiṉ pākupala*
*kaiyiṉ parappaṅ kuyarntu tōṉṟap*
*puvaṉamatit tiṭunāṉku pirivāya*
*māṇikkam puriyuñ caṭṭan*
*tavamikutta ciṟukoṭikaḷ cātaraṅkan*
*taraḷakoṭi taḻaittaṅ kōṅkum.*

## The Glorious Chariot

The chariot had steps made on nine gems;
Eight windows of gold; rich diamonds

Made the sides, rising upwards;
Frames were of the four varities of gems;
Holy flags fluttered in the breeze
Alternating with chowries.

(தேரின் உறுப்புகள்)

575. தருமசாத் திரக்கொடுங்கைப் புராணமுபம்
பரப்பாகத் தழைத்தங் கோங்கு
மருவுமுனி வரரிசைத்த மிருதிசங்கிதை
பதுமையினன் மாட்சி யாகத்
திருமருவு சட்வங்க நிலைக்கண்ணா
டியைப்போலத் திகழா நிற்கும்
பொருவரிய தேர்ச்சீலை வேதாந்த
சித்தாந்தப் பொலிவாய்த் தோன்ற.

எ-து அந்த இரதமானது எப்படிப் பிரசாசிக்குதென்றால் வாசிட்ட மாரிட முதலாகிய பதினெண் தரும சாத்திரமும் கொடுங்கைகளாகவும், பதினெண் புராணமும், உபபுராணம் பதினெட்டும் தேர்ப்பரப்பாகத் தோன்றவும், இவ்வுலகில் வாசம் செய்கின்ற முனிவர் கூட்டம் திருவாய் மலர்ந்தருளிய மிருதிகளும், சங்கிதைகளும் பிரதமையாக விளங்கித் தோன்றவும், ஞான இலக்குமி, மனோகரம் பொருந்தியவாறு சாத்திரமாகிய நியாய நூன் முதலாகியவை நிலைக் கண்ணாடியாயிருந்து ரஞ்சிக்கவும், ஒப்பற்ற தேர்ச் சீலையானது வேதாந்த சித்தாந்த சமரசமாய்ப் பிரகாசித்தது அந்தத் திருத்தேர் என்றவாறு. (4)

கொடுங்கை - தேரின் ஒரு பாகம் ; உள்வளைவு. உபம் - உபபுராணம்; அவை - 18 - சனற் குமாரம, நாரசிங்கம், நந்தி, துருவாசம், சிவதருமம், நாராதீயம், காபிலம், மானவம், அவுசனம், வாசிட்டம், லிஙகம், வாருணம், காளிகம, சாம்பேசம், சௌமியம, சவுரம், பராசரம், பார்க்கவம் என்பன. மிருதி - தருமநூல சங்கிதை - சரித்திரம. பிரதமை - பதுமை - விக்கிரகம். திரு - இலக்குமி. சட்அங்கம் - ஆறு சாததிரம் அவை - வேதாந்தம், வைசேடிகம், பாடடம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை என்பன ரஞ்சித்தல் - இன்பமூட்டுதல்

## Tēriṉ uṟuppukaḷ

*tarumacāt tirakkoṭuṅkaip purāṇamupam*
*parappākat taḻaittaṅ kōṅku*
*maruvumuṉi vararicaitta miruticaṅkitai*
*patumaiyiṉaṉ māṭci yākat*

*tirumaruvu caṭvaṅka nilaikkaṇṇā*
*ṭiyaippōlat tikaḻā niṟkum*
*poruvariya tērccilai vētānta*
*cittāntap polivāyt tōṉṟa.*

## The Parts of the Chariot

The Tarmacāstras were the curved cornices;
The Purāṇas, major and minor, formed
The area within; the smritis
And the Samhitas indited by sages
Were the statues; the six Cāstras
Were the mirrors; Vētāntic philosophy
Formed the lovely curtains.

(தேரின் பீடமும் உருளையும்)

576. வியாதசூத் திரந்திரண்ட பீடத்தி னுருவாகி விளைவாய்த் தோன்றத்
தயாபரனா ரருளான புறச்சமயத் தந்திரங்க டாழ்வி லாத
நியாயமுறு முருளைகளா யச்சாணி பிரணவமாய் நிகழா நிற்குந்
[1]தயாபரனா ரிரதத்தைத் தாருகன்றான் சஞ்சீவி மலைக்க ணுய்த்தான்.

எ-து பின்னையும் அந்த இரதமானது எப்படி விளங்கிப பிரகாசித்தது என்றால் வியாத சூத்திர ரூபமாகிய பூர்வ மீமாம்சை, உத்திர மீமாமசையாகிய இரண்டும், திருத்தோ நடுப்பிரதேசத்தின் விளங்காநின்ற திரண்ட பீடத்தினது உருவாகிய விளைவாய்த் தோன்றவும், தயாபரனாகிய அரஙகநாயகன அனுக்கிரகத்தால் திருவாய் மலர்ந்தருளிய புறச்சமய ஆகமங்கள் எல்லாம் அந்த இரதத்தில் பூணட உருளைகளாகிய தேர் வண்டில்களாகவும், அசசாணியானது பிரணவ சொரூபமயமாய்ப பிரகாசிக்கவும் இப்படியாகிய சர்வ மங்களா காரமான இரதத்தை வாயு வேகம், மனோ வேகமாய் நடாததிச சஞ்சீவி மலையினுடைய சிகரத்தில் நிறுத்தினான் தாருகன் எனறவாறு (5)

வியாத சூத்திரம - வியாத சூத்திர வடிவமாகிய மீமாஞசை என்பது உரை, மீமாஞ்சை எனபது சைமினி முனிவர் எழுதிய நூல் என்பர்; நியாய சாத்திர நூல இதன் காமகாண்டம பூாவ மீமாமசை எனவும், ஞானகாணடம் உததர மீமாமசை எனவும வழங்குகின்றன

பீடம - இருககை, ஆசனம தந்திரம - நூல உருளை - சககரம பிரணவம - ஓங்காரம; மூலம், பிரமத்தின் இணைந்த சோதி, சிருஷ்டிகாலதது விநது ரூபமாய விகாரப்பட்டு, ஸ்தூலம, சூககுமம எனனும் இருவகை வடிவமாகும

பா.வே. - 1 உபாயமுரு

## Tēriṉ pīṭamum uruḷaiyum

*viyātacūt tirantiraṉta pīṭatti ṉuruvāki viḷaivāyt tōṉrat*
*tayāparaṉā raruḷāṉa puṟaccamayat tantiraṅka ṭāḻvi lāta*
*niyāyamuṟu muruḷaikaḷā yaccāṇi piraṇavamāy nikaḻā niṟkun*
*tayāparaṉā riratattait tārukaṉrāṉ cañcīvi malaikka ṇuyttāṉ.*

## The Seat and the Wheel

The Cūtras of Vyāsa were seen as the seat;
All the Cāstras belonging to religions
That are not Vēda-inspired, granted
By kindly Araṅkaṉ, were the wheels;
The *Piraṇava* sound was the axle;
Such was the chariot of the good Lord
Which Tārukaṉ brought to the Cañcīvi Hill.

(தேரின் பரப்பு)

577. முன்னணியின் விளங்கிடுசுக் கிரீப மென்று
மேகபுட்பஞ் சயினியவ லாக மென்பர்
தன்னிகரி லாவலவ னடத்து கின்ற
தனிச்சுழலுஞ் சகடநா லெட்ட தாகு
முன்னவன்தே ரகலமியோ சனைநூ றாகு
முயரமது சொர்க்கமுடி வாகத் தோன்றும்
பொன்வரைபோற் றிகழ்ந்தொளிரு மிரதந் தன்னிற்
பூட்டியவெண் புரவிமுனம் புகன்ற தாமே.

எ-து இப்படித் தெய்வீகத் தன்மையாய் விளங்குகின்ற இரதத்தினது முன்னணியில் பூட்டிய சுக்கிரீப மெனறும், மேகபுட்பம் என்றும், சயினிய மென்றும், வலாக மென்றும் சொல்லுகின்ற அசுவங்களும் யாவரும் நிகரில்லாத சாரதியானவன் நடாத்துகின்ற முப்பத்திரண்டு பண்டி சுழல்கின்ற இரதமானது நூறு யோசனை அகலமுள்ளதாய் உயரமானது சொர்க்க லோகம் அளவாகத் தோன்றும் மகமேருவுக்குச் சமதையாய்ப் பிரகாசிக்கும் என்றவாறு.
(6)

சுக்கிரீபம், மேகபுட்பம், சயினியம், வலாகம் என்பன குதிரைகளின் பெயர்கள் வலவன் - தோபபாகன், சகடம் - சக்கரம், தேரகலம் - தேரின் அகலம் யோசனை - வெகுநீண்ட நீள அளவு. வரை - மலை

### Tēriṉ parappu

*muṉṉaṇiyiṉ viḷaṅkiṭucuk kiripa meṉṟu*
*mēkapuṭpañ cayiṉiyava lāka meṉpar*
*taṉṉikari lāvalava naṭattu kiṉṟa*
*taṉicculaluñ cakaṭanā leṭṭa tāku*
*muṉṉavaṉṭē rakalamiyō caṉainū ṟāku*
*muyaramatu corkkamuṭi vākat tōṉṟum*
*poṉvaraipōṟ ṟikalntoḷiru miratan taṉṉiṟ*
*pūṭṭiyaveṉ puravimuṉam pukaṉṟa tāmē.*

### The Area in Chariot

To its front the horses were yoked:
*Cukkiripam, Mēkapuṭpam, Cayiṉiyam, Valākam.*
A superb charioteer guided them.
Thirty-two wheels rolled forward;
The space within the chariot spread
One hundred yards in width;
As for the height, heavens appeared
To be the cut-off point.
The chariot with the horses mentioned
Seemed like the golden Mēru.

(அரங்கன் தேரில் எழுந்தருளல்)

578. கருடனார் துசபடமா யமர்ந்தருளிக்
களித்தனனாற் கமலக் கண்ணன்
திருமருவு மவுலிபட்டங் குண்டலங்கள்
மணிக்கவசந் திகழப் பூட்டிக்
குருதிகணை சாரங்கபுட்டி லவைதாங்கி
வீரகண்டை குலவித் தோன்றப்
பொருகுதிரு இரதத்தி னேறினான்
படகவிசைப் பெருக வன்றே.

எ-து அப்படியாகத் தாருகனானவன் மனோ வேகமாய் நடாத்தி வந்த இரதத்தின் கருட பகவானானவர் துசபடமாகிய கொடியாய்த் திருத்தேரின் பேரில் வீற்றிருந்தருளினார். அப்பொழுது செந்தாமரைக் கண்ணனாகிய அனந்த கலியாண குணவிபூதி விக்கிரக விசேடரான அரங்கநாயகர் திருமுடியினது நவரத்தினக் கசிதமாகிய மவுலியினைப் புனைந்தும், இரண்டு திருச்செவிகளிலே குண்டலங்களைப் புனைந்தும், மணிமார்பிலே வச்சிர கவசத்தைப் பூட்டியும், அரையிலே பீதாம்பர வுடையணிந்து முதுகினில் அம்பறாத் தூணி பிரகாசிக்கத்தக்கதாய்ச் சாரங்கமாகிய வில்லைக் கராம்புய மலரில் தாங்கியும், பாதத்தில் வீர கண்டாமணி விளங்க அந்தத் திருத்தேர் இரதத்தின் சிம்மாதனத்தில் எழுந்தருளினார். அப்பொழுது படக வாத்தியம் முதலாகிய தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி, நரம்புக்கருவி ஆகிய பஞ்ச நாதத் தொனிகளும் முழங்கிற்றது என்றவாறு. (7)

துசபடம் - கொடிச்சீலை. மவுலி - மௌலி - முடி. கவசம் - இரும்புச்சட்டை; வச்சிரச்சட்டை. சாரங்கம் - திருமாலின் வில் புட்டில் - உறை; அம்பறாத்தூணி. கண்டை - காலணி. படகவிசை - படகம் முதலிய இசைக்கருவிகள் படகம் - பேரிகை முதலிய போர்க்கள இசைக்கருவிகள்.

## Araṅkaṉ tēril eḻuntaruḷal

*karuṭaṉār tucapaṭamā yamarntaruḷik*
*kaḻittaṉaṉār kamalak kaṇṇaṉ*
*tirumaruvu mavulipaṭṭaṅ kuṇṭalaṅkaḷ*
*maṇikkavacan tikaḻap pūṭṭik*
*kurutikaṇai cāraṅkapuṭṭi lavaitāṅki*
*vīrakaṇṭai kulavit tōṉṟap*
*porukutiru iratatti ṉēṟiṉāṉ*
*paṭakavicaip peruka vaṉṟē.*

## Araṅkaṉ Ascends the Chariot

Karuṭaṉ stationed himself on the flag
With joy; the lotus-eyed Lord,
Wearing a rich crown, put on ornaments
On his forehead and ears. He also wore
The jewelled armour; with bow
And the quiver thirsting for blood,
The Lord had victorious anklets on his feet.
While the war-drums sounded,
He ascended the wonderful chariot.

(மலர் மாரி பொழிதல்)

579. மந்தார மலர்மாரி வானவர்கள்
சிந்தினர்கள் மகிழ்ந்து கூடிச்
சிந்தாத வீரசின்ன முழக்கினர்கள்
வளையொலித்தார் செயசெ யென்றே
கொந்தாரு மலர்ச்சோலைக் கோலமால்
வரையதனைக் குறுகிச் சேர்ந்து
பைந்தாது கமழ்மலரா னரிச்சித்தா
ரரங்கனது கமல பாதம்.

எ-து. அப்படி அரங்கநாயகராகிய பரவாசுதேவரானவர் திருத்தேரில் ஆரோகணிதமான மாத்திரத்தில் சந்தனம், அரிசந்தனம், மந்தார, பாரிசாதம், கற்பக விருக்ஷம் என்கின்ற பஞ்சதாருவினுடைய மலர்களைப் புஷ்ப வருஷமாய் வருஷித்தார்கள். தேவதுந்துமி முழக்கினார்கள். அதுவுமன்றியும் வலம்புரி, இடம்புரி, சலஞ்சலம் முதலான சங்கத்தொனி செய்தார்கள். செய செயவென்று துதித்தார்கள். பின்னையும் அந்தக் கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே அனந்தமான ரிஷிக் கூட்டங்களானவர்கள் மலர்த் தொகுதிகளால் அருச்சித்தார்கள் என்றவாறு. (8)

கொந்து - பூங்கொத்து. கோலமால்வரை - கோலாசலம்; கோலமலை

**உரை** - சலஞ்சலம் - சங்கு; வலம்புரி ஆயிரஞ்சூழ விளங்குவது

## Malar māri poḻital

*mantāra malarmāri vāṉavarkaḷ cintiṉarkaḷ makiḻntu kūṭic*
*cintāta vīracinṉa muḻakkiṉarkaḷ vaḷaiyolittār ceyace yeṉṟē*
*kontāru malarccōlaik kōlamāl varaiyataṉaik kuṟukic cērntu*
*paintātu kamaḻmalarā ṉariccittā raraṅkaṉatu kamala pātam.*

## A Shower of Flowers

The denizens of the sky showered
Mantāra flowers; gathering in joy,
They sounded the vīracinṉam instrument
And shouted: "victory!", "victory!"
Reaching the lovely Kōla Hill with trees
Full of honey-dripping blossoms,
They worshipped with pollen-rich blooms
The lotus-feet of Araṅkaṉ.

## (அருச்சித்த முனிவர்கள்)

580. அவர்கள்பெயர் செப்பிடுவாம் வதிட்டன்வான்
மீகியுட னாபத் தம்ப
னுவமையிலாப் பரத்துவாசன் வாமதே
வன்ஒளியார் கவுட பாதன்
தவமிகுத்த சனகமுனி கவுதமன்கண்
ணுவன்பிருகு புட்ப தந்தன்
கவலையறு மிடபசிங்கன் கலசமுனி
புலத்தியனாய்க் கருது மேலோன்.

எ-து அப்படியாக ஸ்ரீலட்சுமிபதியாகிய அரங்க நாயகருடைய கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே அருச்சித்த முனிவர்கள் யாரென்றால் பத்தியோக, ஞானத்தை உணர்ந்த வாபத்தம்பவிருடியும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் நான்கின் திறத்தைத் தெரிகின்ற பரத்துவாச முனிவரும், காண்பான், காண்பன, காட்சி, ஆகிய மூன்றையும் மேலாலவத்தை, கீழாலவத்தை ஆகிய இருவித வாதனையும் களைந்து பிரமக்கியானனிஷ்டா பரனாகிய வாமதேவனும், கவுடபாத இருடியும், மிகுந்த தபோநிஷ்டராகிய சனக முனியும், சாந்தி, விசாரம், சந்தோடம், சாதுசங்கம் ஆகிய நன்மார்ககத்தை யுடைய கவுதமரும், சீவகாருணியம், ஈசுரபத்தி, வாசவயிராக்கிய முமுடசுவாகிய கண்ணுவரும், ஞானயோக நிஷ்டாபரராகிய பிருகுவும், மற்கடஞானமாற்சால ஞானம் நிறைந்த புட்பதந்தனும், பிறவித் துன்பம் நீங்கி பரம இன்ப வைபவ சேவையையுடைய இடபசிங்கனும், வடமொழி தென்மொழி ஆகிய கடலைக் கடைந்து, நிசசயித்த பொருளாகிய அமுதத்தைத் திரட்டிக் கரையில் வைப்பவராகிய அகத்தியரும், திவ்விய தேசோமயமான பிரமபாவனை கூடினவராகிய புலத்திய னென்னு மகாமுனிவரும் என்றவாறு. (9)

ஆபத்தம்பம் - தருமநூல் பதினெட்டில் ஒன்று. ஆபத்தம்பன் - தருமநூல் வல்ல பண்டிதர். பரதுவாசா முதலானவர் இருடியர்

உரை - அவததை - வேதனை. இது சாக்கிரம், சுவப்பனம், சுழுத்தி, துரியம், துரியாத்தம் என்னும் ஐந்து வகைப்படும. உயாவுதாழ்வு, நன்மைதீமைகளால் கீழால் அவத்தை, மேலால் அவத்தை, சுத்த அவத்தை என்ற மூன்று பிரிவுகளை உடையது. பிரமக்கியானநிஷ்டாபரன் - பிரமகியானம் - பேரறிவு, உயர் ஞானம், நிஷடாபரன் - நியம நிட்டை தவறாதவன். தபோநிஷ்டர் - தவநிலையில் நிற்பவர். சாந்தி - ஆறறுதல், சாந்தம் விசாரம் - ஆராய்வு, ஆலோசனை. சந்தோடம் - மகிழ்ச்சி. சாதுசங்கம் - நல்லோர் இணக்கம் வாச வயிராக்கிய முமுட்சு - வாககுத்திறனுடைய துறவி. முமுட்சு - துறவி.

## Aruccitta munivarkaḷ

*avarkaḷpeyar ceppiṭuvām vaṭiṭṭaṉvāṉ*
*mīkiyuṭa ṉāpat tampa*
*ṉuvamaiyilāp parattuvācaṉ vāmatē*
*vaṉoḷiyār kavuṭa pātaṉ*
*tavamikutta caṉakamuṉi kavutamaṉkaṇ*
*ṇuvaṉpiruku puṭpa tantaṉ*
*kavalaiyaṟu miṭapaciṅkaṉ kalacamuṉi*
*pulattiyaṉāyk karutu mēlōṉ.*

## The Sages Worship

I shall relate the names of the sages;
Vacittaṉ, Vālmīki, Āpattampaṉ, parattuvacaṉ
Who has no equal, Vāmatēvaṉ, Kavuṭapātaṉ
The brilliant, Caṉakaṉ of high austerities,
Kavutamaṉ, Kaṇṇuvaṉ, Piruku, Puṭpatantaṉ,
Iṭapaciṅkaṉ kalacamuṉi who removes sorrows,
Akattiyaṉ and the noble Pulattiyaṉ.

(மேலும் பல முனிவர்கள்)

581. நாரதனார் சமதக்கினி மார்க்கண்டன்
துருவாச னயசாண் டிலியன்
சீரகலாச் சகடாயன் கணுசிமுனி
சனந்தரன்சின் மயத்தி னோங்கும்
பேர்பெரிய சனாதரனார் சதானந்தன்
குர்ச்சகன்பேர் பூண்ட மேலோன்
நீர்மைதிக ழாங்கீரன் காசிபனா
ரிடனீண்ட தவவி யாதன்.

எ-து. பின்னும் வந்து அரிச்சித்த முனிவர் யாரென்றால் இசை நூலிலக்கணம் வழுவாத சங்கீதங்கள் பாடாநின்ற நாரத முனியும், தவம் வேள்வி யோகங்களிலே வல்லவராகிய செமதக்கினியும், நித்தியத்தை அடைந்த மார்க்கண்டேயரும், பதக்கிரம சடையாகிய முத்திறத்தினையுடைய வேதத்தில் வல்லவராகிய துருவாசரும், வேதாந்தத்தை உணராநின்ற சாண்டிலியரும், யோக வல்லவராகிய சகடாய முனியும், அஷ்ட மாசித்திகளையுடைய கணுசி முனியும், நிருவிகற்ப ஞான நிஷ்டை கூடிய சனந்தரனும்

சின்மய முத்திரையினாலே ஓங்கிய சனாதரனும், நற்குண நற்செய்கை விதியை யனுஷ்டிக்காநின்ற சதா நந்தனும், பல வைபவ ஞான சாகரத்தில் படிந்த குர்ச்சகரும், அர்ப்பியாசவனு பவத்தினையுடைய வாங்கீரனும், தேவர் அசுரர்களையுண்டாக்கிய காசிபரும், அகப்பற்று, புறப்பற்று முதலியவற்றைக் களைந்து சொரூப ஞான தத்துவத்தை அறிகின்றவாரிடனும், நீண்ட தவத்தையுடைய வெதிரிகாரண்ணிய வாசியாகிய வாதராயணர் என்னும் திருநாம தேயத்தையுடைய வியாதர் முதலாகிய மகா ரிஷிகளெல்லாம் என்றவாறு. (10)

சமதக்கினி, துருவாசர், சாண்டிலியர், சகடாயர், கணுசி, சனந்தரன், சனாதரர், சதாநந்தர், குரசசகர், ஆங்கிரர், காசிபர், வியாதர் ஆகியோர் முனிவர்கள்.

## Mēlum pala muṉivarkaḷ

*nāratanār camatakkiṉi mārkkaṇṭaṉ*
*turuvāca ṉayacāṉ ṭiliyaṉ*
*cirakalāc cakaṭāyaṉ kaṇucimuṉi*
*caṉantaraṉciṉ mayatti ṉōṅkum*
*pērperiya caṉātaraṉār catāṉantaṉ*
*kurccakaṉpēr pūṇṭa mēlōṉ*
*nirmaitika ḻāṅkiraṉ kācipaṉā*
*riṭaṉiṇṭa tavavi yātaṉ.*

## Other Sages

Nāratar, Camatakkiṉi, Mārkkaṇṭēyar, Turuvācar,
Cāṇṭiliyar, scholarly Cakaṭāyar sage Kaṇuci,
Caṉantar, caṉātarar who leaves in the planes
Of higher consciousness, Catāṉantar,
The well-known Kurccakar, truthful Āṅkirar,
Kācipar, and Vyātar of great austerities.

(முனிவர் செயல்)

582. காத்தியாயன் குமுதனு ரோமசனே
குமுதாக்கன் கவுசி கப்பேர்
சீர்த்திதிகழ் தாக்கியனே வைசம்பா
யனன்சிறந்த பயில வன்றா
ளாத்திமிக வுடையவர்க ளருச்சனைசெய்
ததன்பின்ன ரமல மான
'பாத்திரமாம் வேதவே தாந்தத்தாற்
பாடினர்கள் பயங்க டீர்ந்து.

எ-து. முன் கூறிய முனிவர் அல்லாமல், காத்தியாயன், குமுதன், உரோமசன், குமுதாக்கன், கவுசிகன், வைசம்பாயனன், பயிலவன் முதலாகிய மகாரிஷிகளெல்லாம் தேவ தேவோத்தமானாகிய அரங்கநாயகருடைய கமலம் போன்ற சரணார விந்தங்களிலே வைகானச விதியினால் அர்ச்சித்து, உபநிடத முப்பத்திரண்டினாலும் தோத்தரித்து உருகி ஆனந்தப் பரவசர்களாய்ப் பயங்கள் தீர்ந்து, பின் புகழ்ந்து வரத் தொடங்கினார்கள் என்றவாறு. (11)

ஆத்தி - ஆத்திகக் கொள்கை. வைகானசவிதி - வைணவ ஆகமவிதி.

## Muṉivar ceyal

*kāttiyāyaṉ kumutaṉu rōmacaṉē*
*kumutākkaṉ kavuci kappēr*
*cīrttitikaḷ tākkiyaṉē vaicampā*
*yaṉaṉciṟanta payila vaṉṟā*
*ṉāttimika vuṭaiyavarka ḷaruccaṉaicey*
*tataṉpiṉṉa ramala māṉa*
*pāttiramām vētavē tāntattāṟ*
*pāṭiṉarkaḷ payaṅka ṭīrntu.*

## The Sages in Action

Kāttiyāyaṉ, Kumutaṉ, Urōmacaṉ, Kumutākkaṉ,
Kavucikaṉ, the famous Tākkiyaṉ,
Vaicampāyaṉaṉ were all there.
They worshipped the Lord with rituals
Followed by the singing of Araṅkaṉ's praises
In traditional philosophies.
Thus they were freed from fear.

(தேரின் வேகம்)

583. இரதமுறு மணிகளெலாங் கலகலவென்
றிரங்கியிட வண்டி லோதைச்
சரதமுறு கருடனார் சிறகடியிற்
பிரசண்டக் காற்றுத் தாக்கிப்
பரவுறுசெம் பட்டமயி ரசுரர்களைப்
பாய்திரையிற் கவிழ்த்த சங்கத்
திரமொலியான் மூர்ச்சித்தா ரசுரேசன்
மந்திரரைச் செயிர்த்துக் கூறும்.

எ-து. அப்படிக்கோடி சூரியப் பிரகாசமாய் வருகின்ற இரதத்தில் கட்டிய மணிகளானவை கலகலவென்று சத்திக்கவும், அந்த வண்டிலுனுடைய ரீங்காரத் தொனிகளும், கருடபகவானுடைய சிறகடியானது பிரசண்ட மாருதமாகிய வாய்வு வேகத்தால் அசுர சேனைகளான பவமுகராக்ஷதர்கள் செம்பட்டை மயிரும், திரண்டகாலும் பேரண்ட வயிறும், சிம்மப்பல்லுகளையுடைய அசுரர் கூட்டங்களைப் புரட்டிக் கொண்டு போய்க் கடலிலே கவிழ்த்து விட்டதுகள். பின்னையும் அந்தப் பாஞ்ச சன்னிய முழக்கத்தினாலே திரிலோகங்களும் செவிடுபடத்தக்கதாக அசுரர் கூட்டங்களும் மூர்ச்சை அடைந்தார்கள். அந்தச் சமயத்திலே அதி வீரனாகிய காலநேமி யென்னும் அசுரனானவன் தன்னிட மந்திரிகளாகிய சபராசூரன், அலவணன், கும்பன், நிகும்பன் என்று சொல்லுகின்ற சூரரைப்பார்த்துக் கோபிக்கும் முன்னமே சேனைகளை யெல்லாம் சேர்க்கத் தொடங்கினார்கள் என்றவாறு. (12)

வண்டில் - வணடி, சககரம. சரதம் - சத்தியம், உண்மை பிரசண்டம் - மிகுந்த வேகம். பாய்திரை - வீசும் அலை; கடல சங்கம் - சங்கு; பாஞ்ச சன்னியம் என்னும் திருமாலின் சங்கு. செயிர்த்தல - கோபித்தல்.

பா.வே. - 1 படுதத.

## Tēriṉ vēkam

*iratamuṟu maṇikaḷelāṅ kalakalaveṉ*
*ṟiraṅkiyiṭa vaṇṭi lōtaic*
*caratamuṟu karuṭaṉār ciṟakaṭiyiṟ*
*piracaṇṭak kāṟṟut tākkip*
*paravuṟucem paṭṭamayi racurarkaḷaip*
*pāytiraiyiṟ kaviḻtta caṅkat*
*tiramoliyāṉ mūrccittā racurēcaṉ*
*mantiraraic ceyirttuk kūṟum.*

## The Chariot's Speed

The bells of the chariot clanged
Musically; the bees buzzed;
Cyclonic wind blew from the wings
Of the divine Karuṭa; all these sounds
Drew the Acuras with russet hair
And dropped them into the ocean.
The king of Acuras swooned as he heard
The sounds of the conch. Furious,
He looked at his commanders and shouted.

(எதிர்த்த அசுர வெள்ளம்)

584. அண்டரண்டப் பரப்பெல்லாம் அமர்ந்திடுதன்
னசுரர்களை யழைக்க வந்தார்
சண்டமா ருதம்போலும் வேகத்தார்
பலவிதமாந் தழைத்த மெய்யர்
கண்டதுண்டப் பெரும்படையா மிருகமுகக்
கனல்பொழியுங் கடைக்க ணுள்ளார்
அண்டர்களை வேரறுத்துக் கைப்படிந்த
வினைமையின ரனந்த வெள்ளம்.

எ-து. காலநேமி என்னும் அசுர பெருமான் ஏவலினால் தூதரானவர் அங்கிருக்கின்ற அசுரர் கூட்டங்களுக்கு அறிவிக்க வந்தார்கள். அண்ட ரண்டப் பரப்பெல்லாம் வாசம் பண்ணா நின்ற வெள்ளங்களானவை சண்ட மாருத வேகம்போலும் வேகத்தினை யுடையவர்களாய் ஒற்றைக்கை, ஒற்றைக்கால், இரண்டு கை, இரண்டு கால், மூன்று முடி, அறுதாள் முதலாகிய பலவிதமாய்த், தழைத்த சரீரத்தை உடையவர்கள், கண்டதுண்டம் செய்கின்ற பெரிய ஆயுதங்களையுடையவர்கள், மிருக முகத்தைப் பலவாகக் கொண்டு அக்கினியைக் கக்காநின்ற குரூரக்கடைக்கண் பார்வையை யுடையவர்கள், அமரர் குலங்களை வேரறுத்து நன்றாய்க் கைப்படிந்த சுத்த வீரர்களாகிய அசுர வெள்ளங்களானவை அனந்தங் கோடி என்றவாறு. (13)

வினைமை - செயலாற்றல்.

## Etirtta acura veḷḷam

*aṇṭaraṇṭap parappellām amarntiṭutaṉ*
*ṉacurarkaḷai yaḻaikka vantār*
*caṇṭamā rutampōlum vēkattār*
*palavitamān taḻaitta meyyar*
*kaṇṭatuṇṭap perumpaṭaiyā mirukamukak*
*kaṉalpoḻiyuṅ kaṭaikka ṇuḷḷār*
*aṇṭarkaḷai vēraṟuttuk kaippaṭinta*
*viṉaimaiyiṉa raṉanta veḷḷam.*

## The Acura Enemy

He called out to his Acuras scattered
In all the universes, and they came.
Their speed rivalled the cyclone.

Their bodies had grown severally[1]
Carrying weapons that cut and shred,
These animal-faced soldiers had eyes
That belched fire. A countless flood,
They formed the army that had destroyed
The gods to the roots.

(அசுர வெள்ளமும் தீய சகுனமும்)

585. தேர்மீதும் பரிமீதும் வாரணத்தி
னம்பாரிச் செறிவின் மீதும்
பார்மீதுங் கொடிகுடைகள் படர்ந்திடவும்
படகமுதற் பந்தி யார்ப்பத்
தார்மீதும் புலவுமணங் கமழ்ந்திடவ
டக்கியத்திற் றழைத்த கூளி
ஏர்தீர்ந்த கொடிக்கணமும் புரண்டுபுரண்
டிரதத்தி னெய்தா நின்ற.

எ-து. அந்த அசுரப்படை வெள்ளங்களானவை எப்படிப் பிரவேசித்தன என்றால், தேரின் பேரில் வந்த வெள்ள மனந்தமாயும், குதிரையின் பேரில் வருகின்ற வெள்ளங்கள் பலவாயும, நல்ல பட்டய யானைக் கழுத்தில் பிரகாசிக்காநின்ற அம்பாரி நடுப்பிரதேசத்தில் ஏறி அந்த யானையை நடாத்தி வருவார்கள் அனந்த வெள்ளமும், பாதசாரிகளாய் வருகின்ற அசுரர் கூட்டங்கள் எண்ணிறந்தனவாய் நிறைந்து வந்த வெள்ளமும், துசபடமாகிய கொடிகளும் சத்திரமான வெண்கொற்றக் குடையும் உலகமெல்லாம் தழைத்த நிழலைப் பரப்பவும் படகம் முதலாகிய வாத்தியங்கள் தொனிக்கவும், அந்த அசுரர் தரிக்காநின்ற மந்தார மாலை பாரிசாத மாலையும் பரிமளிக்கவும், அடக்கியத் தொகுதிகளெல்லாம் கூளிக் கூட்டங்களும், அழகு நீங்கிய காக்கைக் கூட்டங்களும், புரண்டு புரண்டு தீய சகுனங்களைக் காட்டவும், இந்தச சகுனங்களைக் காணாதவர்களாய்ப் பிரவேசித்தார்கள் அசுரர் கூட்டங்கள் என்றவாறு. (14)

படகம - இரணபேரி என்னும் வாத்தியம். தார் - மாலை. புலவு - புலால், ஊன் அடக்கியம் - சவஅடககம் செய்த இடம. ஏர் - அழகு. கொடிக்கணம் - காக்கைக் கூட்டம்.

---

1. One had two heads, another three hands and so on.

## Acura veḷḷamum tīya cakuṉamum

*tērmitum parimitum vāraṇatti*
*ṉampāric ceṟiviṉ mītum*
*pārmituṅ koṭikuṭaikaḷ paṭarntiṭavum*
*paṭakamutaṟ panti yārppat*
*tārmitum pulavumaṇaṅ kamaḻntiṭava*
*ṭakkiyattiṟ ṟalaitta kūḷi*
*ērtirnta koṭikkaṇamum puraṇṭupuraṇ*
*ṭiratatti ṉeytā niṉṟa.*

## The Acuras, Evil portents

Riding the chariots, galloping on horses,
Seated on the howdahs of elephants,
They came spreading on earth lots of shade
From their flags and umbrellas.
The war-drums sounded. The smell of meat
Rose from their flower-garlands,
The Kuli spirits screeched from crematoriums.
An ugly flight of crows cawed raspingly
While encircling the chariots.

(அசுர வெள்ளத்தின் மகிழ்ச்சி)

586. இரவியினை யூர்கோளின் வட்டங்க
ளெய்தியிட விம்பர் தன்னிற்
பரவியசோ ரியின்வாரி யந்தரத்திற்
படர்ந்துநிலம் பாய்தல் செய்யக்
குரவுகமழ் தாரசுரக் குலதீப
வெழில்விளக்கைக் குறுகி நின்றாங்
கரவமைந்த மந்திரியர் கண்களிப்ப
வெள்ளச்சே னையரைக் கண்டார்.

எ-து. அந்த அசுரர் பிரவேசிக்கும்போது காணாத துர்ச்சகுனமெல்லாம் கண்டும், ஊழின் திறந்தாலே மதோன்மத்தராய் வருகின்ற பேர்க்குச் சூரிய பகவானை நடுப்பிரதேசத்தி னூர்கோள் வட்டங்கள் சூழ்ந்திருக்கக் கண்டார்கள். அது அல்லாமல் உதிர மாரியானது

வாகனத்தினின்று இடைவிடாது சொரிகின்றதைக் கண்ட அசுர வெள்ளங்களானவை இதை ஆலோசியாமல் மதோன்மத்தராய்த் தருக்குற்றுத் தங்கள் குலத்துக்கெல்லாம் அரச சூடாமணியாகிய காலநேமி என்னும் அசுர பெருமானைக் கண்டு வணங்கிக் களிப்புற்று நின்றார்கள். அப்படி வந்து வணங்கி நின்ற சேனைகளைக் கண்ட மந்திரிமார்கள் அளவில்லாத மகிழ் சிறந்தார்கள் என்றவாறு. (15)

ஊர்கோள் - சந்திரசூரியரைச் சூழ்ந்து தோன்றுகின்ற மேகவட்டம். இம்பர் - இவ்வுலகம். சோரி - இரத்தம். வாரி - கடல், வெள்ளம். குரவு - நறுமணம்.

உரை - மதோனமததர் - மிகுந்த செறுக்குடையவர்.

## Acura veḷḷattiṉ makiḻcci

*iraviyiṉai yūrkōḷiṉ vaṭṭaṅka*
*ḷeytiyiṭa vimpar taṉṉiṟ*
*paraviyacō riyiṉvāri yantarattiṟ*
*paṭarntunilam pāytal ceyyak*
*kuravukamaḷ tāracurak kulatīpa*
*veḷilviḷakkaik kuṟuki niṉṟāṉ*
*karavamainta mantiriyar kaṇkaḷippa*
*veḷḷaccē ṉaiyaraik kaṇṭār.*

## The Acuras in Glee

The sun had been surrounded
By rings of cloud; on this earth
Poured a rain of blood that streamed
Everywhere as a flood. The Acuras
Drew close to the lovely lamp of their clan,
Kālanēmi wearing scented garlands.
The evil ministers felt happy
To see their army hordes.

(அசுரப் படையின் முழக்கம்)

587. ஆலவட்ட மேந்தினர்கள் சுருட்டியினைத்
தாங்கினர்க ளலர்ந்த மேலாம்
பாலமுதக் கிரணசமு கத்தினிறை
குடை பரப்பக் கனன்று வந்தார்

சீலமுறு நாகசுரம் வீரசின்ன
முழக்கினர்கள் சிந்து போல
வோலமுறு சங்கதனை யொலித்தனர்கள்
பம்பையினை யொலித்தல் [1]செய்தார்.

எ-து அப்படி வந்து நிறைந்த அசுரர் கூட்ட வெள்ள மானவர்கள் ஆலவட்டங்கள் பொன் மயமான காலாகியது பிரகாசிக்கத் தக்கதாய் அனேக பந்தியாய் அனேக மேந்தினார்கள். அனந்தகோடி அசுரர் சுருட்டிகளைக் கையினால் தாங்கி வந்தார்கள். அனந்த கோடி அசுரர் கிரண சமூகங்களால் முத்த மாரியைத் தூவி நிழலைப் பரப்பா நின்ற வெண்கொற்றக் குடையினை அனேகமாய்த் தாங்கி வந்தார்கள். அப்படித் தாங்குகின்ற தவளச் சத்திரக் குடையினது நிழலிலே இருந்த போதும் கோபாக்கினியானது வெப்பத்தைக் காட்டத்தக்கதாய் அனேகம் படைகள் சூழ்ந்து வந்தார்கள. சிறப்பாகிய நாகசுரம், வீர சின்னம் முதலானது முழக்கினார்கள். வலம்புரி முதலாகிய சங்கத்தொனி செய்தார்கள். பம்பை முழக்கி ஆர்ப்பரித்தார்கள் என்றவாறு (16)

ஆலவட்டம் - விசிறி. சாமரை சுருட்டி - ஆலவட்டம். பட்டினால் அமைந்த. மரியாதைக்கு வீசப்படும் விசிறி.

பா.வே. - 1. யொலித்து நின்றார்.

## Acurap paṭaiyiṉ muḻakkam

*ālavaṭṭa mentiṉarkaḷ curuṭṭiyiṉait*
*tāṅkiṉarka ḷalarnta mēlām*
*pālamutak kiraṇacamū kattiṉiṟai*
*kuṭai parappak kaṉaṉṟu vantār*
*cīlamuṟu nākacuram vīraciṉṉa*
*muḻakkiṉarkaḷ cintu pōla*
*vōlamuṟu caṅkataṉai yolittaṉarkaḷ*
*pampaiyiṉai yolittal ceytār.*

## The Acura Army in Tumult

They held up fans; also chowries;
They raised up umbrellas that seemed
White as nectarean moonlight.
They marched forward in anger.
*Nākasvaram* and *vīraccinnam* instruments
Were sounded aloud by them.
High-pitched conches were blown;
They sounded the *pampai* drum as well.

(போர்க் களத்தை நோக்கி அசுரர் படை)

588. சிரமனந்தங் கரமனந்தங் காலனந்தஞ்
சிறந்தனர்க டீங்கின் மேலோர்
வரமுறுமத் திரமேந்தி வில்லினையே
வணக்கிநின்று வண்மை யான
வுரமதனின் வச்சிரத்தா னியற்றுகின்ற
கவசத்தை [1]யுயர்ந்த மேலாற்
திரமதனில் தரித்தனர்க டும்பைமா
லையைமுடியி றுளக்கி நின்றார்.

எ-து. அனந்தகோடி அசுரவெள்ளங்களானவர்கள் சிரசுகள் அனந்தம் பேதங்களாயும், கால்கள் அனந்தம் பேதங்களாயும், தீங்கெல்லாம் திரண்ட வடிவினராயும், நல்ல வரங்களைப் பெற்ற தேயப்படைகளிலே சிறந்த கணைகளைத் தாங்கினவர்களாயும், வலியுடைய காண்டிபத்தை வளைத்து கையிலே பிடித்தவர்களாயும், சிறந்த மார்பகத்தின் வச்சிரக்கவசம் புனைந்து, சிரசில் தாங்கிய மவுலியில் தும்பை மாலையை அணிந்தும் செய நினைந்த அசுரர் கூட்டங்கள் சமர்க்களத்தைக் குறித்து வந்தார்கள் என்றவாறு. (17)

அத்திரம் - கணை.

பா.வே. - 1 உண்மையாக.

## Pōrk kaḷattai nōkki Acurar paṭai

*ciramaṉantaṅ karamaṉantaṅ kālaṉantañ*
*ciṟantaṉarka ṭīṅkiṉ mēlōr*
*varamuṟumat tiramēnti villiṉaiyē*
*vaṇakkiniṉṟu vaṇmai yāṉa*
*vuramataṉiṉ vaccirattā ṉiyaṟṟukiṉṟa*
*kavacattai yuyarnta mēlāṟ*
*tiramataṉil tarittaṉarka ṭumpaimā*
*laiyaimuṭiyi ṟuḷakki niṉṟār.*

## The Acura Army to the battlefield

With innumerable heads and hands
And innumerable feet they came, experts
In evil; they bore mantra-rich missiles

And bows readied with taut strings;
Armours of diamond covered their body;
The *tumpai* garland was on their crowns.

**(அசுரரின் ஆயுதங்கள்)**

589. **சூலமதைத் தாங்கினர்கள் வேலினையே**
**யெடுத்தனர்க டூய தண்ட**
**மாலமுறு சக்கரத்தைத் தரித்தனர்கள்**
**கழுமுள்ளா யுதம்வி ளங்கப்**
**பாலதனிற் பிடித்தனர்கள் கண்டகோ**
**டாரியினைப் பரிந்தெ டுத்தார்**
**கோலமுறு நாந்தகத்தைக் கூற்றம்போல்**
**விதிர்த்தனர்கள் [1]கொடிய சூரர்.**

எ–து. அப்படியாக யூகத்தலைவர், அணித்தலைவர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் முதலாகிய அசுரர் கூட்டங்கள் சூலத்தைக் கையில் தாங்கி வந்தார்கள். பலபேர் வேலினைத் தாங்கி வந்தார்கள். சிலபேர் தண்டத்தைக் கையிலே தாங்கி வந்தார்கள். கோடானுகோடிகள் விடங்களைக் கக்காநின்ற சக்கராயுதத்தைத் தாங்கி வந்தார்கள். நாந்தகமாகிய வாளையுருவிப் பிடித்து எமனைப்போலச் சீறிச் சாரிகை திரிந்தார்கள் அசுரர் வெள்ளங்கள் என்றவாறு. (18)

ஆலம் – விடம். கழுமுள் – ஈட்டி, சூலம போன்ற ஆயுதம். நாந்தகம் – திருமாலின் வாள். பொதுவாள்.

**பா.வே.** – 1. குறைவி லாதார்.

**Acurarin̲ āyutaṅkaḷ**

*cūlamatait tāṅkin̲arkaḷ vēlin̲aiyē*
*yeṭuttan̲arka ṭūya taṇṭa*
*mālamur̲u cakkarattait tarittan̲arkaḷ*
*kaḻumuḷḷa yutamvi ḷaṅkap*
*pālatan̲ir̲ piṭittan̲arkaḷ kaṇṭakō*
*ṭariyin̲aip parinte ṭuttār*
*kōlamur̲u nāntakattaik kūr̲r̲ampōl*
*vitirttan̲arkaḷ koṭiya cūrar.*

## The Acura Weaponry

Tridents they held; they took up
Lances; some held sticks;
Others carried discus which spewed poison;
Thorn-sharp lances were held by them
As also terrible axes. Carrying handsome
Swords, the evil ones marched forward.

(அரங்கன் தேர் கண்ட அச்சம்)

590. சிலையினொலித் திடுமணியி னொலிகளுமச்
சங்கத்திற் சிறந்த வோதை
வலியதினு மசுரகுல வெள்ளங்கள்
மிகவயர்ந்து வண்மை குன்றிப்
பொலிவகன்ற மான்கூட்டம் புலிதாக்கப்
பொற்பழிந்து பொலிவ தென்ன
நிலையழிந்தார் சிலபேர்க ளர்த்தரதர்
முதலோர்க ணெருங்கி வந்தார்.

எ-து அப்படி அரங்க நாயகருடைய இரதமானது யுத்த களத்தில் நின்றவுடனே அவருடைய சார்ங்க வில்லினொலிக்காநின்ற கண்டாமணியினது இடி முழக்கம்போன்ற சததமும், பாஞசசன்னிய ஒலியினாலே அண்ட கோளகை வெடிக்கத்தக்கதாக முழங்கா நின்ற சபதத்தினாலே அசுர வெள்ளஙகளெல்லாம் கலங்கி மயங்கிப் பொலிவு நீங்கிய மான் கூட்டஙகளானவை புலியானது தாக்கத் தங்கள் வலியானது அழிந்தால் எப்படியோ அபபடிபபோல அணிவகுத்து அணியும் யூகங்களும் நிலை தளர்ந்து நின்றார்கள். அதை அறிந்த வர்த்தரதர் முதலாகிய பேர்கள் சீறிக் கண்களில் நெருப்புப் பொறி பறக்கத் தக்கதாய்க் கோபிதது வந்து வளைந்து கொண்டு நெருங்கினார்கள் என்றவாறு. (19)

சிலை - வில. பொறபு - பொலிவு. அழகு பொலிவது - விளங்குவது அர்த்தரதர் - போாததிறனற்றவர்

## Araṅkaṉ tēr kaṇṭa accam

*cilaiyiṉolit tiṭumaṇiyi ṉolikaḷumac*
*caṅkattiṟ ciṟanta vōtai*
*valiyatiṉu macurakula veḷḷaṅkaḷ*
*mikavayarntu vaṇmai kuṉṟip*

*polivakanṟa māṉkūṭṭam pulitākkap*
*poṟpaḷintu poliva teṉṉa*
*nilaiyaḷintār cilapērka ḷarttaratar*
*mutalōrka ṇeruṅki vantār.*

## Araṅkaṉ's Chariot Spreads Fear

Sounds from bells that hung from the bows
And the superior sound of the conches
Spread fear in the Acura army.
They grew wan, felt weak, lost their sheen
And were like herds of deer
Attacked by a tiger. Some of the leaders,
However, came forward.

(போர்க்களம்)

591. காண்டீபம் வளைத்தனர்கள் சங்கவொலி
காட்டினர்கள் கருதி நின்று
தூண்டியிடு பகழியையோர் தொடையதற்குக்
கோடியாய்த் தொடுத்து நின்றார்
ஆண்டவனுஞ் சரமழையை யறுத்தவர்கள்
இரதத்தை யழித்து நின்றான்
நீண்டகளந் தனினின்று நெடும்போதங்
கோசித்தார் நெறியி லாதார்.

எ-து. அப்படி அசுரர் கூட்டங்கள் எல்லாம் அரங்கநாயகர் காண்டிபத் தொனியினாலே மூர்ச்சித்ததைக் கண்டு எதிர்த்து வந்த வர்த்தரதர் முதலாகிய பேர்கள் தங்கள் காண்டிபத்தை வளைத்தார்கள். சங்கதொனி செய்தார்கள். கரவேக சரவேகமாய் எய்யா நின்ற கணைகள் ஒரு தொடைக்குக் கோடி கோடியாய் விடுத்து ஆர்ப்பரிப்பார்கள். இப்படி விடப்பட்ட அசுரர் கூட்டங்களினுடைய சரமாரிகளை யெல்லாம் அறுத்துத்தள்ளியவர் ஏறி நடாத்தாநின்ற சேமத்தேர் பந்திகள் அழிந்தது எண்ணிக்கையில்லாததைக் கண்ட பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், நிவாத கவச காலகேயர்கள், திரதர் முதலாகிய பேர்களும் செய்காரியந் தவிருங்காரியம் தெரியாதவர்களாய் நெடும்போது ஆலோசித்தார்கள் என்றவாறு. (20)

பகழி - அம்பு. தொடை -அம்பு.

**உரை** - சேமத்தேர் - உதவித்தேர், காவல்தேர். பட்டவர்த்தனர் - பட்டஞ்சூட்டிய அரசர். மகுடம் - முடி. வர்த்தனர் - தரித்தவர்.

## Pōrkkaḷam

*kāṉṭipam vaḷaittaṉarkaḷ caṅkavoli*
*kāṭṭiṉarkaḷ karuti niṉṟu*
*tūṇṭiyiṭu pakaḻiyaiyōr toṭaiyataṟkuk*
*kōṭiyaỳt toṭuttu niṉṟār*
*āṉṭavaṉuñ caramaḻaiyai yaṟuttavarkaḷ*
*iratattai yaḻittu niṉṟāṉ*
*nīṇṭakaḷan taṉiniṉṟu neṭumpōtaṅ*
*kōcittār neṟiyi lātār.*

## The Battlefield

They bent their bows; sounded conches;
They aimed a crore of arrows
To meet each one from the Lord.
The Lord nullified the shower of arrows
And smashed their chariots to smithreens.
The commanders withdrew from the field
And were closetted for a long while,
The evil Acuras.

(இருபடையின் கணைகள்)

592. அரங்கநா யகனுரத்தும் புயமதினு
நெற்றியினு மளவி லாத
சரங்கள்கோத் தெய்தனர்பின் னவைவிலக்கத்
தடைபடா தாதித் தாக்க
வுரங்களிழி யாதுதிரக் கடற்படிந்தா
ரும்பர்கடம் உதவி யெண்ணிக்
கரங்களாற் சார்ங்கவில்லை வளைத்தம்பு
சரக்கூடந் தழையக் கட்ட.

எ-து மறுபடியும் அந்த அசுர சேனாதிபதிகளாகிய அதி சூரரானவர்கள் குரூரமான அக்கினி விஷங்களைப் பொழிகின்ற பாண சரங்களை அரங்க நாயகனுடைய மார்பகத்தினும் புசத்தினும் நெற்றியினும் அளவிறந்த கணை மாரிகளைப் பொழிந்தார்கள். அதை அரங்க நாயகன் தடைப்படுத்த, அந்தத் தடையினினில்லாமல் அக்கணைகளையெல்லாம் விழுங்கிப் பிரசண்ட மாருதம்போல வந்து அவரவர் அவயங்களிலே தாக்க வவயமெல்லாம் உதிரப் பெருக்கானது எடுத்தோட, அவ்வுதிரப் பெருக்கின் மூழ்கினார். அவர் எத்தன்மையர் எனின்

தேவாதிகளுக்கு உபகாரம் குறித்துத் தனது சார்ங்க வில்லை வளைத்தொரு நொடிப்பொழுதில் அக்கினிக் கணையால் சரக்கூடம் கட்ட, அக்கணையால் அசுர வெள்ளங்கள் எரிந்தும் பொரிந்தும் நெரிந்தும் போக நொறுக்கிப் பொடியாகச் செய்தார் என்றவாறு. (21)

**உரம்** - மார்பு.

## Irupaṭaiyiṉ kaṇaikaḷ

*araṅkaṇā yakaṉurattum puyamatiṉu*
*neṟṟiyiṉu maḷavi lāta*
*caraṅkaḷkōt teytaṉarpiṉ ṉavaivilakkat*
*taṭaipaṭā tātit tākka*
*vuraṅkaḷiḻi yātutirak kaṭaṟpaṭintā*
*rumparkaṭam utavi yeṉṉik*
*karaṅkaḷāṟ cāṁkavillai vaḷaittampu*
*carakkūṭan taḻaiyak kaṭṭa.*

## Missiles from Both Sides

The Acuras directed innumerable missiles
Towards Araṅkaṉ's chest and shoulders.
As they were rendered harmless,
And the Acuras themselves attacked,
They were drowned in a sea of blood.
To help the gods, the Lord bent his bow
And built a spire of fiery arrows.

(அரங்கனின் அம்புகள்)

593. சாபத்தை வளைத்தவருங் கருடனையுஞ்
சாரதியுங் கலக்கிச் சார்ந்தங்
காபத்தை விளைத்தனரா லரங்கநா
யகனுமவர் தமைய டுத்துக்
கோபத்தைச் செலுத்திடுவா டனைவிடுத்தங்
கவர்தமையும் கொண்டான் மேலோர்
சாபத்தை விலக்கிடவு மனுபவித்துக்
காட்டிடவுஞ் சார்ந்த மேலோன்.

எ-து. அப்படி அக்கினிச் சரக்கூடத்தால் அசுரர் கூட்டங்களெல்லாங் கிலப்பட்டுப்போன மாத்திரத்தில், பிரளைய கால உருத்திரனைப் போலச் சீறிக் கோபித்துப் பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், மகாரதர், நிவாத கவசகால கேயர்கள், யூகத் தலைவர்கள், அணித்தலைவர் முதலாகிய பேர்கள் தமது வில்லை வளைத்துக் குரூரமான கணைகளைச் செலுத்திக் கருட பகவானையும், சாரதியாகிய தாருகனையும் பிரமாஸ்திரம் முதலாகிய பிரபல கணைகளானவர்கள் துளைபட்டுத் துன்பமடைந்து மனம் மெலிந்து நைந்துருகிப் போகத்தக்கதாகிய வருத்தத்தைச் செய்தார்கள் அப்படியாகிய அசுரர் வீரர் முன்பு தேவநாயகனும் அவர் மேல் தேரை நடாத்திக் கோபத்தைச் செலுத்தினவராய், அவர்மேல் வாளாயுதமாகிய படையைச் செலுத்தினர். அது விடங்களைப் பொழிந்து அக்கினியைச் சொரிந்து பிரசண்ட மாருதம் போலிசைந்து வந்து தாக்கி வச்சிரக் குன்றம் போன்ற மார்பகத்தைக், கவசத்தை, வில்லை, அம்பறாத் தோணியைப் பிளந்து, அவர் சிரசைக் கண்ட துண்டமாக்கி அரங்க நாயகர் கராம்புய மலரிலே வந்து வீற்றிருந்தது. அவர் எத்தன்மையரென்றால், மேலோர்களாகிய இருடிகளிட்ட சாபத்தைத் தனது மனோரம்மிய மிருந்தாலும், அனுபவித்துக் காட்டவும், மனமில்லாதிருக்கின்றதை நீக்கிப் போடவும் ஆகிய மேன்மையினையுடைய தேவன் என்றவாறு (22)

சாபம - வில மேலோர் சாபம் - தவத்தோர் கோபமொழி.

## Araṅkaṉiṉ ampukaḷ

*cāpattai vaḷaittavaruṅ karuṭaṉaiyuñ*
*cāratiyuṅ kalakkic cārntaṅ*
*kāpattai viḷaittaṉarā laraṅkanā*
*yakaṉumavar tamaiya ṭuttuk*
*kōpattaic celuttiṭuvā ṭaṉaiviṭuttaṅ*
*kavartamaiyum koṇṭāṉ mēlōr*
*cāpattai vilakkiṭavu maṉupavittuk*
*kāṭṭiṭavuñ cārnta mēlōṉ.*

## Araṅkaṉ's Arrows

The Acuras tried to endanger Karuṭaṉ
And the charioteer by their arrows
Directed at the Lord. Araṅkaṉ
Flashed his sword at them that moved
With angry speed and destroyed them.
Such was the Supreme who alone can
Remove the curses of sages
And himself experience them.

(அசுரர் படை வீழ்ச்சி)

594. அரங்கனா லசுரர்கடந் தேரழிந்து வில்லழிந்தங் கழிவி லாத
துரங்கமாப் பந்திகளுந் தூளதாய்த் துகள்பட்டுத் தொலைந்த மேலாங்
கரங்களா லுயர்களிறு கையிழந்த மணியிழந்த கால்க ளற்ற
வுரங்களா னோங்கியகா லாளர்களும் பிணக்குன்றத் துயர்வா யுற்றார்.

எ-து. அப்படி எதிர்த்து யுத்தம் செய்கின்ற அதி சூரர்களை யெல்லாம் அரங்க நாயகருடைய கணைமாரிகளாலே இரத மெல்லாம் அழிந்தும், அவர்கள் காண்டிபங்க ளெல்லாம் கண்டதுண்டப் பட்டிருகவும், அழிவில்லாமல் இருக்கின்ற குதிரைப் பந்திகளெல்லாம் கரிந்து, நீண்ட துதிக்கையினையுடைய யானைக்கூட்டங்களானவை அறுந்தும், உரல் போன்ற நான்கு கால்கள் துணிபட்டும், வலியினாலுயர்ந்த காலாள் பந்திகளெல்லாம் தூளிப்படலமாய்ப் பிணக்குன்றமாய்க் குவிந்தார்கள் என்றவாறு. (23)

அசுரர்கடந்தேரழிந்து - அசுரர்கள் தம்தேர் அழிந்து. துரங்கம - குதிரை.

## Acurar paṭai vīḻcci

*araṅkanā lacurarkaṭan tēraḻintu*
*villaḻintaṅ kaḻivi lāta*
*turaṅkamāp pantikaḷun tūḷatāyt*
*tukaḷpaṭṭut tolainta mēlāṅ*
*karaṅkaḷā luyarkaḷiṟu kaiyiḻanta*
*maṇiyiḻanta kālka ḷaṟṟa*
*vuraṅkaḷā ṉōṅkiyakā lāḷarkaḷum*
*piṇakkuṉṟat tuyarvā yuṟṟār.*

## The Acura Army Loses

Due to Araṅkaṉ, the asuras lost
Their chariots and bows. The squadrons
Of horses that seemed indestructible
Were now pulverised. The elephants
That had been richly caparisoned,
Lost their trunks and their thick feet.
The infantry became a mountain of corpses.

(அரங்கனின் ஞானாஸ்திரம்)

595. எமதுவலி பாரென்று சினங்கூறி
மந்திரிய ரிருளா யெய்தி
மனமெலியா துலகத்தை விளங்காமல்
மாய்கையினான் மறைதல் செய்தார்
இனமகலா விடியின்மா முழக்கினார்
மின்னலென விசைவு கொண்டார்
பனகவணை யரங்கத்தான் அவைமதித்து
ஞானமாப் படைதொ குத்தான்.

எ-து இந்தப் பிரகாரமாக அரங்கநாயகருடைய அக்கினிக்கணை சரக்கூடத்தால் பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், அதிரதாள், மகாரதாள் முதலாகிய நால்வகைச் சேனைகளும் மடிந்தது கண்டு, பிரளைய கால உருத்திரனைப்போலச் சீறி மந்திரிமார்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால், எங்கள் புசபல பராக்கிரமங்களைப் பாருமென்று அவர்களுடைய அசுர மாய்கையினாலே அண்டரண்ட பகிரண்டங்களெல்லாம் இருளாக வந்து சூழ்ந்துகொண்டு சீவ கோடிகளுடைய மனதெல்லாம் பதைபதைக்கக் கோடைகாலத்தில் முழங்கிய பேரிடிகளைப் போலத் தொனித்து மின்னலைப்போலப் பிரகாசித்தும் இருக்கின்ற அசுர மாய்கையைக் கண்டு, அனந்த விமான சேகரராகிய அரங்க நாயகர் தம்மிட கராம்புய மலரில் விளங்காநின்ற ஞானாஸ்திரத்தைப் பிரயோகித்தார் என்றவாறு. (24)

பனகம் - பாமபு அணை - படுக்கை

## Araṅkaṉiṉ ñāṉāstiram

*ematuvali pāreṉṟu ciṉaṅkūṟi*
*mantiriya riruḷā yeyti*
*maṉameliyā tulakattai viḷaṅkāmal*
*māykaiyiṉāṉ maṟaital ceytār*
*iṉamakalā viṭiyiṉmā muḻakkiṉār*
*miṉṉaleṉa vicaivu koṇṭār*
*paṉakavaṇai yaraṅkattāṉ avaimatittu*
*ñāṉamāp paṭaito kuttāṉ.*

## Araṅkaṉ's Missile of Knowledge

The furious commanders challenged,
"Look at our strength". Undaunted,
They cast a spell of darkness and covered

The entire earth. They caused
The sounds of terrifying thunder
And sharp moments of lightning.
Recognising the witchcraft, Araṅkaṉ
Who rests on the snake, released
The missile of knowledge.

**(அரங்கனின் கணைக் கூட்டம்)**

596. **அந்தமாப் படைசென்றங் கவர்மாய்கைத்**
**திறத்தினையு மழித்து நீண்ட**
**நிந்தைசே ரவர்தாமும் பூதகணத்**
**தவர்விளித்து நிற்கச் செய்தார்**
**எந்தையார் விடுத்திடுமோர் கணையனைத்து**
**மவர்விழுங்கி யெய்த்தி டாமல்**
**விந்தையாய் விளங்கிடுமோர் செயல்கண்டங்**
**கவர்தாமும் வியந்து நின்றார்.**

எ-து அந்தச்சமர பூமியிலே ஸ்ரீலட்சுமிபதியாகிய அரங்கநாயகருடைய கியானாஸ்திரமானது கோடி சூரியன் உதித்ததுபோலப் பிரவேசித்து, இருள் படலங்களையெல்லாம் நீக்க, அதை மந்திரிமார்களாகிய பேர் தங்களுடைய மாய்கையினாலே அனேக பூதகணங்களை நிர்மித்தந்த சமர பூமிகள் எல்லாம் நிரம்பும்படியாக நிற்கச் செய்தார்கள். அந்தச் சமயத்திலே அரங்கநாயகர் காண்டீபத்தை வளைத்து அனேக பாணங்களைச் சரவருஷமாய் வருஷித்து விட்டார் அந்தப் பாணங்களை யெல்லாம் அவர்கள் கபளீகரம் செய்து கொண்டிருககின்ற பூதகணங்களுடைய பிரதாபங்களை மந்திரிகள் கண்டு புன்னகையுடனே சந்துஷ்டி அடைந்தார்கள் என்றவாறு. (25)

எய்த்தல் - ஏமாற்றுதல் அழித்தல்.

**உரை** - சமரபூமி - யுத்த களம். சரவருஷம் - அம்புமழை. கபளீகரம - (கவளீகரம்) விழுங்குதல். சந்துஷ்டி - மகிழ்ச்சி.

## Araṅkaṉiṉ kaṇaik kūṭṭam

*antamāp pataiceṉraṅ kavarmāykait*
*tiṟattiṉaiyu maḻittu nīṇṭa*
*nintaicē ravartāmum pūtakaṇat*
*tavarviḷittu niṟkac ceytār*

*entaiyār viṭuttiṭumōr kaṇaiyaṉaittu*
*mavarviḻuṅki yeytti ṭāmal*
*vintaiyāy viḷaṅkiṭumōr ceyalkaṇṭaṉ*
*kavartāmum viyantu niṉṟār.*

## Araṅkaṉ's Arrows

That wondrous missile sped forward
And destroyed the spell; the evil Acuras
At once called upon unearthly spirits
To fill up the spaces of the earth.
Araṅkaṉ released innumerable arrows.
The commanders felt happy when the spirits
Devoured the arrows in a wondrous manner.

(அரங்கனின் தண்டம்)

597. சிந்துகின்ற கணையனைத்து மவர்நுங்கி
நகைத்தசெயல் அதனைத் தேர்ந்து
நிந்தையிலா நின்மலனுந் தண்டத்தா
னவையனைத்து நொறுக்கி நின்றான்
பந்தமுறு மவர்களெல்லாம் பலபலகோ
டியினுருவாய்ப் படர்ந்து நின்று
சுந்தரமார் வில்லிதனைப் பன்மாய்கைத்
திறமதனாற் சூது செய்தார்.

எ-து அப்படி அரங்கநாயகர் கரோவேகம் சரோ வேகமாய்ப் பொழிகின்ற கணை மாரிகளை முழுங்கிச் சலனமில்லாதவர்களாய் விளங்கக் கண்டு, சுவாமியைக் குறித்து பரியாசம செயகின்ற மந்திரிமார்கள் கர்வத்தைப் பார்த்து நிந்தனையில்லாத நின்மல சொரூபியாகிய லோக நாயகனும் தமது தண்டத்தைக் கரகரவென்று சுழற்றிப் பூத கணாதி பந்தியின பேரில விடுத்தார். அந்தத் தண்டமானது பிரசணட மாருதம் போலே பிரவேசித்து அகசினியையும் விஷங்களையும கக்கிக் கொண்டு அந்தக் கூட்டங்களைத் தூளிப்படலமாக நொறுக்கி நின்றதைக கணடவர்கள், சுக்கிராசாரி மந்திர வலியினாலே ஒவ்வொருவன் பலகோடி உருவமாய இரதத்தோடே விளங்கி, சுவாமி முன்னே நின்று சவுந்தரிய காண்டீபபதியாகும் தன்மையின அவரைப் பலபலவிதமாகிய மாயைத் திறத்தினாலே சூது செய்தார்கள என்றவாறு

(26)

## Araṅkaṉiṉ taṇṭam

*cintukiṉṟa kaṇaiyaṉaittu mavarnuṅki*
*nakaittaceyal ataṉait tērntu*
*nintaiyilā niṉmalaṉun taṇṭattā*
*ṉavaiyaṉaittu noṟukki niṉṟāṉ*
*pantamuṟu mavarkaḷellām palapalakō*
*ṭiyiṉuruvāyp paṭarntu niṉṟu*
*cuntaramār villitaṉaip paṉmāykait*
*tiṟamataṉār cūtu ceytār.*

## Araṅkaṉ's Mace

Watching them grin after devouring
All the arrows and realising the cause,
The blameless Lord pulverised them all
With his mace; the affected Acuras
Now increased manifold and filled the earth
And attacked the handsome archer with spells.

(அரங்கனின் கமலாஸ்திரம்)

598. சூதுசெய்த கும்பனையு நிகும்பனையு
மிலவணப்பேர்ச் சூரன் றானும்
வாதுசெய்த திறலதனை மதித்தரங்கன்
கமலகணை வண்மை யாலே
தீதுபுரி வோர்பிரமன் வர்மாய்த்தங்
கிரதத்தைத் துகளாய்த் தீய்த்துக்
காதுமவர் தலைதுணித்தான் முனிவரெலாம்
பூமாரி கரத்தின் வீச.

எ-து. இவ்விதமாகச் சூதாகிய மாய்கையைச் செய்கின்ற கும்ப. நிகும்ப னிலவணாசூரனென்கின்ற மூவரும் யுத்தம் செய்கின்ற பராக்கிரமத்தை ஆலோசித்துப் பார்த்த அரங்கநாயகரானவர். கமலாஸ்திர பிரதாபத்தினாலே தீங்காகிய பொல்லாங்குகளைச செய்கின்ற மந்திரிகள் பிரமதேவரால் பெற்ற வரபாலனங்களைத் தொலைத்து, அவர்கள ஏறிய இரதத்தை நீறு நீறாய் அக்கினிப் பிரவேசப் படுத்தின மாத்திரத்தில் கோபித்த அசுரர்களுடைய சிரசுகளைக் கண்டித்துப் பூமியில் தள்ளினார் அதைக் கண்ட

ரிஷீசுவரர்களெல்லாம் பஞ்சதருவின் திவ்விய மணங்களை வீசாநின்ற புஷ்ப மாரிகளைப் பொழிந்து சந்தோஷப்பட்டார்கள் என்றவாறு (27)

## Araṅkaṉiṉ kamalāstiram

*cūtuceyta kumpaṉaiyu nikumpaṉaiyu*
*milavaṇappērc cūraṉ rāṉum*
*vātuceyta tiṟalataṉai matittaraṅkaṉ*
*kamalakaṇai vaṇmai yālē*
*tītupuri vōrpiramaṉ varamāyttaṉ*
*kiratattait tukaḷāyt tīyttuk*
*kātumavar talaituṇittāṉ muṉivarelām*
*pūmāri karattiṉ vīca.*

## Araṅkaṉ's Lotus Missile

Araṅkaṉ thought over the acts of Kumpaṉ,
Nikumpaṉ and Lavanacuraṉ who had created
Such spells. He now sent the power-charged
Lotus missile and brought to an end
The machinations of the evil Acuraṉs
Who had gained strength from Piramaṉ's boons.
He pulverised their chariots, beheaded them.
The sages showered flowers with their hands.

(சம்பரன் கடலில் ஒளித்தல்)

599 சம்பரப்பேர் தானவனுந் திடுக்கிட்டு
மனந்தளர்ந்து சார்ந்தி டாமற்
பம்பரம்போற் சுழன்றோடிக் கடற்படிந்தா
னவையனைத்தும் பார்த்த மேலாம்
உம்பரெலா நடுங்கியிடக் காலநே
மிப்பெயரா னுருத்துச் சீறிச்
செம்பவள வாயான்தன் தேரினையே
கண்ணுற்றுச் செயிர்த்துக் கூறும்.

எ-து. இம் முத்திறத்தாரும் இறக்கக்கண்ட சம்பராசுரனென்கின்ற மந்திரியானவன் மிகுந்த பயம் கொண்டவனாய் அவனுடைய மனது திடுக்கிட்டுச் சமர பூமியை விட்டு நீங்கிப் பம்பரம் போல் சுழன்றோடிக் கடலில் போய் ஒளித்து மூழ்கினான். இவைகளையெல்லாம் பார்த்துக் களிகூர்ந்த மேலவராகிய தேவர்களெல்லாம் நடுநடுங்கத் தன்னதாகக் கோபித்துச் சீறிய காலநேமியாகிய அசுர சூடாமணியானவன் செம்பவளம்போன்ற வாயினையுடைய ஸ்ரீமன் நாராயணருடைய இரதத்தையும், அவர் திருமுக மண்டலத்தையும் கண்ணால் பார்த்துக் கோபித்து சொல்லத் தொடங்கினான் என்றவாறு. (28)

பா.வே. - 1. செப்பலுற்றான்.

**மந்திரிகள் யுத்தம் புரிந்த அத்தியாயம் முற்றிற்று.**

## Camparaṉ kaṭalil oḷittal

*camparappēr tāṉavaṉun tiṭukkiṭṭu*
*maṉantaḷarntu cārnti tāmar*
*pamparampōṟ cuḻaṉṟōṭik kaṭaṟpaṭintā*
*ṉavaiyaṉaittum pārtta mēlām*
*umparelā naṭuṅkiyiṭak kālanē*
*mippeyarā ṉuruttuc ciṟic*
*cempavaḷa vāyāṉtaṉ tēriṉaiyē*
*kaṇṇuṟṟuc ceyirttuk kūṟum.*

## Camparaṉ Hides in the Sea

Camparaṉ was shocked by the happenings
And grew weak in heart. Leaving all,
He ran like a top and hid in the sea.
Seeing this, Kālanēmi grew furious
While the heavens began to quake.
Looking at the chariot of the Lord
He spoke in anger.

## 33. இருபத்து ஒன்பதாவது காலநேமி சமர்புரிந்த அத்தியாயம்

தன் மந்திரிமார்களெல்லாம் அழிந்ததால் மேலும் சினமுற்ற காலநேமியானவன் மகமேருவை நிகர்த்த தனது வில்லினையும் கோபித்தவனாய்த் தேர் ஏறித் திக்குகளையெல்லாம் சுற்றிவந்து அரங்கநாயகர்முன் தன் தேரை நிறுத்தினான். அரங்கநாயகரைப் பார்த்து உலக இரட்சகராகிய நீர் ஒருவர் பக்கமாகச் சாய்ந்து நின்று ஆயுதம் தாங்கிப் போர் செய்ய வேண்டியதன் அவசியம் யாது என்று வினவினான். மேலும் கூறுகிறான். நான் செய்த தவவலிமையால் பிரமாவும் பரமசிவனும் அருள் புரிந்தார்கள். அதனையும் சிந்திக்க வேண்டும். நீர் வாசம் பண்ணும் பரமபதம், திருப்பாற்கடல் ஆகிய இடங்களுக்குச் சென்று விடுவதே நடுவு நிலமையாகும் என்று மேலும் கூறினான்.

ஆனால் இந்திரனுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற விருப்பத்தால் அரங்கநாயகர் காலநேமியை நோக்கி, யுத்தகளததில் ஒப்பாரி வேண்டாம்; யுத்தம் செய்து வெற்றியை நிலைநிறுத்துவாய் என்று கூறினார். சீறிய காலநேமி தன் தேரைச் சூரிய மண்டலம் நோக்கிச் செலுத்தினான். தாருகனும் விரைந்து செலுத்தித் தன்தேரை அங்கு கொண்டுபோய் நிறுத்தினான். இவ்வாறு இருவருடைய தேர்களும் வாயு மண்டலம், வருணமண்டலம், மேகமண்டலம், நட்சத்திர மண்டலங்களில் எதிர்த்து மோதின. இவர்கள் செய்யும் போரின் ஒலியால் எல்லா உலகமும் அதிர்ந்தன. அம்புகள் ஆகாயத்தை மறைத்தன. காலநேமியின் உடலில் இரத்த வெள்ளமெடுத்தது. பூமண்டலம் கருகியது. எமதர்மன் நடுங்கினான். காலநேமியின் கதாயுதத்தால் நட்சத்திரங்கள் உதிர்ந்தன. எட்டு மலைகளும் பொடிப் பொடியாயின. மூவுலகமும் தீப்பொறி பறந்தது.

காலநேமி பிரமனிடம் பெற்ற கதையைப் பிரயோகித்தான். அது ஏழு கடலையும் கலககியது. விஷத்தாரைகளையும் தீப்பொறிகளையும் கக்கியது. திக்கு யானைகள் கலங்கின. கதையின் கொடூரச் செயலைக்கண்ட அரங்கநாயகர் அக்கினி அஸ்திரத்தைத் தொடுத்தார். கதையானது அந்த அஸ்திரத்தை அழிததது. உடனே கமலாஸ்திரத்தைத் தொடுத்தார். கதையோடு கமலாஸ்திரம் மோதி அதனைத் துண்டித்தது. மீண்டும் அசுரன் விட்ட சூலத்தை அந்த சந்திர பாணத்தால் அழித்தார் அதேபோல அவன் விட்ட மீளாவேலினைத் தமது வாளினாலே துண்டித்தார்.

(காலநேமியின் சினம்)

600. புவனத்து சத்திரபதி யசுர குலக்குரிசில்
புகையச் சினத்து கரமார்
தவமுற்ற பொற்சிலையைக் கதையைப் பெருத்தவினை
கணையைக் கதித்த புவியைச்

சிவனைக் கறுத்துவல வனைச்சக்கிர வுக்கிரமிகு
விரதத்தைச் சித்திர முடனே
பவனப் பெயர்க்கதியி னடுவிக்கு மக்களம
ததனிற் பணித்தி யெனவே.

எ-து. இவ்வாறாக மதித்துணர்ந்த திரிபுவனத்துக்கு சத்திரபதியாயும், அசுர குலத்துக்கு இராச சூடாமணியாயும் இருக்கின்ற காலநேமியானவன் இரண்டு கண்களும் செவ்வானம் போலே சிவக்க, மீசைகள் படபடவென்று துடிக்க, வக்கிர தந்தங்களை நறநற வென்று கடிக்க, கோபாக்கினியினாலே புகை மண்டலமானது மேன் மேலிடத்தக்கதாய்த் தனது கையில் தவத்தினால் விளங்காநின்ற மகமேருவை யொத்த வில்லினையும், வீரத்தைச் செலுத்தா நின்ற கதையினையும், பெரிய இரண்டாகிய கணையாயுதத்தையும், பாரித்த பூமியினையும், பரம சிவனையும் கோபித்தவனாய்த் தன்னுடைய தேர்ச் சாரதியைப் பார்த்து ஒரு வார்த்தை கூறுகின்றான். நம்மிட விரதத்தைச் சக்கராகாரமாய்த் திக்குத் திகாந்தங்களெல்லாம் சித்திர முடனே வாயுவேகமாய் நடத்திய பின்பு யாவரையும் விசையம் செய்கின்ற சமர பூமியாகிய இரண களத்தில் கொண்டுபோய் நிறுத்தென்றான் அசுரேந்திரன் என்றவாறு. (1)

சத்திரபதி - தனிக்குடை நிழற்றி அரசு புரிவோன், சக்கரவர்த்தி. புகையச்சினத்தல் - கண்களில் தீப்பொறி பறக்கக் கோபித்தல். இணைகணை - இரண்டாகிய அம்பு கதித்த புவி - பரந்த நிலவுலகம். சித்திரம் - வியப்பு. பவனப்பெயர்க்கதியின் அடுவிக்கும் அக்களம் அது அதனில் - மேலுலகமாகிய பேற்றை அடையச்செய்யும் போர்க்களத்தில்

## Kālanēmiyin ciṉam

*puvaṉattu cattirapati yacura kulakkuricil*
*pukaiyac ciṉattu karamār*
*tavamuṟṟa poṟcilaiyaik kataiyaip peruttaviṉai*
*kaṇaiyayk katitta puviyaic*
*civaṉaik kaṟuttuvala vaṉaiccakkira vukkiramiku*
*viratattaic cittira muṭaṉē*
*pavaṉap peyarkkatiyi ṉaṭuvikku makkaḷama*
*tataṉiṟ paṇitti yeṉavē.*

## XXXIII. Kālanēmi's War

### Kālanēmi's Fury

Kālanēmi, the emperor of the worlds,
Noble chief of the Acura clan,
Grew furious at his golden bow

Gained by austerities, his mace,
Twin-arrows that had incredible power,
At the spread of earth, Civaṉ himself,
And spoke to his charioteer:
"Guide the chariot in severe circles
And ingenious ways and take it
To the battlefield of which men are afraid".

**(அரங்கனை வினவுதல்)**

601. **அவனுய்த்த வப்பெரிய ரதமுற்ற வுக்கிரபதி**
**யரியைக் கறுத்து வவனும்**
**புவனத்தி னற்கணைகள் பொழியக் குறித்தெது**
**புகல்திப் புரக்கு மளியோய்**
**தவமுற் றரக்கரம ரர்களுற்ற வெப்பமொரு**
**சலுகைத் திறத்தி னொழியாக்**
**கவனப் பரித்திரளைக் கரடக் களிற்றுமுதல்**
**அடலெக் கணக்க றைதியால்.**

எ-து. அப்படித் தேர்ச் சாரதியானவன் இராசேந்திரன் உத்திரவின் பிரகாரம் தேரை நடத்திய பின்பு சமர் பூமியாகிய இரண களத்தில் லோகநாயகர் இரதத்தின் முன்பாக நிறுத்தினான். அதன் பின்பு அசுரனானவன் சுவாமியைக் கண்டு பிரளைய கால உருத்திரனைப் போலச் சீறி ஒரு விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் தேவ தேவோத்தமனே! இந்தப் பூமண்டலத்தில் நீரஸ்திரபாணியாய் யுத்தம் செய்ய வேண்டிய காரணம் என்னவாகிலும், நீர் ரக்ஷகர்த்தாவாயிருந்தும் ஒருவர் பக்ஷமாய் யுத்தம் செய்யத் தகுமோ? யாங்கள் தவத்தினாலே மிகுந்த அசுரர் கூட்டங்களும் தேவர் கூட்டங்களும் கொண்ட சலன வெப்பமானது உம்முடைய சலுகைத் திறத்தினாலே நீங்குவதுண்டோ? நீங்காதாகையால் எங்கள் கவன வேகமாகிய அசுவக் கூட்டங்களையும், கடமதங்களைப் பொழிகின்ற யானை முதலானவைகளுடைய வடலை நீர் சம்மரிக்கக் குறித்த தெந்தக் கணக்கினால் சொல்லுவீராக என்றான் என்றவாறு. (2)

உககிரபதி - கோபககுணமுடையவன் கறுதது - கோபித்து சலுகை - செல்வாக்கு, ஆதரவு.

**உரை** - சலன வெப்பம - தவிப்புத்துன்பம் சலனம - அசைவு, போதல்.

**Araṅkaṉai viṉavutal**

*avaṉuytta vapperiya ratamuṟṟa vukkirapati*
*yariyaik kaṟuttu vavaṉum*

*puvanatti narkanaikal poliyak kurittetu*
*pukaltip purakku maliyōy*
*tavamur rarakkarama rarkalurra veppamoru*
*calukait tiratti noliyāk*
*kavanap parittiralaik karatak kalirrumutal*
*atalek kanakka raitiyāl.*

## Questioning Araṅkaṉ

The chariot was then stationed as desired.
Looking on Nārāyaṇaṉ angrily, he asked:
"Tell me, why have you decided to shower
These many arrows on the earth? Are you not
The guardian for all? Can you seek to stop
With your partiality, the enmity of gods
And the Acuras who have gained from tapasya?
By which law have you decided to destroy
Our army of horses and elephants?

(நான் தவம் செய்து வரம் பெற்றேன்)

602. **சினவித் தொலைத்துகணை விடுவித்த வித்தகுதி**
**சிறிதெற்குச் சித்த மதனான்**
**நினைவுற்று சொற்கடவை வலியத் தவத்தைமுன**
**மிசைவுற்ற வெற்கு றுதியார்**
**கனதைக்கு நற்பிரம பதமுற்ற சத்திசிவ**
**பசுமைப் பெயர்க்கு ரியநீ**
**மனமிக்க நெக்குருகி வரமுற்ற வெற்றிபுனை**
**வலியத் திறத்தை நினைவாய்.**

எ-து. வாரீர் மகானுபாவரே! நீர் கோபித்தெனது சதுரங்க தளத்தினையும் தொலைத்து அஸ்திரங்களைத் தூவுகின்ற தகுதியாகிய நியாயத்தைச் சில உம்முட திருஉளத்தின் மதித்தருளிச் செய்யக் கடவீர். நான் வலிய தவத்தை இசைவுபெறச் செய்தலால் அதனைக் குறித்து வந்த கனத்துக்கு அதி சிலாக்கியரா யிராநின்ற பிரமாவும், பரமனாகச் சொல்லுகின்ற சத்தியோடு மருவிய பரம சிவனும் அடியேனுக்கு அனுக்கிரகம் செய்த வரப்பிரசாதங்களை யோசிக்க வேண்டுமென்றான் காலநேமி என்றவாறு. (3)

சொற் கடவை - சொல்லக்கடவாய், முன்னிலை முற்று; வியங்கோள். கனதை - கனதி - பெருமை.

## Nāṉ tavam ceytu varam peṟṟēṉ

*ciṉavit tolaittukaṉai viṭuvitta vittakuti*
*ciṟiteṟkuc citta mataṉāṉ*
*niṉaivuṟṟu coṟkaṭavai valiyat tavattaimuṉa*
*micaivuṟṟa veṟku ṟutiyār*
*kaṉataikku naṟpirama patamuṟṟa catticiva*
*pacumaip peyarkku riyanī*
*maṉamikka nekkuruki varamuṟṟa veṟṟipuṉai*
*valiyat tiṟattai niṉaivāy.*

## "I Performed Austerities"

"Ponder over why you have decided
To direct arrows in anger at my poor self.
Speak. Due to my intense austerities
In earlier days, I gained power
From Piramaṉ who had been pleased,
And Civaṉ the consort of Shakti.
You are the green-hued! Consider
With compassion my great will power
That brought me victory-yielding boons.

(நீர் இருக்குமிடம் போய்ச் சேரும் எனல்)

603. உதவித் திறத்தைமிக நினைவுற்று நிற்கிதனை
யுறுதிபெ றக்க ருதியே
பகர்வுற்ற சொற்கொடுநீ பரமப் பதத்தினொளிர்
படிவுற்ற நற்க டலிடைப்
புகவுற்ற நற்கரும மலதிக் கிரிக்கணுறை
புகவொட்ட லம்பொ ருதுநீ
கதமிக்க கணைவிடுதி யெனில்சத்திய வமர்புரிதி
கரடக்க ளிற்றி னனையாய்.

எ-து. வாரீர் மகானுபாவரே! நீர் ரக்ஷ கர்த்தாவாய் இருந்து இந்த யுத்த களத்திலே வாசிக்கக் கூடாதாகையால், நீர் முதன்மையாய் வாசம் பண்ணுவது பரம பதத்தில்; இரண்டாவது திருப்பாற் கடலிலே. அதை விட்டு இந்தச் சமர பூமியிலொருவர் பக்ஷமாய்

வருவது நியாயமல்ல. ஆகையால் நீர் இருக்குமிடம் போய்ச்சேருகிறதே நடுவு நிலமையாம் ஆதலால் நீர் இந்தக் கோலாசல பர்வதத்திலே சயன சாயியாய் வாசம் பண்ணுவோ மென்றாலும் யானிருக்க வொட்டேன். அப்படி யுத்தம் செய்வீராகில் உண்மையாகிய நியாயமாய் அமர் புரியும் இராச குஞ்சரத்துக்குச் சமதையாகிய மகானுபாவரே என்றான் அசுரேந்திரன் என்றவாறு. (4)

நிற்கு - நினக்கு; உனக்கு. உறை - வசித்தல். கதம் - உக்கிரம். கரடக்களிறு - மதங்கொண்ட யானை; கரடம் - யானைமதம்.

## Nīr irukkumiṭam pōyc cērum eṉal

*utavit tiṟattaimika niṉaivuṟṟu niṟkitaṉai*
*yuṟutippe ṟakka rutiyē*
*pakarvuṟṟa coṟkoṭunī paramap patattiṉoḷir*
*pativuṟṟa naṟka ṭaliṭaip*
*pukavuṟṟa naṟkaruma malatik kiṟikkaṇuṟai*
*pukavoṭṭa lampo ṟutunī*
*katamikka kaṇaiviṭuti yeṉilcattiya vamarpuriti*
*karaṭakka ḷiṟṟi ṉaṉaiyāy.*

## "Go Back to Your Place"

"Lord who is like a war-elephant and loves
To take part in a righteous war!
Remember you are the universal guardian
And you have come to this place.
Better you return to our abode
In the supreme beyond, or your residence
In the milky sea. That is the correct path.
I shall not allow you to reside in Kōla Hill
If you decide to go ahead and aim arrows."

(அரங்கன் யுத்தகளத்தில் ஒப்பாரி வேண்டா மெனல்)

604. தனமிக்க அசுரபதி உரைபற்றி யமரரிறை
தகுதிக் குறித்த வெழிலார்
கனமிக்க வுததிநிதி கழறுற்ற சமரினிடை
களிபெற்ற கருணை வருமோ

மனமிக்க வுனதுதிறல் புரிதிப்பின் விளைவநிதி
மதியற்ற வசுர பதியே
யெனவுக்கிர மொடுசினவி கனமுற்ற விரதமதை
யிரவிப் பதத்தின் விடவே.

எ-து. இவ்விதமாக அயிசுவரிய பதியாகிய அசுரகுல சூடாமணியினுடைய வார்த்தை கேட்டு அமரர்களுக்கு அரசனான இந்திரனுக்கு உதவி செய்ய வேண்டுமென்பதைக் குறித்து அழகால் நிறைந்து, பிரதாபத்தால் மிகுத்திராநின்ற திருப்பாற் கடலில் வாசம் பண்ணப்பட்ட சங்கநிதி, பதுமநிதியைப் போன்ற சீதரனானவர் அருளிச் செய்கின்றார். வாராய் காலநேமியே! படுகளத்தில் ஒப்பாரி மொழி கூறுவாரோ? உனது வீரத்தைச் செலுத்துவதே இராச தர்மமாகும். ஆகையால் மிகுந்த பராக்கிரமசாலிகளாகிய அசுர குலத்துக்கு நீ அரசனாகையால் யுத்தம் செய்து செயத்தை நிலை நிறுத்துவாய் என்றருளிச் செய்ய, காலநேமியானவன் பிரளைய கால உருத்திரனைப் போலே சீறி, பெருமை பொருந்திய இரதத்தைச் சூரிய மண்டலத்தில் வலவன் நடாத்தப் போய்ச் சேர்ந்தான் என்றவாறு. (5)

அசுரபதி - அரக்கர் தலைவனாகிய காலநேமி. அமரரிறை - தேவர்தலைவனாகிய இந்திரன். உததிநிதி - திருமால் உததி - கடல், பாற்கடல், நிதி - சங்கநிதி, பதுமநிதி. இரவிப்பதம் - சூரியமண்டலம்.

## Araṅkaṉ yuttakaḷattil oppāri vēṇṭā meṉal

*taṉamikka acurapati uraipaṟṟi yamararirai*
*takutik kuṟitta veḻilār*
*kaṉamikka vuttaniti kaḻaruṟṟa camariṉiṭai*
*kaḷipeṟṟa karuṇai varumō*
*maṉamikka vuṉatutiṟal puritippiṉ viḷaivaniti*
*matiyaṟṟa vacura patiyē*
*yeṉavukkira moṭuciṉavi kaṉamuṟṟa viratamatai*
*yiravip patattiṉ viṭavē.*

## Araṅkaṉ's Reply

Having listened to the wealthy Acura chief,
The Lord who had left the supreme riches
And the loveliness of the Milky Sea
To help Intiraṉ, spoke: " Is it right
To weep so in the battlefield?
Act befitting your heroic stature,
O despicable king of Acuras!"
This made the Acura immensely furious
And he entered the solar plane.

## வேறு

## (இருவருக்கும் போர்)

605. தாருகன் விடுத்தனன் முகட்டுவெளி தன்னின்
மேருவென வேயிரத மேன்மையி னடாத்திப்
பாற்கடல் தீவாந்திரப் பரப்பிருள் பரந்தக்
காருலக மேமுதல் கண்டமதில் சென்றும்.

எ-து. அசுரேந்திரனாகிய காலநேமியின் இரதமானது சூரிய மண்டலத்தில் பிரகாசிக்கக்கண்ட தாருகனானவன் வாயுவேகம் மனோ வேகமாய்த் தம்மிட இரதத்தை நடத்தி அவன் தேர் முன்பாக நிறுத்த, இப்படி இரண்டு பேர்களுடைய இரதங்களும் மகமேரு கிரி பர்வதம் போல இடசாரி, வலசாரியாய் அச்சு சுழன்று வாயு மண்டலம், வருண மண்டலம், மேக மண்டலம், நக்ஷத்திர மண்டலம் முதலாகிய முகட்டு வெளிகளெல்லாம் சுழன்று சப்த சாகரம் சூழ்ந்த பூமண்டலங்கள், அண்டங்கள், சப்த தீவுகள், காருலகம் முதலாகிய லோகா லோகங்களெல்லாம் சென்று கோரமாகிய யுத்தங்கள் செய்து ஒருவருக்கொருவர் பராக்கிரமங்களுடனே இளையாதவர்களாய், மேக மண்டலத்தில் பிரவேசித்து யுத்தங்கள் செய்து, மறுபடியும் நவகண்டங்களிலும் இரத வேகங்களினாலே நடாத்தி எதிர்த்து கரவேக, சரவேக, சர்ப்பவேகமாய் யுத்தம் செய்தார்கள் என்றவாறு. (6)

முகட்டுவெளி - உயர்ந்த ஆகாய வெளி. காருலகு - மேகமண்டலம்.

## Vēṟu

## Iruvarukkum pōr

*tārukaṉ viṭuttaṉaṉ mukaṭṭuveḷi taṉṉiṉ*
*mēruveṉa vēyirata mēṉmaiyi ṉaṭāttip*
*pāṟkaṭal tīvāntirap parappiruḷ parantak*
*kārulaka mēmutal kaṇṭamatil ceṉṟum.*

## The Two at War

Tārukaṉ directed the chariot to the space.
Both the chariots like the Mēru Mountain
Travelled in the Milky Sea, in islands,
In worlds of immense darkness
And such other continents.

(இருவர் கணைகள்)

606. தேர்சுழல லுற்றன விடம்வலம தெய்தி
நீர்மைதிக ழம்புக ணிறைந்தன கடாகங்
கோரவசு ரேசனுர மேமுதல் குறித்த
தீரவவ யங்கடுளை செய்தன னரங்கன்.

எ-து. இந்தப் பிரகாரமாக இவர்கள் இருவருடைய இரதங்களும் திக்குத் தீவாந்திரங்களுங் குலாலன் சுழற்றுகின்ற திகிரியைப்போல இடசாரி வலசாரியாய்ச் சுழன்று சமர் செய்கின்ற பாண சரங்களினாலே அண்ட கடாகங்களானவை பிறந்ததுபோலச் சப்திக்கும் படியாகிய கோஷ்டங்களுடனே விடுகின்ற பாணங்களானவை ஆகாச வீதிகளெல்லாம் மூடிக் கொள்ளக் கரிய மலை பர்வதம்போலக் கறுத்த தேகத்தோடும் கோர தந்தஙகளைப் பிரகாசிக்காநின்ற அசுரரசனாகிய காலநேமியினுடைய சரீரங்களெல்லாம் சல்லடைக் கண்களைப் போலத் துளைத்துக் குருதிகள் சொரியத் தக்கதாய் செய்தார். அவர் யாரென்றால் இந்த லீலா விபூதியில் சிருட்டி யாதிரூபமான திருவிளையாட்டைப் பிரயோசனமாக உடைத்தானவராகிய ஸ்ரீ அரங்கநாதர் என்றவாறு. (7)

கடாகம் - அண்டகடாகம். அண்டகோளகை அவயங்கடுளை - அவயங்கள் + துளை.

## Iruvar kaṇaikaḷ

*tērcuḻala luṟṟaṉa viṭamvalama teyti*
*nīrmaitika ḻampuka ṇiṟaintaṉa kaṭākaṅ*
*kōravacu rēcaṉura mēmutal kuṟitta*
*tīravava yaṅkaṭuḷai ceytaṉa ṉaraṅkaṉ.*

## Their Missiles

The chariots whirled, chasing one another.
All spaces were covered by their arrows
Which were blemishless. Araṅkaṉ pierced
The limbs of the Acura king all over.

(காலநேமியின் கதாயுதம்)

607. அண்டமு நடுங்கின வதிர்ந்தவகி லங்கள்
சண்டன்வெரு வுற்றனன் நடித்துமுன் னுதித்துக்
கொண்டல்கள் வறண்டன குலக்கிரி பொடித்த
விண்டன கடாகமும் விரிந்தவன லங்கண்.

எ-து அந்தக் காலநேமியானவன் பிரயோகித்த கதாயுதமானது பிரவேசித்த மாத்திரத்தில் அண்ட கோளகைகளெல்லாம் கிடுகிடுவென்றுநடுங்கின. பூமண்டலங்கள் எல்லாம் கருகிக் கடகடவென்று மதிர்ப்பட்டன. எமதர்ம ராசனும் இதென்ன பிரளைய காலமோ என்று நடுக்கங் கொள்ள, மேகங்களெல்லாம் திடுக்கிட, நக்ஷத்திரங்களெல்லாம்

பலபலவென்று உதிர, இமையோர் கிரி முதலாகிய அட்ட குலாசல பர்வதங்க ளெல்லாம் பொடிப்பொடியாய் உதிர, அண்ட கடாக வெளிமுகடுகளெல்லாம் வெடிபட அஸ்திரத்தினின்றும் பிரவேசித்த அக்கினிச் சுவாலையானது வடவாமுகாக்கினியைப் போலத் திரிபுவனங்களையும் தகித்தது அந்தக் காலநேமியினுடைய கதாயுத மென்றவாறு. (8)

சண்டன் - எமன். அனலம் - வடவைத்தீ.

## Kālanēmiyiṉ katāyutam

*aṉṭamu naṭuṅkiṉa vatirntavaki laṅkaḷ*
*caṇṭaṉveru vuṟṟaṉaṉ ṟaṭittumuṉ ṉutittuk*
*koṇṭalkaḷ varaṇṭaṉa kulakkiri poṭitta*
*viṇṭaṉa kaṭākamum virintavaṉa laṅkaṇ.*

## Kālanēmi's Mace

The universe shook; the worlds shuddered,
Yama himself felt shaken; the clouds
Grew dry; the great mountains
Were rendered into powder. The universe
Cracked. The Vaṭavai fire broke out.

**(அரங்கனை நோக்கிக் காலநேமியின் கதை)**

**608. உதிரமழை காரின மெனச்சொரித லுற்ற**
**சதிபெருகு மசுரகுலத் தந்திரி வெகுண்டு**
**விதிமுன மளித்திடு வியன்கதை யெடுத்துக்**
**கதியடிய ருக்குதவு காவலன்மே லுய்த்தான்.**

எ-து. அப்படி மிகுந்த பராக்கிரமசாலியாகிய காலநேமியினுடைய தேகங்களானது துளைபட்டுச் சொரியாநின்ற உதிரப்பிரவாகமானது எப்படிப் பிரகாசித்தது என்றால் வருஷாகாலங்களிலே சப்த மேகங்களும் ஒன்றாய்க் கூடி இடி மின்னல்களுடனே யுதிர வருஷம் வருஷித்ததுபோல ஆகாசம் பூமிகளெங்கும் மூடிக்கொள்ளும் படியாகிய சமயங்களிலே அதிக சாமர்த்தியமுள்ள அசுர குலத்திலே வெகு தந்திரீகனான காலநேமியானவன் பிரளைய கால உருத்திரனைப்போல அவனிட இரண்டு கண்களும் செவ்வானம் போலச் சிவந்து சீறிக் கோபித்தவனாய்ப் பிரமதேவரானவர் முன்னளித்தருளிய மிகுந்த வரப்பிரசாதப் பேறு பெற்ற ஒரு கதையை எடுத்து. அந்தச் சதுர் முகனைத் தியானித்து மந்திரா குதிகள் செய்து சரணாங்கதனான அடியார்களுக்கு மோக்ஷ சாம்பிராச்சியங்களைக் கொடுத்து ரக்ஷித்தருளுகின்ற ஸ்ரீலட்சுமிபதியாகிய அரங்கநாதரை நோக்கித் தன்னிட பராக்கிரமம் பொருந்திய அஸ்தங்களினாலே சுழற்றி எறிந்தான் அந்தக் காலநேமி என்றவாறு. (9)

காரினம் - மேகக்கூட்டம் விதி - பிரமதேவன் கதை - தண்டாயுதம். கதியடியர் - அடைக்கலமான அடியவர்.

## Araṅkaṉai nōkkik kālanēmiyiṉ katai

*utiramaḻai kāriṉa meṉaccorita luṟṟa*
*catiperuku macurakulat tantiri vekuṇṭu*
*vitimuṉa maḻittiṭu viyaṉkatai yeṭuttuk*
*katiyaṭiya rukkutavu kāvalaṉmē luyttāṉ.*

## Kālanēmi's Mace Towards Araṅkaṉ

A rain of blood poured down
As if from the dark clouds; the clever chief
Of the evil Acura race grew angry;
Taking up the mace given by Piramaṉ
In days of yore, he threw it at the Lord
Who guards devotees when they surrender.

(பாற்கடல் கலங்குதல்)

609. பெருங்கடல் கலங்கிசுழ லுற்றன பிறழ்ந்தே
மருங்கினில் விடம்பெருகி வார்ந்தொழுகு கின்ற
[1]தரும்புகை யழற்பொறி தராதல நிறைந்த
விருங்கரி முழங்கிட விருங்கதை யெழுந்த.

எ-து பின்னையும் அந்தக் கதையினுடைய வடவாக்கினி வீசுகின்ற வேகத்தினாலே பெரும் பாற்கடல் முதலாகிய கடல்களெல்லாம் கொதித்துக் கலங்கிச் சுழன்று கொண்டு நொப்பு நுரைகளுடனே கரை புரண்டு சப்த சாகரங்களும் ஒன்றாய்ப் பெருக்கெடுக்க வந்த கதையினுடைய இரண்டு பக்கங்களிலும் விஷத்தாரைகளாகிய வெள்ளப்பெருக்கினை வீசுகின்ற அக்கினிச் சுவாலையால் புகைப்படலங்களானவை உலகங்களெல்லாம் மூடிக்கொள்ள அஷ்ட திக்குகளைத் தாங்குகின்ற அயிராவதம் முதலாகிய அட்டகசங்களும் துதிக்கையைத தூக்கிக கொண்டு கதறி உதிரங்களைக் கக்கிக் கொள்ள ஆதிசேஷனும் புசமாற்றிக் கொள்ள, அதிக கோர ரூபமாய்ப் பிரவேசிததது கதாயுதம் என்றவாறு. (10)

பா.வே. - 1 தரும்புகை யழறபடலந் தாலநிறை கின்ற

## Pāṟkaṭal kalaṅkutal

*peruṅkaṭal kalaṅkicuḻa luṟṟaṉa piṟaḻntē*
*maruṅkiṉil viṭamperuki vārntoḻuku kiṉṟa*
*tarumpukai yaḻaṟpoṟi tarātala niṟainta*
*viruṅkari muḻaṅkiṭa viruṅkatai yeḻunta.*

## The Milky Sea in Tumult

The vast sea was in tumult.
Poison streamed out and poured down.
The fire of the mace covered the earth
As it rose, making the elephants
Trumpet loudly.

**(அரங்கனின் கணையைக் கதை விழுங்குதல்)**

610. **வந்தன அரங்கன்முனம் வார்சிலை வணக்கி**
**முந்திய வழற்கணை முதற்பல தொடுத்தான்**
**வந்தகணை யாவையும் வருந்திட விழுங்குந்**
**தந்திர மறிந்தபர மன்றனது கையால்.**

எ-து. இந்தப் பிரகாரம் கதையானது கோர ரூபமாய் வருகின்றதைக் கண்ட அரங்கநாயகரானவர் தனது நீண்ட சார்ங்க வில்லை வளைத்து, நாணேறிட்டுக் குணத்தொனி செய்து. வடவா முகாக்கினிக்குச் சமதையாகிய அக்கினி அஸ்திரங்களைப் புங்கானு புங்கமாய்க் கரோ வேக, சரோவேகமாய்த் தொடுத்து விட்டார். அந்தப் பாணமானது வாயுவேகத்தால் பிரசண்ட மாருதங்களைப் போல அக்கினிப் பிழம்பால் சுவாலித்து, விஷத்தாரைகளை வருஷித்துக் கொண்டு வருகின்ற கோர சிலீமுகங்களையெல்லாம் வருத்தப்பட்டு மெலியத்தக்கதாய், அந்த அக்கினி யாஸ்திரத்தை இந்தக் கதாயுதமானது விழுங்கி விருத்தித்துக் கொண்டு வருகிற கதையினுடைய பிரபலங்களையெல்லாம் தெரிந்தவராய் அந்தப் பரம மூர்த்தியானவர் தனது கராம்புயத்திலே விளக்குகின்ற கமலாஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தொடங்கினார். அந்த லோகநாயகராகிய ஸ்ரீ அரங்கநாதர் என்றவாறு. (11)

## Araṅkaṉiṉ kaṇaiyaik katai viḻuṅkutal

*vantaṉa araṅkaṉmuṉam vārcilai vaṇakki*
*muntiya vaḻaṟkaṇai mutaṟpala toṭuttāṉ*
*vantakaṇai yāvaiyum varuntiṭa viḻuṅkun*
*tantira maṟintapara maṉṟaṉatu kaiyāl.*

## The Mace Devours Araṅkaṉ's Arrow

Araṅkaṉ bent his handsome bow and released
The Akkiṉi and other arrows. The mace
Began to devour all of them.
Realising the state of affairs,
The Lord released other missiles.

(அரங்கனின் தாமரைச் சிலீமுகக்கணை)

611. பங்கய மெனும்படை யெடுத்துபயில் வில்லின்
இங்கிதம தாகிவிட வேயெழுத லுற்றப்
பொங்குமழல் சிந்திபுகை யோங்கபுர மெல்லாம்
மங்கிட வெழுந்தன மலர்ப்பகழி மாதோ.

எ-து. தாமரைச் சிலீமுக மென்கின்ற பேரையுடையதைத் தம்மிட தனுசில் பூட்டி அந்தக் கதைக்கு இலக்காகப் பிரயோகித்து விட்டார். அது ஆயிரம் கோடி இடிகளை இடித்துக் கொண்டு பிரவேசித்து வரும்போது அக்கினிப் பிழம்புகளைச் சிந்திப் புகைப் படலங்களைத் திரிலோகங்களிலும் விரித்து அதனாலே லோகங்களெல்லாம் கிலேசத்தை அடையத் தக்கதாகப் பிரவேசித்தது அந்தத் தாமரைச் சிலீ முகம் என்றவாறு. (12)

பங்கயம் - தாமரைக்கணை. மலாப்பகழி - தாமரையம்பு.

உரை - சிலீமுகம் - அம்பு.

## Araṅkaṉiṉ tāmaraic cilīmukakkaṇai

*paṅkaya meṉumpaṭai yeṭuttupayil villiṉ*
*iṅkitama tākiviṭa vēyeḻuta luṟṟap*
*poṅkumaḻal cintipukai yōṅkapura mellām*
*maṅkiṭa veḻuntaṉa malarppakaḻi mātō.*

## Araṅkaṉ's Lotus Missile

Taking up the lotus missile
He released it through the bow. It sped
Forward spitting fire, raising smoke
And curtaining all the spaces.
Such was the lotus arrow.

(கதாயுதம் முறிபடல்)

612. கதையிது பெருத்தசமர் பண்ணியது கன்ற
வடுதலுறு கின்றதிரு வம்புயம தாகும்
புதியதொரு வம்புபெரி யோன்கர தலத்தின்
விதிவழி யடைந்ததை வெகுண்டுநனி கண்டான்.

எ-து கதாயுதமும் பங்கயச் சிலீமுகமும் ஒன்றோடொன்று எதிர்ந்து பிரபல யுத்தங்களைச் செய்யும் போதந்தக் கதாயுதத்தை இரண்டு துண்டாகக் கண்டித்துக் கீழே தள்ளிற்று அரங்க நாயகரால் விடுக்கப்பட்ட நான்முகன் கணையானது மறுபடியும்

தன்னை விடுக்கப்பட்ட சர்வ பரிபூரணருடைய கராம்புய கமலத்திலே போய் விதி வழியாய் அமர்ந்தது கண்ட அசுரேந்திரனாகிய காலநேமியானவன் கோபாக்கிரந்தனாய்ச் சீறினான் என்றவாறு. (13)

கன்றவடுதல் - அழியுமாறு அடுதல்; அடுதல் - போர் செய்தல். அம்புயம் - தாமரை.

## Katāyutam muripatal

*kataiyitu peruttacamar panniyatu kanra*
*vatutaluru kinratiru vampuyama tākum*
*putiyatoru vampuperi yonkara talattin*
*vitivali yataintatai vekuntunani kantān.*

## The Mace is Broken

The mace that had indulged in the fierce war
Was attacked by the lotus missile
And destroyed. Watching the lotus arrow
Get back straight into the Lord's hand,
The Acuran grew wrathful.

(காலநேமியின் மீளாவேல்)

613. [1]சூலமது விட்டிட மதிப்பகழி யாலவை
துணித்திட சுளித்த வவனு
மாலமது பொங்கியனல் கொண்டுதழல் சிந்திவிடு
மங்கையி னிருந்த வழியா
வேலதை யரங்கன்முன முய்த்தன னுருத்திரனிவ்
வுலகமதை யடுவ தெனவே
காலனுயி ரவ்விபெரு வங்கியை யழித்தது
கடுந்திறல் கொள்வ வயிலரோ.

எ-து. இப்படியாய்க் கோபித்து புவனச் சக்கர வர்த்தியாகிய காலநேமியானவன் மறுபடியும் ஒரு சூலத்தை எடுத்து மந்திரார்ச்சனை செய்து பிரயோகித்தான். அதைக்கண்ட கேசவசீதரனானவர் அத்த சந்திர பாணத்தைப் பிரயோகம் பண்ணி அந்தச் சூலத்தைக் கண்டதுண்ட மாக்கிக் கீழே தள்ளினார். அதைக்கண்ட அசுரேந்திரனானவன் அனுக்கிராகாரமாய்க் கோபித்து ஆலகால விடத்தைப் பொங்கிப் பொழிகின்றதாயும், சுவாலித்தும், அக்கினிக் கணைகளைச் சிந்தப்பட்டதாயும், தனது கைகளிலே நெடுநாளிருந்து செய்ததைக் கொடுக்கப்பட்டதாயும், அழியாததாயும் இருக்கப்பட்ட மீளா வேலை எடுத்து தூபார்ச்சனை முதலியவை செய்து, மந்திராவாகனம் பண்ணி அரங்கன் முன்பாக விட்டான். அந்த வேலானது பிரளையகால உருத்திரரானவர் தம்மிட நெற்றிக்கண் அக்கினிப் பொடியால்

உலகத்தையெல்லாம் தகித்தால் எப்ப்டியோ அப்படியாகப் பிரவேசித்து எமனுயிரை உண்டதாயும், அக்கினி தேவனுயிரை அழிக்கப்பட்டதாயும், குரூரமாகிய வலியையுடைத்தானதாயும் இருக்கப்பட்டது அவன் விடுத்த மீளாவேல் என்றவாறு. (14)

மதிப்பகழி - அத்தசந்திரக்கணை. ஆலம் - நஞ்சு. விடம். அங்கையில் இருந்த அழியாவேல் எனக்கொள்க. அயில் - கைவேல். அவ்வுதல் - விரும்புதல். அங்கி - அக்கினி.

பா.வே. - 1. சூலமொரு கையினிற் சுழன்றிட வெழுந்து
காலனென நின்றவசு ரேசனை யிகழ்ந்து
மாலமகிழ் சத்தியை வலக்கர மணைந்து
நீலவிழி மாதுலக மேழருவி நின்றாள்.

## Kālanēmiyiṉ mīḷāvēl

*cūlamatu viṭṭiṭa matippakaḻi yālavai*
*tuṇittiṭa cuḻitta vavaṉu*
*mālamatu poṅkiyaṉal koṇṭutaḻal cintiviṭu*
*maṅkaiyi ṉirunta vaḻiyā*
*vēlatai yaraṅkaṉmuṉa muyttaṉa ṉuruttiraṉiv*
*vulakamatai yaṭuva teṉavē*
*kālaṉuyi ravviperu vaṅkiyai yaḻittatu*
*kaṭuntiṟal koḷva vayilarō.*

## Kālanēmi's Irresistible Lance

He now released a lance that·was cut down
By a moon- arrow. Angered, the Acuraṉ aimed
The irresisitible lance in his hand
That spurted fire, blazed hot,
And went to Araṅkaṉ. It was like Uruttiraṉ
The destroyer, Yamaṉ and Akkini.
Such was its immense power.

(மீளாவேல் முறிதல்)

614. வந்துபுகை மண்டியழல் சிந்திவரு மாலமென
வாரிதி கலக்கி வடிவேல்
முந்தியது கண்டனன் முகுந்தன்முள ரிக்கரம்
விளங்குமுதல் வாளை யுருவிச்

**சிந்திட விடுத்தன னதன்கொடுமை நீங்கிட**
**சிதைந்துதுகள் பட்டொ ழியவே**
**நொந்துபட வீட்டியது கைக்கமல வாரிச**
**நிரைத்துகுடி கொண்ட ததுவே.**

எ-து. ஆலகால விஷமானது பிரவேசித்துப் புகை மண்டலாகாரமாய் அக்கினிப் பிழம்புகளைச் சிந்தி, சப்த சாகரங்களையும் கலக்கி, வடித்த வேலானது முந்தி தடைப்படாமல் வருகின்றதைக் கண்ட அரங்கநாயகரானவர் மதித்துணர்ந்து, இதை நமது வாளினாலே வெல்வதே காரணமென்றெண்ணி அவர் வாளை உருவி மீளா வேலின் பேரில் பிரயோகம் செய்தார். அது பிரவேசித்து வந்ததனுடைய வலிகளை யெல்லாம் காந்தமானது இரும்பினுடைய வலியைக் கிரகித்தால் எப்படியோ அப்படிப்போல அடக்கி வச்சிரமலையில் அனேக கோடி இடி சாலங்கள் ஒன்றுபட்டுத் தாக்கினால் எப்படியோ அப்படித் தாக்கிற்று. அதனாலே வேலும் தூளிப் படலமாச்சுது. பின்பு அரங்க நாயகருடைய கரதல கமலங்களில் முன்போல வந்திருந்தது என்றவாறு. (15)

**காலநேமி சமர்புரிந்த அத்தியாயம் முற்றிற்று.**

## Mīḷāvēl muṟital

*vantupukai maṇṭiyaḻal cintivaru mālameṉa*
*vāriti kalakki vaṭivēl*
*muntiyatu kaṇṭaṉaṉ mukuntaṉmuḷa rikkaram*
*viḷaṅkumutal vāḷai yuruvic*
*cintiṭa viṭuttaṉa ṉataṉkoṭumai nīṅkiṭa*
*citaintutukaḷ paṭṭo ḻiyavē*
*nontupaṭa vīṭṭiyatu kaikkamala vārica*
*niraittukuṭi koṇṭa tatuvē.*

## The Irresisitble Lance is Broken

The handsome lance came churning the ocean,
Spouting fire like Ālakālam, belching smoke.
Mukuntaṉ saw it come, drew the sword
Shining in his hand and lashed out
To destroy this evil. The lance was broken.
Having achieved the destruction, the sword
Returned to the Lord's lotus-like hand.

# 34. முப்பதாவது
# துர்க்கை வரலாறு உரைத்த அத்தியாயம்

தான் விட்ட மீளா வேலானது அரங்கநாயகனை வலம் வந்து அவரது பாதத்தை அடைந்ததைக் கண்டான் காலநேமி. துர்க்காதேவியைத் துதித்து வெற்றிபெற வேண்டும் என்று முடிவு செய்தான். காலநேமியின் உள்ளத்தை அறிந்த நாரத முனிவர் அரங்கநாயகரை அடைந்து, அசுரனானவன் பராசக்தியிடம் பெற்றுள்ள வரத்தை எடுத்துரைத்து அவன் இப்போது எண்ணியுள்ள எண்ணத்தையும் கூறினார். மேலும் ஐயனே! தாங்கள் துர்க்கா தேவியை நினைத்தால், அந்தச் சத்தியானவள் தங்கள் விருப்பப்படி அசுரனுக்களித்த சக்தியைக் கிரகித்துக் கொள்ளுவாள். உலக உயிர்களும் நன்மைபெறுவார்கள் என்று விண்ணப்பம் செய்தார்.

அவ்வாறே அரங்கநாயகர் நினைக்க நினைத்த அளவில் மிகவும் களிப்படைந்த துர்க்கையானவள் பரமன் முன் தோன்றி வணங்கினாள். அவளைக்கண்ட நாயகர் சக்தியே! உன்னிடம் பெற்ற சத்தி என்னும் வேலினாலே இம்மூவுலகையும் அழித்து வருகிறான் காலநேமி என்னும் அசுரன். அவனால் தேவர்களும் முனிவர்களும் தொல்லைப்படுகிறார்கள். ஆகவே அவனிடம் சென்று அவனுக்கு அளித்த சக்தியினைக் கிரகித்துக் கொண்டு கோலாசல மலையை யடைந்து இலக்குமி தேவியை அடைந்திடுக. எக்காலமும் உன்னைத் துதித்துச் செய்யும் திருவாராதனத்தை ஏற்று அவர்களுக்கு அருள் புரிந்திடுக என்று கூறியருளினார்.

துர்க்கையானவள் அரங்கநாயகரை நோக்கித் தேவாதி தேவனே! உமது அன்பினாலே தேவர்களும் முனிவர்களும் அந்தணர்களும் என்னை முதன்மையாக வந்திக்க அருள்புரிய வேண்டும் என்று வேண்டினாள். அரங்கநாயகர் அருள்புரிகிறார். நமது கோலாசலத்திலே வந்து நம்மைத் தரிசித்தவர்களுக்கு அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றி அருள் புரிவோம். ஆயினும் அவர்கள் உன்னைத தரிசியாமல் செல்லுவார்களாகில் அவர்கள் பயனை இழப்பார்கள் என்று கூறி அருள்புரிந்தார். அருளைப் பெற்ற தேவியானவள் காலநேமியை அடைந்து அசுரனே! என்னிடம் வரம் பெற்றாய் ஆனாலும், நீதியற்ற வழியிலே நடந்து இந்திரன் முதலாகிய தேவர்களையும், உலக மக்களையும், பரம்பொருளாகிய அரங்கநாயகரையும் துன்பப்படுத்தியிருக்கிறாய். ஆதலால் நீ பெற்ற வரத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவதே உனக்கு வீரமாகும் என்று கூறினாள்.

அதுகேட்டுச் சினந்த காலநேமி, ஒருவருக்குக் கொடுத்த பொருளைத் திரும்பப் பெற விரும்புபவர்கள் இந்த மூவுலகிலும் இல்லை. ஆகவே அரங்கநாயகனை யுத்த களத்திலே தோற்கச் செய்வேன். அதனை நீயே காண்பாய் என்று கூறினான். அவனது அடாத சொல்லைக் கேட்ட தேவியானவள், சினந்தவளாய்ச் சூலத்தை ஏந்தி எமனைப் போல அசுரன முன் சென்று அவனுக்குக் கொடுத்த சக்தியினை எடுத்துத் தனது வலதுகையிலே

தாங்கியவளாய்த் தன் விசுவரூபத்தோடு மூவுலகமும் புகழ்ந்து, மகிழ்ந்து வணங்க விரைந்து கோலாசல மலையின் உச்சியை அடைந்து திருமகளின் சன்னதியில் எழுந்தருளினாள்.

தேவர்களும் முனிவர்களும் மகிழ்ந்து, கவுரி, திரிசூலி, கபாலி, சாமளி, திரிநேத்திரி, வராகி, மயிடசம்மாரி, நித்தியகல்யாணி என்னும் பல பெயர்களால் தோத்தரித்துப் பணிந்து பூசித்தார்கள்.

### (மீளாவேல் அரங்கனைச் சரணடைதல்)

615. **சூலமது விட்டிட துணித்திட சுளித்த**
**வாலமது பொங்கியனல் மண்டியனல் சிந்த**
**வேலதை விடுத்திட வெதிர்த்தடி பணிந்த**
**கோலமென வென்றுகனல் கொண்டவசு ரேசன்.**

எ-து. காலநேமியானவன் வரத்தினால் பெற்ற அக்கினிச் சுவாலையினையுடைய திரிசூலத்தினை அரங்கநாயகர் பேரில் விட்ட மாத்திரத்திலே அதைத் துணிக்கக் கண்ட அசுர சூடாமணியானவன் கோபித்து, மீட்டும் ஆலகால மாரியினைப் பொழிந்து, அக்கினிப் பிழம்பைச் சிந்துகின்ற ஒரு மீளா வேலினை விடுத்தான். அந்த வேலானது அரங்க நாயகனை எதிர்த்த அளவிலே வலம் வந்து பாதத் தாமரையின்கண் வந்தித்தது. அத்தன்மையனவாகிய [1]தெய்வ வராகத்தினைப் பார்த்த கோபத்தினால் அக்கினியைப் பொழிகின்ற புவன சக்கரேசுவரனாகிய அசுரேந்திரன் என்றவாறு (1)

சுளித்தல் - கோபித்தல்

**உரை** - வந்தித்தல் - வணங்குதல்.

**பா.வே.** - 1. தெய்வநாயகத்தினை கண்டுமன.

### Mīḷāvēl Araṅkaṉaic caraṇaṭaital

*cūlamatu viṭṭiṭa tuṇittiṭa cuḷitta*
*vālamatu poṅkiyaṉal maṇṭiyaṉal cinta*
*vēlatai viṭuttiṭa vetirttaṭi paṇinta*
*kōlameṉa veṉṟukaṉal koṇṭavacu rēcaṉ.*

## XXXIV. The Manifestation of Turkkai
### The Lance Surrenders to Araṅkaṉ

When the trident that had been aimed
Was broken, the Acuraṉ became furious
And aimed a lance that bubbled poison
Resembling Ālakālam, and sputtered fire.
The lance surrendered at the handsome feet
Of Araṅkaṉ. The Acuraṉ became furious.

(காலநேமியின் சிந்தனை)

616. ஆலமது உண்டவர னாதியி னளித்த
வேலது பணிந்திட வெகுண்டவசு ரேசன்
காலமது சென்றகடை காலமென நின்ற
மாலமகிழ் சத்தியை விடுத்திட மதித்தான்.

எ-து. ஆலகால விடத்தினை உண்டு அகில முதலாகிய சராசரங்களையெல்லாம் பாதுகாத்தருளிய சிவனானவர் ஆதிகாலத்தில் அனுக்கிரகம் பண்ணாநின்ற வேலானது, அரங்கனிட பாத கமலங்களிலே பணிந்ததைக் கண்டு கோபித்த அசுர சூடாமணியானவன் காலங்களெல்லாம் கடக்காநின்ற ஊழிக்கால உருத்திரனைப போலச் சீறிநின்றவனாய் வீரத்தினால் சத்தியை விட்டுச் செயங்கொள நினைத்தான் என்றவாறு. (2)

## Kālanēmiyin̲ cintan̲ai

*ālamatu uṇṭavara n̲ātiyi n̲aḷitta*
*vēlatu paṇintiṭa vekuṇṭavacu rēcan̲*
*kālamatu cen̲r̲akaṭai kālamen̲a nin̲r̲a*
*mālamakil̲ cattiyai viṭuttiṭa matittān̲.*

## Kālanēmi's Cogitation

Watching the lance granted by Civan̲
Surrender thus, the Acuran̲ grew wrathful
Like Uruttiran̲ in the time of deluge,
And released the Cakti missile.

(நாரதர் அரங்கனைக் காணுதல்)

617. [1]மதித்ததிறல் வீணைமுனி கண்டுமன நொந்து
கதித்திரத மேவிகரு [2]ணைக்கடல் சிறந்த
வதித்தபுகழ் கொண்டதிரு மாலடி வணங்கித்
[3]துதித்தவ ணிகழ்ந்தசெயல் செப்பிடுவ தானான்.

எ-து திரிபுவனங்களும் மதிக்காநின்ற வீணை முனியாகிய சாம கீதத்தைக் கர்ணாமிர்தமாயப் பொழியாநின்ற நாரத முனிவரானவர் இதைக்கண்ட அளவின் மனநொந்துருகிப் பெரிய இரதத்தை நடாத்தித் திரிகின்ற கருணைக் கடலாகிய அரங்கநாயகரைக் கண்ட அளவில் பொருந்துகின்ற புகழினையுடைய திருமாலினது திருவடிக் கமலங்களிலே தண்டன் சமாப்பித்துத துதிசெய்து காலநேமியானவன் நினைத்த காரியங்களையெல்லாம் அறிவிக்கத் தொடங்கினார் என்றவாறு. (3)

பா.வே. - 1 மதித்த புகழ் 2 கடல்கணுற்றே. 3 துதித்தவ னினைந்தசெயல்.

## Nāratar Araṅkaṉaik kāṇutal

*matittatiṟal viṇaimuṉi kaṇṭumaṉa nontu*
*katittirata mēvikaru ṇaikkaṭal ciṟanta*
*vatittapukaḻ koṇṭatiru mālaṭi vaṇaṅkit*
*tutittava ṇikaḻntaceyal ceppiṭuva tāṉāṉ.*

## Nāratar sees Araṅkaṉ

Seeing this, Nāratar the expert wielder
Of the lute, looked upon the kindly Lord
In his chariot. He saluted the feet
Of the famed Lord and offered prayers.
Then he spoke of the enemy's plans.

(நாரதர் காலநேமியின் தவம் பற்றிக் கூறுதல்)

618. நின்றுநெடு நாடவ மியற்றிநிகழ் காலை
மன்றல்கமழ் செஞ்சடை வராகியெனு மாது
பண்டுதவு சத்திதனைக் கொண்டுபல காலுங்
கண்டுமகிழ் பூசைபுரி கின்றகனல் சூரன்.

எ-து. மீட்டும் நாரத மகாமுனிவர் காலநேமியினது வலியினைக் கூறுகின்றார் பூர்வ காலத்திலே அசுரேந்திரனானவன் துர்க்கையைக் குறித்து நெடுநாளாய் அரிய தவத்தினைச் செய்தலின் அவன் தவத்திற்கு இரங்கித் திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற சிவந்த சடையினை உடையவராகிய பராசத்தியானவள் முன்னம் அனுக்கிரகம் செய்கின்ற சத்தியை வரத்தினாலேற்ற தெய்வத்தைப் பல காலமாயர்ச்சித்து அவளுருவத்தை நிச உருவமாய்க் கண்டு திருவாராதனம் செய்து கனலைப் பொழிகின்ற அதி சூரனானவன் என்றவாறு. (4)

நெடுநாடவம் - நெடுநாள் தவம். வராகி - சக்தி. சிங்க வாகனத்தில் எழுந்தருளியவள்; மணி, சாமரம், கதை, சக்கரம் ஆகியவற்றை அணிந்தவள்

## Nāratar Kālanēmiyiṉ tavam paṟṟik kūṟutal

*niṉṟuneṭu nāṭava miyaṟṟinikaḻ kālai*
*maṉṟalkamaḻ ceñcaṭai varākiyeṉu mātu*
*paṇṭutavu cattitaṉaik koṇṭupala kāluṅ*
*kaṇṭumakiḻ pūcaipuri kiṉṟakaṉal cūraṉ.*

## Nāratar on Kālanēmi's Austerities

"He performed austerities for a long time.
Goddess Varāki with russet, scented tresses,
Appeared and gave him the Cakti missile.
The hero worshipped her and grew strong.

(துர்க்கையிடம் பெற்ற வரம்)

619. முத்தின்மணி மாலையணி முக்கணி யளித்த
சத்திதனை [1]யேகொடெதிர் சார்ந்துவரு கின்றான்
பத்திய உயிர்த்தொகை பதைத்திட வெருட்டும்
வெத்திதரு கின்றதிறல் சத்திவிளை வென்றான்.

எ-து முத்தினம் முதலாகிய நவரத்தின மாலையைத் தரித்தருளிய உத்தமியான பராசத்தியினது உருவமாகிய துர்க்கையம்மன் அனுக்கிரகம் பண்ணிய அந்த கோர ரூபமாகிய சத்தியினைத் தேவரீர் பேரிலே காலநேமியானவன் விடத்தக்கதாய்ச் சார்ந்து உம்மிடத்தின் வர எத்தனப்பட்டிருக்கின்றாள. இந்தத் திரிபுவனத்தினும் பொருந்திய எண்பத்து நான்கு நூறாயிர சீவபேதமும் பதைபதைக்கத்தக்கதாய் வெருட்டுகின்றான். அந்தத் திறலாகிய விசயமானது அசுரேந்திரன் பெற்றது பராசத்தியினது அனுக்கிரகத்தால் இந்த வல்லபம் வந்ததென்றார் நாரதமுனிவர் என்றவாறு (5)

முக்கணி - மூன்று கண்களையுடைய துர்க்கை கொடு - கொண்டு. சத்திதனையே கொண்டு எதிர்சார்ந்து வருகின்றான் எனக்கொள்க பற்றிய. வெற்றிதரு என்பன பத்திய. வெத்திதரு என எதுகை நோக்கி அமைந்தன.

பா.வே. - 1. யேவவெதிர்.

## Turkkaiyiṭam peṟṟa varam

*muttiṉmaṇi mālaiyaṇi mukkaṇi yaḷitta*
*cattitaṉai yēkoṭetir cārntuvaru kiṉṟāṉ*
*pattiya uyirttokai pataittiṭa veruṭṭum*
*vettitaru kiṉṟatiṟal cattiviḷai veṉṟāṉ.*

## Turkkai's Boon

"He is coming to you with the missile
Granted by the three-eyed goddess
Who wears necklaces of pearl.
He is frightening all the living beings
On earth with this powerful, victorious,
Cakti missile.

(துர்க்கையை நினைக்கத் தூண்டுதல்)

620. அண்டமுழு துண்டவகி லங்களை யளந்துங்
கொண்டதிருக் கோலமதைக் கூறவறி யார்கள்
[1]மண்டல மெலாம்புகழ மாதுதனை யிங்குக்
கண்டருளச் சத்திதனைக் கொண்டருள்வ ளென்றார்.

எ-து. நாரத மகாரிஷியானவர் பின்னும் விண்ணப்பம் செய்கின்றார். வாரீர் மகானுபாவரே! தேவரீர் இந்த அண்ட சமூகங்களை யெல்லாம் உண்டும், அகிலமான செகத்தையெல்லாம் ஒரடியாய் அளந்தும், அடைந்துள்ள அகன்ற பெரும்புகழினை அடியேனால் கூறத் தகுமோ? ஆகிலும் தேவரீர் காரிய காரண ரூபமாய் அவதரித்தெழுந்தருளிய செனரக்ஷகராகையால் கிருபை செய்திந்த லோக சத்தியாகிய துர்க்கா தேவியைத் தேவரீர் நினைத்த மாத்திரத்திலே அந்த மகா சத்தியானவளுமட தாக்கினைப் படிக்குத்தான் காலநேமி மிக்குத் தவத்தினால் கொடுத்த சத்தியைக்கிரகித்துக் கொள்ளுவாள். அதனாலே ஆத்தும கோடிகள் எல்லாம் தப்பிப் பிழைக்கு மென்றார் நாரதமகாமுனிவர் என்றவாறு. (6)

பா.வே. - அண்டர்களெ லாந்துதிசெ யாயிழையை யிங்குக்
கண்டருள் புரிந்திடக் களித்திடுவ ளென்றான்.

## Turkkaiyai niṉaikkat tūṇṭutal

*aṇṭamuḻu tuṇṭavaki laṅkaḷai yaḷantuṅ*
*koṇṭatiruk kōlamataik kūṟavaṟi yārkaḷ*
*maṇṭala melāmpukaḻa mātutaṉai yiṅkuk*
*kaṇṭaruḷac cattitaṉaik koṇṭaruḷva ḷeṉṟār.*

## Call Upon Turkkai!

"No one knows the superb form
That has measured all the worlds
And the universes, If you wish so,
This goddess whom all continents worship
Will take back her missile."

(அரங்கன் துர்க்கையை நினைத்தல்)

621. நாரத னுரைத்திட நகைத்துமொழி கின்றார்
பாரதனி னுயிர்த்தொகை பதைத்திட வருத்துஞ்
சூரனை மடித்தமரர் சேனைபுடை சூழச்
சார்வனெனத் துர்க்கையெனுஞ் சத்தியை நினைத்தார்.

எ-து. இந்தப் பிரகாரமாக நாரத மகாரிஷியானவர் விண்ணப்பம் செய்யப் புன்னகை புரிந்தருளிச் செய்கின்றார். வாராய் ரிஷி சிரேஷ்டரே! இந்த லோகா லோகங்களிலேயுள்ள உயிர்த் தொகைகளெல்லாம் பதைபதைத்திட வருத்துகின்ற காலநேமியென்னும் அசுரேந்திரனையும், அவனுக்குப் பலமாக வந்திருக்கின்ற இராக்ஷத சேனைகளையும் ஒரு நிமிடத்திலே மடித்துத் தேவர்கள் புடைசூழத் தக்கதாக நமது கோலமால்வரைக்கு எழுந்தருளுகின்றோம் பாரும் என்றருளிச் செய்து மகாசத்தியை நினைத்தார் ஸ்ரீ அரங்க நாயகர் என்றவாறு. (7)

சார்வன் - சார்வேன் - அடைவேன்

## Araṅkaṉ Turkkaiyai niṉaittal

*nārata ṉuraittiṭa nakaittumoḻi kiṉṟār*
*pārataṉi ṉuyirttokai pataittiṭa varuttuñ*
*cūraṉai maṭittamarar cēṉaipuṭai cūḻac*
*cārvaṉeṉat turkkaiyeṉuñ cattiyai niṉaittār.*

## Araṅkaṉ Meditates Upon Turkkai

As Nāratar spoke, the Lord smiled and said:
"I shall kill the Acuraṉ who is torturing
The living beings on the earth,
And shall return to my residence
Surrounded by the army." Then he meditated
Upon Turkkai also known as Cakti.

(துர்க்கை அரங்கன் முன் தோன்றுதல்)

622. சத்தியை நினைத்திடக் களித்தவள் சனித்தாள்
வெத்திபுக ழாயிர முடித்திகழ வெங்கும்
பத்திமணி மாலைபல கோடிக ளணிந்து
முத்திமுத லோனடி பணிந்துமுன் னுவந்தாள்.

எ-து அந்தச சமயத்தில் அரங்க நாயகரானவர் துர்க்கையாகிய சத்தியை நினைந்தவளவில் அந்த நினவை யறிந்து களி கூர்ந்தவளாய், எப்போதும் பிரியாதவள் வெற்றியும் புகழும் அமைந்த ஆயிரமுடிகளானவை பிரகாசிக்கத்தக்கதாக, எங்கணும் பத்தியாய் ஒளி விடுகின்ற மாணிக்க மாலைகளானவை பல கோடிகள் விளங்கிப் பிரகாசிக்கத் தக்கதாக அதிக துரிதமாய் வந்து, முத்திக்கு முதல்வனாய பரமனைப் பார்த்தவளவில் வரம்பிலின்பம் பெருகித் தெண்டன் சமர்ப்பித்து ஆனந்த வைபவத்தால் இறும்பூதுற்றாள் என்றவாறு (8)

சனித்தல் - பிறத்தல். தோன்றுதல். வெத்தி - வெற்றி

## Turkkai Araṅkaṉ muṉ tōṉṟutal

*cattiyai niṉaittiṭak kaḷittavaḷ caṉittāḷ*
*vettipuka ḷāyira muṭittikaḷa veṅkum*
*pattimaṇi mālaipala kōṭika ḷaṇintu*
*muttimuta lōṉaṭi paṇintumuṉ ṉuvantāḷ.*

## Turkkai Appears to Araṅkaṉ

As he meditated upon her, Turkkai
Became happy and manifested before him.
Wearing a thousand victorious crowns
Shining brilliant, ornamented with crores
Of necklaces in rows, Turkkai saluted
The feet of the Lord with joy.

(காலநேமி பற்றித் துர்க்கையிடம் கூறுதல்)

623. வந்திடு வராகியை மதித்தருளு கின்றார்
சந்ததமு முந்தனடி சார்ந்தவசு ரேசன்
சுந்தர [1]மிகுந்துதிகழ் சத்திதிரி சூலந்
தந்திட வதைத்தமரர் தங்களை மடித்தான்.

எ-து. இப்படியாக வந்து பணிந்து களிகூர்ந்து நிற்கின்ற வராகியைப் பார்த்தருளிச் செய்கின்றார். வாராய் லோக சத்தியே! சர்வ காலங்களிலும் உனைப் பூசித்துப் பேறு பெற்ற சத்தியென்கின்ற வேலாயுதத்தினால் தேவர் கூட்டங்களை மடித்து இந்தத் திரிலோகங்களையும் அழிக்கின்றான் காலநேமி என்றருளிச் செய்தார் என்றவாறு. (9)

பா.வே. - 1. மிகுந்ததிரு.

## Kālanēmi paṟṟit Turkkaiyiṭam kūṟutal

*vantiṭu varākiyai matittaruḷu kiṉṟār*
*cantatamu muntaṉaṭi cārntavacu rēcaṉ*
*cuntara mikuntutikaḻ cattitiri cūlan*
*tantiṭa vataittamarar taṅkaḷai maṭittāṉ.*

## Informing Turkkai About Kālanēmi

Araṅkaṉ looked kindly at Varāki
Who had now manifested. "The Acura king
Who had drawn close to your feet
And received from you the Cakti trident
Has now been destroying the gods.

(வரத்தால் வந்த கேடு)

624. வேதமறி பூசுரர்கள் வேள்விநலி வித்தும்
வாதைபட வானவரை வந்தமர் விளைக்கு
மோதவறி யாதவுல கேழுமழி கின்ற
வேதைதர நீர்வரமும் வேண்டிய [1]தளித்தீர்.

எ-து. வேதங்களைப் பதக்கிரம சடை பரியந்தம் ஓதுகின்ற அந்தணரது வேள்விகளையெல்லாம் நலியப்படுத்தியும், தேவர்கூட்டங்கள் வாதனையாகிய சித்திரவதையாய்த் துடிக்க வந்து சமரினை விளைத்தும், சொல்லுதற்கரிய வளம் அமைந்த உலகம் ஏழும் இவனது பெயரைக் கூறக் கேட்டவளவின்றானே திடுக்கிட்டழிகின்றன. இத்தன்மையாய்த் திரிபுவனத்துக்கும் வேதனையைத் தரத்தக்கதாக நீர் வரமானது அவனுக்கு வேண்டியதைக் கொடுத்தீர் என்றவாறு. (10)

பூசுரர் - அந்தணர் நலிவித்தல் - வருத்துதல், அழியச் செய்தல். வாதை - வருத்தம், துன்பம்.

பா.வே. - 1 அளித்தாய

### Varattāl vanta kēṭu

*vētamaṟi pūcurarkaḷ vēḷvinali vittum*
*vātaipaṭa vāṉavarai vantamar viḷaikku*
*mōtavaṟi yātavula kēḻumaḻi kiṉṟa*
*vētaitara nīrvaramum vēṇṭiya taḷittīr.*

### Evil out of a Boon

"Attaching the sacrifices performed
By Vēda-reciting brahmins, calling to war
The gods and attacking them,
This Acuraṉ is destroying the seven worlds.
Now you have granted a boon
That causes further evil.

(துர்க்கைக்கு அரங்கன் கட்டளை)

625. கொண்டுனது சத்தியினைக் கோலவரை மீது
சென்றுதிரு மாதருகில் சேர்ந்திடுக வென்று
நின்றுபுரி [1]பூசையது கொண்டுநின தன்பா
லென்றுமகிழ் வானுலகைக் கண்டருள்க வென்றார்.

எ-து. மீட்டும் துர்க்கையினைப் பார்த்தருளிச் செய்கின்றார். அந்தக் கால நேமியினிடத்தில் அதிவேகமாய்ச் சென்று தன்னால் கொடுக்கப்பட்ட சத்தியினைக் கிரகித்துக் கொண்டு கோலாசல உச்சியிலே நீ சென்று ஸ்ரீமகா லட்சுமி தேவியினதருகிலே சேர்ந்திடுக. எக்காலமும் உன்னையே அனேக சீவகோடிகளானவர்கள் செய்யாநின்ற திருவாராதனத்தை அன்பால் எக்காலமும் கைக்கொண்டவர் இஷ்ட பலங்களைக் கொடுத்து நமது கிரியில் எழுந்தருளி ஏழுலகத்துக்கும் அருள் புரிவாய் என்று அனுக்கிரகித்தார் பரந்தாமன் என்றவாறு. (11)

பா.வே. - 1. பூசையை விரும்பு

## Turkkaikku Araṅkaṉ kaṭṭaḷai

*koṇṭuṉatu cattiyiṉaik kōlavarai mītu*
*ceṉṟutiru mātarukil cērntituka veṉṟu*
*niṉṟupuri pūcaiyatu koṇṭuniṉa taṉpā*
*leṉṟumakiḻ vāṉulakaik kaṇṭaruḷka veṉṟār.*

## Araṅkaṉ's Command to Turkkai

"Take back your Cakti trident, go
To the top of the Kōla Hill, and place it
Near the Goddess of Wealth.
You stay there and always grant your grace
To those who come and worship you."

(அரங்கனிடம் துர்க்கை வரம் வேண்டுதல்)

626. மாதவ னுரைத்திட மகிழ்ந்துமொழி கின்றாள்
ஓதவரி தாமெனு முயர்ந்தவுன தன்பால்
வேதமறை மாமுனிவர் வேதியர்கள் விண்ணோர்
நீதமுட னேபணிய நீரருள வேண்டும்.

எ-து. இவ்விதமாய்த் துர்க்கையம்மனைப் பார்த்து மாதவனாகிய அரங்க நாயகர் தமது அனுக்கிரகத்தினால் திருவாய் மலர்ந்து அருளிய அளவிலே மகிழ் சிறந்தவளாய்த் தனது திருவாயாகிய சேதாம்பலான மலரை அலர்த்தித் தேன் துளியைத் துளித்தால்

எத்தன்மையோ அத்தன்மையால் ஒரு வரம் கேட்கின்றாள். வாராய், தேவாதி தேவனே! யாவராலும் கூறுதற்கரிய உனதன்பாகிய கிருபையினாலே வேதத்தியானத்துக்கு உரை விரிக்கா நின்ற அந்தணர்களும் முனிவர்களும், தேவர்யீட்டங்களும் என்னை முதன்மையாக வந்திக்கத்தக்கதாக நீர் அருள்புரிய வேண்டும் என்றாள் துர்க்கையம்மன் என்றவாறு. (12)

உரை - சேதாம்பல் - செவ்வாமபல்மலர், சிவப்பு மலர்.

## Araṅkaṉiṭam Turkkai varam vēṇṭutal

*mātava ṉuraittiṭa makiḻntumoḻi kiṉṟāḷ*
*ōtavari tāmeṉu muyarntavuṉa taṉpāl*
*vētamaṟai māmuṉivar vētiyarkaḷ viṇṇōr*
*nītamuṭa ṉēpaṇiya nīraruḷa vēṇṭum.*

## Turkkai to Araṅkaṉ

As Mātavaṉ spoke, Turkkai felt happy
And said: "By your compassion
That is indeed beyond praise,
You must grant me the boon
That sages expert in Vēdas, brahmins
And gods should ever worship me."

(உன்னை வணங்காதவர் என் வரப்பயனை அடையார்)

627. மதித்தவ ளுரைக்கதிரு வாய்மல ரலர்ந்து
வதித்தவுல கத்தினிடை வாழுமுயிர் கோடி
துதித்தெனது சேவைபுரி வோருனைத் துதிக்கிற்
கதிக்கபுகழ் கொண்டகதி சென்றுகளி கூர்வார்.

எ-து இந்தப் பிரகாரமாக லோக சத்தியாகிய துர்க்கா தேவியானவள் திரிலோகங்களிலுள்ள தேவர்களும், மகாரிஷிகளும், மானிடரும் தன்னை முந்திப் பணிகின்ற பேர்களுககு இஷ்ட பலங்களைக் கொடுக்கும்படியாய் வரம் கேட்க அருளிச் செய்கின்றார். நமது கோலாசலத்திலே யாவராயினும் நம்மைத் தரிசித்த போதினும் அவர் இஷ்ட பலங்களை நிறைவேற்றக் கடவோம். ஆகிலும் இந்த மகாதலத்தின் வரப்பட்ட ஆத்தும கோடிகள் உன்னைத தரிசியாமல் போவார்களேயாகில் அவாள் நிஷ்பலத்தை அடையக் கடவார்கள் என்று அனுக்கிரகம் செய்தார் அரங்கநாயகர் என்றவாறு. (13)

கதிக்க - மிகுதியாக; கதித்தல - மிகுத்தல, சிறத்தல்.

## Unnai vaṇaṅkātavar en varappayanai aṭaiyār

*matittava ḷuraikkatiru vāymala ralarntu*
*vatittavula kattiniṭai vāḻumuyir kōṭi*
*tutittenatu cēvaipuri vōrunait tutikkir*
*katikkapukaḻ koṇṭakati cenrukaḷi kūrvār.*

## They Should Salute You!

To her who prayed thus, the Lord spoke:
"The crores of living beings on this earth
Who worship and serve me will gain
All good only if they worship you."

(காலநேமியைத் துர்க்கை கண்டித்தல்)

628. ஆதிபர னோதுமொழி யன்புட னறிந்து
சோதிமுடி சூரனை யெதிர்த்துசுளி கின்றாள்
நீதிநெறி யன்றிநிம லன்றனை யெதிர்த்தாய்
ஓதிய பெரும்புக ழொழிந்திடவு மன்றோ.

எ-து. ஆதி பரப்பிரம்ம சொரூபமாகிய ஸ்ரீ அரங்கநாயகர் அருளிச் செய்த அமுதவசனத்தைக் கேட்டு, மிகுந்த அன்புடனே காலநேமியிடத்துக் கெழுந்தருளி ஒரு வார்த்தை கூறுகின்றாள். வாராய் நவரத்தின கிரீடம் பிரகாசிக்கின்ற காலநேமியே! உனது தவத்துக் கிரங்கி நாம் அளித்த சத்தியினது பிரபலத்தினாலே நிமலனாகிய ஆதி பரப்பிரம்மத்தை அடுத்தாயாகிலும், நீதி மார்க்கமன்றி நீ செய்கின்ற கொடுமையால் உனது பெரும்புகழினை ஒழித்தாய் என்றாள் துர்க்கை என்றவாறு. (14)

## Kālanēmiyait Turkkai kaṇṭittal

*ātipara nōtumoḻi yanpuṭa narintu*
*cōtimuṭi cūranai yetirttucuḷi kinrāḷ*
*nītineri yanrinima lanranai yetirttāy*
*ōtiya perumpuka ḻoḻintiṭavu manrō.*

## Turkkai Frowns Upon Kālanēmi

Understanding clearly the message
Spelt out by the Pimal Lord,
She spoke against the Acuran

Who wore a gleaming crown. "You have
Opposed the Pure One unrighteously.
Thus have you lost your immense fame.

(காலநேமிக் களித்த சக்தியைத் திருப்பித் தரச்செய்தல்)

629. [1]இந்திரன் முதற்படை யெடுத்துடன் மடித்தாய்
[2]தந்திடு வரம்பெருகு தாரணி யழித்தாய்
முந்திய பரன்றனை முடித்திட வடுத்தாய்
[3]தந்ததிரு சத்தியினைத் தாவென உரைத்தாள்.

எ-து. இந்திரன் முதலாகிய தேவர்களையெல்லாம் மடித்து விட்டாய். நமது வரத்தினாலே பெருகிய தரணிகளையெல்லாம் அழித்து விட்டாய். முதன்மையாகிய ஆதி பரப்பிரம்மமான சர்வ மங்கள சுபகுண விசேஷனாகிய ஸ்ரீ அரங்க நாயகருடனே சமர்க்களத்திலே எதிர்த்து நின்றாய். அதனால் நாம் உமக்களித்த சத்தியை நம்மிடத்தில் கொடுத்து விடுவதே உமக்கு வீரமென்றாள் லோக சத்தியாகிய துர்க்கையம்மன் என்றவாறு. (15)

பா.வே. - 1. இந்திரனை சேனையொடெ திர்ந்துடன்ம டித்தாய்.
2. தந்தவர பாலனம தாலுலக ழித்தாய்.
3. தந்ததிகழ்.

## Kālanēmik kaḷitta cattiyait tiruppit taracceytal

*intiraṉ mutaṟpaṭai yeṭuttuṭaṉ maṭittāy*
*tantiṭu varamperuku tāraṇi yaḻittāy*
*muntiya paraṉṟaṉai muṭittiṭa vaṭuttāy*
*tantatiru cattiyiṉait tāveṉa uraittāḷ*

## Kālanēmi to return the Catti

"You have killed Intiraṉ and the other gods.
You have destroyed the world that yields
Riches. You had even decided
To put an end the Primal Lord.
Return the Cakti missile I gave you."

(காலநேமி மறுத்துப் போருக்குத் துணிதல்)

630. கடுத்தவ ளுரைப்பகனல் பொங்கவசு ரேசன்
கொடுத்ததிறல் சத்தியினைக் கொள்பவரு முண்டோ
மடித்திடுவ னென்றுமது சூதன்மகிழ் கொண்டான்
விடுத்திடுவ னோயெனது வீரவலி கண்டாய்.

எ-து. துர்க்கை யம்மனானவள் அசுரேந்திரனை எதிர்த்துக் கூறிய வார்த்தையினைக் கேட்ட காலநேமியானவன் அக்கினி சொலிக்கும்படியாய் ஆக்கிரமித்தொரு வார்த்தை சொல்லுகின்றான். வாராய் லோக சத்தியே! ஒருவருக்குக் கொடுத்த பொருள்களை மறுபடியும் விரும்புவார்களாய் இந்தத் திரிலோகங்களிலும் கண்டதில்லை. அரிதாகிய தவத்தினால் நீர் நமக்களித்த சத்தியினை நீர் கேட்பது மெத்த ஆச்சரியமாய் இருக்கிறது. ஆகிலும் இன்று நம்மை விசயம் பொருந்தத்தக்கதாய் மதுசூதனனானவன் மகிழ்ச்சியை அடைந்திருக்கின்றான். இந்த க்ஷணத்திலே என்னுடைய புசபல பராக்கிரமத்தினாலே அவரை யுத்த களத்திலே வென்று வெற்றி பொருந்திய என் வீரத்தை நீயே காணப்போகிறாய் என்று சொன்னான் அசுரேந்திரன் என்றவாறு. (16)

மதுசூதன் - மதுசூதனன் - திருமால்; மது என்னும் அசுரனைக் கொனறதனால் ஏற்பட்ட பெயர்; சூதனன் - அழித்தவன்; சூதனம் - அழித்தல்.

## Kālanēmi maṟuttup pōrukkut tuṇital

*kaṭuttava ḷuraippakaṉal poṅkavacu rēcaṉ*
*koṭuttatiṟal cattiyiṉaik koḷpavaru muṇṭō*
*maṭittiṭuva ṉeṉṟumatu cūtaṉmakiḻ koṇṭāṉ*
*viṭuttiṭuva ṉōyeṉatu vīravali kaṇṭāy.*

## Kālanēmi's Refusal

As he heard her words, the Acura king
Spouted fire: "Will anyone take back
The powerful Cakti after giving it away?
Matucūtaṉaṉ is perhaps feeling happy
That I will die. But will I return it?
Look upon my strength".

(தான் அளித்த பலத்தை வலிய எடுத்தல்)

631. சூலமொரு கையினில் சுழன்றிட வெழுந்து
காலனென [1]நின்றவசு ரேசனெதிர் கண்டு
மாலமகிழ் சத்தியை வலக்கர மணைத்து
நீலவிழி மாதுலக மேழுருவி நின்றாள்.

எ-து. இவ்விதமாய்க் காலநேமியானவன் தனது புச, பல, பராக்கிரமங்களைக் கூறக் கேட்ட துர்க்கையம்மனானவள், இரண்டு கண்களிலும் அக்கினி கொட்ட பூமியானது நடுங்கத் தனது அஸ்தங்களிலே சூலமானது கோடி சூரியன் பிரகாசிக்கின்றது போலத் திரிசூலமானது கரதல கமலங்களிலே கறங்கைப்போலச் சுழன்றிடத் தக்கதாக எழுந்தவளாய்க் காலனாகிய எமனைப்போன்ற அசுர சூடாமணிக்கு எதிராகச் சென்று, மாதவனாகிய ஸ்ரீ அரங்கநாதன் மகிழத் தக்கதாய்த் தான் முன் கொடுத்த சத்தியினை எடுத்துத் தனது வலது கையிலே தாங்கினவளாய், நீலோற்பலம் போன்ற கண்ணினையுடைய துர்க்கையம்மனானவள், இரண்டு கண்களிலும் அக்கினி கொட்ட, ஆயிர முடியும், இரண்டாயிரம் கையும், திரிபுவனங்களும் நிறைந்து பிரகாசிக்கத்தக்கதாய், ஏழுலகங்களும் கடந்த விசுவரூபம் கொண்டருளி நின்றாள் என்றவாறு. (17)

பா. வே. - 1. நின்ற வசுரேசனை இகழ்ந்து

## Tāṉ aḷitta palattai valiya eṭuttal

*cūlamoru kaiyiṉil cuḻaṉṟiṭa veḻuntu*
*kālaṉeṉa niṉṟavacu rēcaṉetir kaṇṭu*
*mālamakiḻ cattiyai valakkara maṇaittu*
*nīlaviḻi mātulaka mēḻuruvi niṉṟāḷ.*

## Turkkai Forcibly Takes Back the Power

Rising with the matchless trident
Gleaming in his hand, the Acuraṉ stood,
An image of Death. Facing him straight
She retrieved with her right hand
The Cakti to the joy of Nārāyaṇaṉ.
The dark-eyed goddess stood thus
Straddling the seven worlds.

(லட்சுமி ஆலயத்தில் துர்க்கை)

632. அண்டமு நடுங்கவனல் கொண்டவட லாழித்
தண்டமழு சூலமொடு சக்கர மிலங்க
மண்டல மெலாம்புகழ வானவர் வணங்கக்
கொண்டல்தவழ் கோலவரை [1]சென்றவள் வதிந்தாள்.

எ-து. அண்டரண்ட பகிரண்டங்களெல்லாம் நடுநடுங்க, அக்கினிச் சொரூபமாய் ஒளியினைப் பரப்பி அலர்ந்த கராம்புயத்திலே தண்டாயுதமும், கண்ட கோடரியும் சூலமும் சக்கரமும் தாங்கிப் பிரகாசிக்கவும், இந்தப் பூவுலகமெல்லாம் புகழவும், தேவர்கூட்டங்களெல்லாம் வணங்கவும், தனது விசுவ சொரூபத்துடனே மேகங்கள் தவழ்கின்ற கோலாசல உச்சியின் மணிமயமாய் பிரகாசிக்காநின்ற ஸ்ரீ மகாலட்சுமி சன்னதியி னெழுந்தருளினாள் துர்க்கையம்மன் என்றவாறு. (18)

பா.வே. - 1. கோயிலின மர்ந்தாள்.

## Laṭcumi ālayattil Turkkai

*aṇṭamu naṭuṅkavaṉal koṇṭavaṭa lāḻit*
*taṇṭamaḻu cūlamoṭu cakkara milaṅka*
*maṇṭala melāmpukaḻa vāṉavar vaṇaṅkak*
*koṇṭaltavaḷ kōlavarai ceṉravaḷ vatintāḷ.*

## Turkkai in Lakṣmi's Temple

She then went to cloud-crowned Kōla Hill
Holding the mace that spat sparks
Like the Vaṭavai fire, the axe, the trident
And the discus, while all earthlings
Praised her, and the gods saluted.

**(துர்க்கையைத் தேவர் போற்றுதல்)**

633. **சத்திதிரி சூலிதிகழ் சாமளி கபாலி**
**நித்தியகல் யாணிதிரி நேத்திரி வராகி**
**உத்தமி மலர்த்திரு விடத்தினி னுவந்த**
**பத்தினி யெனக்கருள்செய் பார்வதி எந்நாளும்.**

எ-து. அப்படிக் கோலாசலத்துக்கு எழுந்தருளிய லோக சத்தியான துர்க்கையம்மனைச் சகல தேவர்களும் மகா ரிஷிகளும் களித்து ஆனந்தப் பரவசராய் விண்ணப்பம் செய்கின்றார்கள். வாராய் கவுரியென்றும், திரிசூலியென்றும், கபாலி என்றும், சாமளி என்றும், திரி நேத்திரி என்றும், வராகி என்றும், மயிட சம்மாரி என்றும், நித்திய கல்யாணி என்றும் அனந்த நாம தேயங்களையுடைய லோக ரக்ஷகியே! ஸ்ரீமகாலட்சுமி யினிடத்தில் வாசம் செய்கின்ற பதிவிரதா சிகாமணியாகிய பார்வதியே! எமது இஷ்டங்கள் எல்லாம் நிறைவேறத்தக்கதாய் அருள்புரிய வேண்டுமென்று பணிந்து பூசித்தார்கள் என்றவாறு. (19)

சத்தி - சக்தி - தேவர்கள் தனக்குக் கிரீடாபங்கம் செய்ய, அவர்களை வீர்ய நாசமடையச் சபித்துப் பின் கருணை செய்தவள். உயிர்களிடம் கொண்ட கருணையால் ஐந்தொழில் செய்ய ஐவகைப்பட்டு ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி, பராசத்தி எனப்பெயர் பெற்றவள்.

**துர்க்கை வரலாறு உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

## Turkkaiyait tēvar pōṟṟutal

*cattitiri cūlitikaḷ cāmaḷi kapāli*
*nittiyakal yāṇitiri nēttiri varāki*
*uttami malartiru viṭattiṉi ṉuvanta*
*pattiṉi yeṉakkaruḷcey pārvati ennāḷum.*

## The Gods Hail Turkkai

"O Cakti, the wielder of the trident,
Dark-hued, one who carries the skull,
Ever auspicious, the triple-eyed, Varāki,
The noble one, the Lady who is with Lakṣmi,
Pārvati! Grant me grace."
Thus the gods prayed.

# 35. முப்பத்தொன்றாவது
# காலநேமி வதை அத்தியாயம்

நெடுங்காலம் தவம்செய்து பெற்ற அஸ்திரம் முதலாகிய ஆயுதங்களைப் பறித்துக் கொண்டதையறிந்த காலநேமியானவன் பிரமனிடம் பெற்ற பிரம அஸ்திரத்தைப் பிரயோகித்துப் போர் செய்யத் தொடங்கினான். அதனால் அண்ட கோளங்கள் வெடித்தன. கடல்கள் வற்றின. திக்குயானைகள் கதறின. மலைகள் நொறுங்கின. கூற்றுவன் நடுங்கினான். அரங்கநாயகரும் தம் கணையை ஏவினார். இரண்டும் மோதி மிகுந்த கோரத்தை உண்டாக்கின. இறுதியாக அசுரனின் பிரம்மாஸ்திரமானது பிரமன் கையிலே சென்று சேர்ந்தது. ஆனால் அரங்கநாயகர் தொடுத்த கமலாஸ்திரமானது அரங்கநாயகரிடமே சென்று சேர்ந்தது. இதனால் அசுரன் பிரமனை வெறுத்தான். அசுரர்கூட்டங்கள் அழிவதைக்கண்டு மனம் நொந்தவனாய்ப் பரமசிவனை நினைந்து பாசுபதாஸ்திரத்தைத் தொடுத்தான். அது பிரமாஸ்திரத்தைப் போல மூவுலகையும் நடுங்கச் செய்தது. அதனால் அண்டகோளமும் வெடித்தது. காளிக் கூட்டங்களும், பூதகணங்களும் தோன்றி ஆடித்திரிந்தன. வீரபத்திரர், வயிரவர் போன்றவர்களும் தோன்றி ஆரவாரித்தார்கள். இவற்றையெல்லாமுணர்ந்த அரங்கநாயகரும் தமது பாசுபதஅஸ்திரத்தை ஏவ இரண்டும் எதிர்ந்தன. இறுதியாக அசுரனின் கணையானது பரமசிவனிடத்திலே சென்றடைந்தது. மற்றொன்று அரங்கநாயகரை அடைந்தது. உணர்ந்த அசுரன் பரமசிவன், தனது தபோபலம், தானதருமங்கள், மந்திரம், மந்திரவாள் யாவும் உதவாமற் போனது குறித்து வருந்தி அவற்றை வெறுத்துக் கூறினான்.

பிறகு தனது வில்லினை வளைத்துத் தாருகன் மீது பலகணைகளை ஏவி அவன் மார்பைத் துளைத்தான். தாருகன் அரங்கநாயகரிடம் முறையிட அதை அறிந்த அசுரன் மீண்டும் சினந்து அரங்கநாயகர் மீது சிஞ்சுமாரச் சக்கரத்தை ஏவினான். மிகவும் கொடூரமாய்த் தோன்றிய அச்சக்கரத்தில் நாராயண அஸ்திரங்கள், வேலாயுதங்கள், சூரியாஸ்திரங்கள் வருணாஸ்திரங்கள் போன்ற பல கணைக் கூட்டங்கள் தோன்றி விஷத்தைக் கக்கிச் சீறி வந்தன. அரங்க நாயகரும் அதற்கு இணையாகத் தன்னிடமிருந்த சிஞ்சுமாரச் சக்கரத்தை ஏவினார். இரண்டும் ஒரே திறமுடையனவாய் மோதின. இறுதியாக அவை இரண்டும் அரங்க நாயகரை வந்தடைந்தன. இதை அறிந்த அசுரன் பிரமன், சிவன், திருமால் ஆகிய மூவரையும் வெறுத்துப் பேசினான்.

இதற்கெல்லாம் காரணமான அரங்கநாயகரை இனி எதிர்க்காமல் விடலாகாது என முனிந்த அசுரன் தன் வாளை உருவிக்கொண்டு தேரினின்றும் குதித்து அரங்கநாயகரை நோக்கி வந்தான். அதை அறிந்த அரங்கநாயகர் தம் சிஞ்சுமாரச் சக்கரத்தை வீசினார். அது அரங்கநாயகரை மதியாத வரும், தேவர்களாகிய பயிருக்குக் களைகளாகத் தோன்றியவர்களுமாகிய அசுரர்களை அழிக்கக் கூடியதாய்ப் புறப்பட்டது. அதைத் துண்டிக்கக் கருதி வாளினை ஓங்கியவுடன் அச்சக்கரமானது அவ்வாளினைப் பிளந்து அவ் அசுரனின் தலையையும் துண்டித்தது. பின்பு மலை, காடு போன்ற இடங்களில்

ஒளித்திருந்த அசுரர்களை யெல்லாம் கருக்கி அழித்தது. பிறகு அச்சக்கரமானது பாதாள கங்கையில் மூழ்கிவந்து கோலாசல மலையில் பெருகி வரும் சக்கரத்தீர்த்தத்தில் மூழ்கி ஒளி விட்டு விளங்கியது.

அந்தச் சக்கரமானது ஆயிரந் திருநாமத்தை உச்சரித்துத் துதிசெய்து, அரங்கநாயகரின் திருவடிகளை மும்முறை வலம் வந்தது. அதன் மீது கருணை கொண்ட இறைவன் அதனைத் தன் கையிலே தாங்கிக் கொண்டார். அவரது கணைமாரியால் அசுரர்களின் குதிரைகள், யானைகள், தேர்கள், வச்சிரக்கவசங்கள், பாகர்களின் மார்புகள், கவசங்கள் போன்றவை துகள்களாயின. அரசர் பலர் ஒளிந்தனர். படைகள் பல அடங்கி ஒளித்தன. நாற்படைகள் பல அழிந்தன. இரத்த வெள்ளம் ஓடியது. அவ்வெள்ளத்தில் அசுரர்படைகளின் சிதறுண்ட உறுப்புகள் மிதந்தன. பிசாசு, கழுகு, கூளி, நரிகள், மோகினி, காளியின் பந்தம் போன்றவை பரந்து காணப்பட்டன. போர்க்களமே இரத்த வெள்ளத்தால் மூடப்பட்டு விட்டது. தலையற்ற உடல்கள் நின்று நடித்தன. அசுரர்பிணங்கள் அணைகளாயின. காளிக்கூட்டங்கள் அப்பிணங்களை எடுத்து அம்மானையாடின. பின்னலாய்க் கிடந்த குடல்களைக் காகங்களும் கழுகுகளும் பருந்துகளும் கண்டு இவை தூண்டிலோ வலையோவென்று ஐயுற்று மயங்கின.

**(காலநேமியின் சீற்றம்)**

**634.** **அந்தவர லாறதை யறிந்தஅசு ரேந்திர**
**னழன்றுகனல் பொங்கி யிடவே**
**சிந்தனை கலங்கிட மயங்கினன் மதித்தனன்**
**திரற்பதுமன் முன்ன மருளும்**
**விந்தைபயி லும்பிரம னற்படை யெடுத்தனன்**
**விரிஞ்சனை வழுத்தி விடவே**
**வந்தது கனற்கணை பிறைக்கணை கதிர்க்கணை**
**வயங்கிட விரிந்த ததுவே.**

எ-து. அப்படியாக நெடுங்காலம் தவம் செய்து பேறு பெற்ற சத்தி திரிசூலம் முதலாகிய அஸ்திரங்களைத் துர்க்கையானவள் சமர்க்களத்திலே எடுத்துக் கொண்டு போன வரலாற்றை அறிந்த அசுரேந்திரனான காலநேமியானவன் அக்கினிச் சுவாலைகள் மயிர்க்காறோறும் சொலிக்கவும், மீசைகள் படபட வென்று துடிக்கவும், வக்கிர தந்தபந்திகள் நற நறவென்று கடிக்குந்தோறும் விஷத்தாரைகளைப் பொழியவும், புசங்களானவை துடிக்கவும், கோபித்தவனாய் மறுபடியும் மதி மயங்கிக் கலங்கி ஆலோசித்தவனாய்ச் சாகச வல்லமையுடைய பிரமாவானவர் முற்காலத்தில் அனுக்கிரகம் செய்யாநின்ற அதிகப் பிரபாவத்தோடும் கூடிய பிரமாஸ்தரத்தை எடுத்து மந்திராவாகனம் செய்து பிரயோகம் செய்தான். அதிலிருந்து சாகோபசாகையாய் வந்து விரிந்த அக்கினிக் கணைகளும், பிரசண்ட

மாருதக் கணைகளும், அர்த்த சந்திர பாணங்களும், சூரியாஸ்திரம் முதலாகியதெல்லாம் கோடானுகோடியாய் உண்டாகத்தக்கதாக கோர ரூபமாய்ப் பிரவேசித்தது. பிரமாஸ்திரம் என்றவாறு. (1)

அழன்று - கோபித்து. விரிஞ்சன் - பிரமன்.

**உரை** - மயிர்க்காறோறும் - மயிர்க்கால் + தோறும். சாகோபசாகை - சாகை + உபசாகை - சாகை - பிரிவு.

## Kālanēmiyin ciṟṟam

*antavara lāṟatai yaṟintaacu rēntira*
*ṉalaṉṟukaṉal poṅki yiṭavē*
*cintaṉai kalaṅkiṭa mayaṅkiṉaṉ matittaṉaṉ*
*tiraṟpatumaṉ muṉṉa maruḷum*
*vintaipayi lumpirama ṉaṟpaṭai yeṭuttaṉaṉ*
*viriñcaṉai vaḻutti viṭavē*
*vantatu kaṉaṟkaṇai piṟaikkaṇai katirkkaṇai*
*vayaṅkiṭa virinta tatuvē.*

## XXXV. The Killing of Kālanēmi

### Kālanēmi's Fury

When the Acura king learnt of all this,
He became angry and spouted fire.
He felt confounded, swooned.
Coming to senses, he took out
The wondrous Piramaṉ missile given to his
By the lotus-resident god.
He prayed to Piramaṉ and released it.
The missile immediately bloomed forth
As fiery arrows, crescents and the sun's rays.

(பிரம கணையால் ஏற்பட்ட அழிவு)

635. கோளகை வெடித்தன கடற்கரை வறண்டன
கொடுங்கரி நடுங்கி யயர
வாளது பிறந்தவட வைக்கனலை நுங்கியிட
வாளமது தூளி படவே

தோளதனில் நீளுலகைத் தாங்கியவர் மாமதி
துளங்கியயர் வோடு துயர
நாளது வளர்ந்துநுக ரந்தக னடுங்கிவெயர்
கொள்வதுவு நண்ணி யதரோ.

எ-து. இப்படிப் பிரவேசித்த கோரமாகிய பிரமாவின் கணையினாலே அண்ட கோளங்க ளெல்லாம் படீலென்று வெடித்தன. பெரும் பாற்கடல் முதலாகிய கடல்களெல்லாம் வரண்டு போய் விட்டன. அயிராவதம் முதலாகிய அஷ்ட கசங்களும் துதிக்கையை மேலெடுத்துக் கொண்டு கதறிக் கலங்கி ஆயாசப்பட்டன. அக்கணையில் பிறந்த வாளானது வடவாமுகாக்கினியை எல்லாமெடுத்து முழுங்கிற்று. சக்கிரவாள கிரியானது தூளிப்படல மாசசுது. ஒரு தோளினாலே இவ்வுலகைத் தாங்காநின்ற அரசர்களுடைய மதியானது மருண்டு தயங்கி பிரமித்து ஆயாசத்தையடைந்து துயரப்பட்டது. நாளாகிய அவரவர் ஆயுசாகிய வம்பாரத்தைச் சூரியனாகிய அளவு காற்றாலே அளந்து உயிரை முடிக்காநின்ற அருளில்லாத கூற்றுவனு மிக்கணையின் குரூரத்தால் நடுங்கி வேர்வை அரும்பத்தக்கதாகப் பிரவேசித்தது அசுரகுல சூடாமணியின் கணை என்றவாறு. (2)

கோளகை - அண்டகோளம்; கோளம - உண்டை. கரி - யானை வாளம் - சக்கரவாளகிரி. வெயர் - வியர் - வியர்வை.

## Pirama kaṉaiyāl ēṟpaṭṭa aḻivu

*kōḷakai veṭittaṉa kaṭaṟkarai vaṟaṇṭaṉa*
*koṭuṅkari naṭuṅki yayara*
*vāḷatu piṟantavaṭa vaikkaṉalai nuṅkiyiṭa*
*vāḷamatu tūḷi paṭavē*
*tōḷataṉil nīḷulakait tāṅkiyavar māmati*
*tuḷaṅkiyayar vōṭu tuyara*
*nāḷatu vaḷarntunuka rantaka ṉaṭuṅkiveyar*
*koḷvatuvu naṇṇi yatarō.*

## The Havoc Caused by the Piramaṉ Missile

The universe cracked. The beaches
Grew dry. The elephants of directions
Shuddered and grew very weak.
The swords from the missile devoured
The Vaṭavai fire. The mountain
Of Cakkaravāḷa was pulverised.
The minds of kings who guard the worlds

Grew confounded. Even Yama
Who brings to an end the days of men,
Shuddered and broke out into a sweat.

(இருவர் கணைகளும் மோதுதல்)

636. இப்படி வருந்திட வரும்பிரம னற்படை
யியன்றதிறல் கண்ட வியமான்
கைப்படியு மப்பிரம னற்படை விடுத்திட
கனற்கொடு கனன்று கடுகி
முப்புவனம் வெப்புற முடித்தபி னெதிர்த்தது
முகுர்த்தமதி னொன்றின் முடுகி
யெப்புவன மெங்கணு மியன்றசமர் செய்தன
விளைக்கில் கணைக்கி லதரோ.

எ-து. இவ்விதமாய்த் தன் சேனைக்கிரங்கி வருத்தப்பட்டு வருந்திய காலநேமியான அசுரேந்திரனானவன், மறுபடியும் பூமியில் வந்து சேர்ந்து அரங்க நாயகன் பேரில் பிரமாவின் மந்திரத்தை உச்சரித்தவர் வர பாலனமாகக் கொடுத்த பிரமாஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணி ஆர்ப்பரித்தான். அந்த அஸ்திரமானது அனேகம் குரூரமாகி வருந்திறத்தைக் கண்ட சமானியனாகிய சர்வக்கியனானவர் தனது கராம்புயத்தில் படிந்திருக்காநின்ற பிரமாஸ்திரத்தை எதிராய் விடுத்திட அக்கினி சுவாலைகளாலே சுவாலித்துக் கோபித்து விடங்களைக் கக்கிக் கொண்டு பிரவேசித்து, திரிபுவனங்களும் தணலாய் வெப்பப்பட முடிவு செய்து, ஒன்றோடொன்று இருவர் திறத்துப் படையும் எதிர்த்தன. ஒரு முகுர்த்தமளவில் திரிபுவனங்களும் சக்கரா காரமாய்ச் சுழன்று தாக்கிச் சமர்செய்தும் ஒன்றுக்கொன்று இளையாததாயும் யுத்தங் களையாததாயும் கோரத்தை விளைவித்தன என்றவாறு. (3)

வியமான் - ஒப்பற்றவன். முகுர்த்தம் - முகூர்த்தம் - இரண்டு நாழிகை நேரம்: மூன்றே முக்கால் நாழிகை எனவும் கூறுதல் உண்டு.

**உரை** - கண்டசமானியன் - கண்டு + அசமானியன்: அசமானியன் - ஒப்பு இல்லாதவன். சமானம் - ஒப்பு, உவமை.

## Iruvar kaṉaikaḷum mōtutal

*ippaṭi varuntiṭa varumpirama ṉaṟpaṭai*
*yiyaṉṟatiṟal kaṇṭa viyamāṉ*
*kaippaṭiyu mappirama ṉaṟpaṭai viṭuttiṭa*
*kaṉaṟkoṭu kaṉaṉṟu kaṭuki*

*muppuvaṉam veppuṟa muṭittapi ṉetirttatu*
*mukurttamati ṉoṉṟiṉ muṭuki*
*yeppuvaṉa meṅkaṇu miyaṉṟacamar ceytaṉa*
*viḷaikkila kaṇaikki latarō.*

## Missiles Clash

Watching the Piramaṉ missile come thus
Destroying everything with its power,
The Lord also released the Piramaṉ missile
In his hand. It went speedily spreading
Fiery havoc, scorching the three worlds.
Then it went to attack the enemy.
In a short while, all over the earth
The two battled spreading destruction.

(காலநேமியின் கணை பிரமனிடம் சேர்தல்)

637. இவ்வகை யருஞ்சம ருஞற்றிய சுரேசன்விடு
மித்திற லியற்ப டைகடான்
செவ்விதிகழ் வாரிச மமர்ந்ததிரு நான்முகன்
திருக்கர மமர்ந்த செயலாற்
பவ்வமதின் யோகம துணர்ந்தபர மன்கையில்
படர்ந்தன பயின்ற பதுமன்
திவ்விய நெடுங்கணை விறற்செய லறிந்தனன்
திகழ்ந்தஅசு ரேச பதியே.

எ-து. இந்தப் பிரகாரமாய் அசுர ராசேந்திரனான காலநேமியால் விடுக்கப்பட்ட இரக்கமில்லாத இயல்பையுடைய பிரமாஸ்திரமானது, சிறப்பமைந்த தாமரைக்கமல பீடத்தின் எழுந்தருளியிராநின்ற நான்கு திருமுகங்களுடைய பிரமாவின் கரகமலங்களிலே போய்ச்சேர்ந்த செயலினாலே திருப்பாற்கடலிலே அனந்த விமான சேகரராய் அறிதுயில் அமர்ந்த பரமன் கையிலே மீட்டும் வந்தமைந்தது திவ்வியமாகிய பிரமாஸ்திரமானது. தனது கணையின் செய்கையும், அரங்கநாதன் கணையின் செய்கையும் அறிந்தான் வலியால் மிகுந்த அசுரகுல சூடாமணி! என்றவாறு. (4)

உஞற்றுதல் - செய்தல். படைகடான் - படைகள் + தான். வாரிசம் - தாமரை. பவ்வம் - பௌவம் - கடல்

## Kālanēmiyiṉ kaṇai Piramaṉiṭam cērtal

*ivvakai yaruñcama ruñaṟṟiya curēcaṉviṭu*
*mittiṟa liyaṟpa ṭaikaṭāṉ*
*cevvitikaḷ vārica mamarntatiru nāṉmukaṉ*
*tirukkara mamarnta ceyalāṟ*
*pavvamatiṉ yōkama tuṇarntapara maṉkaiyil*
*paṭarntaṉa payiṉṟa paṭumaṉ*
*tivviya neṭuṅkaṇai viṟaṟceya laṟintaṉaṉ*
*tikaḻntaacu rēca patiyē.*

## Kālanēmi's Missile Reaches Piramaṉ

The Piramaṉ missile that had been aimed
By the embattled Acuraṉ, returned back
To the handsome hand of Piramaṉ
Seated on the lotus; the missile
Sent by the Supreme returned to him
As he lay in yogic sleep in the ocean.
The Acura king became fully aware
Of the movements of the missiles.

(காலநேமி பாசுபதக் கணை எடுத்தல்)

638. பிரமனை வெறுத்தன னினைத்திலன் மறுத்தனன்
பிறந்தஅசு ரேசர் கஎெளலா
நிரந்தர மதித்திவர் வரத்தினை [1]யடைந்தவர்க
ணின்றில ரிறந்த பெயரோ
பரந்தவுல கத்திடை துகட்டொகை கணக்கிலது
காரண மெனக்க ருதினான்
சுரந்தருள்செ யீசனை நினைந்தபின் மதித்தனனல்
தூயபசு பதிக ணையரோ.

எ-து. தனக்கு இவ்விதமாகிய வரபாலனத்தைக் கொடுத்த பிரமாவை மிகவும் வெறுத்தான். அதுவன்றியும் அவருடைய மந்திரத்தையும் நினையாதவனாய் மறுத்து விட்டான். முன் பிறந்த வலியையுடைய அசுரேசர் கூட்டங்களெல்லாம் நிரந்தரமாகிய நாளுமழியாத வரபாலனத்தைக் கொடுக்கப்பட்டவர்கள் இவர்களென்று மதித்துத் தவம் செய்கின்ற பேர்கள் அந்நிலையினில்லாமல் இறந்தவர்கள் தொகையைக் கணக்கிடில்

பரப்பாகிய இவ்வுலகத்திலே அணுக் கூட்டங்களை எண்ணக்கூடாத காரணமாய் நம்முடைய அசுரர் கூட்டங்களுடைய வாழ்வெல்லாம் தொலைந்து போச்சுதென்று மதித்துக் கலங்காத மனது கலக்கம் கொண்டவனாய் அருளைச் சுரக்காநின்ற பரமசிவனை நினைத்தவனாய்ப் பாசுபத மந்திரத்தைப் பலகாலும் உச்சரித்தெடுத்தான் பாசுபதாஸ்திரம் என்றவாறு. (5)

துகட்டொகை - துகள் + தொகை; துகள் - தூசு, புழுதி, அணு.

பா.வே. - 1. நினைத்தவர்.

## Kālanēmi pācupatak kaṇai eṭuttal

*piramaṉai veṟuttaṉa ṉiṉaittilaṉ maṟuttaṉaṉ*
*piṟantaacu rēcar kaḷelā*
*nirantara matittivar varattiṉai yaṭaintavarka*
*ṉiṉṟila riṟanta peyarō*
*parantavula kattiṭai tukaṭṭokai kaṇakkilatu*
*kāraṇa meṉakka rutiṉāṉ*
*curantaruḷce yīcaṉai niṉaintapiṉ matittaṉaṉal*
*tūyapacu patika ṇaiyarō.*

## Kālanēmi takes up the Pācupata

He now hated Piramaṉ. He rejected the name
That all the Acuras born till then
Had been great and had received boons.
They were too many even for a count.
He remembered the innumerable heroes
Of the Acura race. He wondered what to do.
Meditating upon Civaṉ the compassionate,
He lifted up the pure Pācupata Missile.

(பாசுபதக் கணை செய்த அழிவு)

639. எடுத்தன னருச்சனைசெய் தேத்தினன் பரத்தினை
யிறைஞ்சினன் மந்தி ரமெலாந்
தொடுத்தபின் விடுத்திடுமம் மறைகள்சொலு மப்படை
துரந்திட துணிந்த வவனு

**மடுத்தன கடாகமும் வெடித்தன பொரிந்தன**
**மயங்கிய மறிந்த கடறான்**
**துடித்தன உயிர்த்தொகை துளங்கின குலக்கிரி**
**துகட்பட திசைக்க ளிறெலாம்.**

எ-து. அந்தப் பாசுபதக் கணையை எடுத்தான். மந்திராவாகனம் செய்து அர்ச்சித்தான். தூப தீபம் கொடுத்தான். பாசுபத மந்திரத்தினாலே பலகாலும் வழுத்தினான். பரமசிவனை இறைஞ்சினான். சப்தகோடி மகா மந்திரங்களெல்லாம் உச்சரித்தான். அதன்பின்பு அக்கணையை விடுத்தான். வேத வாக்கியங்களிலே முக்கியமாய் எடுத்துச் சொல்லுகின்ற அந்தவர பஞ்சரமாகிய சிலீமுகமானது திரிபுவனத்தையும் அக்கினிச் சுவாலையாய் விழுங்கினதாய், அண்டகடாகங்க ளெல்லாம் படீலென்று வெடிக்கத்தக்கதாய்ச், சலசமூர்த்தியாகிய பெரும் புறக்கடல் முதலாகிய கடலையெல்லாம் வறளச் செய்ததாய், திரிபுவனத்து உயிர்களெல்லாம் துடிப்பச் செய்வதாய், மகமேரு முதலாகிய கிரிகளெல்லாம் நடுங்கத்தக்கதாய், அயிராவதம் முதலாகிய அஷ்டகசங்கள் எல்லாம் தூளிப்படலப் படத் தக்கதாய்ப் பிரவேசித்தது பாசுபதாஸ்திரம் என்றவாறு. (6)

பரம் - பரம்பொருள்: இறைவன். கடாகம் - அண்டகடாகம். கடறான் - கடல் + தான். துகட்பட - துகள் + பட.

உரை - மந்திராவாகனம் - மந்திரம் + ஆவாகனம்; ஆவாகனம் - பலிகொடுத்தல்; மந்திரத்தை ஆவாகனம் செய்தல்.

## Pācupatak kaṉai ceyta aḻivu

*eṭuttaṉa ṉaruccaṉaicey tēttiṉaṉ parattiṉai*
*yiṟaiñciṉaṉ manti ramelāṉ*
*toṭuttapiṉ viṭuttiṭumam maṟaikaḷcolu mappaṭai*
*turantiṭa tuṉinta vavaṉu*
*maṭuttaṉa kaṭākamum veṭittaṉa porintaṉa*
*mayaṅkiya maṟinta kaṭaṟāṉ*
*tuṭittaṉa uyirttokai tuḷaṅkiṉa kulakkiri*
*tukaṭpaṭa ticaikka ḷiṟelām.*

## Pācupatam Causes Destruction

Lifting up the missile, he worshipped it
And prayed to the Supreme.
After reciting scriptural incantations,
He released the missile. Destruction
Followed immediately. The universe cracked.

Everything caught fire. The vast sea
Became dry. Living beings shuddered.
The great mountains shook
Dust rose in all directions.

(பாசுபதத்தால் அண்டகோளம் நடுங்குதல்)

640. ஆதவ னுட்கிட மாமதி நெக்கிட
வாரிருள் பக்கமெலாம்
போதவ னற்படை யாழிகள் கக்கிட
போதன் முதற்படைகள்
சீதர னுக்கிர வாளத்தைச் சித்திர
சேமநி திப்படைகள்
கோதறு முத்தரை வேல்கள் கொதித்தெழ
கோளகை நெக்கிடவே.

எ-து அசுரேந்திரனாகிய காலநேமி என்கின்ற அசுர சூடாமணியானவன் விட்ட பாசுபதக் கணையானது பிரவேசித்த மாத்திரத்தில் சூரியனுடைய கிரண சமூக அக்கினிகளெல்லாம் வெதும்பப்பட்டு நெக்குண்டு போகவும், நிறைந்த இருள் பரந்த தீவாந்திரங்களெல்லாம் அனேக அக்கினிக்கணைகளானவை பிரவேசிக்கவும், சக்கராயுதங்கள் அனேகங்களை உண்டாக்கியும், பிரமாஸ்திரம் முதலாகிய அஸ்திரங்களையும், சீதரன் சாத்வீக குணத்தினையுடைய நாராயணனது உக்கிரவாள்களும், சித்திர விசித்திரமாகிய பழமையாய் இருந்தும், பிரகாசம் மழுங்காத சப்த கோடி மந்திரங்களால் பிரயோகிக்காநின்ற கணைகளும், குற்றமற்றிராநின்ற மூன்று சிரசினையுடைய திரிசூலங்களானது அக்கினிக் கணைகளைக் கொப்பளித்துக் கொண்டு உண்டாகவும், இத்தியாதி அஸ்திரங்களுக்கும் காரணமாகிய பாசுபதத்தால் அண்டகோளகை வெடித்தது என்றவாறு. (7)

உட்கிடுதல் - நடுநடுங்குதல். போதவனற்படை - போத + அனற்படை. போத - போக. போதன் - பிரமன்.

## Pācupatattāl aṇṭakōḷam naṭuṅkutal

*ātava ṉuṭkiṭa māmati nekkiṭa*
*vāriruḷ pakkamelām*
*pōtava ṉaṟpaṭai yāḻikaḷ kakkiṭa*
*pōtaṉ mutaṟpaṭaikaḷ*
*cītara ṉukkira vāḷattaic cittira*
*cēmani tippaṭaikaḷ*
*kōtaṟu muttarai vēlkaḷ kotitteḻa*
*kōḷakai nekkiṭavē.*

## Pācupatam Sets the Universe Shuddering

The sun shuddered, the moon was crushed,
And darkness curtained all space.
Innumerable arrows were spat by the missile:
Pirama arrows, the terrible Sritara-swords,
And colourful arrows of ancient make.
Faultless triple - pointed lances
Rose scorching to crush the universe.

(பூதகணங்களின் ஆர்ப்பாட்டம்)

641. காளிகள் பக்கமெ லாமதில் சுற்றிட
காரிய நற்கணையின்
வாளி தொடுத்திட நேரல ருட்கிட
வாயு வெழுச்சிபெறத்
தோளிணை கொட்டி கணாதிபர் மிக்கநல்
தோமற தித்திமியென்று
ஆளி முகத்தின ராடினர் சக்கர
மாமென சுற்றியரோ.

எ-து. காளிக்கூட்டங்களானவர்கள் கோடானு கோடியர்கள் சக்கரங்கள், திரிசூலங்கள், தண்டங்கள் முதலாகிய ஆயுதங்களைத் தாங்கிப் பிரவேசித்துச் சூழ்ந்து, கூத்தாடி மீட்டும் வில்லில் கணை பூட்டி எய்யவும், சத்திராதிகளெல்லாம் திடுக்கிட்டுப் பயந்து நடுங்கவும், பிரசண்ட மாருதக் காற்றானது உண்டாகவும், இரண்டு புசங்களையும் கொட்டிக் கணாதிபதிகளில் மிகுந்த வலியினையுடையவர்கள் குற்றமற்ற தித்திமி என்று சதியோடும் கூடி நடிக்கவும், ஆளி முகத்தையுடைய பல திரண்ட கூட்டங்கள் குலாலன் சக்கிரா காரமாய் ஆடித்திரிந்தன பூதகணங்கள் என்றவாறு. (8)

நேரலர் - பகைவர். கணாதிபர் - கணநாதர்; கூட்டத்தினருள் முதல்வர். ஆளி - சிங்கம். தோமற - குற்றமற. தோம் - குற்றம்.

## Pūtakaṇaṅkaḷin ārppāṭṭam

*kāḷikaḷ pakkame lāmatil cuṟṟiṭa*
*kāriya naṟkaṇaiyiṉ*
*vāḷi toṭuttiṭa nērala ruṭkiṭa*
*vāyu veḻuccipeṟat*

*tōḻiṉai koṭṭi kaṉātipar mikkanal*
*tōmaṟa tittimiyeṉṟu*
*āḷi mukattiṉa rāṭiṉar cakkara*
*māmeṉa cuṟṟiyarō.*

## The Spirits Clamour

The Kāḷi spirits encircled it
Brandishing weapons and aiming arrows.
The enemy grew wan, the commanders
Of the Spirits slapped their shoulders
And danced faultlessly Tittimi
Ali-faced spirits danced
And moved in circles.

(அரங்கநாயகரின் எதிர்க்கணை)

642. [1]காளிகள் கூளிகள் ஞாளியி னேறிய
வயிரவ தன்கணையு
மீளிக ளாகிய வீரர் விளங்கிய
விஞ்சை வியன்புதுமைத்
தோளியர் வீர மெலாமது கொண்டிடு
துங்க வரங்கர்தெரிந்
தாளிகள் கோடி பிறந்திடு மக்கணை
யரியும் விடுத்தனனால்.

எ-து. இப்படி அனேகமாகிய காளியர் கூட்டங்களுக்கு நாயகராகிய வீரபத்திரர் கூட்டங்கள், ஞமலி வாகனத்திலே ஏறிய வயிரவர் கூட்டங்கள், வில்லில் தொடுக்காநின்ற குரூரமாகிய கோர அம்புகளையும் நல்ல பருவத்தோடும் கூடிய வீராதிவீரர்கள், சூராதி சூரர்கள் முதலாகிய பேர்கள் கதாயுதத்தைச் சுழற்றுகின்ற வித்தையினையும், சக்கரங்களை உருட்டுகின்ற வலியினையும், வேலாயுதத்தைப் பிரயோகிக்காநின்ற புதுமையினையும், முள் வேலினை வீசுகின்ற அதிசயத்தினையும், வாளை விதிர்க்காநின்ற செயத்தினையும், எறிவலயத்தை எறிகின்ற கோரத்தினையும், திரிசூலங்கள், கண்ட கோடரிகளைப் பிரயோகிக்கா நின்ற வல்லபத்தினையும் கண்டார். அவர் யாரென்றால் புசபலபராக்கிரமத்தை உடைய அசுர வீரர்களையெல்லாம் திரிகாலத்திலும் பிளந்து செயத்தினை உடைத்தாகிய அரங்கநாயகரானவர் ஆயிரங்கோடி திங்கள்கள் முதலாகியதெல்லாம் தான் தொடுக்கா நின்ற பாசுபதத்தினாலே பிறந்திடத் தக்கதாய்ப் புண்டரீக புருடோத்தமனாகிய அரியவரானவர் கோரமாய் வருகின்ற பாசுபத கணைக்கு எதிராய் விடுத்தார் என்றவாறு. (9)

ஞாளி - நாய். மீளி - திண்மையுடையவன்.

**உரை** - ஞமலி - நாய்.

**பா.வே.** - 1. காளி மணந்தவர்.

## Araṅkanāyakariṉ etirkkaṇai

*kāḷikaḷ kūḷikaḷ ñāḷiyi ṉēṟiya*
*vayirava taṉkaṇaiyu*
*mīḷika ḷākiya vīrar viḷaṅkiya*
*viñcai viyaṉputumait*
*tōḷiyar vīra melāmatu koṇṭiṭu*
*tuṅka varaṅkarteriṉ*
*tāḷikaḷ kōṭi piṟantiṭu makkaṇai*
*yariyum viṭuttaṉaṉāl.*

## Araṅkaṉ's Counter-missile

Watching the Kāḷi spirits, the Kūḷi,
The missiles of Vairava riding the dog,
And superhuman and strong heroes
Who now appeared with strange shoulders
Make such war, Araṅkaṉ released the missile
That gives rise to crores of Yāḷi animals.

### வேறு

### (இருவர் கணைகளும் போரிடுதல்)

643. கடல்சக்கர கிரிதிக்கினுஞ் சலியாதமர் கலந்தங்
கடல்மிக்குள புவனத்தினு மடைந்தேயம ராற்றித்
திடமிக்குள படையானவை திரிதேவர்க ளுலகுந்
தடையற்றிடச் சென்றேசமர் செய்தேதளர் கிலதாய்.

எ-து. இருவர்கள் விட்ட பாசுபதக் கணைகளும் ஒன்றோடொன்று எதிர்ந்து சப்த சாகரங்களினும், சக்கரவாள கிரியினும் திக்குத்திகாந்தங்களிலும் ஒன்றுக்கொன்று சலியாமல், சக்கரங்களொடு சக்கரங்கள் மலைந்து தண்டங்களோடு தண்டங்கள் தாக்கியும், சூலங்களோடு சூலங்கள் தாக்கியும், வேல்களோடு வேல்கள் தாக்கியும், பிரசண்ட மாருதத்தோடு பிரசண்ட மாருதந்தாக்கியும், அக்கினிக் கணைகளோடு அக்கினிக் கணைகள் தாக்கியும், இவ்விதமாகச் சலியாத ஆயுதங்களைக் கலந்து செய்து வலியையுடைய திரிபுவனங்களிலேயும் சென்று சமர் செய்தும், இளைப்பு, களைப்பு, தளர்ச்சி இல்லாததாய் இருந்தன இருதிறத்தார் விட்ட கணையும் என்றவாறு. (10)

## Vēṟu

## Iruvar kaṇaikaḷum pōriṭutal

*kaṭalcakkara kiritikkiṉuñ caliyātamar kalantaṅ*
*kaṭalmikkuḷa puvaṉattiṉu maṭaintēyama rāṟṟit*
*tiṭamikkuḷa paṭaiyāṉavai tiritēvarka ḷulakun*
*taṭaiyaṟṟiṭac ceṉṟēcamar ceytētaḷar kilatāy.*

## The Missiles Clash

The powerful missiles clashed impetuously
In the ocean, on the Cakkaravāḷa Mountain,
In the directions and on the earth;
The missiles of super power went further
Into the triple worlds of gods
Without hindrance and fought there as well.

(பாசுபதக் கணை சிவபெருமானை யடைதல்)

644. சடையான்கையி னொருமாகணை தணந்தேயவ ணடைந்த
படையாழியன் கையின் மற்றொரு கணையும்படர்ந் தனவால்
தடையாவையு மிலதாங்கணை தணந்தேகரந் திடுதல்
உடையானசு ரேசன்னதைக் கண்டேயுறங் குற்றான்.

எ-து. ஆயிரத்தெட்டு மாற்றுச் சொர்ண மயமாகிய சடாபார வட்டத்தினை உடைய பரமசிவன் கையில் அசுரேந்திரன் விட்ட பாசுபதக் கணையானது போய்ச் சேர்ந்தது. திரு ஆழிப்படையாகிய சக்கரத்தையுடைய அரங்கநாயகனது கராம்புயத்தில் மற்றொரு கணை போய்ச் சேர்ந்தது. இப்படித் தடைபடாத வீரத்தைச் செலுத்துகின்ற பாசுபதக் கணையானது தன்னைவிட்டு நீங்கிச் சிவன் கையில் போய் ஒளிந்ததைக் கண்ட அசுரேந்திரனாகிய காலநேமியானவன் பார்த்து நன்னயமாய் எதிர்நிற்கின்ற அரங்கநாதன் வீரத்திற்கு இரங்கி விதியை நினைந்து உறக்கம்பட்டுக் கலங்கி மெலிந்தான் என்றவாறு. (11)

சடையான் - பரமசிவன் கரந்திடுதல் - ஒளித்தல்.

## Pācupatak kaṇai Civaperumāṉai yaṭaital

*caṭaiyāṉkaiyi ṉorumākaṇai taṇantēyava ṇaṭainta*
*paṭaiyāḻiyaṉ kaiyiṉ maṟṟoru kaṇaiyumpaṭarn taṉavāl*
*taṭaiyāvaiyu milatāṅkaṇai taṇantēkaran tiṭutal*
*uṭaiyāṉacu rēcaṉṉataik kaṇṭēyuṟaṅ kuṟṟāṉ.*

## The Pācupatam Returns to Civan̲

One superb missile reached the hand
Of Civan̲; the other returned to the hand
Of the discus-wielder, Nārāyaṇan̲.
Watching the missile leave him
And hide itself, the Acura king
Grew disheartened.

(காலநேமியின் வெறுப்பு)

645. படையாவையும் வெறுத்தான்பினும் பரமன்றனை வெறுத்தான்
தடையானதை வெறுத்தான்செய்த தவந்தன்னையும் வெறுத்தான்
கொடையாவையும் வெறுத்தான்கொடுங் கொடுவாளினை வெறுத்தான்
[1]தொடையார்தும்பை வெறுத்தான்வினைத் தொகைதன்னையும் வெறுத்தான்.

எ-து. இப்படியாக யுத்தம் செய்கின்ற சமயங்களில் தான் வரம்பெற்ற பாசுபதம் முதலாகிய அஸ்திரங்களை யெல்லாம் வெறுத்து, அந்த அஸ்திரங்களுக்கு அதிதேவதையாகிய பரமசிவனையும், தான் செய்த தபோபலங்களையும், தான தர்மங்களையும், தன்னுடைய மந்திரவாளினையும் வெறுத்தும், இந்தச் சமயங்களில் ஒன்றும் உதவியில்லாமல் போனதைக் குறித்துக் கூறினான் காலநேமி என்றவாறு. (12)

தொடையார்தும்பை - தும்பைத்தொடை; தும்பை மலரால் ஆன மாலை.

பா.வே. - 1. தொடையானதும் வெறுத்தான்.

## Kālanēmiyin̲ ver̲uppu

*paṭaiyāvaiyum ver̲uttān̲pin̲um paraman̲r̲an̲ai ver̲uttān̲*
*taṭaiyān̲atai ver̲uttān̲ceyta tavantan̲n̲aiyum ver̲uttān̲*
*koṭaiyāvaiyum ver̲uttān̲koṭuṅ koṭuvāḷin̲ai ver̲uttān̲*
*toṭaiyārtumpai ver̲uttān̲vin̲ait tokaitan̲n̲aiyum ver̲uttān̲.*

## Kālanēmi's Frustration

He hated all the missiles; he hated
The Supreme; he hated the manner
In which they had become useless;
He hated the austerities he had done;

He hated charity, hated his own sword,
He hated the *tumpai* garland
And hated all his evil past.

## வேறு

### (தேரோட்டி தாருகன் புண்படுதல்)

646. கனமுற் றரக்கர்பதி கவினுற்ற கணைகள்பல
கதமிக்க வலவன் மரும
மனநெக்க வுதிரமொடு புழைபட்டி டப்பெருகப்
பரியைத் துதிப்ப மதியாப்
பனகத் திறத்தவணைப் பகையைப் படுக்கவொரு
பருதித் திறத்த பகழி
நினைவுற் றெடுத்துநர கரியைத் துதித்ததனை
நிமிடத்தின் விட்ட னனரோ.

எ-து. கனதை பொருந்திய அசுரகுல சூடாமணியாகிய காலநேமியானவன் அழகாகிய பல கணைகளை வில்லில் பூட்டிக் கோபக் குரோத மிகுந்தவனாய் அரங்கநாயகருடைய இரதத்தை நடத்தப்பட்ட தாருகனுடைய மார்பகத்தைப் பல துவாரப்படத்தக்கதாக விட்டுத் துளைத்தான். அதனாலே மனம் நெக்குண்டு உருகினவனாய் அரியாகிய நாராயண மூர்த்தியைக் குறித்து என்னையனே! இவ்விதமாக அசுர னென்மார்பகத்தைத் துளைக்க அதனால் உதிரவெள்ளம் பெருகவும், பார்த்தும் பாராதவரைப்போல அவனைச் சம்மாரம் செய்யாமலிருப்பது உமக்குத் திருவிளையாடலோ என்கின்ற மொழியைக் கேட்ட அசுரேந்திரனானவன், மறுபடியும் சீறிக் கோபித்து சேஷசாயியாகிய அரங்க நாயகரைச் சம்மரிக்க நினைத்து அனேக வீராதி வீரருடைய உயிரினையும் உண்டு கைப்படிந்த திறமுள்ள நரசிம்மமூர்த்தியைத் துதித்துச் சிஞ்சுமாரச் சக்கரத்தை ஒரு நிமிடத்திலே விட்டு ஆர்ப்பரித்தான் என்றவாறு. (13)

வலவன் - தேர்ப்பாகன். மர்மம் - உயிர்நிலை, மார்பு. பருதித்திறத்த பகழி - சூரியனை நிகர்த்த ஒளிமிக்க அம்பு; நரகரி - நரஹரி - நரசிங்கம். சேஷசாயி - திருமால்.

## Vēṟu

### Tērōṭṭi Tārukaṉ puṇpaṭutal

*kaṉamuṟ ṟarakkarpati kaviṉuṟṟa kaṇaikaḷpala*
*katamikka valavaṉ maruma*
*maṉanekka vutiramoṭu puḻaipaṭṭi ṭapperukap*
*pariyait tutippa matiyāp*

*panakat tirattavanaip pakaiyaip patukkavoru*
*parutit tiratta pakali*
*ninaivur retuttunara kariyait tutittatanai*
*nimitattin vitta nanarō.*

## The Charioteer Tārukan Hurt

The Acura king now full of fury
Aimed a powerful missile to pierce
The chest of the charioteer.
With blood flowing and heart melting,
The charioteer prayed. In a minute,
The Acura released a missile at Arankan
With a prayer to the Man-Lion.

**(சிஞ்சுமாரச் சக்கரத்தை ஏவுதல்)**

**647. கரியைத் துரத்திகட லதனைச் சுவற்றிபல**
**கனலைத் தருக்கி கவினா**
**மரியைத் துரத்தியடன் மலையைப் பொடித்துநிக**
**ழகிலத்தை யட்ட பொழுதே**
**பருதிப் பெயர்க்கடவுள் மதியுற்ற நற்கதிர்கள்**
**பசுபுத்திர பக்க மதெலா**
**நெரியத் தகர்த்துவட வனலைப் பொடித்துநிகழ்**
**நெடுவுக்கிர சக்கர மெனவே.**

எ-து. அந்தச் சிஞ்சுமாரச் சக்கரம் பிரவேசித்த மாத்திரத்தில் அஷ்ட திக்கிலுள்ள அயிராவதம் முதலாகிய யானைகளை ஓடத்தக்கதாகச் செய்யும் பெரும் புறக்கடல் முதலாகிய சாகரங்களைச் சுவறச் செய்யும் பல அக்கினிச் சமூகங்களைக் கக்கியும், அழகாகிய சிம்மக் கூட்டங்களையெல்லாம் துரத்தியும், மகமேருவையும் அதைச் சூழ்ந்த அட்ட குலாசலகிரியையும் பொடிப் பொடியாய்த் தகர்த்தும், பூமியை யெல்லாம் பிளவுபடச் செய்தும், சந்திராதித்தர் அமுர்தத் தாரைகளைச் சொரிகின்ற கிரண சமூகங்களையும் பசுபுத்திராள் முதலாகிய அனைவரையும் நெறித்துப் பொடியாக்கியும், வடவாமுகாக்கினிகளை நொறுக்கியும் கோரரூபமாய்ப் பிரவேசித்தது நீண்ட உக்கிராகாரமாகிய சிஞ்சு மாரச் சக்கரம் என்றவாறு. (14)

கவினாமரி - கவின்-ஆம்-அரி; கவின் அழகு; அரி - சிங்கம். பசுபுத்திரர் - உயிர்ப்பொருள்கள்.

## Ciñcumārac cakkarattai ēvutal

*kariyait turattikaṭa lataṉaic cuvaṟṟipala*
*kaṉalait tarukki kaviṉā*
*mariyait turattiyaṭan malaiyaip poṭittunika*
*ḻakilattai yaṭṭa poḻutē*
*parutip peyarkkaṭavuḷ matiyuṟṟa naṟkatirkaḷ*
*pacuputtira pakka matelā*
*neriyat takarttuvaṭa vaṉalaip poṭittunikaḷ*
*neṭuvukkira cakkara meṉavē.*

## Releasing the Ciñcumāra Discus

The Ciñcumāra discus chased the elephants
Of the directions, dried up the seas,
Raised several large fires, chased
The lions, pulverised mountains
And scorched the earth, destroyed
The rays of the sun and the moon,
And also living beings. It set to nought
The *Vaṭavai* fire and whirled furiously.

(சிஞ்சுமாரம் பலகணைகளைக் கக்குதல்)

648. வருமட்ட பதிசிவனு நினைவுற்ற வரிகணைக
ளதிரச் செறுத்து வடிவேல்
பருதிக் கணைக்குருதி வருணப் படைப்பகரு
நிருதிக் கணைப்ப வனளார்
சுருதிச் சொலக்கணைகள் பிரமப் படைக்கணைகள்
சுலவுற்ற சக்க ரமெலாம்
பெருகுற்று உக்கிரமொடு நடைபெற்றுப் பெட்பினொடு
பெயர்வுற்ற மிக்க விடமே.

எ-து. பிருதிவி முதலாகிய பஞ்சபூதங்களும் சிவனும் மதிக்காநின்ற சிஞ்சுமாரச் சக்கரத்தில் அனேக நாராயணாஸ்திரம் பிறந்ததன் பின்பு. அண்டங்களெல்லாம் அதிரத்தக்கதாகிய கோபத்தோடும் கூடிய வேலாயுதங்கள் பிறந்ததன் பின்பு

சூரியாஸ்திரங்களும், உதிரங்களைக் கக்காநின்ற வருணாஸ்திரங்கள், நிருதியாஸ்திரங்கள், பிரசண்ட மாருதாஸ்திரங்கள், அதர்வண வேதங்களில் சொல்லாநின்ற பல அஸ்திர கூட்டங்களும், பிரம்மாஸ்திரங்களும், சுழலும்படியாக சிஞ்சுமார சக்கரங்களும் அனந்தங்கோடிகளாய் அதினின்றும் பெருகி உக்கிராகாரமாகிய நடையைப் பெற்றுப் பெருமிதம் பொருந்தி மிகுந்த விடங்களைக் கக்கிக் கொண்டு பிரவேசித்தன என்றவாறு. (15)

அட்டபதி - எட்டுத்திக்குப் பாலகர். பவனன் - காற்று. சுலவுதல் - சுழலுதல்.

**உரை** - பிரசண்ட மாருதம் - பலத்த காற்று.

## Ciñcumāram palakaṇaikaḷaik kakkutal

*varumaṭṭa paticivaṉu niṉaivuṟṟa varikaṇaika*
*ḷatirac ceṟuttu vaṭivēl*
*parutik kaṇaikkuruti varuṇap paṭaippakaru*
*nirutik kaṇaippa vaṉaṉār*
*curutic colakkaṇaikaḷ piramap paṭaikkaṇaikaḷ*
*culavuṟṟa cakka ramelām*
*perukuṟṟu ukkiramoṭu naṭaipeṟṟup peṭpiṉoṭu*
*peyarvuṟṟa mikka viṭamē.*

## Ciñcumāra Raises Several Missiles

After Nārāyaṇa missiles flashed out of it
That was held in respect by Civaṉ
And the gods of the eight directions,
Lances came out; also sun missiles,
Blood-spouting Varuṇa missiles, Niruti,
Wind and Vedic missiles, Pirama missiles,
Innumerable wheels and the rest
Emerged from it spewing poison.

(இருவர் சிஞ்சுமாரமும் மோதுதல்)

649. [1]அரிவுற்ற மிக்ககணை வருதற் குறித்தபர
னதனைத் துரக்க அதுவுஞ்
சரியுற்று மற்சமர்செய் கிரியைத் துளைத்துயெழு
கடலுற்ற நற்பு வியெலாம்

**பொரியத் திரிபுவன மதினுற்ற வுத்தமர்கள்**
**புகழத் திசைக்க ளிறெலாம்**
**இரியத் துரத்திசவு [2]மியமிக்க வக்கணைகள்**
**மினலைத் தடித்து மிகவே.**

எ-து. இந்தப் பிரகாரம் பிரளைய கால உருத்திரனைப் போலச் சீறி வருகின்ற சிஞ்சுமாரச் சக்கரத்தைக் கண்ட பரமரான அரங்கநாயகரானவர் அதற்கிணையான சிஞ்சுமாரச் சக்கரத்தை எடுத்துப் பிரயோகித்தார். அந்த இரண்டு படைகளும் சம பலமாய் உலகினுள்ள பர்வதங்களையெல்லாம் பொடிப் பொடியாய்ச் செய்தும், சத்த சாகரங்களைச் சூழ்ந்த தீவாந்திரங்களெல்லாம் பொரிந்து போகத் தக்கதாகச் செய்தும், திரிபுவனத்திலுள்ள சன்மார்க்கரையெல்லாம் தகிக்காமல் குளிர்ந்த அமுதத் தாரைகளைப் பொழிந்து குளிரச் செய்ததால் அவ்வுத்தமர்களெல்லாம் அந்தப் படைகளைப் புகழ்ந்துருகிக் கைகூப்பி வந்தனை செய்தார்கள். [3] திக்குத் திகாந்திரங்களைக் காவல் செய்யாநின்ற இந்திரன் முதலாகிய எண்மரும் ஓடத்தக்கதாகத் துரத்திச் சவுமிய குண மங்களாகர சோதிப் பிரகாசத்தோடும் கூடிச் சமர் செய்தன அப்படைகள் என்றவாறு. (16)

துரக்க - செலுத்த. இரிய - ஓட. சௌமியம் - அழகு.

**பா.வே.** - 1. அரிசக்ர உக்ரமொடு.
2. மிக்கவப் படைகள்.
3.' திசைக் களிறெலாம் இரிய' என்னும் தொடருக்கு உரியது இவ்வுரை. இது பொருத்தமின்றி காணப்படுகிறது.

## Iruvar ciñcumāramum mōtutal

*arivuṟṟa mikkakaṇai varutaṟ kuṟittapara*
*ṉataṉait turakka atuvuñ*
*cariyuṟṟu maṟcamarcey kiriyait tuḷaittuyeḻu*
*kaṭaluṟṟa naṟpu viyelām*
*poriyat tiripuvaṉa matiṉuṟṟa vuttamarkaḷ*
*pukaḻat ticaikka ḷiṟelām*
*iriyat turatticavu miyamikka vakkaṇaikaḷ*
*miṉalait taṭittu mikavē.*

## The Two Ciñcumāras Clash

Watching the Ciñcumāra come thus,
Araṅkaṉ sent his own to nullify it.
Both clashed, pierced mountains,
Scorched the earth surrounded
By the seven oceans everywhere

While good people sang praises.
With the directions growing pale,
The missiles played havoc.

(இரண்டும் அரங்கனிடம் சரணடைதல்)

650. சனகர்க் கருட்பரமன் பதவர்ச் சனைசெய்தவண்
பட்டுற்ற சத்தி பயனாம்
வினையைத் தெரித்தநய கரடக் கதக்களிற்றின்
விதிபெற்ற உக்கிர பதியும்
சினவிச் சிவத்தையரி பிரமற் குறித்ததவ
சிறுமைக் கிரங்கி சிலதாய்
மனமிக்க நெக்குருகி மதியைத் திருப்பிசமர்
மனமுற்று மத்த னெனவே.

எ-து. அப்படிச் சமர் செய்து இளையாத இரண்டு சிஞ்சுமாரச் சக்கரமும், சனகன், சனற்குமாரன், சனந்தரன் என்னும் பிரம்ம புத்திரராளாய் ஞான ரஞ்சித சுப லக்ஷணங்களோடும் கூடிய பேர்களுக்கு அனுக்கிரகம் செய்யாநின்ற புருஷோத்தமருடைய பாதத் தாமரையிலே வந்து அவ் இரண்டு கணைகளும் ஆராதனம் செய்கின்றதைக் கண்டான். மும்மதங்களைப் பொழிகின்ற யானைக்குச் சமதையாகிய உக்கிரபதியான இராச சூடாமணியாகிய காலநேமியானவன் கோபித்துச் சொல்லுகின்றான். சிவனையும் நாராயண மூர்த்தியையும் பிரமதேவனையும் குறித்துத் தான்தவம் செய்த சிறுமையினால் இவர்கள் கொடுத்த பாசுபதக் கணையும், சிஞ்சுமாரச் சக்கரமும், பிரம்மாஸ்திரமும் தன்னுடைய யுத்த சன்னாகத்துக்கு உதவாமல் போயின. அதற்காக இரங்கினவனாய் மனம் மெலிந்து நெக்குருகி, இம்மூவரும் ஒன்றாய் இருந்தும் பிரிவாய வரங்களைக் கொடுத்து மீட்டும் அவ்வரங்களும் உதவாமல் அரங்க நாயகராய் வந்து தடுத்தால் இவரை எவ்விதத்திலேயும் விடலாகாது என்று மனத்தைத் திடச்சித்தப் படுத்தினவனாய்ச் சமர் செய்யக் குறித்துப் பிரமித்தான் என்றவாறு. (17)

பதவர்ச்சனை - பாத அருச்சனை - திருவடிகளில் செய்யும் பூசை.

**Iraṇṭum Araṅkaṉiṭam caraṇaṭaital**

*caṉakark karuṭparamaṉ patavarc caṉaiceytavaṇ*
*paṭaruṟṟa catti payaṉām*
*viṉaiyait terittanaya karaṭak katakkaḷiṟṟiṉ*
*vitipeṟṟa ukkira patiyum*
*ciṉavic civattaiyari piramaṟ kuṟittatava*
*ciṟumaik kiraṅki cilatāy*
*maṉamikka nekkuruki matiyait tiruppicamar*
*maṉamuṟṟu matta ṉeṉavē.*

## Both Surrender to Araṅkaṉ

Watching the missiles surrender
To the Lord who granted grace to Caṉaka,
The furious chief of the Acuraṉs
Who was like a war-elephant grew sorrowful.
The missiles received by performing tapasya
Praying to Civaṉ, Piramaṉ and Nārāyaṇaṉ,
Had been proved useless. Now he wondered
How to continue the battle.

(காலநேமி நில்த்திலிறங்கிப் போரிடுதல்)

651. கடகக் கரத்தவனு மினல்சுற்றி வட்டணைகொள்
கவினைத் தருக்கி சுழலா
வடல்பெற்ற வுக்கிரபதி சினவித் தருக்கிவரு
மஃதைக் குறித்த பொழுதே
நினைவுற்ற சக்கரதர கரமுற்ற சற்பரம
நிலைபெற்ற நித்திய வியமான்
சுடர்பெற்ற சக்கரமதை விடவுற்ற வப்பொழுதில்
சுருதிக் கதிர்ச்சுழ லல்போல்.

எ-து. இவ்விதமாகிய மோகத்தைத் தீர்ந்த காலநேமியானவன் கடகமாகிய வாளை உருவிச் சிறகோடும் திரிகின்ற சிம்ம ஏறுபோல இரதத்தை விட்டு நிலத்தில் பாய்ந்து முன்னடி வைத்துப் பின்னடி வாங்கிக் குலாலன் சக்கரத்தைப்போலச் சாரிகை சுழன்று அவ்வாளாயுதத்தினுடைய மின்னல் பிரகாசத்தினால் மேக சாலங்களுடைய மின்னலையெல்லாம் கருகச் செய்தும் திரிகாலத்திலுண்டாகிய அரக்கருடைய வலிகளையெல்லாம் தான் ஒருவனாய்க் கிரகித்த சாமர்த்தியத்தோடுங் கூடிய உக்கிர பதியாகிய அசுரேந்திரனானவன் கோபித்துத் தருக்குற்று வருகின்ற காரணத்தைக் கண்ட காலத்தில் இதை நினைத்த சாத்வீக குணமாகிய சக்கரத்தைக் கராம்புய மலரின்கண் ஏந்தி என்றும் அழியாத நிலைபெற்ற நித்தியத்தோடுங் கூடிய வேத சொரூப புருஷோத்தமனாகிய அரங்க நாயகரான ஆயிரம் கோடி ஆரியப் பிரகாசமாகிய சிஞ்சுமாரச் சக்கரத்தை எடுத்தவன் பேரில் பிரயோகித்தார். அந்தச் சக்கரமானது வேதசொரூபமாகிய சூரியனைப்போலச் சுழன்று பிரவேசித்தது என்றவாறு. (18)

கடகம் - வாளாகிய ஆயுதம். வட்டணை - வட்டம்.

### Kālanēmi nilattilirankip pōriṭutal

*kaṭakak karattavaṉu miṉalcuṟṟi vaṭṭaṇaikoḷ*
*kaviṉait tarukki cuḻalā*
*vaṭalpeṟṟa vukkirapati ciṉavit tarukkivaru*
*makṭaik kuṟitta poḻutē*
*niṉaivuṟṟa cakkaratara karamuṟṟa caṟparama*
*nilaipeṟṟa nittiya viyamāṉ*
*cuṭarpeṟṟa cakkaramatai viṭavuṟṟa vappoḻutil*
*curutik katirccuḻa lalpōl.*

### Kālanēmi on the Ground

Kālanēmi drew out his sword as lightning
And whirled about; watching the angry Acuraṉ
Come forward in fury, the Supreme Lord
Who carries the discus, released
The fiery armament. The discus leaped up
Like a sun that was a-whirl.

(மீண்டும் அரங்கனின் சிஞ்சுமாரம்)

652. கனமிக்க வுக்கிரகணை பலவைப் பெருக்கிவட
வனலைக் கருக்கி யொளிரா
கனலுற்ற வக்கடுவைச் சினவிக் கொழித்துபுகைக்
கருவைக் குறித்து கணியா
மினலைப் பெருக்கியிடி யவையிற் றருக்கிகுல
கிரியைக் கலக்கி மிளிரா
வினமுற் றரக்கர்களைக் களைவிக்க வுற்றதுநல்
லிரவிப் பெயர்ப்ப டையரோ.

எ-து. அப்படி அரங்க நாயகரானவர் பிரயோகித்த சிஞ்சுமாரச் சக்கரமானது கனதை பொருந்திய பலகணைகளைப் பெருக உண்டாக்கினதாய், வடவாமுகாக்கினி சமூகங்களையெல்லாம் கருக்கினதாயும் பிரகாசித்து மேக சாலங்களிலிருக்கின்ற மின்னல் கூட்டங்களை யெல்லாம் ஒளி மழுங்கச் செய்து தருக்குற்றும், இடியினது கூட்டங்களையெல்லாம் குறுக்கச்செய்தும், அஷ்ட குலாசல பர்வதங்களையெல்லாம் கலங்கச் செய்து சுவாலித்தும், அக்கினியைக் கக்காநின்ற முற்காலத்தில் பிறந்த ஆலகால விஷத்தைக் கோபித்துச் சீறி வேறுபடுத்தியும், உக்கிரத்தினால் புகை மண்டலங்களை உண்டாக்காநின்ற

தாமத குணத்தினால் அரங்கநாயகனை மதியாத இராக்கதர் என்கின்ற, தேவப்பயிருக்குக் களையாகிய, களைகளைக் களைவிக்கத்தக்கதாயும் பிரவேசித்தது சிஞ்சுமாரச் சக்கரம் என்றவாறு. (19)

கடு – நஞ்சு, விஷம்.

## Mīṉṭum Araṅkaṉiṉ ciñcumāram

*kaṉamikka vukkirakaṉai palavaip perukkivaṭa*
*vaṉalaik karukki yoḷirā*
*kaṉaluṟṟa vakkaṭuvaic ciṉavik koḷittupukaik*
*karuvaik kuṟittu kaṉiyā*
*miṉalaip perukkiyiṭi yavaiyiṟ ṟarukkikula*
*kiriyaik kalakki miḷirā*
*viṉamuṟ ṟarakkarkaḷaik kaḷaivikka vuṟṟatunal*
*liravip peyarppa ṭaiyarō.*

## Araṅkaṉ's Ciñcumāra Again

Releasing innumerable missiles
That terrified and scorched like Vaṭavai fire,
Brilliant with sparks and spewing poison,
Billowing smoke, igniting lightnings,
Frightening thunder, and swaying
The great mountains, the sun-missile
Came to destroy the Acura race.

(காலநேமியின் தலையைத் துண்டித்தல்)

653. கடகத்தின் வெட்டியதைத் துணியப் படுத்தசுர
கரடக் களிற்றி னினையாத்
தடமுற்ற சக்கரமதைத் துணியப் படுத்தவொரு
கரமுற்ற கடக மதனால்
திடமுற்ற வக்குரிசில் புடையப் படுத்ததிறல்
புனிதத் திறற்ப டையுமே
நடையுற் றரக்கர்பதி கடகத்தை வெட்டிசிர
மதனைத் துணித்த ததுவே.

எ-து. அப்படிப் பிரவேசித்து வருகின்ற சிஞ்சுமாரச் சக்கரத்தைக் கண்ட அசுரேந்திரனாகிய மும்மதங்களைப் பொழிகின்ற யானை போன்றவன் ஆலோசனையினால் மதித்துத் தன்னுடைய வாளினாலே அந்தச் சிஞ்சுமாரச் சக்கரத்தை இருபிளவாய்த் துண்டித்துக் கீழே தள்ளுவோம் என்று அவ் வாளினாலே திடம் பொருந்திய அசுரபதியானவன் எதிர்த்துத் தாக்கி வெட்டின மாத்திரத்திலே, புனிதமாகிய வெற்றி மிகுந்த அச்சிஞ்சுமாரச் சக்கரமானது, நல்ல நடையைப் பொருந்திய இவ்வரக்கராசன் வாளை இரு பிளவாகத் துண்டித்துக் கீழே தள்ளித் தன்னை வெட்டத் தக்கதாகப் பிரயோகித்த காலநேமியினுடைய சிரத்தைக் துண்டித்துக் கீழே தள்ளிற்று என்றவாறு. (20)

## Kālanēmiyiṉ talaiyait tuṇṭittal

*kaṭakattiṉ veṭṭiyatait tuṇiyap paṭuttacura*
*karaṭak kaḷiṟṟi ṉiṉaiyāt*
*taṭamuṟṟa cakkaramatait tuṇiyap paṭuttavoru*
*karamuṟṟa kaṭaka mataṉāl*
*tiṭamuṟṟa vakkuricil puṭaiyap paṭuttatiṟal*
*puṉitat tiṟaṟpa ṭaiyumē*
*naṭaiyuṟ ṟarakkarpati kaṭakattai veṭṭicira*
*mataṉait tuṇitta tatuvē.*

## Kālanēmi Beheaded

Desiring to shred it to pieces,
The evil Acuraṉ with the strength
Of a war-elephant, flashed out his sword
At the whirling discus. As he cut it,
The holy and powerful misile
Cut down the Acuraṉ's sword and beheaded him.

(மற்ற அரக்கர்களையும் அழித்தல்)

654. கிரியுற் றரக்கர்களை வனமுற்ற வப்படையைக்
குறுகிக் கனற்கொ ளுவியே
கருகுற்ற வப்பொழுதி னடலைப் பெருக்கிகன
கதிருற்ற சக்கர படையு
முருவிக் கிரிப்பிளவு படவட்டு நற்புனலின்
[1]முதலக் கிரிக்கண் வரவே
பெருகித் திரைக்கடலின் வரவுற்ற சக்கரபெயர்
குளனுற்று பெட்பின் முழுகி.

எ-து. இப்படியாகக் காலநேமியான அசுரேந்திரன் சிரசைத் துண்டித்துக் கீழே தள்ளின பின்பு சிஞ்சுமாரச் சக்கரமானது பர்வதங்களில் ஒளித்தவர்களையும், வனங்களில் ஒளித்தவர்களையும் தீவாந்திரக்கடல்களில் ஒளித்தவர்களையும், அண்டரண்ட பகிரண்டங்களில் மூலபலமாய் இருந்த அசுரர்கூட்டங்களையும் விழுங்கி அக்கினிப் பிரவேசமாய்க் கருக்கின பின்பு நீராக்கிய சாம்பலாய்ப் பர்வதமாய்க் குவித்தபின்பு, கோடி சூரியப் பிரகாசமாய்க் கனதை பொருந்திய கிரண சமூகங்களை விரிக்காநின்ற சிஞ்சுமாரச் சககரமும், சக்கர கிரியைப் பிளந்து உருவிப் போய்ப் பாதாள கங்கையின் மூழ்கி அதைக்கிரகித்து வந்தம்மலையில் பெருகி வரத்தக்கதாய், சக்கரத் தீர்த்தமாய், அரங்கநாதருடைய கடாக்ஷத்தினால் சக்கரத் தீர்த்தமாக்கி அந்தத் திருப்பாற்கடல் போன்ற தீர்த்தத்தில் தான் மூழ்கிப் பிரகாசம் செய்தது என்றவாறு. (21)

பா.வே. - 1. முழுகிக்.

## Maṟṟa arakkarkaḷaiyum aḻittal

*kiriyuṟ ṟarakkarkaḷai vaṉamuṟṟa vappaṭaiyaik*
*kuṟukik kaṉaṟko ḻuviyē*
*karukuṟṟa vappoḻuti naṭalaip perukkikaṉa*
*katiruṟṟa cakkara paṭaiyu*
*muruvik kirippiḷavu paṭavaṭṭu naṟpuṉaliṉ*
*mutalak kirikkaṉ varavē*
*perukit tiraikkaṭaliṉ varavuṟṟa cakkarapeyar*
*kuḷaṉuṟṟu peṭpiṉ muḻuki.*

## The Other Acuras Destroyed

The missile then pursued the Acuras
Who had hid in the mountains and woods,
Spouted fire, devoured them.
The sun-like missile then immersed
In the holy stream[1] and returned
To the Kōla Hill to immerse itself
In the tank there, giving it the name,
The Cakkara Spring.

---

1. The heavenly Ganges.

(அரங்கன் சிஞ்சுமாரத்தைத் தரித்தல்)

655. அரிவுற்ற வப்படையு மரியைத் துதித்தினிய
வலர்பதும சுத்த வடியைக்
குறியிட்டுச் சுற்றிவர வதனைக் குறித்தபர
குணமிக்க சக்கர படையைப்
பரிவுற்று நற்கருணைப் பெருகத் தரித்துகர
பதுமத் திருக்க வவையுந்
தெரிவுற்ற நற்பரம பதமுற்ற வப்பரம
செயலைக் குறித்த ததுவே.

எ-து. அதிதீவிரப் பக்குவமாகிய அறிவினை யுடைய அந்தச் சிஞ்சுமாரச் சக்கரமும், ஆயிர நாமதேயத்தினாலே நாராயணருடைய கீர்த்தியைத் துதி செய்து அவருடைய அலர்ந்த செந்தாமரைக் கமலம்போன்ற பாத பத்மங்களை மூன்றுதரம் வலம் வந்தது. அதை அறிந்த பரமபதநாயகரானவர் சிஞ்சுமாரச் சக்கரத்தைப் பார்க்குந்தோறும் கருணை கூர்ந்தவராய்த் தமது கராம்புயத்தில் முன்னையப் போலத்தரித்தார். அந்தச் சிஞ்சுமாரச் சக்கரமானது சுவாமியினுடைய கிருபா நோக்கத்தைப் பார்த்து மகிழ் சிறந்திருந்தது என்றவாறு. (22)

## Araṅkaṉ ciñcumārattait tarittal

*arivuṟṟa vappaṭaiyu mariyait tutittiṉiya*
*valarpatuma cutta vaṭiyaik*
*kuṟiyiṭṭuc cuṟṟivara vataṉaik kuṟittapara*
*kuṇamikka cakkara paṭaiyaip*
*parivuṟṟu naṟkaruṇaip perukat tarittukara*
*patumat tirukka vavaiyun*
*terivuṟṟa naṟparama patamuṟṟa vapparama*
*ceyalaik kuṟitta tatuvē.*

## Araṅkaṉ Holds Ciñcumāram

The intelligent missile then worshipped
Araṅkaṉ, and circumambulated his feet
That were like lotus. Watching this,
The compassionate Lord took it kindly
Into his lotus-like hand. The missile
Felt happy on reaching this supreme abode.

## வேறு

### (சிஞ்சுமாரம் செய்த அழிவு)

656. பிளந்த மாவினம் பிளந்தன குஞ்சரம் பெருகும்
பிளந்த தேரினம் பிளந்தன கவசத்தின் பெற்றிப்
பிளந்த வஞ்சர்கள் முடியினம் பிளந்தன புட்டில்
பிளந்த பாகர்கள் மார்பினம் பிளந்தன [1]கவசம்.

எ-து. அப்படி அரங்க நாயகனுடைய சார்ங்க வில்லில் பூட்டி எய்கின்ற கணை மாரியினாலே பிளக்கப்பட்டன குதிரைக் கூட்டங்கள், அதுவன்றியும் யானைக் கூட்டங்களெல்லாம் பிளந்து நின்றன. பெரிய இரதங்களானவை குத்துக்கால் வேறு, கொடுங்கை வேறு, பாகு பலகை வேறு, சட்டங்கள் வேறாய் அழிந்து நின்றன வச்சிரக் கவசத்தின் பெருமிதமானது பிளந்து போயிற்று. வஞ்சர்களாகிய அசுரர்களின் மவுலிகள் பிளக்காநின்றன. பாகராகிய தேர்ச் சாரதிகளானவர்களின் மார்பகங்கள், கவசங்கள் பிளந்து நின்றன என்றவாறு. (23)

மா - குதிரை புட்டில் - அம்பறாத்தூணி

பா.வே. - 1 பெரும்பேய்.

## Vēṟu

### Ciñcumāram ceyta aḻivu

*piḷanta māviṉam piḷantaṉa kuñcaram perukum*
*piḷanta tēriṉam piḷantaṉa kavacattiṉ peṟṟip*
*piḷanta vañcarkaḷ muṭiyiṉam piḷantaṉa puṭṭil*
*piḷanta pākarkaḷ mārpiṉam piḷantaṉa kavacam.*

### The Destruction Caused by Ciñcumāram

Destroyed horses, elephants cut up,
An increasing number of broken chariots,
Armours that had lost their fame,
Pulverised crowns of Acuras,
Broken quivers, charioteers
With their chests and armour smashed.

(படைகள் பறத்தல்)

657. கரந்த தேரினங் கரந்தன அரக்கர்தம் கணங்கள்
கரந்த [1]மன்னர்கள் கரந்தன சேனையின் கணத்தோர்
கரந்த வாரணங் கரந்தன கனவட்டத் தொகுதி
கரந்த வில்லினங் கரந்தன கணைகளின் கனைப்பு.

எ-து. தேர்ப்பந்திகளெல்லாம் தூளிப்படலமாய்ப் போச்சுது. அரக்கர் கூட்டங்களும், இராசாதிராசர்களும் ஓடி ஒளிந்தார்கள். சேனாதிபதிகளெல்லாம் ஓடிப்போனார்கள். யானைப் பந்திகளெல்லாம் பிரசண்டமாருதக் காற்றிலே பூளைப் பஞ்சுபோல் ஒளித்து நின்றன. குதிரைப் பந்திகளானவை ஒளித்துப் பதுங்கின. காண்டீபங்களெல்லாம் பதுங்கின. தெய்வதப் படையினுடைய சப்தங்களெல்லாம் அடங்கி ஒளித்தன என்றவாறு. (24)

கரத்தல் - மறைதல். கனவட்டம் - குதிரை.

பா.வே. - 1. மள்ளர்கள்

## Paṭaikaḷ paṟattal

*karanta tērinaṅ karantaṉa arakkartam kaṇaṅkaḷ*
*karanta maṉṉarkaḷ karantaṉa cēṉaiyiṉ kaṇattōr*
*karanta vāraṇaṅ karantaṉa kaṉavaṭṭat tokuti*
*karanta villiṉaṅ karantaṉa kaṇaikaḷiṉ kaṇaippu.*

## Pulverised Army

Chariots had vanished. The Acura armies
Were gone. Vanished too the kings.
Commanders of the army were not seen.
The elephants were nowhere. The squadrons
Of horses too were gone. No bows were seen
And the whizz of arrows had ceased to be.

(இரத்த வெள்ளம்)

658. தலைமி தந்தன தாள்களு மிதந்தன சலியா
நிலைமை யாகிய வாரண மிதந்தன நீசர்
குலவு றும்பரி மிதந்தன குடைமிதந் தனவால்
சிலைமி தந்தன வரக்கர்தங் குருதியிற் [1]சிறந்தே.

எ-து. பிணக்குன்றமாய்க் குவிந்த நாற்படையினுடைய இரத்த வெள்ளங்களிடையே என்னென்ன மிதந்தன என்றால், அசுரர்களின் சிரங்கள் மிதந்து வந்தன. அவர்களுடைய கால்களெல்லாம் கண்ட துண்டமாய் மிதந்து நின்றன. ஒரு காலத்திலும் அசைவில்லாமல் நிலையாய் இருக்கின்ற வானைகள் மிதந்து நின்றன. நீசர்களாகிய அசுரர் கூட்டங்கள் ஏறி நடாத்துகின்ற குதிரைப் பந்திகள் மிதந்து நின்றன. தவளச் சத்திரக் குடைகள் மிதந்து நின்றன. வீராதி வீரர்கள், சூராதி சூரர்களுடைய வில்லும் கண்ட துண்டப்பட்டு மிதந்து நின்றன என்றவாறு. (25)

சிலை - வில்.

பா.வே. - 1. சிறந்தே.

## Iratta veḷḷam

*talaimi tantaṉa tālkaḷu mitantaṉa caliyā*
*nilaimai yākiya vāraṇa mitantaṉa ṉicar*
*kulavu ṟumpari mitantaṉa kuṭaimitan taṉavāl*
*cilaimi tantaṉa varakkartaṅ kurutiyiṟ ciṟantē.*

## River of Blood

In the river of Acura blood, there floated
Heads, feet, imperturbable elephants,
The horses ridden by evil ones,
Umbrellas as also their bows.

(போர்க்களக் காட்சி)

659. பரந்த பாரிடம் பரந்தன கழுகினப் பந்திப்
பரந்த கூளிகள் பரந்ததா லிடாகினிப் பரப்புப்
பரந்த நாயினம் பரந்ததா னரிகளின் பரப்புப்
பரந்த மோகினி பரந்ததாற் காளியின் பந்தி.

எ-து. அந்த இரண களத்திலே பசாசுக் கூட்டங்களானவை நிறைந்து நின்றன. கழுகின் கூட்டப் பந்திகளானவை நின்றன கூளிக் கூட்டங்க ளிடாகினிக் கூட்டங்கள் ஆனவை பரவியிருந்தன. சுவானக் கூட்டங்கள் நரிப்பரப்புகளானவை பரந்து நின்றன. மோகினிக் கூட்டங்களானவை நிறைந்து நின்றன. பரவியிருந்த காளியின் பந்தி யென்றவாறு. (26)

பாரிடம் - பூதகணம். பரந்ததானரிகள - பரந்ததால் + நரிகள். பரத்தல் - நிறைந்திருத்தல்
உரை - சுவானம - நாய்

## Pōrkkaḷak kāṭci

*paranta pāriṭam parantaṉa kaḷukiṉap pantip*
*paranta kūḷikaḷ parantatā ḷiṭākiṉip parappup*
*paranta ṉāyiṉam parantatā ṉarikaḷiṉ parappup*
*paranta mōkiṉi parantatāṟ kāḷiyiṉ panti.*

## The Battlefield

In that vast battlefield
The spirits filled the spaces.
Also rows of vultures,
Rows of Kūḷi spirits, Iṭākiṉis,
Dogs and rows of jackals,
The Mōkiṉi spirits and the armies of Kāḷi.

(போரில் அழிந்தவை)

660. நெரிந்த தேரினம் நெரிந்தன குதிரைகல் லணைக
ணெரிந்த யானைக ணெரிந்தன கிம்புரி நீளம்
நெரிந்த மாமணி நெரிந்தன துதிக்கைகா னெற்றி
நெரிந்த பட்டங்க ணெரிந்தன வீரர்நீண் முடியே.

எ-து. அந்தச்சமர பூமி இரத்த வெள்ளத்தின் நெரிந்து போச்சுது. தேர்ப்பந்திகளெல்லாம் நெரிந்தன. குதிரையின் கல்லணைகள் நெரிந்தன. யானைகளெல்லாம் நெரிந்து போச்சுது. கிம்புரிக் கோடெல்லாம் நெரிந்து மாறி ஒலிக்காநின்ற யிணை மணிகளெல்லாம் நெரிந்து போச்சுது. துதிக்கை, மத்தகம், வீரப்பட்டங்கள் இவையெல்லாம் நெரிந்து போச்சுது என்றவாறு. (27)

நெரிதல் - நொருங்குதல்; நசுங்குதல் கல்லணை - குதிரை மேல தவிசு; சேணம். கிம்புரி - யானைக் கொம்பிற் பூண். கானெற்றி - கால் + நெற்றி.

## Pōril aḻintavai

*nerinta tēriṉam nerintaṉa kutiraikal laṇaika*
*ṇerinta yāṉaika ṇerintaṉa kimpuri nīḷam*
*nerinta māmaṇi nerintaṉa tutikkaikā ṉeṟṟi*
*nerinta paṭṭaṅka ṇerintaṉa vīrarnīṇ muṭiyē.*

## Destroyed in the War

Chariots were destroyed; horses were
Destroyed; the saddles of horses
Were pulverised; the elephants
Were destroyed; gone were the ornaments.
Gone were their trunks and feet; foreheads
And the ornaments on their foreheads;
Also the crowns of the soldiers.

(பேய்க் கூட்டம்)

661. கவந்த பந்திக ளாடக் கணக்கிலா
தவந்த னைச்செய் தசுரர் பிணக்குவை
சிவந்த பூமியைச் சூழ்ந்தன சீறியே
நிவந்தி டாகினிப் பேய்கள் நிறைந்தவால்.

எ-து. தலை அறுந்த உடற்குறையானது பந்தி பந்தியாய் நின்று நடிக்கவும். பாவங்களைச் செய்கின்ற அசுரப் பிணக்கூட்டங்களானவை சிவந்த பூமியாகிய இரண களத்தினை அணை கட்டினதுபோலச் சூழ்ந்தன. கோபித்து நிமிர்ந்தி டாகினிக் கணங்கள்

மோகினிக் கணங்கள், பசாசுக் கூட்டம் முதலானவையும் அக்களம் எல்லாம் நிறைந்தன என்றவாறு. (28)

கவந்தம் - உடற்குறை. தவந்தம் -பாவச்செயல். தவம்தனைச் செய்து என்று கொள்ளினுமாம். தவம் செய்தல் - சூழ்ந்திருத்தல்.

## Pēyk kūṭṭam

*kavanta pantika ḷāṭak kaṇakkilā*
*tavanta ṉaiccey tacurar piṇakkuvai*
*civanta pūmiyaic cūḻntaṉa ciṟiyē*
*nivanti ṭākiṉip pēykaḷ niṟaintavāl.*

## A Crowd of Spirits

Trunks danced and surrounded
The mounds of the corpses of Acuras
Who had performed countless evil deeds.
They encircled the russet battlefield.
It was full of screaming Iṭākiṉis,
Spirits standing upright.

(காளிக்கூட்டம்)

662. பந்தித் தென்னப் பயிலசு ரத்தலைச்
சிந்து கின்றதைச் சீறி யெடுத்தபின்
விந்தை யாகவம் மானை வினோதத்தாற்
பந்தி காளிக ளாடல் பயிலுமால்.

எ-து. கயிற்றிலே வரிசை பெறக் கட்டினது போன்ற அசுரர்கடலையானது சிந்திக் கிடத்தலைப் பார்த்துக் கோபித்தெடுத்த பின்பு, விந்தை பெறத் தக்கதாக வினோதத்தால் அம்மானா ராடிப் பந்தி பந்தியாய் நின்று காளிக் கூட்டங்களானவை ஆடலைப் பயிலும் என்றவாறு. (29)

பந்தித்தல் - கட்டுதல்

**உரை** - அசுரர்கடலையானது - அசுரர்கள் + தலையானது.

## Kāḷikkūṭṭam

*pantit teṉṉap payilacu rattalaic*
*cintu kiṉṟataic ciṟi yeṭuttapiṉ*
*vintai yākavam māṉai viṉōtattāṟ*
*panti kāḷika ḷāṭal payilumāl.*

## The Crowd of Kāḷis

Watching the heads of Acuras on the field
That lay as if strung on ropes,
And taking them up angrily,
The Kāḷi spirits began to dance
A terrible game of ammāṉai. [2]

(காகமும் கழுகும்)

663. செங்க ளத்திற் குடற்பின்னற் சேரலை
யங்கண் மேவு கொடிக்கழு வான்றதோர்
துங்க மாம்பருந் துக்குலந் தூண்டில்சேர்
மங்கி டும்வலை யென்ன மயங்குமால்.

எ-து. அந்தச் சிவந்த இரணகளத்திலே குடலானது பின்னலாய்ச் சேர்ந்திருப்பதனை அவயவங்களால் குறைவின்றிய கொடிய காகங்களும், கழுகுகளும் பெரிய உருவத்தோடுங் கூடிய விசயத்தையுடைய பருந்துக் கூட்டங்களும் பார்த்து இது தூண்டிலோ அல்லது வலையோ என்று ஐயுற்று மயங்கித் திரியும் என்றவாறு. (30)

கொடி - காகம். கழு - கழுகு. துங்கம் - வெற்றி.

காலநேமி வதை அத்தியாயம் முற்றிற்று.

## Kākamum kaḻukum

*ceṅka ḷattiṟ kuṭaṟpiṉṉaṟ cēralai*
*yaṅkaṇ mēvu koṭikkaḻu vāṉṟatōr*
*tuṅka māmparun tukkulan tūṇṭilcēr*
*maṅki ṭumvalai yeṉṉa mayaṅkumāl.*

## Crows and Vultures

Watching the intestines lying in knots
In that battlefield that had become red,
Well grown crows and kites
As also victorious, enormous vultures
Wondered whether this was a fishing hook
Or a vast net.

2. A game played by little girls with tiny stones.

## 36. முப்பத்திரண்டாவது
## இந்திரன் மகுடாபிஷேக அத்தியாயம்

அசுரர்கள் மடிந்து போர்க்களமானது இரத்த வெள்ளமாயிற்று. அரங்கநாயகர் தம் தேர்ப்பாகனாகிய தாருகனை நோக்கி இக்களத்தில் தேவர்கூட்டங்களானவர்கள் எவ்வாறு உள்ளார்கள் என்பதை அறிந்து வருமாறு கட்டளை இட்டான். தேவர்கள் மடிந்து கிடக்க மருத்துக்கள் இருவரும் உயிருடன் இருந்ததைக் கண்ட தாருகன் அவர்களை அழைத்து வந்து அரங்கநாயகரிடத்தில் சேர்ப்பித்து மற்ற தேவர்களைப் பற்றியும் விண்ணப்பம் செய்தான்.

தேவர்கள் மீது இரக்கம் கொண்ட இறைவன் அந்த நகரத்தில் நான்கு விதமான சஞ்சீவிகளும் உண்டாகுமாறு அருள்புரிந்தார். அவ்வாறு தோன்றிய சஞ்சீவியினை மருத்துக்கள் கையில் கொடுத்துத் தேவர்களை எழுப்பி வருமாறு அருள் புரிந்தார். மருத்துக்கள் சஞ்சீவியுடன் களத்தில் சென்றார்கள். சஞ்சீவியின் காற்றால் தேவர்கள் உயிர்பெற்று எழுந்தார்கள். அவர்களுடனே வந்த மருத்துவர்கள் அரங்கநாயகரைப் பணிந்தார்கள். விரசமாநதித் தீர்த்தத்தினால் திருமஞ்சனம் முதலியன செய்து மலர்களால் அருச்சித்து மகிழ்ச்சியடைந்தார்கள்.

அரங்கநாயகர் இந்திரனை நோக்கிக் கூறுகிறார். இந்திரனே! இனி உம் நாட்டினை உமக்களித்து, முடிசூட்டிச் செங்கோலைத் தருகிறோம். இனி இந்த நகரமானது சஞ்சீவி நகரம் என்று அழைக்கப்படும். இங்கு எல்லா வகையான செல்வங்களும் நிரம்பியிருக்கும். இந்த நகரத்தில் அமைந்துள்ள கோலாசலம் என்னும் மலையில் உள்ள இலக்குமியார் தீர்த்தத்தில் தனுர்மாதம் ஏகாதசியில் மூழ்கியவர்கள் பேறு பெற்றவர்க ளாவார்கள். இந்த வராக தலத்தில் உள்ள இலக்குமியார் தீர்த்தம் அத்தகு சிறப்பு வாய்ந்ததாகும். எனவே இத்தலத்திலேயே உமக்கு முடிசூட்டுவதாய் நிச்சயித்தோம் என்று அருளி மேலும் பிரமனுக்குக் கட்டளையிட்டருளினார். அதன்படி அந்நகரமானது மயன் என்னும் தேவசிற்பியால் நவரத்தினங்களைக் கொண்டு அலங்காரம் செய்யப்பட்டது.

அலங்கரிக்கப்பட்ட சஞ்சீவி நகரமாகிய வராக தலத்தில் வேத முறைப்படி பிரம தேவனால் இந்திரனுக்கு முடிசூட்டு விழா நடத்தி வைக்கப்பட்டது. இந்திரன் அரங்கநாயகரைப் பணிந்து, ஐயனே! உமது பெருமை விளங்கும்படியாகவும், எனது வினைப்பயன் தீர்ந்து உமது திருவடிகளை அடைந்ததற்கு அறிகுறியாகவும் இந்த வராக தலத்திலே தாங்கள் நித்திய பரிபூரணராய் எழுந்தருள வேண்டும் என்று வேண்டி நின்றான்.

இந்திரன் விருப்பத்தை ஏற்றுக்கொண்டார் அரங்கநாயகர். மிதுனமாதம் சித்திரை நட்சத்திரத்தில் பிரமன், சிவன், தேவர்கள், முனிவர்கள் யாவருமாகக் கூடி அரங்கநாயகனுக்குப் பிரமோற்சவத்தினை நடத்தினார்கள். இந்திரன் முத்துக் குடையினைத் தாங்கி வந்தான். முனிவர்கள் வேதம் ஒலித்தனர். அரங்கநாயகர் திருமகள் சமேதராய் வராக தலத்தில் எழுந்தருளினார்.

(அரங்கன் தேவர்களின் அழிவை அறிதல்)

664. அசுரரெலாம் வீந்ததற்பின் அரங்கநா
யகனுமவர்க் கருள்கூர்ந் தன்பாய்ப்
பசுவனைய வமரரெலா மெவ்வண்ணம்
படர்ந்தனர்கள் [1]பரிவா னேகி
சுசிலமொடு வவர்தம்மை யழைத்துவர
வெனவுரைக்கத் துரிதிற் சென்றத்
திசையினர்கள் புகழ்மருத்தங் கிருவர்கடா
முயிருடனே திகழக் கண்டான்.

எ-து. காலநேமி முதலாகிய அசுர சேனைகளெல்லாம் மடிந்து, இரண களமானது உதிரப் பிரவாகமாக இருக்கக் கண்ட அரங்கநாயகரானவர் மிகுந்த கிருபையோடும் தமது தேர்ச்சாரதியாகிய தாருகனை நோக்கி அருளிச் செய்கின்றார். நமது தேவர்கூட்டங்கள் இந்த இரண களத்தில் எவ்விதமாக இருக்கின்றார்களோ அந்த விதங்களை அறிந்து அழைத்து வாரும் என்று அருளிச்செய்ய, அதிவேகமாய் அந்த இரணகளமெங்கும் சோதனை செய்து இறந்து இருக்கின்ற தேவர் கூட்டங்களைக் கண்டு மனது கலங்கி நிற்கின்ற சமயத்தில் மருத்துக்கள் இருவரும் உயிருடனே சமர பூமியில் இருக்கக் கண்டான் தாருகன் என்றவாறு. (1)

படர்ந்தனர் - துன்பமுற்றனர்; பரவிச்சென்றனர். பரிவு - அன்பு. சுசிலம் - சுசீலம் - நேர்மை. மருத்துக்கள் - அசுவினிதேவர்கள். இருவர்கடாமுயிருடனே - இருவர்கள்தாம் உயிருடனே.

பா.வே. - 1. வலவ பார்த்து.

## Araṅkaṉ tēvarkaḷiṉ aḻivai aṟital

*acurarelām vīntataṟpiṉ araṅkanā*
*yakaṉumavark karuḷkūrn taṉpāyp*
*pacuvaṉaiya vamararelā mevvaṇṇam*
*paṭarntaṉarkaḷ parivā ṉēki*
*cucilamoṭu vavartammai yaḻaittuvara*
*veṉavuraikkat turitiṟ ceṉṟat*
*ticaiyiṉarkaḷ pukaḻmaruttaṅ kiruvarkaṭā*
*muyiruṭaṉē tikaḻak kaṇṭāṉ.*

## XXXVI. The Crowning of Intiraṉ
## Araṅkaṉ Learns of the Death of Gods

After the entire Acura army had died,
Araṅkaṉ grew compassionate and asked
His charioteer to find out about gods
And bring them to him. The charioteer
Went speedily, and realised
That only the two doctors famous
In all directions, had survived.

(சஞ்சீவியை உற்பத்தி செய்தல்)

665. மகிழ்சிறந்தான் களிகூர்ந்தா னவர்தம்மை
யழைத்துடனே மால்முன் னின்றான்
முகில்கண்ட மஞ்ஞையெனக் களித்தவராய்
அவரடியில் வீழ்ந்தார் முன்னோன்
பகிரதிதங் கியபாத மடைந்தனர்கள்
மருத்துவர்கள் பரமன் றானு
நெகிழ்மனத்தாற் சஞ்சீவி யந்நகரி
[1]னுளதாக்கி நேமி யோனும்.

எ-து. அப்படி மருத்துக்களிருவரும் உயிருடனே சமர பூமியிலிருக்கக் கண்டதாருகனானவன், மனங்கொள்ளாத சந்தோஷத்தை அடைந்தவனாய் அவர்களை அழைத்துக் கொண்டு வந்து மேகத்தைக் கண்ட மயில் கூட்டங்களைப்போல நடித்து, ஆனந்தப் பரவசராய் இன்பமுற்று பகீரதியாகிய கங்கையானவள் வாசம் செய்கின்ற செந்தாமரைக் கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே அனந்தமான தண்டன் சமர்ப்பித்து தேவர்கூட்டங்களுடைய விருத்தாந்தங்களையெல்லாம் விண்ணப்பம் செய்ய, மிகுந்த கிருபையோடும் அந்த நகரத்தில் நான்கு விதமாகிய சஞ்சீவிகளும் உண்டாகத் தக்கதாய் அனுக்கிரகம் செய்தருளினார் ஸ்ரீ அரங்கநாயகர் என்றவாறு.
(2)

உரை - நான்கு வகைச் சஞ்சீவி - சந்தானகரணி, சல்லிய கரணி, சமனிய கரணி, மிர்த சஞ்சீவினி ஆகியவை

பா.வே. - 1 மருத்துவரை நோக்கிச் சொல்வார்.

## Cañcīviyai urpatti ceytal

*makilcirantān kalikūrntā navartammai*
*yalaittutanē mālmun ninrān*
*mukilkanta maññaiyenak kalittavarāy*
*avaratiyil vilntār munnōn*
*pakiratitan kiyapāta mataintanarkal*
*maruttuvarkal paraman rānu*
*nekilmanattār cañcīvi yannakari*
*nulatākki nēmi yōnum.*

## Growing the Cañcīvini Plants

He felt happy. Joyously taking them
He came to the Lord. The two doctors
Were as delighted as peacocks
That had sighted the clouds. They bowed
At the feet where springs the Ganges stream.
The Lord was happy. The discus-wielder
Then caused Cañcīvini plants to grow there.

**(தேவர்கள் உயிர் பெறுதல்)**

666. **மருத்துவருக் களித்தவரை யழைத்துவர**
**வெனவுரைக்க மகிழ்ந்தங் கேகிக்**
**கருத்துருகிக் களத்தினிடைக் கலந்திடச்சஞ்**
**சீவியினாற் கதித்த தேவர்**
**வருத்துமுயிர் பிழைத்துமதி யெனத்திகழ**
**வமரர்கள்பொன் வரைபோற் சென்று**
**திருத்துளப னடிபணியாத் துதித்தனர்பாற்**
**கடலெனவே தேவ ரெல்லாம்.**

எ-து. அப்படி அனுக்கிரகம் செய்தருளிய சஞ்சீவியினாலே தேவர் கூட்டங்களை எழுப்பி அழைத்துக் கொண்டு வாரும் என்றருளிச் செய்ய, மிகுந்த களிப்புற்று அதிவேகமாய்ச் சமர பூமியில் சென்று வந்தவுடனே அந்தச் சஞ்சீவியினது தென்றல் காற்றினால் தேவர் கூட்டங்களெல்லாம் நித்திரை நீங்கி எழுந்தது போல எழுந்து பூரணச் சந்திரனானவன் உதயமானது போல அவர்கள் தேகமானது பிரகாசிக்கத்தக்கதாய், மகமேருவைப் போன்ற தேககாந்தி ரங்களுடனே, சமுத்திரக் கோஷ்டம்போல நடந்து,

திவ்விய துளப மாலாதரனாகிய ஸ்ரீஅரங்கநாயகருடைய திருவடிகளிலே பணிந்து துதிசெய்தார்கள். அது எப்படிப் பிரகாசித்த தென்றால் அனந்த விமான சேகரரா யோக நித்திரை செய்கின்ற திருப்பாற்கடலைப் போலத் தோன்றிய தந்தச் சமர பூமிகளெங்கும் தேவர் கூட்டங்கள் நிறைந்து விளங்கியது என்றவாறு. (3)

### Tēvarkaḷ uyir peṟutal

*maruttuvaruk kaḷittavarai yaḻaittuvara*
*veṉavuraikka makiḻntaṅ kēkik*
*karutturukik kaḷattiṉiṭaik kalantiṭaccañ*
*cīviyiṉāṟ katitta tēvar*
*varuttumuyir piḻaittumati yeṉattikaḷa*
*vamararkaḷpoṉ vaṟaipōṟ ceṉṟu*
*tiruttuḷapa ṉaṭipaṇiyāt tutittaṉarpāṟ*
*kaṭaleṉavē tēva rellām.*

### The Gods Resurrected

Giving the plants to the physicians,
The Lord asked them to make the gods
Live again. Feeling happy, and with hearts
Grown emotional, they reached the battlefield.
By the closeness of the Cañcīvi herbs
The gods returned to life. Glowing
Like the moon, the gods went as golden Mēru
And saluted the feet of the Lord
And sang his praises. Together,
They appeared like the milky sea.

(தேவர்கள் அரங்கனைத் துதித்தல்)

667. ஆடினர்கள் பாடினர்கள் அரங்கநா
யகன்புகழை யமர ரெல்லாந்
தேடினர்கள் மறைத்துதியாற் றெளிந்தனர்கள்
தேவாதி தேவன் றன்னை
நீடியதம் மனமுருக நிகழ்த்தினர்கண்
ணாயிரமு நிறைந்து தோன்றக்
கூடினர்க ளிருகமலப் பதமடைந்தா
னந்தத்தாற் குறைவு தீர்ந்தார்.

எ-து. அப்படியாகத் தேவர்கூட்டங்கள் ஆனந்தப் பரவசர்களாய் நடித்துப் பாடினார்கள். அந்த அரங்கநாயகனது புகழைக் கூறுகின்ற அடியார்களைத் தேடினார்கள் வேதவாக்கியங்களினாலே ஓதித் தெளிந்தார்கள். தேவாதி தேவனாகிய பரம மூர்த்தியை நீடிய தமது மனமானது உருகத் தக்கதாகத் துதித்தார்கள். கண் ஆயிரம் உடைய இந்திரனும் இதர தேவதைகளும் கூடினவர்களாய் இரண்டு உபய சரணாரவிந்தத்தின் சரணாகதியாக அடைந்தானந்த வெள்ளத்தின் கண் மூழ்கினார்கள் என்றவாறு. (4)

பதமடைந்தானந்தத்தால - பதமடைந்து ஆனந்தத்தால்.

## Tēvarkaḷ Araṅkaṉait tutittal

*āṭiṉarkaḷ pāṭiṉarkaḷ araṅkanā*
*yakaṉpukaḻai yamara rellāṉ*
*tēṭiṉarkaḷ maṟaittutiyāṟ reḷıntaṉarkaḷ*
*tēvāti tēvaṉ ṟaṉṉai*
*nīṭiyatam maṉamuruka nikaḻttiṉarkaṇ*
*ṇāyiramu niṟaintu tōṉṟak*
*kūṭiṉarka ḷirukamalap patamaṭaintā*
*ṉantattāṟ kuṟaivu tīrntār.*

## The Gods Worship Araṅkaṉ

They danced and sang Araṅkaṉ's praises.
They searched for devotees and gained
A clear perception through scriptures.
They praised to their heart's fill
The Supreme Lord of all gods.
Along with Intiraṉ they crowded around
And chased away their sorrows
By gaining the Lord's lotus feet.

(தேவர்கள் அருச்சித்தல்)

668. விரசைமா நதிப்புனலைக் கொணர்வித்தார்
அதனாலே விமல பாதம்
பரவியநல் லன்பினா லாட்டினர்கள்
ஞானத்தாற் பணித்தல் செய்தார்

திரமுறுசண் பகமலரால் துளபத்தான்
அருச்சித்தார் திருவி னோடும்
விரவியசோ டசவுபசா ரத்தாலே
மிகச்செய்தார் விண்ணோ ரெல்லாம்.

எ-து. இவ்விதமாக ஆனந்தபரவசம் அடைந்த தேவர்கூட்டங்கள் விரசமாநதி தீர்த்தத்தினாலே ஸ்ரீ அரங்கநாதருடைய விமலமாகிய திவ்விய சரணார விந்தங்களில் சமர்ப்பித்துத் திருமஞ்சனம் முதலாகிய சோடச வுபசாரங்களும் செய்து மனம், வாக்கு, காயம் என்கின்ற பஞ்சேந்திரியங்களையும் உள்ளடக்கி அன்பு பூண்ட மனத்தராய்க் களப, கதம்ப, கஸ்தூரி, மந்தார, பாரிசாத, செண்பகம், துளபம் முதலாகிய புஷ்பங்களால் ஆராதித்து ஸ்ரீமகாலட்சுமி வீற்றிருக்கின்ற திருமார்பினையுடைய பரம்பொருளாகிய புருஷோத்தமனைச் சேர்ந்து தேவர்க்கூட்டங்களெல்லாம் மகிழ் சிறந்தார்கள் என்றவாறு. (5)

## Tēvarkaḷ aruccittal

*viracaimā natippuṉalaik koṇarvittār*
*ataṉālē vimala pātam*
*paraviyanal laṉpiṉā lāṭṭiṉarkaḷ*
*ñāṉattār paṇittal ceytār*
*tiramuṟucaṇ pakamalarāl tuḷapattāṉ*
*aruccittār tiruvi ṉōṭum*
*viraviyacō ṭacavupacā rattālē*
*mikacceytār viṇṇō rellām.*

## The Gods Worship

They brought water from the Viraca stream
Out of love, they washed the pure feet
With the water. Having comprehended the Lord
They worshipped him with lovely ceṇpakam
And *Tuḷaci* leaves. All the gods offered
The sixteen ways of ritual worship
To the Lord along with Lakṣmi.

(தேவர்கள் எல்லாம்பெற அருளுதல்)

669. இந்திரனுக் கருள்கூர்ந்தங் கிசைத்திடுவா
ரரசிழந்திங் கிளைத்தா யுன்றன்
சிந்தனையின் படிமுறையிற் திருமகுடஞ்
சூட்டிசெங்கோல் திகழச் செய்துன்

**கந்தமொடு இருநிதியு நவமணியுங்**
**கற்பகமுங் காம தேனுஞ்**
**சந்ததமும் விளங்குமிந்தச் சஞ்சீவி**
**நகரினது தலத்தி னென்றார்.**

எ-து. இப்படியாக உபசாரம் செய்கின்ற தேவர்க்கூட்டங்களுக்கு அருள் கூர்ந்தவராய் அருளிச் செய்கின்றார். வாராய் தேவராசனே! உனது அரசாட்சியாகிய தேவ போகங்களையெல்லாம் இழந்து இளைத்தாய். ஆகிலும் உமது மனத்தின்படி உன்னிஷ்டமானது நிறைவேறத் தக்கதாய்த் திரிலோகங்களுக்கும் அரசனாய் மகுடாபிஷேகம் செய்து செங்கோல் தருகின்றோம். நீர் பயத்தை அடையவேண்டாம். இந்தத் தலமானது அதி சிலாக்கியமாகிய சஞ்சீவி நகரமென்று சொல்லப்படும். உமது தெய்வ லோகங்களிலுள்ள சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி, கற்பகம், மந்தார, பாரிசாதம், காமதேனு திவ்விய வஸ்துக்களெல்லாம் சர்வகாலங்களிலும் இந்தத் தலத்தில் வாசம் செய்து விளங்கிப் பிரகாசிக்கும் என்றவாறு. (6)

## Tēvarkaḷ ellāmpeṟa aruḷutal

*intiraṉuk karuḷkūrntaṅ kicaittiṭuvā*
*raracilantiṅ kiḷaittā yuṉṟaṉ*
*cintaṉaiyiṉ paṭimuṟaiyiṟ tirumakuṭañ*
*cūṭṭiceṅkōl tikaḻac ceytuṉ*
*kantamoṭu irunitiyu navamaṇiyuṅ*
*kaṟpakamuṅ kāma tēṉuñ*
*cantatamum viḷaṅkumintac cañcīvi*
*nakariṉatu talatti ṉeṉṟār.*

## The Gods Given Boons

Full of grace, the Lord told Intiraṉ:
"You lost your kingdom and suffered
As you desired, I shall crown you formally
And give the royal sceptre.
This city of Cañcīvi will ever have
The twin riches,[1] the nine gems,
The wish-yielding tree as also
The Kāmatēṉu for all time to come.

1. Caṅka Niti, Patuma Niti.

(இலக்குமி தீர்த்தம்)

670. முந்தியமுன் றரைகோடி மாநதியுந்
தவம்புரிந்து முதன்மை யான
செந்திருவின் திருவடியின் செனித்திடப்பொன்
னிலக்குமியார் தீர்த்த மென்றே
சந்ததமும் விளங்குமிகு தனுவேகா
தேசியினிற் தரணி போற்றச்
சுந்தரமால் வரையுதித்த தீர்த்தபலம்
யாருரைப்பார் செகத்தி னென்றார்.

எ-து. இந்தப் பூமண்டலத்தின் அதிசிலாக்கியமாகிய சஞ்சீவி நகரத்தில் விளங்கிப் பிரகாசிக்கின்ற கோலாசலத்தில் உதிக்க வேண்டித் திரிலோகங்களிலும் வாசம் செய்கின்ற மூன்றரை கோடிப் புண்ணிய தீர்த்தங்களும், அரிதாகிய தவத்தினைச் செய்து, அந்தக் கோலாசலத்தின் முதன்மையாகத் திருவவதாரம் செய்தருளிய ஸ்ரீமகாலட்சுமியினது திருவடிகளிலே உற்பவித்துத் தங்களுடைய பாவபலன்களைக் கடந்தார்கள். ஆகையால், அந்த இலக்குமியார் தீர்த்தத்தில் சர்வ காலங்களிலும், தனுர் மாதம் ஏகாதசியில் சமஸ்த ஆததும கோடிகளும் மூழ்கி, திவ்விய லோகங்களை யடைவார்கள். அந்தத் திவ்விய சுந்தர சொர்ண பர்வதத்தில் உதித்த இலக்குமியார் தீர்த்த பலத்தினை இந்தத் திரிலோகங்களிலும் சொல்வதற்கரிதாம் என்று அருளிச் செய்தார் ஸ்ரீ அரங்கநாயகர் என்றவாறு. (7)

## Ilakkumi tīrttam

*muntiyamūṉ ṟaraikōṭi mānatiyun*
*tavampurintu mutaṉmai yāṉa*
*centiruviṉ tiruvaṭiyiṉ ceṉittiṭappoṉ*
*ṉilakkumiyār tīrtta meṉṟē*
*cantatamum viḷaṅkumiku taṉuvēkā*
*tēciyiṉiṟ taraṇi pōṟṟac*
*cuntaramāl varaiyutitta tīrttapalam*
*yāruraippār cekatti ṉeṉṟār.*

## The Lakṣmi Spring

"In days of yore, Lakṣmi came here
And performed austerities. Streams
Numbering three and a half crores
That flow in all the three worlds

Rose from her feet. Hence this pond
Is known as Lakṣmi spring. Those of you
Who bathe here in the eleventh day
Of tanur month,[1] gain everything.
Who can describe the greatness of the pond
Which is found in this beautiful hill?

(வளர்பிறை ஏகாதசியில் இலக்குமி தீர்த்தப்பலன்)

671. பின்னுமிந்தத் தலப்பெருமை யியல்பைக் கூறப்
பிரமனுக்கு மரிதாகும் புவியின் மீது
மன்னவர்கள் விரும்பியிடுந் தனுமா தத்தின்
வளரேகா தேசியினில் வண்மை யான
நன்னயஞ்சே ரிலக்குமியார் தீர்த்த மாடி
நமதடியி னறுந்துளப மருச்சித் தந்தப்
பொன்னடியி னிகழ்தீர்த்தங் கொண்டோர் கோடிப்
பெருங்குலத்தோர் பரமபதம் பொருந்தி வாழ்வார்.

எ-து. பின்னும் அந்த வராக தலத்தினது புண்ணிய பலன்களைக் கூறவேண்டுமென்றால் சதுர்முகனுக்கும் அரிதாயிருக்கின்றது. இந்தப் பூமண்டலங்களின் சமஸ்த இராசராசாக்களும் அபேஷிக்கின்ற தனுர்மாதத்தில் சுக்கில பக்ஷங் கூடிய ஏகாதசியில் பரம பவுத்திரமாகிய இலக்குமியார் தீர்த்தத்தில் மூழ்கி நமது திருவடிகளின்றும் துளபம் முதலாகிய புஷ்பாதிகளால் அருச்சித்து ஸ்ரீபாத தீர்த்தங்களைக் கொள்ளுவோர்கள் சென்ம சென்மங்களில் செய்த மகாபாதகங்களெல்லாம் நிவர்த்தியாயவர்கள். மாதா, பிதா முதலிய கோடி குலத்தோர்களெல்லாம் பரம பதத்தில் பொருந்தி நித்திய சூரியர்களாய் நிலைபெற்று வாழ்வார்கள் என்றவாறு. (8)

தனுமாதம் - தனுர்மாதம் - மார்கழி மாதம்

உரை - சுக்கிலபட்சம் - வளர்பிறை நாட்கள்.

Vaḷarpiṟai ēkātaciyil Ilakkumi tīrttappalan̲

*pin̲n̲umintat talapperumai iyalpaik kūṟap*
*piraman̲ukku maritākum puviyin̲ mītu*
*man̲n̲avarkaḷ virumpiyiṭun tan̲umā tattatin̲*
*vaḷarēkā tēciyin̲il vaṇmai yān̲a*

1. December - January

*naṉṉayañcē rilakkumiyār tīrtta māṭi*
*namataṭiyi ṉaruntuḷapa maruccit tantap*
*poṉṉaṭiyi ṉikaḻtīrttaṉ koṇṭōr kōṭip*
*peruṅkulattōr paramapatam porunti vāḻvār.*

## The Eleventh Day of the Waxing Moon

"Even Piramaṉ would find it difficult
To describe the fame of this holy centre;
Kings on earth come in taṉur month
On the eleventh day of the waxing moon
To bathe in the auspicious Lakṣmi spring.
When they take the water that is poured
On my feet worshipped with tuḷaci leaves,
They gain the high heavens
For their ancestors as well.

(கோலமலை அலங்காரம்)

672. ஆதலினா லித்தலம்போற் சிறந்த திந்த
வகிலவுல கங்களிலு மரிதாம் வானோர்
[1]தீதகலச் சதுர்முகனுக் கறைந்தா ரந்தத்
திருமொழியைச் சிரந்தாங்கித் தேவ தேவ
னோதியவூ ழியப்பணிக ளுவந்த ளிக்கு
முயர்மயனுக் குரைத்தனரம் மொழியா லந்தச்
சோதிதிருக் கோலவரை சூழ்ந்தி லங்குந்
துய்யநக ரலங்கரித்துத் துரிதிற் சென்றான்.

எ-து. வாராய் தேவராசனே! ஆதலினால் இந்த வராகத் தலமானது அதி சிலாக்கியமாகும். இந்த அகிலமாகிய லோகா லோகங்களெல்லாம் இதற்கு இணையாக மாட்டாதாகையால் இந்த மகா சிரேஷ்டமாகிய தலத்தில் உமக்கு மகுடாபிஷேகம் செய்யத் தக்கதாய் நிச்சயித்தோம் என்றருளிச் செய்து, தேவர்களுடைய அபீஷ்டங்களெல்லாம் நிறைவேறத்தக்கதாய்ச் சதுர்முகனுக்கு அனுக்கிரகம் செய்ய, அவரது திவ்வியமாகிய மொழியினைச் சிரேஷ்டமாக வகித்துத் தேவ தேவோத்தமனுடைய ஊழியப் பணிவிடைகள் அன்பினால் செய்தமைக்கின்ற பயனுக் கருளிச் செய்ய, அந்த மயனானவன் ஆயிரத்தெட்டு மாற்றாகிய சொர்ண பர்வதமானது சோதிப் பிரகாசமாய் விளங்குகின்ற கோலாசலத்தினைச் சூழ்ந்த சஞ்சீவி நகரங்களெல்லாம் ஒன்பது வகையாயுள்ள நவரத்தினங்களினால் அலங்கரித்து அதிக துரிதமாக நடந்தான் மயனானவன் என்றவாறு. (9)

பா.வே. - 1. தீதகலச் சோமுகனைத் தடுத்தாட் கொண்ட
திருக்கரத்தா னாட்டியசம் பீர மென்றுங்
காதலினால் ராசேந்திர கற்ப கோடி
காலமிந்தக் கோலவரை கமழா நின்று
மாதவன்றன் னருளாலே தழைத்திங் கோங்கு
மதுபோல மாநிலத்தோர் மகிழ்ந்து வாழ்வார்.

## Kōlamalai alaṅkāram

*ātalinā littalampōṟ ciṟanta tinta*
*vakilavula kaṅkaḷilu maritām vāṉōr*
*tītakalac caturmukaṉuk kaṟaintā rantat*
*tirumoḻiyaic cirantāṅkit tēva tēva*
*ṉōtiyavū ḻiyappaṉika ḻuvanta ḻikku*
*muyarmayaṉuk kuraittaṉaram moḻiyā lantac*
*cōtiruk kōlavarai cūḻnti laṅkun*
*tuyyanaka ralaṅkarittut turitiṟ ceṉṟāṉ.*

## Kōla Hill in Decoration

"Hence it is difficult to find a place
As holy as this in all the worlds."
So he spoke to Piramaṉ and thus chased away
The evil that had afflicted the gods.
Piramaṉ listened to the words with humility,
And told Mayaṉ who is an achiever.
Mayaṉ quicky decorated the incorruptible city
Of Kōla Hill that is enclosed in brilliance.
Then he took his leave.

(மயன் கோலமலையை அலங்கரித்தல்)

673. சுந்தரமா கியவயிரா வதத்தின் கோடு
செழித்தஇளம் பிறைபோலத் திகழ்ந்து தோன்ற
மந்திரமாய் வரையதுபோல் விளங்குங் கோடி
மதிகதிரா மெனஒளிர அலங்க ரித்துச்

சந்திரவா விகள்கூபத் தடாகப் பந்திச்
சாலைகள்சோ லைகள்அமைத்துத் தாழ்வி லாத
இந்திரமா மணிமேடை மாணிக் கத்தா
னிருநான்கு திசைகளும்செய் திசைத்தா னன்றே.

எ-து. அப்படிப் பரம பாவனமாகிய திருப்பாற்கடலில் உற்பவித்த அதி சுந்தர அயிராவதத்தின் கோடானவை இரண்டு பக்கங்களினும் பூரணச் சந்திரன் உதித்ததுபோல விளங்கிப் பிரகாசிக்கவும். மந்தரகிரிக்குச் சமதையாகிய உன்னித சவுந்தரிய மானது கோடி சந்திர சூரியர் உதித்தது போல இரத்தின பூஷணங்களினால் அலங்கரித்துப் பின்னும் அந்தக் கோலாசலக் கிரியினைச் சுற்றிலும் சந்திரகாந்தத்தினால் இழைத்த வாவி, கூப, தடாக பந்திகள், சாலைகள், சோலைகள், மாடமாளிகை, கூட கோபுரம், மடு, குளம், தளங்கள், மெத்தைகள், மேடைகள், இந்திர நீலங்களினாலே அமைத்து மாணிக்கங்களினாலே எட்டுத் திக்கினும் படித்துறைகள் ஆகியவற்றை இயற்றி அழகு விளங்கத்தக்கதாய் அமைத்தான் அம்மயன் என்றவாறு. (10)

(11, 12, 13 ஆகிய மூன்று பாடல்கள் காணப்பெறவில்லை)

## Mayaṉ kōlamalaiyai alaṅkarittal

*cuntaramā kiyavayirā vatattiṉ kōṭu*
*ceḷittaiḷam piṟaipōlat tikaḻntu tōṉṟa*
*mantiramāy varaiyatupōl viḷaṅkuṅ kōṭi*
*matikatirā meṉaoḷira alaṅka rittuc*
*cantiravā vikaḷkūpat taṭākap pantic*
*cālaikaḷcō laikaḷamaittut tāḻvi lāta*
*intiramā maṇimēṭai māṇik kattā*
*ṉirunāṉku ticaikaḷumcey ticaittā ṉaṉṟē.*

## Mayaṉ's Decorations

There was a lovely crescent made
Like the tusks of handsome Airāvatam;
A million rays of the moon flashed
From the hill. Moonstone ponds, tarns,
Lakes, roads, groves were created. Also
A high seat made of sapphires
Set with gems on all its eight sides.

(இந்திரன் வேண்டுகோள்)

674. வேதவிதி முறைவழுவா தியற்று கின்ற
விரிஞ்சனடி பரவிதிரு வரங்கன் பாத
மாதரவென் றேயடைந்தங் கறைவா னுந்த
னகன்றபெரும் புகழினையா ரறிவா ரிந்த
ஓதவரி தாகியமா தலத்தி னென்று
மும்பர்புகழ் விளங்கிடவெந் நாளு மெந்தன்
தீதகலப் பொன்னினடி சாற்ற வென்று
தேவாதி தேவனடி பணிந்து நின்றான்.

எ-து. வேத விதி முறையின்படி மகுடாபிஷேகம் செய்வித்த பிரமதேவரைப் பணிந்து திருவரங்க நாயகன் திவ்விய கமலம் போன்ற திருவடியினை ஆதரவாக அடைந்துருகி விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் மகானுபாவரே! உமது அளவிடப்படாத அகன்ற பெரும் புகழினை யார் அறியப் போகிறார்கள்? இந்த ஓத அரிதாகிய வராக க்ஷேத்திரத்தில் சர்வ காலங்களிலும் தேவர்கள் நாமதேயம் விளங்கிப் பிரகாசிக்கத்தக்கதாயும். அடியேன் வினைப் பயனானது தீர்ந்து உமது திவ்விய சரணார விந்தத்தினைக் காணத்தக்கதாயும் தேவரீர் எழுந்தருள வேண்டும் தேவ தேவனே என்று அவர் திருவடிகளிலே பணிந்து நின்றான் இந்திர மகாராசன் என்றவாறு. (14)

**Intiraṉ vēṇṭukōḷ**

*vētaviti muṟaivaḻuvā tiyaṟṟu kiṉṟa*
*viriñcaṉaṭi paravitiru varaṅkaṉ pāta*
*mātaraveṉ ṟēyaṭaintaṅ kaṟaivā ṉunta*
*ṉakaṉṟaperum pukaḻiṉaiyā raṟivā rinta*
*ōtavari tākiyamā talatti ṉeṉṟu*
*mumparpukaḻ viḷaṅkiṭaven nāḷu mentaṉ*
*tītakalap poṉṉiṉaṭi cāṟṟa veṉṟu*
*tēvāti tēvaṉaṭi paṇintu niṉṟāṉ.*

**Intiraṉ's Prayer**

Saluting the feet of Piramaṉ who works
Never straying from Vedic norms,
And drawing to Araṅkaṉ's feet as refuge,
Intiraṉ said: "Who can gauge your greatness?

In this holy place that beggars description,
The fame of gods should glow brilliant,
My misdeeds of the past be nullified,
And I must worship you always. Hence,
Do stay here for all time."

**(வேண்டுகோளின்படி அரங்கன் எழுந்தருளுதல்)**

675. **நித்தியபரி பூரணாங் கிசைவி ளங்கு**
**நிகரிலாப் பொன்னரங்கன் கமல பாதம்**
**வெத்திபுக ழரனயன்மா தவர்விண் ணோர்கள்**
**விரும்பிமல ரடிபணிந்து வினையங் கூறச்**
**சித்திரைவிண் மீன்மிதுனத் திங்க ளான**
**சிறந்தசுப தினத்தினெழுந் தருள இந்திரன்**
**முத்தின்மணிக் குடைநிழற்ற முனிவர் வாழ்த்த**
**முளரிச்செந் திருவினொடு முகுர்த்தங் கொண்டார்.**

எ-து. நித்தியமாகிய பரிபூரணாங் கிசை விளங்கத் தக்கதாகப் பதினாலு லோகங்களிலும் நிகரில்லாமல் விளங்குகின்ற ஸ்ரீ அரங்கநாயகருடைய கமலம் போன்ற திவ்விய சரணார விந்தங்களில் வேத முதல்வனாகிய பிரமதேவனும் சிவனும் மகாரிஷிகளும், தேவாகளுமு மிகுந்த இன்பத்துடனே பணிந்து வேத வாக்கியங்களினாலே துதிசெய்ய, கிருபை கூர்ந்து விண்மீனாகிய சித்திரை நட்சத்திரத்தில் மிதுனமாசத்தில் பிரமோற்சவத்தினை நடாத்திக்களிகூர்ந்து, இந்தச் சுபதினத்தில் எழுந்தருள, இந்திர மகாராசன் முத்தின் குடையினைத் தாங்கிவர, முனிவர் கூட்டங்கள் வேதாத்தியானங்கள் செய்ய, ஸ்ரீமகாலட்சுமி சமேதராய் முகுர்ததம் கொண்டு எழுந்தருளினார் ஸ்ரீ அரங்கநாயகர் என்றவாறு. (15)

மிதுனத் திஙகள் - ஆனி மாதம்

**இந்திரன் மகுடாபிஷேக அத்தியாயம் முற்றிற்று.**

## Vēṇṭukōḷiṉpaṭi Araṅkaṉ eḻuntaruḷutal

*nittiyapari pūraṇāṅ kicaivi ḷaṅku*
*nikarilāp poṉṉaraṅkaṉ kamala pātam*
*vettipuka ḻaraṉayaṉmā tavarviṇ ṇōrkaḷ*
*virumpimala raṭipaṇintu viṉaiyaṅ kūṟac*

*cittiraivin minmitunat tinka lāna*
*cirantacupa tinattinelun tarula intiran*
*muttinmanik kutainilarra munivar vāltta*
*mulariccen tiruvinotu mukurttan kontār.*

## Arankan Accedes

Arankan is ever present as the Supreme
And has no equal in the fourteen worlds.
Even as Civan, Piraman, the sages
And the immortals saluted at his lotus-feet
And sang his praise and conveyed their desire,
On the auspicious Cittirai asterix in āni month,[1]
He came. Intiran held the umbrella.
The sages gave blessings. He joined Lakṣmi
And resided in the Kōla Hill ever after.

1. June - July.

## 37. முப்பத்து மூன்றாவது
## இந்திரதீர்த்த விசேஷம் உரைத்த அத்தியாம்

வராகதலத்திலே எழுந்தருளிய அரங்கநாயகர் இந்திரன் திருவாராதனம் செய்து துதிக்கத்தக்கவராய்த் தூய்மையாக விளங்கிய இந்திர தீர்த்தத்தில் எழுந்தருளினார்.

கடல் பொங்காது வற்றச்செய்து காக்கும் அழற்கடவுளின் வேண்டுகோளின்படி அவர் பூசித்து வணங்கத்தக்கவராய் அங்கியத் தீர்த்தத்தில் அமைந்த நீராழி மண்டபத்தில் எழுந்தருளி அங்கியங்கடவுளின் இசையை உண்டுகளித்தார்.

எமதருமராசனானவன் பதினாறு வகையான உபசாரங்களைச் செய்து துதிக்கத்தக்க நிலையில் தருமராசன் மகிழ்ந்திருக்கும் தீர்த்தத்தில் இருந்த நீராழி மண்டபத்தே எழுந்தருளி அவனது ஆராதனத்தை ஏற்றார்.

நிருதியின் விருப்பப்படி அவன் ஆராதனைசெய்ய வீற்றிருந்த வேத பாராயணங்களையும், துந்துமியின் முழக்கங்களையும் செவிமடுத்தார்.

வருணமேகம் போன்றவராகிய அரங்கநாயகர் வருணனானவன் பூசிக்கத்தக்கவராய்க் கன்னியர்கள் நீராடிமகிழும் தீர்த்தத்தின் நீராழி மண்டபத்தில் எழுந்தருளி வருணனது பூசையினை ஏற்றார்.

வாய்வு பகவான் தன் பெயரால் செய்தமைத்த வாய்வு தீர்த்தத்தில் அரங்க நாயகரை எழுந்தருளச் செய்து திருவாராதனம் செய்து மகிழ்ந்தார். இதனை முப்பத்திரண்டு உபநிடதங்களும் கூறுகின்றன.

அரங்கநாதரின் திருவடிகளில் திருவாராதனை செய்ய விரும்பிய குபேரனின் விருப்பத்தை ஏற்று குபேரதடாகத்தில் எழுந்தருளி அவனது உபசாரத்தை உகந்து ஏற்றார்.

ஈசான மூர்த்தியானவர் தமது தீர்த்தத்தில் எழுந்தருளச் செய்து அரங்கநாயகரை யசுர்வேதத்தினாலே போற்றிப் புகழ்ந்தார்.

சூரிய தீர்த்தத்தில் இறைவனை எழுந்தருளச் செய்து குறிஞ்சிப் பண்ணினால் தோத்தரித்தார் சூரிய பகவான்.

சந்திரனையும் கங்கையையும் தரித்து விளங்கும் பரமசிவன் தமது மகேச தீர்த்தத்தில் அரங்கநாயகரை நிலைபெறச் செய்தார். அரங்கநாயகரும் அவருக்கு அருள்புரிந்தார்.

தேவமகளிர் பொன்விளக்கேந்திவர, மார்க்கண்டேயர் முதலாய முனிவர்களின் தீர்த்தங்களுக்கு எழுந்தருளி அவர்களுடைய திருவாராதனங்களைப் பெற்றார்.

இறுதியாக இலக்குமியார் தீர்த்தத்தில் வீற்றிருந்தருளினார். இந்திரன் முதலிய தேவர்கள் துதித்தனர். துந்துமிகள் முழங்கின. நாரதனின் வீணை ஒலித்தது. இவ்வாறு சந்திரபுட்கரணி

என்னும் அத்தீர்த்தத்தில் வீற்றிருந்தபோது இரதியும் திலோத்தமையும் சாமரை வீசினர். அரசர்களெல்லாம் புட்பவிசிறியால் விசிறினார்கள். இந்திரனும் சயந்தனும் தவளசத்திரக்குடையினைத் தாங்கி நின்றார்கள். சந்திரனும் சூரியனும் ஆலவட்டம் ஏந்தினர். கந்திருவர் யாழ்ஒலி எழுப்பினர். அரம்பையர் நடனமாடி மலர்களைத் தூவினார்கள். இயக்கர்கள் தேன்மாரி பொழிந்தனர்.

### (இந்திர தீர்த்தம்)

**676. சந்திரனா ரமுதகிர ணங்கடுளிப்**
**பெருகியதைச் சமைந்து நின்ற**
**சுந்திரனார் [1]பதுமமலர்த் திருவடியிற்**
**பெருகியநீர்த் தூய்மை குன்றா**
**மந்திரமாம் வேதத்தின் சாகையா**
**ரணந்துதிப்ப மகிழ்ந்த ரங்கன்**
**இந்திரனார் தீர்த்தத்தின் திருவாரா**
**தனஞ்செய்ய விசைந்தா னையன்.**

எ-து. இந்திரமகாராசனது தீர்த்தத்தில் எழுந்தருளினார். அந்தத் தீர்த்தம் எத்தன்மைய தென்றால் சோடச கலையினை விரித்தமுத கிரண சமூகங்களால் சுந்திர பகவானானவன் அமுதத்தாரையினைப் பொழிதல் போலவும், சுத்திர அரங்கருடைய திருவடிக் கமலங்களில் பெருகிய பரமபாவனமான கங்கையைப் போலவும், சமூர்த்தியாய் நிறைந்த தூய்மை மிகுந்தோங்கா நின்ற இந்திர தீர்த்தத்தி னெழுந்தருளினார். அப்பொழுது முனிவர் கூட்டங்களானவர்கள் மந்திரமாகிய வேதத்தினது சாகையினாலேயும் ஆரணத்தினாலேயும் துதிக்கத்தக்கதாக மகிழ்ச்சியை அடைந்த அரங்க நாயகரானவர், இந்திரனானவன் தனது தீர்த்தத்தில் திருவாராதனம், சோடசவுபசாரத்துடனே செய்ய இசைந்திருந்தார் ஐயனானவர் என்றவாறு. (1)

சாகை - பிரிவு. ஆரணம் - வேதத்தின் ஞானப் பகுதி.

**பா.வே.** - 1. சடைக்கங்கை வதிதலெனப்

## Intira tīrttam

*cantiranā ramutakira ṇaṅkaṭuḷip*
*perukiyataic camaintu niṉṟa*
*cuntiraṉār patumamalart tiruvaṭiyiṟ*
*perukiyanīrt tūymai kuṉṟā*
*mantiramām vētattiṉ cākaiyā*
*raṇantutippa makiḻnta raṅkaṉ*
*intiraṉār tīrttattiṉ tiruvārā*
*taṉañceyya vicaintā ṉaiyaṉ.*

## XXXVII. The Glory of the Intiraṉ Spring

### Intiraṉ Spring

The water here was like the nectar
Streaming from the rays of the moon;
It was like the holy Ganges
Flowing from the Lord's lotus-feet;
Here the Lord felt happy when worshipped
Through the different branches of the Vēda;
Here in the Intiraṉ spring, Piramaṉ agreed
To perform the ritual worship.

(அங்கி தீர்த்தம்)

677. பொங்குகட லிவ்வுலகை யழியாமல்
வடவனலம் பொதிந்த நாப்பண்
இங்கிதமா யமர்ந்தருளி நீர்சுவற்றிக்
கரணியினி னிலகச் செய்யும்
அங்கிதன தீர்த்தத்தி னரங்கநா
யகனடியை யருச்சித் தேத்தச்
சங்கிதசாம் பிராச்சியத்தி னிசைமாந்திப்
பரதவிலக் கணமுங் கண்டான்.

எ-து. கடலானது பொங்கி இவ்வுலகத்தினை அழிக்காமலிருக்க வடவாவனலமாய் அந்தக் கடலினது நடுப்பிரதேசத்தில் வதிந்து பெருகாநின்ற நீரினைச் சுவறச் செய்து அதன் கரணியிலே அமரத் தக்கதாகச் செய்கின்ற அங்கிதேவனானவன் தனது தீர்த்தத்தின்கண் மருவாநின்ற நீராழி மண்டபத்தில் அரங்கநாயகனை எழுந்தருளச் செய்து, அவருடைய பாதத்தாமரையினைத் துளபம் முதலிய சுகந்த அலர்களாலே அருச்சனை செய்து தோத்திரம் செய்து, அவ்விடத்தில் சங்கீத சாம்பிராச்சிய மாகிய இசை ஞானத்தைத் திருச்செவியில் உண்டு களித்த பின்பு பரத இலக்கணப்படி அரம்பையர்கள் நடிக்கத்தக்கதாய்க் கண்டருளினார் என்றவாறு. (2)

அங்கி - அக்கினி. வடவனலம் - வடவாமுகம்; ஊழித்தீ. கரணி - சஞ்சீவி; வெளி.

### Aṅki tīrttam

*poṅkukaṭa livvulakai yaḻiyāmal*
*vaṭavaṉalam potinta nāppaṇ*
*iṅkitamā yamarntaruḷi nīrcuvaṟṟik*
*karaṇiyiṉi ṉilakac ceyyum*

*aṅkitaṉa tīrttatti ṉaraṅkaṉā*
*yakaṉaṭiyai yaruccit tēttac*
*caṅkitacām pirācciyatti ṉicaimāntip*
*paratavilak kaṇamuṅ kaṇṭāṉ.*

## Akkiṉi Spring

Akkiṉi is the one who has imbedded
The Vaṭavā fire in the sea, so that
It would not rise to destroy the worlds;
He made the Lord rest in the Cañcīvi hall
Mid the Akkiṉi spring. He worshipped
The Lord's feet in the premises.
The Lord listened to fine musical creations
And also watched the grammar of Parata dance.

(சோடச உபசாரம்)

678. தண்டமது பாவியரைப் புரிந்தொறுக்கு
நடுவன்றாட் கன்பு பூண்டங்
கண்டமது புகழ்ந்தேத்து மருச்சனைகள்
மிகப்புரிந்தங் கரங்கன் றன்னைக்
கண்டமதாற் றொனித்தேத்திக் [1]கமழ்திருவா
ராதனத்தைக் கவினாய்க் கொண்டு
சண்டன்மகிழ் தீர்த்தத்தின் சினகரத்தின்
[2]வீற்றிருந்தான் தரணி போற்ற.

எ–து. தண்டஞ் செய்து பாவிகளை யெல்லாம் கண்டிக்கா நின்ற தர்ம ராசனானவன் அரங்கநாயகரது பாதத் தாமரையினுக்கு அன்புபூண்டவனாய் அண்டங்களெல்லாம் புகழ்ந்தேத்துகின்ற அருச்சனை முதலாகிய சோடச உபசாரங்கள் செய்து, கண்டமானது தொனிக்கத்தக்கதாகிய தோத்திரங்களால் துதித்து, அவனது திருவாராதனத்தை உகப்பாகிய அழகாய்க் கொண்டவராய்ச் சண்டனாகிய தர்மராசனானவன் மகிழ் சிறந்தருளிய தீர்த்தத்தின் சினகரமாகிய நீராழி மண்டபத்தின் வீற்றிருந்தருளினார் இவ்வுலகங்களெல்லாம் போற்றத் தக்கதாக என்றவாறு. (3)

ஒறுக்கும் – தண்டிக்கும்.

பா.வே. – 1. யவன்றிருவா. 2. மகிழ்ந்திருந்தான்.

## Cōṭaca upacāram

*taṉṭamatu pāviyaraip purintoṟukku*
*naṭuvaṉṟāṭ kaṉpu pūṇṭaṉ*
*kaṉṭamatu pukaḻntēttu maruccaṉaikaḷ*
*mikappurintaṉ karaṅkaṉ ṟaṉṉaik*
*kaṇṭamatāṟ ṟoṉittēttik kamaḻtiruvā*
*rātaṉattaik kaviṉāyk koṇṭu*
*cantaṉmakiḻ tīrttattiṉ ciṉakarattiṉ*
*viṟṟiruntāṉ taraṇi pōṟṟa.*

## The Sixteen-fold Worship

Yamaṉ who punishes those who commit sins
Was full of love for the feet of Araṅkaṉ.
He performed worship by singing hymns
In full-throated ease, and rituals
That were meaningful and beautiful;
The Lord rested in the hall at the centre
Of the spring that was made by Yamaṉ.

(நிருதி வணங்குதல்)

679. பருதியென வொளிவிடுக்குங் கனகதண்
டிகையேறும் [1]பணைத்த தோளான்
குருதிகவிழ் முத்தலைவேல் சத்திவே
லேந்திகுறை யாத சீர்த்தி
நிருதியரங் கனைவழுத்தி யேத்தியிட
நின்மலனு நீண்ட தான
சுருதிமுழங் கிடமகிழ்ந்தான் தூரியங்க
ளமரர்துவைத் திருந்தா ரங்கன்.

எ-து. ஆயிரம் கிரணங்களை விரித்தொளியினை விரிக்கா நின்ற சூரியனைப் போல கனகமயமாகிய தண்டிகையினை நடாத்துகின்ற பருத்த தோளினையுடையவன்; குருதியாகிய இரத்தங்களைக் கவிழ்க்கா நின்ற முத்தலை வேலாகிய திரிசூலமும், சத்திவேலினையும் தாங்கிக் குறைவு படாத கீர்த்தியினையுடைய நிருதியானவன் அரங்கநாயகனைத் தோத்தரித்து வந்திக்க, நீண்டிருக்காநின்ற வேதபாராயணம் முழங்க மகிழ் சிறந்தவராய் வீற்றிருந்தருளினார் தேவ துந்துமி முழங்கத்தக்கதாக வென்றவாறு. (4)

கனக தண்டிகை - பொன்னாலான சிவிகை நிருதி - தென்மேறகுத திசைக்குரிய திக்குபபாலன துவைத்தல் - இசைத்தல்.

**பா.வே.** - 1. பருமத் தோளான்

## Niruti vaṇaṅkutal

*parutiyeṉa voḷiviṭukkuṅ kaṉakataṇ*
*ṭikaiyēṟum paṇaitta tōḷāṉ*
*kurutikavil muttalaivēl cattivē*
*lēntikuṟai yāta cīrtti*
*nirutiyaraṅ kaṉaivaḻutti yēttiyiṭa*
*niṉmalaṉu niṉṟa tāṉa*
*curutimuḻaṅ kiṭamakiḻntāṉ tūriyaṅka*
*ḷamarartuvait tiruntā raṅṅaṉ*

## Niruti's Worship

Niruti has firm shoulders and travels
In a golden vehicle that is sun-bright.
He carries the trident and Cakti lance
That revels in blood, and is famous.
He sang the praises of Araṅkaṉ.
The Lord enjoyed the extended recitation
Of the scriptures. The gods sounded drums.

(வருணன் துதித்தல்)

680. தருணமுலைக் கன்னியர்கள் மிகக்குடைந்து
மஞ்ஞையெனக் களிகூர்ந் தாடும்
அருணவுத யம்போன்ற நீராழி
மண்டபத்தி [1]னமலன் தன்னை
வருணனருச் சனைபுரிய வதித்திருந்தங்
கருள்புரிந்தான் வண்மை யான
வருண்மடைக டிறந்தூற்றுப் பெருக்கெடுத்த
வாரமுத மனைய மேகம்.

எ-து. யவவனமாகிய கொங்கையினையுடைய கன்னியாகளானவாகள தீர்த்தமாடி மயிலினைப் போல களிகூாந்தாடா நினற சூரியனைப போனற நீராழி மணடபத்தின் எழுந்தருளச் செய்து அரஙகநாயகனது பாதத் தாமரையின கண வருணராசனானவன

அர்ச்சனை செய்து ஆராதனை புரிய மகிழ்ச்சியை அடைந்திருந்தார். வண்மையான அருளாகிய நீரானது மடை திறந்து ஊற்றுப் பெருக்கெடுக்காநின்ற வருண மேகம் போன்றவர் என்றவாறு. (5)

தருணம் - பருவம், இளமை.

பா.வே. - 1 அரங்கன்

## Varuṇan̲ tutittal

*taruṇamulaik kan̲n̲iyarkaḷ mikakkuṭaintu*
*maññaiyen̲ak kaḷikūrn tāṭum*
*aruṇavuta yampōn̲ra nirāḷi*
*maṇṭapatti n̲amalan̲ tan̲n̲ai*
*varuṇan̲aruc can̲aipuriya vatittiruntaṅ*
*karuḷpurintān̲ vaṇmai yān̲a*
*varuṇmaṭaika tiṟantūṟṟup perukkeṭutta*
*vāramuta man̲aiya mēkam.*

## Varuṇan̲'s Worship

In that dawn-bright hall in the lake
Where young damsels with tender breasts
Bathe happily like peafowls,
Araṅkan̲ was worshipped by Varuṇan̲. The Lord
Felt happy and appeared as a rainbearing cloud
That pours grace in a constant shower.

(வாயு வணங்குதல்)

681. குருத்துபா தவம்பொழியுந் தண்மலர்க
டாமரையிற் றுவக்குண் டாங்கு
திருத்துசீர் நீரினிடை யலைப்புண்டு
கிடந்தொளிருந் தெய்வ வாவி
மருத்துதன்பேர் பெறச்செய்தங் கரங்கனையவ்
விடத்திருத்தி மகிழ்வா னர்ச்சித்
திருத்துவதை வேதாந்த மெண்ணான்கு
மிகத்துதித்தங் கிருக்கு மாதோ.

எ-து. குருந்த மரமானது பொழிகின்ற குளிர்ந்த மாமலரானது தடாகப் பந்திகளிலே அலராநின்ற தாமரை மலரிலே கட்டுப்பட்டு, மீட்டும் திருத்தமாகிய நீரிலே அலைப்புண்டு

கிடந்தொளிராநின்ற தெய்வீகத்தன்மையாகிய வாவியை, மருததாகிய வாயவு பகவானானவர் தனது பெயரினைப் பெறும்படியாய்ச் செய்தமைதது அரஙகநாயகரை அந்தத் தீர்த்தத்தின் எழுந்தருளச் செய்து, மகிழ்ச்சியினாலே திருவாராதனம செய்தருளிய கீர்த்தியினை முப்பத்திரண்டு உபநிடதமும் துதித்தங்கு மகிழ் சிறந்தார்கள என்றவாறு (6)

குருத்து - குருந்தமரம். பாதவம் - மரம, தோப்பு வாவி - குளம மருதது - வாயுபகவான

## Vāyu vaṇaṅkutal

*kuruttupā tavampoḻiyun taṉmalarka*
*ṭāmaraiyir ṟuvakkuṉ ṭāṅku*
*tiruttucir nīriṉiṭai yalaippuṇṭu*
*kiṭantoḷirun teyva vāvi*
*maruttutaṉpēr peṟacceytaṅ karaṅkaṉaiyav*
*viṭattirutti makiḻvā ṉarccit*
*tiruttuvatai vētānta meṉṉāṉku*
*mikattutittaṅ kirukku mātō.*

## Vāyu's Worship

In that lake the wild-lime tree showered
Flowers on the lotuses in blossom.
Bound in them and released later,
The flowers floated in the pure stream.
This lake was created by Vāyu in his name.
He made Araṅkaṉ rest here and worshipped him.
The thirty-two Upanishads praised the sight.

(குபேர தடாகம்)

**682.** **கற்பகத்தான் வளமதினு மிகுந்தோங்கு**
**செல்வமுளை கவின்பொற் றோளா**
**னற்பகத்தா னரங்கனிரு தாடொழுதங்**
**கருச்சிக்க வளவி லாத**
**நட்பகத்தான் மகிழ்ந்தருளி யவர்க்கருள்கூர்ந்**
**தருளளித்தா னளினக் கண்ணன்**
**புட்பகத்தான் தடாகமதை விட்டகன்று**
**முனிவர்புகழ்ந் தேத்தப் புக்கான்.**

எ-து. கற்பகத்தாருவின் நிழலிலே வீற்றிருந்து சுரபி, சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி முதலாகிய செல்வத்தினாலே அழகு நிறைந்தோங்காநின்ற தோளினையுடையவன் அன்பு

பொருந்திய அந்தக்கரணத்தினாலே அரங்கநாயகனது பெரிய சரணத்தினைத் தண்டன் சமர்பித்துத் திருவாராதனை செய்ய, அதை உகந்தருளினவராய் அருளைச் சுரந்தார் தாமரைக் கண்ணையுடைய கர்த்தாவானவர். பின் புட்பக விமானத்தையுடைய குபேரனது தடாகத்தை விட்டகன்று முனிவர்களெல்லாம் புகழ்ந்தேத்தத் தக்கதாக அப்பால் எழுந்தருளினார் என்றவாறு. (7)

அற்பகத்தான் - அன்பு - அகத்தான் - அன்பினை உடையவன். அன்பு - அற்பு என வலித்தல் விகாரமாயிற்று நளினக்கண் - தாமரைக் கண்.

## Kupēra taṭākam

*karpakattāṉ vaḷamatiṉu mikuntōṅku*
*celvamuḷa kaviṉpoṟ ṟōḷā*
*ṉaṟpakattā ṉaraṅkaṉiru tāṭoḻutaṅ*
*karuccikka vaḷavi lāta*
*naṭpakattāṉ makiḻntaruḷi yavarkkaruḷkūrn*
*taruḷaḷittā ṉaḷiṉak kaṇṇaṉ*
*puṭpakattāṉ taṭākamatai viṭṭakaṉṟu*
*muṉivarpukaḻn tēttap pukkāṉ.*

## The Kupēra Spring

Kupēraṉ with handsome shoulders has riches
That are richer than that of *kaṟpaka* tree.
With a loving heart he worshipped the feet
Of Araṅkaṉ. The lotus-eyed Lord was pleased
And granted him grace. He then left the lake
Of Kupēraṉ who owns the puṣpaka air-chariot.

(ஈசானன் வணங்குதல்)

683. அசுபதிக ளிரதபதி யவர்களெலா
மிகமகிழ்ந்தங் கதிச யிக்குங்
கசபதிகள் காலாள ரவர்களெலாம்
வந்திக்குந் தேசு மிக்க
பசுபதியா மீசானன் மிகமகிழ்ந்து
பரந்தாமன் பதத்திற் றாழ்ந்தங்
கசபதியென் றேதுதிக்க வெழுந் தருளி
யருள்புரிந்தா னிமையோர் சூழ.

எ-து. இரத, கச, துரக, பதாதிகள் ஆகிய நான்கு வகைச் சேனைத் தலைவர்கள் எல்லாம் அதிசயிக்கா நின்ற, வந்தனை செய்தற்குரிய, திரிசூலத்தை ஏந்திய,

அழகினையுடைய, பசுபதியாகிய ஈசான மூர்த்தியானவர் தமது தீர்த்தத்திலே பரந்தாமனானவரை விருப்பத்துடனே எழுந்தருளச செய்து யசுர் வேதத்திற்கு அதிக விருப்பமாய் உகந்த இரட்சகனே என்றம்மறையால் போற்றிய வைபவ இன்பத்தினாலே நிமிர்ந்து சந்தோஷத்தை அடைந்திருந்தார் அரங்கநாயகர் என்றவாறு (8)

ஈசானன் - வட கீழ்த்திசைப்பாலன்.

## Īcāṉaṉ vaṇaṅkutal

*acupatika ḷiratapati yavarkaḷelā*
*mikamakiḻntaṅ katica yikkuṅ*
*kacapatikaḷ kāḷāḷa ravarkaḷelām*
*vantikkun tēcu mikka*
*pacupatiyā mīcāṉaṉ mikamakiḻntu*
*parantāmaṉ patattiṟ ṟāḻntaṅ*
*kacapatiyeṉ ṟētutikka veḻun taruḷi*
*yaruḷpurintā ṉimaiyōr cūḻa.*

## Īcāṉaṉ's Worship

While the commanders of the cavalry
And the chariot formations felt happy
And remained lost in wonderment, Pacupati,
The Īcāṉaṉ, was worshipped by infantry
And elephant-riders. Īcāṉaṉ happily saluted
The feet of the Lord and prayed:
"O Lord of elephants!" The Lord came
Accompanied by the immortals
And granted him grace.

(சூரிய தீர்த்தம்)

684. புலரியிடைத் தாமரையின் வண்டினங்க
ளிசைபாடிப் புதுத்தேன் மாந்தி
அலரியிடைப் புகுந்துழக்கி வாரணம்வாய்
வைத்தூத லனைய வூதிப்
பலரிதமா மமுதமென உண்டுதேக்
கிடககுறிஞ்சிப் பண்ணைப் பாடு
மலரிதன் தீர்த்தத்தி னரங்கனடி
யருச்சிக்க வமர்ந்தா னங்ஙன்.

எ-து. விடியற் காலத்திலே தாமரைக் கமலங்களிலே வண்டு, தேன், ஞிமிறு, சுரும்பு என்கின்ற நான்கு வகையினையுடைய வண்டினங்களானவை இசையினைப் பாடிப் புதிய நறவினை உண்டு வந்து அலரி புட்பத்திலே புகுந்து சஞ்சரித்து உழன்று வாரணமாகிய சங்கத்தினை வாயிலே வைத்து ஊதினால் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தாய் ஊதிப் பல பேர்களும் ரஞ்சிக்கத்தக்கதாகிய அமுதத்தைப் போலக் கர்ணா முதமாய் உண்டு, ஆனந்தப்படத்தக்கதாகக் குறிஞ்சி என்கின்ற பண்ணினைப்பாடா நின்ற அலரியாகிய சூரிய பகவானானவர் தமது பெயரினைத் தரித்திலகாநின்ற தீர்த்தத்திலே அரங்க நாயகனை எழுந்தருளச் செய்தவன் திருவாராதனம் செய்ய அங்ஙனம் வீற்றிருந்தருளினார் என்றவாறு. (9)

புலரியிடை - பொழுது புலரும் நேரத்தில், விடியற்காலையில். வாரணம் - சங்கு. அலரி - சூரியன்

## Cūriya tīrttam

*pulariyiṭait tāmaraiyiṉ vaṇṭiṉaṅka*
*ḷicaipāṭip pututtēṉ mānti*
*alariyiṭaip pukuntuḻakki vāraṇamvāy*
*vaittūta laṉaiya vūtip*
*palaritamā mamutameṉa uṇṭutēk*
*kiṭakkuṟiñcip paṇṇaip pāṭu*
*malaritaṉ tīrttatti ṉaraṅkaṉaṭi*
*yaruccikka vamarntā ṉaṉṉaṉ.*

## The Cūriya Spring

At dawn the bees drone sweetly, drink
Fresh honey, enter the oleander blooms,
Move and blow them as if they were conches,
Making many enjoy the *kuṟiñci* tune
As honey for their ears. To this tank
Named after him, the sun came to worship,
And so Araṅkaṉ rested here.

(மகேச தீர்த்தம்)

685. சுரந்தருள்கூர் மகேசதீர்த் தக்கரையி
னெழுந்தருளித் திங்கள் கங்கை
பரந்தசடை மத்தளலிங் கத்தினுறை
பண்ணவனைப் பாது காத்து

நிரந்தரமு மழிவில்லாச் சஞ்சீவி
கிரியினுச்சி நிமலன் றானும்
புரந்தருள்கூர்ந் தருள்வடிவாய்ப் பொன்னரங்க
னெழுந்தருளப் [1]புந்தி செய்தான்.

எ-து. அருளைப் பெருக்கிச் சுரக்காநின்ற மகேச தீர்த்தக் கரையிலே மகேசனானவன் எழுந்தருளப்பண்ண அவ்விடத்தில் எழுந்தருளியிருந்து சந்திரிகையும் கங்கையும் பரந்திராநின்ற சடாபாரத்தினையுடைய மத்தளலிங்கத்திலே வாசம் பண்ணாநின்ற தேவனைப் பாதுகாத்தருளி, நிரந்தர காலமும் அழிவின்றிய சஞ்சீவிகிரியினது உச்சியின் கண் பூர்வம் போலப் பூரணாங்கிசையாகிய அனந்த கல்யாண விக்கிரம சொருபராய் அவதரிக்கத் தக்கதாக உபதேசித்து முன்புபோல அருள் வடிவங் கொள்ள இதயத்தின் கண் நினைந்தருளினார் என்றவாறு. (10)

மகேசன் - சிவபெருமான்.

பா.வே. - 1. புந்தி கொண்டான்.

## Makēca tīrttam

*curantarulkūr makēcatirt takkaraiyi*
*neluntarulit tinkal kankai*
*parantacatai mattalalin kattinurai*
*pannavanaip pātu kāttu*
*nirantaramu malivillāc cañcīvi*
*kiriyinucci nimalan rānum*
*purantarulkūrn tarulvativāyp ponnaranka*
*neluntarulap punti ceytān.*

## Makēca Spring

To the banks of the Makēca spring
From where streams grace, Arankan came
To guard Civan, the Mattalalinka
Whose tresses are a-glow with the moon
And the Ganges; at the spire of Cañcīvi
That is eternal, the Pure One
Meditated on Arankan as incarnate grace.

(சித்திர தீர்த்தம்)

686. அரம்பையர்க ளிசைபரத நாடகப்பா
விலக்கணங்க ளமர்ந்து தோன்றத்

தரம்பயிலும் அபரஞ்சித் தட்டதனிற்
சாதாங்க விளக்கந் தாங்கிச்
சுரந்தருள்கூர் முனிவர்கடஞ் சித்திரதீர்த்
தங்களெலாந் துரிதிற் சென்று
நிரம்பியதோர் பந்திகளா யிருபாலி
னடித்தேக நிமலன் தானும்.

எ-து. அரம்பா ஸ்திரீகள் இசையினைப் பாடிப் பரத நாடக இலக்கணமாயது அமைவாய்த் தோன்ற மேன்மையினது தரமானது தோன்றுகின்ற ஆயிரத்தெட்டு மாற்றாகிய அபரஞ்சித் தட்டகத்தின்கண் சாதாங்கமென்கின்ற வரதனத்தினாலே விளக்கத்தைக் கையினால் தாங்கினவர்களாய் நிரம்புகின்ற பந்திகளாய் நிறைந்து, இருபாலினும் நடனம் செய்து கொண்டு போகத்தக்கதாக நிமலனாகிய அரங்க நாயகனும் அருளினைச் சுரந்து பெருகா நின்ற மார்க்கண்டேயர் முதலாகிய முனிவரது சித்திரங்களானவை பெருகிய தீர்த்தங்களிலெல்லாம் திருவாராதனம் கண்டருளித் துரிதமாய்ச் சென்றருளினார் என்றவாறு. (11)

அபரஞ்சி - புடமிட்ட பொன் சாதாங்கம் - உயர்ந்த பொன். அரதனம் - இரத்தினம்.

## Cittira tīrttam

*arampaiyarka ḷicaiparata nāṭakappā*
*vilakkaṇaṅka ḷamarntu tōṉṟat*
*tarampayilum aparañcit taṭṭataṉiṟ*
*cātāṅka viḷakkan tāṅkic*
*curantaruḷkūr muṉivarkaṭañ cittiratīrt*
*taṅkaḷelān turitiṟ ceṉṟu*
*nirampiyatōr pantikaḷā yirupāli*
*ṉaṭittēka nimalaṉ tāṉum.*

## Cittira Spring

As the heavenly maidens danced the Paratam
According to the grammar of music and movement,
They carried golden lamps on gleaming plates
In serried rows on both the sides.
The Pure One went to all the lakes
And received the worship of the sages.

(இலக்குமி தீர்த்தத்தில் எழுந்தருளல்)

687. கலக்குபுகழ் பொன்னந்தா மரைமலரின்
மஞ்சைகுயில் கவின்சே ரன்னம்
விலக்குவிதி யில்லாத மடமகளாய்க்
கோமளமாய் விமல மான
இலக்குமியார் தீர்த்தத்தி னெழுந்தருளி
மகிழ்ந்தரங்க னிருந்தா னியாரு
நிலக்குவியிற் பணிந்தேத்த மந்தார
மலர்மாரி நிறைத்தா ரன்றே.

எ–து. புகழ் சிறந்திரா நின்ற பொன் மயமாய் விளங்குகின்ற தாமரை மலரிலே வீற்றிருக்கா நின்ற மயில், குயில், அழகு நிறைந்த அன்னத்தை ஒத்தவளாய்த் திரிலோக கன்னியர் அழகுக் கெல்லாம் இருப்பிடமாகிய சுந்தரமாய், விமலமாய், அழகிலக்கணத்துக்கு இலக்கமாய் நிறைந்திரா நின்ற இலக்குமியார் தீர்த்தத்தின் எழுந்தருளி மகிழ்ச்சி அடைந்தவராய் அரங்கநாயகர் வீற்றிருந்தருளினார். அப்போது இந்தப் பூமண்டலத்தில் யாரும் தண்டன் சமர்ப்பிக்காநின்ற தேவர்கூட்டங்களானவர்கள் மந்தார பாரிசாதத்தை மாரியாய்ப் பொழிந்தார்கள் என்றவாறு. (12)

கோமளம் – இளமை – அழகு.

## Ilakkumi tīrttattil eḻuntaruḷal

*kalakkupukaḻ poṉṉantā maraimalariṉ*
*mañcaikuyil kaviṉcē raṉṉam*
*vilakkuviti yillāta maṭamakaḷāyk*
*kōmaḷamāy vimala māṉa*
*ilakkumiyār tīrttatti ṉeḻuntaruḷi*
*makiḻntaraṅka ṉiruntā ṉiyāru*
*nilakkuviyiṟ paṇintētta mantāra*
*malarmāri niṟaittā raṉṟē.*

## Coming to the Lakṣmi Spring

Like the peahen, *kuyil* or the lovely swan
On the golden lotus, Lakṣmi glows
Like a lass unparallelled, gentle, pure.
To the spring named after her, Araṅkaṉ
Came in joy. All earthlings came to him
And saluted. The gods showered flowers.

(சந்திர புட்கரணி)

688. இந்திரனே முதலானோர் செய்திருவா
ராதனையை யின்ப முற்றுத்
துந்துமிகள் முழங்கிடநற் றிருவோண
மதில்தீர்த்தந் தேவர்க் கீந்து
கந்திருவ ரிசைபாடக் கானநா
ரதன்வீணைக் கவினாய்ச் செப்பச்
சந்திரபுட் கரணியிடைக் களித்திருந்தான்
சாரணர்பல் லாண்டு சாற்ற.

திருவாராதனை - பூசை. திருவோணம் - 22 ஆவது நட்சத்திரம். (13)

## Cantira puṭkaraṇi

*intiraṉē mutalāṉōr ceytiruvā*
*rātaṉaiyai yiṉpa muṟṟut*
*tuntumikaḷ muḻaṅkiṭanaṟ ṟiruvōṇa*
*matiltīrttan tēvark kīntu*
*kantiruva ricaipāṭak kāṉanā*
*ratanvīṇaik kaviṉāyc ceppac*
*cantirapuṭ karaṇiyiṭaik kaḷittiruntāṉ*
*cāraṇarpal lāṇṭu cāṟṟa*

## Cantira Puṭkaraṇi

Intiraṉ and others performed the worship
According to ritual norms. The heavenly drums
Sounded. On holy tiruvōṇam asterix, Araṅkaṉ
Gave blessed water to the gods happily.
He sat mid Cantira puṭkaraṇi lake.
The gandharvas sang, the musician Nāratar
Twanged the lute sweetly while the sages
Recited blessings.

### (அரங்கன் வீற்றிருந்த கோலம்)

689. இருமருங்குந் திலோத்தமையு மிரதியுமா
யிணைக்கவரி யிரட்ட வோங்கும்
பருமணியா யிரம்விரித்த அனந்தவிமா
னத்தெழுந்த பகவன் தன்னைக்
குருமணிமா லிகைபுனைந்த குவலயத்தி
னரசரெலாங் கூடி நின்று
பெருகுநிதி மணிபுனைந்த பூவிசிறி
கொடுஇசைத்துப் புகழ்ந்து நின்றார்.

எ-து. இரண்டு பக்கங்களிலும் திலோத்தமையும் இரதிதேவியும் உபய சாமரைகளை வீசத்தக்கதாக ஓங்கியிரா நின்ற பருத்த சீவ ரத்தினங்கள் ஆயிரத்தினையும் விரித்துக் கவியா நின்ற அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற பகவானைக் குருவிந்த ரத்தின மாலையை அணிந்து, குவலயத்தின் கண், சக்கரம் நடாத்தும் அரசர்களெல்லாம் கூடி நின்று, பெருகாநின்ற பொன்னாலும் மணியாலும் இழைத்திரா நின்ற புட்ப விசிறியைக் கொண்டு இருபக்கத்திலும் இசைத்துத் துதித்து நின்றார்கள் என்றவாறு. (14)

அனந்தவிமானம் - ஆதிசேடனாகிய இருக்கை. மணிமாலிகை - இரத்தின மாலை. விசிறிகொடு - விசிறிகொண்டு.

### Araṅkaṉ vīṟṟirunta kōlam

*irumaruṅkun tilōttamaiyu miratiyumā*
*yiṇaikkavari yiraṭṭa vōṅkum*
*parumaṇiyā yiramviritta aṉantavimā*
*ṉatteḻunta pakavaṉ taṉṉaik*
*kurumaṇimā likaipuṉainta kuvalayatti*
*ṉaracarelāṅ kūṭi niṉṟu*
*perukuniti maṇipuṉainta pūviciṟi*
*koṭuicaittup pukaḻntu niṉṟār.*

### Araṅkaṉ's Image

Flanked by Tilōttamai and Rati who moved
The chowries, on the Aṉanta snake
Who spread his thousand hoods gleaming
With precious gems, the Lord rested.
All the emperors of the world who wore

Necklaces of rubies, fanned him
With lovely fans encrusted with gems
And sang his praises.

### (தேவர்கள் பணி)

இந்திரனுஞ் சயந்தனுமா யிருமருங்குந்
        தவளச்சத்திர மிணையாய்த் தாங்கச்
சந்திரனு மாதவனுஞ் சாந்தாற்றி
        யிருமருங்குந் தழைத்தங் கேந்தக்
கந்திருவ ரிசைபாடக் கானநா
        ரதன்வீணைக் கவினாய்த் தாங்கி
செந்திருவா ழரங்கனா ரிசைபாடிச்
        சேவடியைத் தொழுதங் கேத்த.

எ-து. இந்திர மகாராசனும் அவனது புத்திரனாகிய சயந்த மகாராசனும் இரண்டு பக்கத்தினும் தவளச் சத்திரக் குடையினை இசைவாய் நின்று தாங்கவும், சந்திரனும் சூரியனும் சாந்தாற்றி யாகிய ஆலவட்டங்களை இரண்டு பக்கங்களிலும் தழைத்தவர்களாய் ஏந்தி நிற்பவும், கந்திருவரானவர்கள் ஆயிரம் நரம்பு பூண்ட யாழியை ஏந்தி இசைக்கியானங்களைப் பாடவும், சாமகானங்களால் அரங்கனார் புகழியை வீணையை மீட்டி நாரத முனிவரானவர் ஸ்ரீ மகாலட்சுமி பதியாகிய அரங்கநாயகர் துதிகளைப் பாடி வந்திக்கவும் வீற்றிருந்தருளினார் என்றவாறு. (15)

ஆதவன - சூரியன சாந்தாற்றி - விசிறி; ஆலவட்டம். ஏத்துதல் - புகழ்தல்.

### Tēvarkaḷ paṇi

*intiraṉuñ cayantaṉumā yirumaruṅkun*
        *tavaḷaccattira miṇaiyāyt tāṅkac*
*cantiraṉu mātavaṉuñ cāntāṟṟi*
        *yirumaruṅkun taḻaittaṅ kēntak*
*kantiruva ricaipāṭak kāṉanā*
        *rataṉvīṇaik kaviṉāyt tāṅki*
*centiruvā ḻaraṅkaṉā ricaipāṭic*
        *cēvaṭiyait toḻutaṅ kētta.*

### The Gods in Attention

Intiraṉ and Cayantaṉ held the white umbrella
Standing as a pair; the moon and the sun
Waved the fans on the sides; the kantarvas

Sang; the musical Nāratar held the lute
Gently, and sang the praise of Lakṣmi
And Araṅkaṉ, saluted and worshipped them.

(அரம்பையர் ஆடல்)

691. அரம்பையர்கள் சதிமுறையி னடித்தனர்கள்
முழவதனுக் கழக தாகத்
தரம்பயிலு மாணிக்க விளக்கமுறு
மாலத்தி தாங்கி நின்று
சிரம்பயிலும் வணக்கத்தா னரங்கநா
யகன்புகழைச் செப்பி நின்று
கரம்பயிலும் பூமாரித் தூவினர்
டரணியெங்குங் கருணை கூர்ந்து.

எ-து. அரம்பையராகிய அமுதத்தில் உதிர்த்த தேவ கன்னியர்களானவர்கள் சதிகளைத் தழுவிப் பரத இலக்கணப்படி நடனம் செய்து மத்தள ஓசைக்கு அழகாகும் படியாய்த் தரத்தினையுடைய மாணிக்க விளக்கம் பொருந்துகின்ற அபரஞ்சிமயமாகிய தட்டினைத் தாங்கி நின்று சிரத்தினால் தண்டன் சமர்ப்பித்து அரங்கநாயகரது புகழினைத் தங்கள் செவ்வாம்பலாகிய வாயினால் துதித்துக் கரகமலத்தில் தாங்கிய மந்தார மலர்மாரியினைத் தூவி உலகங்களையெல்லாம் நிறைத்தார்கள் என்றவாறு. (16)

சதி - ஜதி - தாள ஒத்து. ஆலத்தி - நீராஞ்சனம், மங்கல நீரால் அஞ்சலித்தல்.

## Arampaiyar āṭal

*arampaiyarkaḷ catimuṟaiyi ṉaṭittaṉarkaḷ*
*muḻavataṉuk kaḻaka tākat*
*tarampayilu māṇikka viḷakkamuṟu*
*mālatti tāṅki niṉṟu*
*cirampayilum vaṇakkattā ṉaraṅkanā*
*yakaṉpukaḻaic ceppi niṉṟu*
*karampayilum pūmārit tūviṉar*
*ṭaraṇiyeṅkuṅ karuṇai kūrntu.*

## Dance of the Divine Damsels

The heavenly dancers stepped expertly
Keeping to the rhythm of the drums,
Held lamps of gem in plates and bowed deep,

Praising Araṅkaṉ's greatness.
They showered fistfuls of flowers in joy
All over the earth.

(இசை முழக்கம்)

692. கந்திருவர் கின்னரர்கள் வீணையதின்
பயில்தந்தி கரத்தான் மீட்டி
விந்தையதா மமுதமொழி மாரியினைத்
திருச்செவியின் விளங்கி யோங்கத்
தந்தமது வாயலர்ந்து தேன்மாரி
பொழிந்தனர்சாந் தாற்றித் தாங்கி
நிந்தையிலா வியக்கர்களு நிருமலனைக்
கண்ணுற்றே நிறைந்து நின்றார். (17)

தந்தமது - தம்தமது.

இந்திர தீர்த்த விசேஷம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

## Icai muḻakkam

*kantiruvar kiṉṉararkaḷ vīṇaiyatiṉ*
*payiltanti karattāṉ mīṭṭi*
*vintaiyatā mamutamoḻi māriyiṉait*
*tirucceviyiṉ viḷaṅki yōṅkat*
*tantamatu vāyalarntu tēṉmāri*
*poḻintaṉarcāṉ tāṟṟit tāṅki*
*nintaiyilā viyakkarkaḷu nirumalaṉaik*
*kaṇṇuṟṟē niṟaintu niṉṟār.*

## Sounds of Music

The Kantarvas and Kiṉṉaras twanged
The strings of lutes; they poured
A rain of wondrous, nectarean music
To fill the ears, as if pouring
A rain of honey from their lips.
Holding lamps, the blameless Yakṣas
Watched the Pure One and felt fulfilled.

# 38. முப்பத்து நான்காவது மகாலட்சுமியார் திருஅவதார அத்தியாயம்

ஐம்பூதங்களுக்கு நாயகியாகிய இலக்குமி தேவியாரின் தீர்த்த வரலாற்றினைக் கூறியருளினீர். அதனால் அஞ்ஞானம் நீங்கினோம். மேலும் புனிதபாவனம் அடையுமாறு அத்தீர்த்தத்தின் பெருமைகளைக் கூறியருளுங்கள் என்று கேட்ட முனிவர்களுக்குச் சூதமுனிவர் கூறுகின்றார்.

முன் ஒரு கற்ப காலத்தில் ஒரு கந்தருவ மங்கையானவள் இலக்குமியின் திருவடிகளை வணங்கிப் பூசித்து வந்தாள். அவள் அன்பிற்கு இரங்கிய திருமகள் தனது திருமுடியில் அணிகின்ற மாலையினை அவளுக்கு அளித்தாள். அக்கந்தருவ மடந்தை அதனைத் தன் தலையில் அணிந்து வந்தாள். அதனைக் கண்ட துருவாச முனிவர் அம்மங்கையை வணங்கி அம்மாலையைத் தனக்குத் தருமாறு வேண்டினார். அவ்வாறே கொடுக்கப்பட்ட அதனைத் துருவாசர் அணிந்து மகிழ்ந்தார்.

ஒருநாள் இந்திரன் நாட்டை அடைந்தார் துருவாசர். இந்திரனின் கொடை முதலிய சிறப்புச் செயல்களைக் கண்டு களிப்பெய்திய முனிவர் தன்னிடமிருந்த மாலையை இந்திரன் கையில் கொடுத்தார். அதை வாங்கித் தன் மதயானையின் மத்தகத்தில் அணிவித்தான் இந்திரன். அந்த யானையானது அம்மாலையைத் துதிக்கையால் இழுத்துத் தன் கால்களினாலே தேய்த்தது. முனிவர் சினந்து நோக்கினார். உலகமெல்லாம் நடுநடுங்கித் திடுக்கிட்டன. அதைக் கண்ட இந்திரன் யானையைவிட்டு இறங்கி ஓடினான். இந்திரன் நாடிழந்து செல்வமெல்லாமிழந்து வறுமையுறுமாறு சபித்தார் முனிவர். வறுமையுற்ற இந்திரன் திருப்பாற்கடலையடைந்து நாராயணமூர்த்தியிடம் முறையிட, நாராயணன் திருப்பாற்கடலில் அமுதத்தை உண்டாக்க எண்ணினார். உடனே மந்திரகிரியை மத்தாக்கினார். வாசுகி என்னும் பாம்பைச் சுற்றுக் கயிறாக அமைத்தார். சந்திரனைக் கம்பமாக நிருமித்தார். தேவர்களும் அரக்கர்களும் முறையே இருபுறமும் நின்று கடலைக் கடைந்தனர். சிவனும் இந்திரனும் காணக் கடலைக் கடைந்தபோது பொற்கும்பத்திலே அமுதமானது தோன்றியது. திருமகளும் உடன் தோன்றினாள். சங்கநிதி, பதுமநிதி, ஐராவதம், ஐவகை தருக்கள், காமதேனு ஆகியவை துதித்தன. உமை, நாமகள், சாவித்திரி, காயத்திரி முதலானதேவ கன்னியர் துதி செய்தனர். இவ்வாறு அவதரித்த திருமகளின் கருணையால் இந்திரன் மீண்டும் எல்லாச் செல்வங்களையும் அடைந்தான்.

நாராயண மூர்த்தியானவர் அமுதக்கலசத்தோடு தோன்றிய திருமகளைக் கலியாணம் செய்து கொள்ள விரும்பினார்.

எம்பிராட்டியாரும் அவரது மார்பினை என்றும் பிரியாதிருக்க வேண்டுமென்று உள்ளத்திலே நினைத்தாள். அதன்படியே தன் எண்ணத்தைத் திருமாலிடத்திலே கூறிப் பிரார்த்தித்தாள். ஆனால் ஐயன் பாராமுகமாய் இருந்து விட்டார். அதையறிந்த திருமகள் கவுத்துவாபரணம் விளங்கும் உமது திருமார்பகத்தை யான் தவம் செய்தாவது பெறுவேன்

என்று சபதம் செய்து புறப்பட்டாள். பார்வதி, கங்கை, கலைமகள், இந்திராணி, அரம்பையர் ஆகியோர் கவரி வீசி, வேதம் ஓதி, குடை தாங்கி, மலர்தூவிச் சென்றனர். திக்குப் பாலகரின் தேவியர் பல்லக்கினைத் தாங்கினர். கந்தருவர் இசை முழங்கிவரக் கடற்கரையை வந்தடைந்தாள் திருமகள். அக்கடற்கரையிலே குவிந்து கிடந்த மணிகளைக் கண்டு களித்த பிராட்டியார், திருமாலின் கையிலே விளங்கும் சங்கினைப் போன்றதும், தனது கழுத்திற்கு உகந்ததுமாகிய சலஞ்சலம் என்னும் சங்கினைக் கண்டார். ஒருதலைக் காமம் நீங்கியவராய் விளங்கினார். மேலும் செம்பவளக் காட்டினைக் கண்டு அத்திருமாலின் செம்பவள இதழோவென ஐயுற்றார். பொன்னும் மணியுமாகிய குவியல்களைக் கண்டு அவரது புயமோ என மயங்கினாள்.

நெய்தல் நிலத்தைக் கடந்து முல்லை நிலத்தையடைந்த பிராட்டியார் காடுபடு பொருள்களைக் கண்டு மகிழ்ந்தார். பின் மருத நிலத்தில் செந்நெற்குவை, செவ்விள நீர்க்குலைகள், தாமரைத் தடாகம், கருப்பங்காடு, கமுகந்தோப்பு போன்றவற்றைக் கண்டு களித்துக் கோலாசலத்து உச்சியையடைந்தார். அனைத்து மகளிரும் சூழ்ந்துவரச் சிவிகையை விட்டு இறங்கிய பிராட்டியார் மலையின் மீது நடந்து செல்லத் தொடங்கினார்.

**(இலக்குமி தீர்த்தம் பற்றி வினாவுதல்)**

693. **சூதர் சொல்லிய மாதவன் பெருமையைத் தெரிந்து**
**வேத பாரகர் பரவச ராகிமெய் விளம்பும்**
**பூத நாயகி இலக்குமி தீர்த்தமுன் புகன்றீர்**
**தீத கற்றதன் பெருமையைத் தெரிந்திட வென்றார்.**

எ-து. சூத புராணிகர் கூறிய மாதவனாகிய நாராயண மூர்த்தியினுடைய பெருமையாகிய பரதத்துவ இலக்கணமும், அவன் அடிமையானவர் வேதாகம விதிப்படி அணிய வேண்டியதாகிய ஊர்த்துவ புண்டரம் முதலிய சின்னங்களும், அவரது ஸ்ரீபாத தீர்த்தம் முதலிய பிரசாத வைபவத்தினையும் உணர்ந்த வேத பாராயண பண்டிதராகிய முனிக் கூட்டங்களானவர்கள் ஆனந்தபரவசராகித் தத்துவ ஞானம் கூறுகின்ற பெரும்புகழினையுடைய ஐம்பூதத்துக்கு நாயகியாகிய ஸ்ரீமகாலட்சுமி தேவியார் தீர்த்தத்தை முன்னே தேவரீர் திருவாய் மலர்ந்தருளினீர். அதனாலே அஞ்ஞானத்தை நீங்கினோம். ஆதலால் யாங்கள் புனித பாவனமடையும் பொருட்டாய் அந்தத் தீர்த்தத்தின் பெருமையைக் கூறுவீராக என்றார்கள் என்றவாறு. (1)

தீதகற்றதன் பெருமை - தீது அகற்ற அதன் பெருமை.

## Ilakkumi tīrttam paṟṟi viṉāvutal

*cūtar colliya mātavaṉ perumaiyait terintu*
*vēta pārakar paravaca rākimey viḷampum*
*pūta nāyaki ilakkumi tīrttamuṉ pukaṉṟīr*
*tīta kaṟṟataṉ perumaiyait terintiṭa veṉṟār.*

## XXXVIII. The Manifestation of Makālakṣmi On the Lakṣmi Spring

Having learnt of Nārāyaṉaṉ's greatness
Through the speech of Cūtar, the scholars
Of Vēda were deeply moved. "You spoke earlier
Of the Lakṣmi spring which is very famous.
Do reveal its claim to fame
So that we can grow pure."

(சூதபுராணிகர் கூறுதல்)

694. என்ற போதவ ரானந்தம் பெருகிட விமைப்பி
னொன்று நல்லுடற் பரவச மாகியே யுமையாள்
மன்ற லந்தொடை மவுலியா ரிலக்குமி மலர்த்தாள்
அன்று தன்மன நினைந்ததன் பெருமையு மறைவாம்.

எ-து. இவ்விதமாய் முனிவர் கூற சூத புராணிகரானவர் ஆனந்தக் கண்ணீர் பொழிந்து ஒரு நிமிடத்திலே தனது சரீரமானது பரவசமடைந்தருளிச் செய்கின்றார். அருமையுளாகிய பராசத்தியானவள் திவ்விய பரிமளங்களைக் கமழப்பட்ட மந்தார, பாரிசாதம் முதலாகிய புஷ்பங்களை அணிகின்ற திருமுடியால் வணங்கப்பட்ட ஸ்ரீமகாலட்சுமியினுடைய தாமரைக்கமலம் போன்ற திவ்விய திருவடிகளை அப்பொழுதே தமது மனத்தினாலு பாசித்தவராய் அந்த இலட்சுமி தீர்த்தத்தின் பிரதாபத்தை விசிதமாய்த் திருவாய் மலர்ந்தருளினார் என்றவாறு. (2)

### Cūtapurāṇikar kūṟutal

*eṉṟa pōtava rāṉantam perukiṭa vimaippi*
*ṉonṟu nalluṭar paravaca mākiyē yumaiyāḷ*
*maṉṟa lantoṭai mavuliyā rilakkumi malarttāḷ*
*aṉṟu taṉmaṉa niṉaintataṉ perumaiyu maṟaivām.*

### Cūta Speaks

Hearing this, Cūta was overwhelmed
By joy; tears streaming, his body
A-thrill, He meditated on the lotus-feet
Of Lakṣmi who is worshipped by crowns
Intwined with flowers, and began to speak.

(கந்தருவ மகள் மாலை பெறுதல்)

695. முன்ன மொருகாற் பரமன்மனை
முளரித் திருவை யடிவணங்கிச்
சென்னி மிசைபொன் னருள்பெற்ற
தொடைய லணிந்து கந்திருவ
மின்ன வருமவ் வழிதன்னில்
விளங்கு தூரு வாசனவன்
தன்னைப் பணிந்தச் செந்திருவின்
மாலை யணிந்து தணிந்ததற்பின்.

எ-து. பூருவ காலத்தில் ஒரு கற்பத்தில் பரமனாகிய நாராயண மூர்த்தியினது பிராட்டியளாகிய பொன்னந் தாமரைப் பீடத்தின் எழுந்தருளிய ஸ்ரீ மகாலட்சுமியார் பாதத்தினை வணங்கி உபாசித்தாள் ஒரு கந்திருவ மங்கையானவள், அதைக் குறித்து இரங்கிச் சீதேவியானவள் தனது திருமுடியில் அணிகின்ற திருமாலையினை அவளுக்குப் பிரசாதமாய் அளித்தருளினாள். அந்த மாலையினைக் கந்திருவ மடந்தையானவள் தனது சிரத்தின் கண் அணிந்து ஆனந்த வைபவமாய் நடந்து வருகின்ற மார்க்கத்தில் துருவாச முனிவரானவர் கண்டு அவளை வணங்கிட அவளும் மகிழ்ந்து உமக்கு வேண்டிய காரண மென்ன வென்ற அளவில் ஸ்ரீ மகாலட்சுமியார் உமக்களித்த திருமாலையை எனக்கு அனுகரிக்க வேணுமென்று அவர் விண்ணப்பம் செய்ய மனம் பூரித்தவருக்குக் கொடுத்தாள். அந்தத் திருமாலையைப் புனைந்து மகிழ் சிறந்தார் துருவாசர் என்றவாறு. (3)

## Kantaruva makaḷ mālai peṟutal

*muṉṉa morukāṟ paramaṉmaṉai*
*muḷarit tiruvai yaṭivaṇaṅkic*
*ceṉṉi micaipoṉ ṉaruḷpeṟṟa*
*toṭaiya laṇintu kantiruva*
*miṉṉa varumav vaḻitaṉṉil*
*viḷaṅku tūru vācaṉavaṉ*
*taṉṉaip paṇintac centiruviṉ*
*mālai yaṇintu taṇintataṟpiṉ.*

## The Kantarva Girl

In days of yore, having saluted
The lotus-feet of Lakṣmi,
And wearing on her crown a garland
Given by the Lord's grace, a damsel

Of the Kantarva race was walking.
The great sage Turuvācar saluted her.
Pleased, she gave him the garland
Which he wore happily.

### வேறு

### (துருவாசர் இந்திரனுக்கு அளித்தல்)

696. உம்பருல கெய்தியயி ராபதமு மூர்ந்து
பம்பமர ரோடுபவ னித்தொழுகு மிந்திரன்
சம்பர முணர்ந்துமது தாரதனை நல்கக்
கம்பமத யானைபிடர் மீதினிற் கவித்தான்.

அந்தத் திருமாலையை முடியில் சூட்டிய துருவாசரானவர், இந்திரனுலகத்தின் கண்ணெழுந்தருளினார். அந்தக் காலையில் இந்திர மகாராசனானவன் வெள்ளை யானையின் மேல் சந்திர வட்டக்குடை நிழற்றப் பதினெண் வாத்தியங்களும் முழங்க, அரம்பையர்கள் நடனம் செய்ய, இரண்டு பக்கங்களிலும் அனந்த சாமரைகள் வீசவும், காமதேனு சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி முதலானவை அவனது கடைக்கண் அருள் நோக்கப்பிரகாரம் அனேகர் விரும்பியதையெல்லாம் கொடுத்து இரட்சிக்கவும், கற்பகதாருவின் நிழலிலே பவனியாக வருகின்ற இந்திர மகாராசன் விபவத்தைக் கண்ட துருவாசரானவர் மனங்களி கூர்ந்து தன் தவத்தினால் பெற்ற திருமாலையினை ஆசிர்வதித்து இந்திரமகாராசன் கையில் கொடுத்தார். அதை வாங்கித் தனது மதயானையின் மத்தகத்தில் அணிந்தான் என்றவாறு. (4)

பம்புதல் - பரவுதல், தொழுது உடன் வருதல். சம்பரம் - விபவம் செல்வம், வாழ்வு முணர்ந்துமது தார் - உணர்ந்து தமது தார் என்றிருத்தல் வேண்டும். தார் - மாலை.

### Vēṟu

### Turuvācar intiraṉukku aḷittal

*umparula keytiyayi rāpatamu mūrntu*
*pampamara rōṭupava ṉittoḻuku mintiraṉ*
*campara muṇarntumatu tāratanai nalkak*
*kampamata yāṉaipiṭar mītiṉiṟ kavittāṉ.*

### Turuvācar Gives the Garland to Intiraṉ

When he went to the world of the gods,
Turuvācar found Intiraṉ riding the airāvatam
Along with other gods. The sage
Gave the garland to him. Intiraṉ placed it
On the forehead of the elephant.

(யானை மாலையை மிதித்து அழித்தல்)

697. யானையதை வாங்கியதன் அடிகொடு துவைக்கப்
போனமுனி வன்மனது பொங்கிவிழி சிவப்ப
வானகமு மண்ணகமு மதிமுதல் சுழன்ற
வீனமுறு வாசவனு மெய்தின னகன்றே.

எ-து. இந்திர மகாராசனானவன் அந்தத் திருமாலையினை வெள்ளை யானையினது மத்தகத்தில் சூட, அதை அந்த யானையானது துதிக்கையாலிழுத்துத் தனது உரல் போன்ற பாதத்தில் தேய்த்த மாத்திரத்திலே, துருவாசர் கண்டு அவரது மனம்புழுங்கிக் கண்களானவை அக்கினிப் பொறிகளைச் சிதறத் தக்கதாய்க் கோபித்த அளவினால் ஆகாயமும் பூமியும் சந்திர, சூரியர் முதலாகிய நவக்கிரகங்களும் சுழல, உலகமெல்லாம் திடுக்கிடுந்தன்மையைக் கண்ட இந்திர மகாராசனானவன் அம்மதயானையை விட்டிழிந்து ஓடத்தொடங்கினான் என்றவாறு. (5)

## Yān̲ai mālaiyai mitittu al̲ittal

*yān̲aiyatai vāṅkiyatan̲ aṭikoṭu tuvaikkap*
*pōn̲amun̲i van̲man̲atu poṅkivil̲i civappa*
*vān̲akamu maṇṇakamu matimutal cul̲an̲r̲a*
*vīn̲amur̲u vācavan̲u meytin̲a n̲akan̲r̲ē.*

## The Elephant Destroys the Garland

The elephant lifted it and threw it down
And crushed it with its feet. The sage
Grew wrathful. His eyes became red.
Heavens, the earth, the moon and the rest
Began to whirl about. The shocked Intiran̲
Took to his heels.

(துருவாசர் சாபம்)

698. அரசொழிய செல்வமு மகன்றுவறு மையனாய்
விரசுதிருப் பாற்கடலை மேவிமிக விந்திரன்
பரசுவது கண்டருள் பரம்பொரு ளிரங்கி
வரையினைச் சுமந்தமுத மாகென மதித்தான்.

எ-து. அப்படி யானையை விட்டு ஓடுகின்ற இந்திர மகாராசனைப் பார்த்துத் துருவாசரானவர் கோபித்துக் கூறுகின்றார். உனது அரசாகியது உன்னை விட்டு நீங்கிச் செல்வங்களும் அகன்று போகக் கடவதென்று சபித்தார். அந்தச் சாப காரணத்தினால்

இந்திரனானவன் விரைந்து சென்று வறுமை யடைந்தவனாய்த் திருப்பாற் கடலினைச் சேர்ந்து ஸ்ரீமன் நாராயண மூர்த்தியினது திவ்விய திருவடிகளிலே சரணாகதி அடைந்த அரசனுக்கு இரங்கினவராய் மந்தர கிரியைப் பிடுங்கித் திருப்பாற்கடலிலே அமுதம் உண்டாக்க நினைத்தருளினார் என்றவாறு. (6)

விரசு - விரைந்து. பரசுதல் - துதித்தல்.

## Turuvācar cāpam

*aracoḻiya celvamu makanṟuvaṟu maiyaṉāy*
*viracutirup pāṟkaṭalai mēvimika vintiraṉ*
*paracuvatu kaṇṭaruḷ paramporu ḷiraṅki*
*varaiyiṉaic cumantamuta mākeṉa matittāṉ.*

## Turvācar's Curse

"May you lose your kingship and riches",
Cursed the sage. Intiraṉ ran fast
To the milky sea and prayed to the Lord
Who became compassionate and decided
To get Nectar by uprooting the Mantara Hill.

**(மந்தரகிரியால் கடல் கடைதல்)**

699. **வாசுகியைச் சுற்றுகயி றாகமதி தூணாய்**
**மூசமரர் தானவர்கள் முந்திகடை யுங்கால்**
**ஈசனொடு வாசவனு நான்முகனு மெத்தப்**
**பேசுமமு தச்சுவை பிறந்தததி னூடே.**

எ-து. அந்த மந்தர கிரியிலே வாசுகி என்னும் பாம்பைச் சுற்றுக் கயிறாக்கிச் சந்திரனைக் கம்பமாய் நிறுவி மொய்த்திரா நின்ற தேவர் கூட்டங்களும், அரக்கரீட்டங்களும் நெருங்கிக் கடைந்த ஞான்று ஈசனாகிய சிவனும், தேவேந்திரனும் துதிக்கத்தக்கதாய்க் கடைகின்ற காலையில், யாவர்களும் பிரயோசனமாய்த் துதிக்காநின்ற அமுதச் சுவையானது பொற்கும்பத்திலே அதிக இரசனையாய்ப் பிறந்தது என்றவாறு. (7)

வாசுகி - எட்டு நாகங்களில் ஒன்று. ஆதிசேடனின் சகோதரன்.

## Mantarakiriyāl kaṭal kaṭaital

*vācukiyaic cuṟṟukayi ṟākamati tūṇāy*
*mūcamarar tāṉavarkaḷ muntikaṭai yuṅkāl*
*īcaṉoṭu vācavaṉu nāṉmukaṉu mettap*
*pēcumamu taccuvai piṟantatati ṉūṭē.*

## Churning the Sea with the Mantara Hill

With Vācuki as the churning rope,
And the moon as the rod, the gods
And the Acuras churned the ocean,
While Civaṉ, Intiraṉ and Piramaṉ praised.
The glorious nectar was born mid all this.

(அமுதத்துடன் இலக்குமி)

700. பதுமநிதி சங்கநிதி வெண்பரி கரித்தார்
மதுவொழுகு கற்பகமு மானுமயல் சூழத்
துதிபெருமை வாணியமர் மாதர்துதி செய்ய
நிதிபெருகு கோமள நிகழ்த்திரு உதித்தாள்.

எ-து. பதுமநிதியாகிய பொன்னைச் சொரிகின்றதும், சங்க நிதியாகிய வெள்ளியைப் பொழிகின்றதும், வெண்மைநிறம் தாங்கிய உச்சுவச் சொரூபக் குதிரையும், அதற்குத் தகுதியாகிய அயிராவதமான நான்கு கிம்புரிப் பூண்களையுடைய யானையும், தேன்களைப் பிலிற்றித் திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற சந்தனம், அரிச்சந்தனம், மந்தார, பாரிசாதம், கற்பக விருட்சம் ஆகிய ஐவகையாகிய தருக்களும், காமதேனுவும், யாவர்களும் துதித்துப் பரவி உடன் தோன்ற, உமையவளாகிய பார்வதியும், வெண்டாமரைக் கமல பீடத்தில் எழுந்தருளிய நாவின்மகள், சாவித்திரி, காயத்திரி முதலாகிய தேவ கன்னியர்களும் துதி செய்யத்தக்கவளாய்ச் சகல குணமங்கள சாம்பிராச்சிய குணவதியாய், நற்குண நற்செய்கை வாய்ந்த பதிவிரத சிரோமணியாகிய ஸ்ரீமகா லட்சுமி தேவியும் அந்த அமுதச் சுவையுடனே அவதரிததாள் என்றவாறு. (8)

## Amutattuṭaṉ Ilakkumi

*patumaniti caṅkaniti veṇpari karittār*
*matuvoḻuku kaṟpakamu māṉumayal cūḻat*
*tutiperumai vāṇiyamar mātartuti ceyya*
*nitiperuku kōmaḷa nikaḻttiru utittāḷ.*

## Lakṣmi with Nectar

Along with Patumaniti and Caṅkaniti
Riches, the white horse, and *kaṟpaka* tree
That streams nectar, the gentle Lakṣmi
Manifested while Pārvati and Carasvati
Hailed her incarnation.

(இலக்குமியும் திருமாலும் நினைத்தல்)

701. வந்ததொரு செந்திரு வழங்கருளி னாலே
இந்திரனுஞ் செல்வமதை யெய்தினன்முன் போல
வெந்தையவ டன்மண மிசைந்தவுட னன்னை
சுந்தர னுரத்திடை யிலங்கதுணி வுற்றாள்.

எ-து. அப்படி அவதாரம் செய்தருளிய ஸ்ரீ மகாலட்சுமி தேவியார் அனுக்கிரகத்தினாலே இந்திர மகாராசனும் செல்வ சாம்பிராச்சியத்தை அடைந்து, பட்டாபிஷேகபதியாய் வாழ்ந்தான். அதன் பின்பு எந்தையாகிய நாராயண மூர்த்தியானவர் அந்த ஸ்ரீ மகாலட்சுமி தேவியாரைப் பாணிக்கிரணம் பண்ண வேண்டுமென்று மனத்தின்கண் உத்தேசித்தார். அதை அறிந்த பிராட்டியானவள், சுந்தரனாகிய சீதரனுடைய திருமார்பகத்தி னெப்பொழுதும் பிரியாதவளாயிருக்கத் தக்கதாய் நினைத்தாள் என்றவாறு. (9)

எந்தையவடன்மணம் – எந்தை அவள்தன் மணம். எந்தை – இறைவன்; அரங்கன்.

**Ilakkumiyum Tirumālum ninaittal**

*vantatoru centiru valaṅkaruḷi ṉālē*
*intiraṉuñ celvamatai yeytiṉaṉmuṉ pōla*
*ventaiyava ṭaṉmaṇa micaintavuṭa ṉaṉṉai*
*cuntara ṉurattiṭai yilaṅkatuṇi vuṟṟāḷ.*

**Lakṣmi and Nārāyaṇaṉ**

By the grace granted by Lakṣmi
Intiraṉ regained his riches. My Lord
Now wished to wed Makālakṣmi.
She decided to reside for ever
On his handsome chest.

(இலக்குமி வேண்ட, அரங்கன் பராமுகம்)

702. என்னையரு ளையனை யிருங்கமல வாச
வன்னையுல கங்களை யளித்தருளு மெந்தாய்
தன்னைதன துரத்திடை தரித்தருள வென்றே
பன்னபர மன்முனம் பராமுகம தானான்.

எ-து. இந்தப் பிரகாரம் பிராட்டியானவள் நினைத்து இரட்சகக் கர்த்தாவினுடைய செந்தாமரைக் கமலம்போன்ற திவ்விய திருவடிகளிலே தண்டன் சமர்ப்பித்து விண்ணப்பம் செய்கின்றாள். வாரீர் மகானுபாவரே! உமது திருமார்பகத்திலே

இடைவிடாது வசிக்க நினைக்கின்றேன். அதை அனுக்கிரகம் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கச் சுவாமியானவர் கிருபை செய்யாமல், பாராமுகமாய் இருப்பதைக் கண்டாள் ஸ்ரீ மகாலட்சுமி தேவி என்றவாறு. (10)

## Ilakkumi vēṇṭa Araṅkan parāmukam

*eṉṉaiyaru ḷaiyaṉai yiruṅkamala vāca*
*vaṉṉaiyula kaṅkaḷai yaḷittaruḷu mentāy*
*taṉṉaitaṉa turattiṭai tarittaruḷa veṉṟē*
*paṉṉapara maṉmuṉam parāmukama tāṉāṉ.*

## Lakṣmi's Request, Araṅkaṉ's Indifference

Lakṣmi prayed to the Lord who guards
With compassion herself, Piramaṉ,
And all the worlds, that he keep her
In his chest; but the Lord was indifferent.

(இலக்குமி தவஞ் செய்யத் துணிதல்)

703. மனதின்மிகக் கோபமெழ மாதவனை நோக்கிப்
புனைமணியு மார்பினிட மும்பெறுவ னென்றே
[1]எனைதவசு செய்யவோ ரருந்துய ருழந்தே
தனையருள்செய் கோலவரை சாரமன துற்றாள்.

எ-து. இந்தப் பிரகாரம் ஆனந்த அமுதம்போன்ற வார்த்தையினைப் பாராமுகம் செய்தருளிய சீதரனை நோக்கி மனத்தின்கண் கோபம் பிரவேசிக்கத் தக்கதாக ஒரு வார்த்தை கூறுகின்றாள். வாரீர், மகானுபாவரே! உமது கவுத்துவாபரணம் தங்கிப் பிரகாசிக்காநின்ற திவ்விய திருமார்பகத்தை யான் தவம் செய்தாவது உமது கிருபையால் பெறுவேனே யல்லது என் விரதத்தை விடுவேன் அல்லேன் என்று சபதம் செய்து தவம் செய்வதற்கு ஆலோசித்தவளாய்க் கோலாசலகிரியைக் காணத்தக்கதாய் மனத்தின்கண் உத்தேசித்தாள் ஸ்ரீ மகாலட்சுமி தேவியார் என்றவாறு. (11)

பா.வே. - 1 யுனைதவசு.

## Ilakkumi tavañ ceyyat tuṇital

*maṉatiṉmikak kōpameḻa mātavaṉai nōkkip*
*puṉaimaṇiyu mārpiṉiṭa mumpeṟuva ṉeṉṟē*
*eṉaitavacu ceyyavō raruntuya ruḻantē*
*taṉaiyaruḷcey kōlavarai cāramaṉa tuṟṟāḷ.*

## Lakṣmi Decides to Perform Austerities

As anger rose in her mind, she looked
At Mātava and said: "I shall gain a place
In your bejewelled chest by performing
Austerities". With a heavy heart
She thought of proceeding to the Kōla Hill
That is grace-laden.

(மகளிர்புடைசூழ இலக்குமி புறப்படுதல்)

704. கலைமகளு மலைமகளுங் ககனசுர மாதர்
சிலைநுதலி சசியருகு தாதியர்கள் சூழ்ந்து
கலைதருமை கண்ணிணையில் கழறுவன செய்யத்
தலைமைபெறு வெண்டரள தண்டிகை யமர்ந்தாள்.

எ-து. வேத முதலாகிய அறுபத்திநான்கு கலைகளினும் நிறைந்திராநின்ற நாவின்மகளும், பர்வத ராச புத்திரியாகிய பார்வதியாரும், இந்திராணி முதலாகிய தேவகன்னியர்கள், தோழிமார்கள் ஆகியோரும் பக்கங்களில் சூழ்ந்து வர மான் நோக்கம்போன்ற கண்ணிணையில் பிரகாசிக்காநின்ற கிருபாநோக்கக் குறிப்பறிந்து பணிவிடைகளைச் செய்யத் தக்கதாய் முத்தின் தண்டிகையில் எழுந்தருளிய ஸ்ரீ மகாலட்சுமியாரைச் சூழ்ந்து நடக்கத் தொடங்கினார்கள் என்றவாறு. (12)

ககனம் - ஆகாயம்; தேவருலகு. சுரமாதர் - தேவமகளிர் சிலை - வில். சசி - இந்திராணி.

## Makaḷirpuṭaicūḻa Ilakkumi puṟappaṭutal

*kalaimakaḷu malaimakaḷuṅ kakaṉacura mātar*
*cilainutali caciyaruku tātiyarkaḷ cūḻntu*
*kalaitarumai kaṇṇiṇaiyil kaḻaṟuvaṉa ceyyat*
*talaimaipeṟu veṇṭaraḷa taṇṭikai yamarntāḷ.*

## Makālakṣmi Goes with her Attendants

Accompanied by Carasvati, Pārvati,
The divine damsels in heavens, Caci Tēvi
With a forehead rivalling a bow,
And with maids-in-waiting ready
For her orders spelt by her doe-like eyes,
She ascended the lovely palanquin of pearls.

(தேவமகளிர் பணிவிடை)

705. கவுரிதிரு கவரியு மிரட்டவரு கங்கை
சிவிகைகலை மகளருகி னிற்சிலர் சிறந்தார்
கவிகைக ளரம்பையர் கவிக்கச்சி தானும்
[1]புவியினணி மலர்கொடு புகழ்ந்தினிது போனாள்.

எ-து. இவ்விதமாய் ஸ்ரீ மகாலட்சுமி தேவியார் முத்தின் தண்டிகையில் பிரவேசித்த மாத்திரத்தில் பார்வதியாரும், கங்காபவானியும் இருபுறத்தினும் சாமரைகளை அழகாய் வீசினார்கள். அந்தச் சிவிகையின் அருகிலே நாவின் மகள் முதலாகிய இரமணியமான புனித பவுத்திர சுசீலராகி மற்ற கன்னியர்களெல்லாம் வேதத்தினது பதக்கிரமச் சடைகளை விதிப்படி ஓதித் தொடர்ந்து சூழ்ந்து போனார்கள். வெண்கொற்றக் குடையினை அனேக அரம்பையர்கள் தாங்கிச் சென்றார்கள். சசி தேவியாகிய இந்திராணியானவர் மந்தார, பாரிசாத மலர் மாரியைத் தூவச் சென்றாள் பிராட்டி என்றவாறு. (13)

பா.வே. - 1. புவியின் மலரணிகொடு.

## Tēvamakaḷir paṇiviṭai

*kavuritiru kavariyu miraṭṭavaru kaṅkai*
*civikaikalai makaḷaruki ṉiṟcilar ciṟantār*
*kavikaika ḷarampaiyar kavikkacci tāṉum*
*puviyiṉaṇi malarkoṭu pukaḻntiṉitu pōṉāḷ.*

## Divine Damsels at Service

Pārvati and Kaṅka moved the chowrie;
Carasvati and other experts walked
Beside the palanquin; divine damsels
Carried the umbrella; Caci tēvi
Showered flowers as they progressed.

(இலக்குமி கடற்கரையடைதல்)

706. அட்டதிசை மாதர்சிவி கைக்கணை யணைக்க
விட்டமொடு கந்திருவர் வீணையிசை பாட
வட்டமதி தாரகையின் [1]நடுவண்வரு வதுபோல்
மட்டின்மணி யாரநின்ற நெய்தறிணை வந்தாள்.

எ-து. எட்டுத்திக்கினும் இலகாநின்ற ரமணிய சுந்தர காந்தியையுடைய சசிதேவி முதலாகிய திக்குப் பாலகருடைய நற்குண நற்செய்கையோடும் கூடிய மனைவியானவர்கள் அந்தப் பல்லக்கின் கணையைத் தாங்கினார்கள். இட்டத்தினால் ஆயிர நரம்பு பூண்ட வீணையைக்

கையினேந்திக் கந்திருவர் இசை வழுவாமல் சுருதி கூட்டி வீணைகளை மீட்டிப்பாட, ஆகாயத்தின்கண் பிரகாசிக்காநின்ற தாரகா கண் நடுப்பிரதேசத்தில் சோடசக் கலைகளோடுங் கூடி விருத்த வடிவாய் விளங்கிப் பிரகாசியாநின்ற சந்திரக்கூட்டச் சமூகங்களைப்போலச் சகல குண மங்கள சாம்பிராச்சியமுள்ள கன்னியரது கூட்டங்க ளெல்லாம் பரவிச் சூழக் கணக்கிறந்தனவான மணியினங்களும், முத்தினங்களும் நிறைவெய்திக் கிடக்கின்ற கடற்கரை யோரத்திலே வந்தருளினாள் பிராட்டியார் என்றவாறு. (14)

பா.வே. - 1. நடுவண் வருவனபோல்.

## Ilakkumi kaṭaṟkaraiyaṭaital

*aṭṭaticai mātarcivi kaikkaṇai yaṇaikka*
*viṭṭamoṭu kantiruvar viṇaiyicai pāṭa*
*vaṭṭamati tārakaiyiṉ naṭuvaṇvaru vatupōl*
*maṭṭiṉmaṇi yāraniṉṟa neytaṟiṇai vantāḷ.*

## Lakṣmi Reaches the Beach

The palanquin was carried by the wives
Of the gods of the eight directions;
Kantiruvas happily played the lute.
She came like the full moon mid the stars,
To the spaces of the sea beach,
Spread with gems.

**(கடலில் சங்கினைக் காணுதல்)**

707. **நிலங்கல மரும்பொரு ணிறைந்தவரு கேகிப்**
**பொலன்கொடுணை போல்கணவன் பொற்பணில மென்னக்**
**கலன்கொடணி தன்களமே காட்டுவன போலூர்**
**சலஞ்சலமே கண்டுமிகு சஞ்சல மொழிந்தாள்.**

எ-து. அந்நிலத்தில் சஞ்சரிக்காநின்ற கப்பல்களானவை அரிய பாரமாகிய பலமணிகள் முதலாகியதைக் கரையில் சொரிந்து அந்த நெய்தல் நிலத்திலே குவித்துக் கிடக்கின்றதும், அந்தக் கப்பல்கள் முதுகாற்றிக் கொள்ளுகிறதும் பார்த்து இறும்பூ தெய்தியும், நேத்திர இந்திரியத்தினாலே பார்க்குந்தோறும் ரஞ்சிதத்தைச் செய்கின்ற தன் கணவனாகிய புருடோத்தமனது கரத்தில் தாங்கிய சங்கத்தைப்போன்ற ஆபரணத்தை அணிகின்ற தனது கண்டத்துக்குச் சரியான சலஞ்சலம் என்கின்ற சங்கத்தைக் கண்டு தன்னைப் பீடிக்காநின்ற ஒருதலைக் காமத்தினது விசனத்தை நீங்கினாள் என்றவாறு. (15)

## Kaṭalil caṅkiṉaik kāṇutal

*nilaṅkala marumporu ṉiraintavaru kēkip*
*polaṉkoṭuṇai pōlkaṇavaṉ poṟpaṉila meṉṉak*
*kalaṉkoṭaṇi taṉkaḷamē kāṭṭuvaṉa pōlūr*
*calañcalamē kaṇṭumiku cañcala moḻintāḷ.*

## Sighting the Conch in the Sea

The beaches were full of gems
Brought by the ships; looking
At the innumerable conches that appeared
Like the one in the Lord's hand
And also that seemed like her own neck,
She lost her worries.

(செம்பவளக் காடு கண்டு மகிழ்தல்)

708. கடற்கண்டர் செம்பவளக் காடுபட ரக்கண்
மடற்கமலக் கண்ணன்மணி வாயிதழு மாய்த்தன்
தடக்கணொளிர் செவ்வரியு மொத்தது தயங்கக்
குடக்கணுறு வீறுபுள காங்கிதமு முற்றாள்.

எ-து இத்தன்மை யானவராய் எழுந்தருளிய ஸ்ரீ மகாலட்சுமி தேவியானவள் அக்கடலிடத்தில் பரவிப் படர்ந்திராநின்ற செம்பவளக் காடானது தோன்றும் தன்மையைக் கண்ணுற்றுத் தனது கணவனாகிய சீதரமூர்த்தியினது செம்பவள இதழோ அல்லது நமது கண்ணின்கண் தோன்றிப் படர்ந்த செவ்வரிதானோ இதுவென்று அற்புதம் பெருகிக் கொங்கைக்கண் புளகாங்கிதம் உற்றாள் என்றவாறு (16)

## Cempavaḷak kāṭu kaṇṭu makiḻtal

*kaṭaṟkaṇṭar cempavaḷak kāṭupaṭa rakkaṇ*
*maṭaṟkamalak kaṇṇaṉmaṇi vāyitaḻu māyttaṉ*
*taṭakkaṇoḷiṟ cevvariyu mottatu tayaṅkak*
*kuṭakkaṇuṟu viṟupuḷa kāṅkitamu muṟṟāḷ.*

## Sighting the Creepers of Coral

Looking at the masses of coral in the sea,
And finding them similar to the Lord's lips
And the red lines in her own eyes,
Lakṣmi was delighted. Her breast rose high.

(நவரத்தினக் குவியலைக் காணுதல்)

709. கரையிலகு கிரணமணி குன்றுகள் கவின்செய்
உரையளவி லாதபொன் னுடன்திகழ்தல் கண்டு
வரைபுரைதன் னாயகனன் மால்புயமு மேரு
புரைதனமு மாகுமென வெண்ணியயல் போனாள்.

எ-து. அந்த நெய்தல் திணைக் கரையிலே கிரண சமூகங்களை விரித்தொளிக்கின்ற நவரத்தினங்கள் குவிந்து அழகெறிப்பச் சிறந்த பொன் குவியலுடனே தோன்றுதலைக் கண்ணுற்ற ஸ்ரீ மகாலட்சுமி தேவியானவள், தனது நாயகனாகிய சீதரமூர்த்தியினது நவரத்தின மயமாகிய புயகீர்த்தியைப் புனைந்த புயமே இக்குவியலென்றும், சொர்ணக் குவியலே தனது கொங்கை என்றும் மதித்தவளாய்த் திணையின் புறம்பெல்லாம் பார்த்தருளினாள் பிராட்டியார் என்றவாறு. (17)

## Navarattiṉak kuviyalaik kāṇutal

*karaiyilaku kiraṇamaṇi kuṉṟukaḷ kaviṉcey*
*uraiyaḷavi lātapoṉ ṉuṭaṉtikaḻtal kaṇṭu*
*varaipuraitaṉ ṉāyakaṉaṉ mālpuyamu mēru*
*puraitaṉamu mākumeṉa veṇṇiyayal pōṉāḷ.*

## Sighting the Nine Gems

Looking at the gems spreading their rays
On the beach along with innumerable
Hillocks of gold, she thought of the sight
As similar to the Lord's Mēru-like shoulders
And her own breasts. She then moved forward.

(முல்லைத் திணை காணுதல்)

710. தோடுபொரு கண்ணிணை துணைக்கருவி யென்ன
மாடுவரு தோழியர் மகிழ்ந்தினிய முல்லை
யூடுறுவி லங்குபுளி னங்களோ டுணர்த்தக்
காடுபடு திரவியமுங் கண்டன ளகன்றாள்.

எ-து. காதில் அணிகின்ற தோட்டினை எதிர்த்துப் பாய்கின்ற தனது கண்ணிணையைப் போன்ற தோழியர்கள் முதலாகிய பேர்கள் தன்னைச் சூழ்ந்து வர, நெய்தல் திணையைக் கடந்து அவர்களுடனே முல்லைத் திணையாகிய காட்டகத்தில் தோன்றுகின்ற மிருக சாலபட்சிக் கூட்டங்களும் வழிகாட்டக் கண்டு அத்திணையில் படுகின்ற காடுபடு திரவியத்தையும் கண்ணுற்றாள் பிராட்டி என்றவாறு. (18)

மாடு - பக்கம், புளினம் - புள்ளினம், பறவைக்கூட்டம்.

## Mullait tiṇai kāṇutal

*tōṭuporu kaṇṇiṇai tuṇaikkaruvi yeṉṉa*
*māṭuvaru tōḻiyar makiḻntiṉiya mullai*
*yūṭuṟuvi laṅkupuḷi ṉaṅkaḷō ṭuṇarttak*
*kāṭupaṭu tiraviyamuṅ kaṇṭaṉa ḷakaṉṟāḷ.*

## On the Mullai Land

With friends whose eyes were companions
To their ear-studs, she walked happily
Towards the *mullai* land watching
A variety of birds marking the way,
And saw large quantitites of wealth.
So she went.

(இலக்குமி கோலமலை யடைதல்)

711. செந்நெலொடு செவ்விளநீர் சேர்புனற் றடங்கள்
கன்னல்கமு குக்கதலி காரளவு சோலை
மன்னுபல மும்பல வளங்களு மகிழ்ந்தவ்
வன்னமணி கோலவரை மீதினி லணைந்தாள்.

எ-து. மேற்கூறிய முல்லைத்திணையைக் கடந்த பிராட்டியானவள் தனது சேடியர், பாங்கியர், தோழியர் முதலாயினோர் சூழ்ந்துவர முத்தின் சிவிகையினை ஊர்ந்து மருதத்திணையி னெழுந்தருளும்போது, செந்நெற்குவைகளும், செவ்விள நீரீட்டங்களும், தாமரை முதலாகிய தடாக பந்திகளும், கன்னலாகிய கரும்பின் காடுகளும், கமுகினங்களினது தோப்புகளும், மேகமளாவிய பூஞ்சோலையினில் நிலைபெறுகின்ற பழவர்க்கங்களும் பார்த்து மகிழ் சிறந்தவளாய நானாவிதமாகிய மணிமயமான கோலாசலத்து உச்சியில் பிராட்டி தோழியர்களுடனே அடைந்தாள் என்றவாறு. (19)

பலம் - பழம்

## Ilakkumi kōlamalai yaṭaital

*cenneloṭu cevviḷanīr cērpuṉaṟ ṟaṭaṅkaḷ*
*kaṉṉalkamu kukkatali kāraḷavu cōlai*
*maṉṉupala mumpala vaḷaṅkaḷu makiḻntav*
*vaṉṉamaṇi kōlavarai mītiṉi laṇaintāḷ.*

## Lakṣmi at the Kōla Hill

She reached the gem-rich Kōla Hill
Watching the red paddy, red coconut palms,
Water resources, sugarcane, betel-nut,
Plantains and other fruit-bearing trees.

(மாதர் பணிய மலையையடைதல்)

712. வந்துமலை மீதுகலை வரைமகள்கை தாங்க
விந்துநுத லார்சசி யரம்பையர்க ளேத்த
[1]முந்து நெறி பூவனைய மொய்ம்மலர்கை யேத்திப்
பந்தியி னடித்துணை பணிந்தனர்க ளன்றே.

எ-து. அப்படியாகிய கோலாசலத்திலே எழுந்தருளும்போது, பிராட்டியானவள் சிவிகை விட்டிழிந்து பாதசாரியாய் எழுந்தருளும் போது நாமகளும், பார்வதியும் இருபுறக் கராம்புயக் காந்தள்களைத் தாங்கிவர, இம்மூவர்களையும் சசி முதலாகிய தேவ மங்கையர் சூழ்ந்து வந்து அடிபணிய, மற்றைய கன்னியர்கள் எல்லாம் தங்கள் காந்தள் கையிணைகளைச் சிரம் மீதில் குவித்துப் பந்தி பந்தியாய் வந்தனைசெய்து வணங்கினார்கள் என்றவாறு. (20)

பா.வே. - 1. முந்துநறு பூவனைய.

மகாலட்சுமியார் திருவவதார அத்தியாயம் முற்றிற்று.

## Mātar paṇiya malaiyaiyaṭaital

*vantumalai mītukalai varaimakaḷkai tāṅka*
*vintunuta lārcaci yarampaiyarka ḷētta*
*muntu neṟi pūvaṉaiya moymmalarkai yēttip*
*pantiyi ṉaṭittuṇai paṇintaṉarka ḷaṉṟē.*

## Reaches the Hill, the Ladies Salute

On the hill Carasvati and Pārvati
Helped her to walk, heavenly damsels
With moon-bright faces sang her praises,
And saluted her feet. They came in groups
Carrying sweet-scented blossoms in their hands.

# 39. முப்பத்தைந்தாவது
# இலக்குமி தவம் புரிந்த அத்தியாயம்

தேவமங்கையர் வாழ்த்த நடந்துவந்த எம்பிராட்டி அரங்கநாயகரின் ஆலயவாயிலை அடைந்தார். தேவர்கள் பதினைந்து காதவழி அளவு நீண்டதோர் பந்தலை அமைத்து, அதற்கு வாழையும், கமுகும் கட்டி முத்தும் மணியும் கொண்டு அழகு செய்தார்கள். இடையே தவச்சாலையினையும் அமைத்தார்கள். அட்டதிக்குப் பாலகரின் தேவியர் முதலான மங்கையர் காவல் புரிந்து ஏவல் செய்ய தேவியானவள் தவத்தினைத் தொடங்கினாள்.

முதலில் அம்மலையில் உள்ள ஒரு பெரிய பாறையின் மீது தனது கால் பெருவிரலின் நகத்தை ஊன்றினாள். அதிலிருந்து ஒரு ஆறானது தோன்றிப் பரந்து ஒரு தீர்த்தம் உண்டாயிற்று. அவ் ஆறானது பல இடம்புரி வலம்புரிச் சங்குகளை ஏந்தி வந்தது. மலைப் பகுதிகளைக் குளிரச் செய்து வந்தது. அவ் ஆற்றிலே நீராடிப் பீதாம்பரத்தைக் களைந்து மரவுரியைப் புனைந்த தேவியார், அணிகலன்களை நீக்கித் துளசிமாலையைத் தரித்தார். அரங்கநாயகரின் திருவடிகளிலே உள்ளத்தை இருத்தினார். இமைகொட்டாது தவ ஒழுக்கத்தை மேற்கொண்டார். உச்சி மயிர் சடாபாரமாய் விளங்கியது. இடையில் மான்தோல் நிலவியது. இதயத்தில் இறைவனின் திருவடிகள் பதிந்தன. இரண்டு கைகளையும் தலையின் மேல் குவித்து பிற பொறிகளை அடக்கி, பிரணவத்தை அடக்கித் தவநிலையை மேற்கொண்டாள்.

இந்தச் சூழ்நிலையில் கல்லும் புல்லுங் கூட அசைவற்ற நிலையில் தவத்தை மேற்கொண்டன என்றால் பிறபொருள்களுக்குக் கூறவே வேண்டாம். தாமரைகள் ஒரு தாளின் நின்று தவம் செய்வன போலக் காட்சியளித்தன. சராசரங்களும் அசைவற்றன. இந்தச் சூழ்நிலையை உணர்ந்த அரங்கநாயகர் தேவியின் முன் தோன்றி, நின் தவத்திற்கு மெச்சினோம். நீ நினைந்த பொருளைக் கூறுவாயாக என்றருளினார். அவருடைய திருவடிகளிலே தன் கைகளினாலே திருவாராதனம் செய்து ஐயனே! உமது அழகிய திருமார்பினின்றும் என்றும் நீங்காத வரத்தினை எனக்கு அருள வேண்டும் என்று வேண்டினாள். மேலும் என் பெயரைப் பூண்ட இந்த இலக்குமி தீர்த்தத்திலே முழுகியவர்கள் நித்திய சூரியர்களாய் உம்து திருவடி நிழலை அடையவேண்டும். இந்நகரமானது இலக்குமிதேவி நகரம் என்று பெயர் பெற வேண்டும். இந்த வரங்களையும் தந்தருளுங்கள் என்று வேண்டினாள்.

**(கோயில் வாயிலையடைதல்)**

713. **அன்னையெம தாருயிரி னாரமுத மேயெம்**
**[1]பொன்னின்குண மங்கலை பொருந்துதிரு வென்றே**
**சென்னியில் குவித்திருகை சேர்க்கஉமை யாளு**
**முன்னர்கழல் சேர்க்கதிரு முற்றமதி னுற்றாள்.**

எ-து. உமையவளாகிய பார்வதியாரும் நாமகளாகிய கலைமகளும் சிரத்தில் கைகூப்பித்தொழுது கூறுகின்றார்கள். எமது தாயே! சிறந்த ஆருயிரே! திருப்பாற்கடலில் பிறந்த தெவிட்டாத திரண்ட அமுதமே! பொன்மயமாகிய சகல குண சாம்பிராச்சிய மங்களாகர மங்கலையே! அருள் வடிவாகிய திருவே! பொருளே! அருளே! என்று துதிசெய்து நடக்க, ஆயர்கூட்ட நடுப்பிரதேசத்திலே அன்னநடையைப்போலத் தனது பாதத்தைப் பெயர்த்து வைத்துத் திருமுற்றமாகிய கோயிலின் வாயிலின் சமீபமாய் வந்தருளினாள் பிராட்டி என்றவாறு. (1)

மங்கலை - இலக்குமி.

**பா.வே.** - 1 பொன்னினருள் மங்கலை.

## Kōyil vāyilaiyaṭaital

*annaiyema tāruyiri nāramuta mēyem*
*ponninkuṇa maṅkalai poruntutiru venrē*
*cenniyil kuvittirukai cērkkaumai yāḷu*
*munnarkalal cērkkatiru murramati nurrāḷ.*

## XXXIX. Lakṣmi's Penance At the Temple

Pārvati held her hands in salutation
And prayed: "O Mother! Our life!
Nectar! Auspicious lady who is ornamented
With all good qualities! Goddess of Wealth!"
And Lakṣmi stepped forward to reach
The temple's threshold.

**(தவச்சாலை அமைத்தல்)**

**714.** **பத்துயர்வு யோசனை யகன்றபரி பந்தர்**
**சுத்திவர வாழைகமு குக்குலை தொடுத்து**
**முத்துமணி மாலையினைப் பாளைமுறை சேர்த்தங்**
**கத்தனைத் தொழற்குரிய சாலையு மமைத்தார்.**

எ-து. இந்தப் பிரகாரம் பிராட்டியானவள் தனது பாங்கியருடனே திருமுற்றத்தின் வந்தெழுந்தருளின மாத்திரத்தில் தேவாதிகளானவர் பதினைந்து காத வழி அளவு நீளமாய் ஒரு கலியாணப் பந்தர் அமைத்தார். அதைச்சுற்றி வாழைகளும் கமுகுகளும் குலைகளுடனே பிரகாசிக்கக்கட்டியும், முத்து மாலையினை அந்தக்குலையில் தொங்க விட்டு அரங்கநாயகனைத் தொழுதற் குரித்தாகிய தவச்சாலையினையும் அமைத்தார்கள் அத்தலவாசிகள் என்றவாறு. (2)

பரிபந்தர் - பரந்த பந்தல். சுத்திவர - சுற்றிவர; எதுகை நோக்கி வந்தது. அத்தன் - தலைவன், அரங்கநாயகன். சாலை - தவச்சாலை.

## Tavaccālai amaittal

*pattuyarvu yōcaṉai yakaṉṟapari pantar*
*cuttivara vāḻaikamu kukkulai toṭuttu*
*muttumaṇi mālaiyiṉaip pāḷaimuṟai cērttaṅ*
*kattaṉait toḻaṟkuria cālaiyu mamaittār.*

## A Hall for Penance

A vast pandal of ten yōcaṉas was set up
By the gods; Decorated with plantain
And betel-nut trees, the hall had strings
Of pearls inter-twined. It was a hall
Worthy of worshipping Araṅkaṉ.

(ஒரு தீர்த்த முருவாக்கல்)

715. எட்டுதிசை மாதர்பல திக்குமுறை காப்பப்
பட்டணிமெய் சூழ்கவுரி வாணிபகர் மாதர்
இட்டமுட னேவலதி யற்றவிறை வியுமோர்
வட்டசிலை கானக முறுத்தநனி வந்தாள்.

எ-து. இந்தப் பிரகாரம் பிராட்டியானவள் தவநிலையைத் தொடங்கி முடிக்கும்போது அட்டதிக்குப் பாலகர் மனைவியர்கள் அவரவர்கள் தங்கள் கணவரிருக்கும் திசைகளில் காவலா யிருக்கவும், பீதாம்பரத்தை அணிகின்ற பார்வதியாரும், நாவின் மகளும் ஏவல் பணியினைச் செய்யவும், இறைவியானவள் அந்த மலையினிலகாநின்றதொரு சிலை கல்லிலே தனது கால் பெருவிரல் நகத்தை ஊன்றினாள் அப்போது அந்த வட்டப்பாறைச் சிலையினின்றும் ஒரு தீர்த்தமாகிய நதியாய்ப் பிரவேசித்து அனேக மலைகளுடனே கூடிப் பலமுகமாய் ஒரு தீர்த்த முண்டாயது என்றவாறு. (3)

இட்டமுடனேவலதியற்ற - இட்டமுடன் ஏவலது இயற்ற.

## Oru tīrtta muruvākkal

*eṭṭuticai mātarpala tikkumuṟai kāppap*
*paṭṭaṇimey cūḻkavuri vāṇipakar mātar*
*iṭṭamuṭa ṉēvalati yaṟṟaviṟai viyumōr*
*vaṭṭacilai kāṉaka muṟuttanaṉi vantāḷ.*

## A Spring Comes Up

The ladies of the eight directions
Acted as guards; Pārvati robed in silk,
Carasvati and others served happily;
Lakṣmi pressed the toe of her right foot
On a stone. From there a spring gushed forth.

**(இலக்குமி மரவுரி தரித்தல்)**

716. **மூவுலகு கங்கையு முடன்முன முதித்தாங்**
**கேவருகு மந்நதி யிழிந்துமியல் சங்கத்**
**தாபர மிகக்குளிர தண்புனல் படிந்து**
**பூபுரைபொன் னாடைநிகர் மரவுரி புனைந்தாள்.**

எ–து. பிராட்டியனுக்கிரகத்தால் பிறந்து வந்த நதியைச் சேவித்து இருபுறமும் திரிபுவன கங்கைகளும் பிரவேசிக்க வாய்ந்த நதியானது தோன்றிவரும்போது அனேகமாகிய இடம்புரி வலம்புரி முதலாகிய சங்கக் கூட்டங்களை அலையினேந்தியும், மலைப்புறமெல்லாம் குளிர்ச்சி அடைய வந்த நதியிலே தீர்த்தமாடிய பின்பு முன்பு உடுத்த பீதாம்பரத்தை நீக்கி மரவுரியைப் புனைந்தாள் ஸ்ரீ மகாலட்சுமி என்றவாறு. (4)

சங்கத்தாபரம் – சங்குகளாகிய திணைப்பொருள்கள். படிதல் – நீராடுதல். பூ புரை – மலரைப் போன்ற.

## Ilakkumi maravuri tarittal

*mūvulaku kaṅkaiyu muṭaṉmuṉa mutittāṅ*
*kēvaruku mannati yiḻintumiyal caṅkat*
*tāpara mikakkuḷira taṇpuṉal paṭintu*
*pūpuraipoṉ ṉāṭainikar maravuri puṉaintāḷ.*

## Lakṣmi Wears the Bark

Immersing herself in that holy spring
Which streamed there along with Kaṅkai
That flows in the three worlds, carrying
Masses of conches, making the atmosphere cool,
She then wore the bark of a tree
That was blossom-soft as gold-silk.

(தவம் தொடங்குதல்)

717. அணிகல னகற்றிதிரு மணிதுள வணிந்து
பணிதனில் படுக்குமரி துணையடி பணிந்து
மணிவிழி யிரண்டுநுத லொன்றிமை தவிர்ந்து
தணிமனதி னன்புறு [1]தவம்பல துடங்கா.

எ-து. தான் பூண்ட அணிகலனாகிய ஆபரணத்தை நீக்கித்தவத்துக்குரிய சிரேஷ்டமாகிய துளப மாலையைச் சிரம் முதலாகிய உறுப்பினில் தாங்கி, அனந்த சயனசாயியாகிய அரங்க நாயகருடைய உபய சரணார விந்தங்களிலே இதயத்தை இருத்திப், பாவையானது கரிய மணியைப்போல விளங்குகின்ற கண்ணிணையினது இமையினை நெற்றியில் செலுத்தி இமை கொட்டாதவளாய், சாந்த, தத்துவ, ஞானத்தைத் தருகின்ற தவ ஒழுக்க உருவத்தைக் கொண்டு எழுந்தருளியிருந்தாள் உலக மாதாவாகிய பிராட்டியார் என்றவாறு. (5)

மணிதுளவு - துளசிமணி பணி - பாம்பணையாகிய அனந்தசயனம். துணையடி - இரண்டாகிய திருவடிகள். துடங்கா - துடங்கி, தொடங்கி.

பா.வே. - 1. தவமதனில் வந்தாள்.

## Tavam toṭaṅkutal

*aṇikala ṉakaṟṟitiru maṇituḷa vaṇintu*
*paṇitaṉil paṭukkumari tuṇaiyaṭi paṇintu*
*maṇiviḻi yiraṇṭunuta loṉṟimai tavirntu*
*taṇimaṉati ṉaṉpuṟu tavampala tuṭaṅkā.*

## Austerities Begin

Removing her ornaments, wearing a garland
Of *Tuḷaci* leaves, saluting the feet
Of Hari who rests on the snake,
With her eyes drawn to the centre
Between her eyebrows, she performed penance
Settling down as the very image of peace.

(தவநிலை)

718. முடியினிற் குழற்சடை முடித்துமணி யுச்சிப்
படிவமரை மேதையு மணிந்துபர மன்றன்
வடிவக முறுத்திமலர்ப் பதநில நிறுத்திக்
கடிபொறிய வித்திருகை சிரமதில் குவித்தாள்.

எ-து. முடியினிராநின்ற உச்சி மயிரினைச் சடாபாரமாய்த் தாங்கியும், திருவரையின் கண் மானின் உருவையை உடுத்தும், பரமாத்மாவினது பாத தாமரையை இதய பீடத்தில் இருத்தியும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் வாயிலையுடைய அய்ந்தவாவில் செல்லும் இந்திரியங்களை அடக்கியும், இரண்டு கையாகிய காந்தட் புட்பத்தை சிரசின்மேல் வைத்துக் கூப்பித் தொழுதாள் என்றவாறு. (6)

மரை - மான். மேதை - தோல்.

**உரை** - அய்ந்தவா - ஐம்புல நுகர்ச்சி விருப்பம்.

## Tavanilai

*muṭiyiṉiṟ kuḻarcaṭai muṭittumaṇi yuccip*
*paṭivamarai mētaiyu maṇintupara maṉṟaṉ*
*vaṭivaka muṟuttimalarp patanila niṟuttik*
*kaṭipoṟiya vittirukai ciramatil kuvittāḷ*

## Lakṣmi's Meditation

Gathering her tresses into a bunch
On her crown, wearing deer skin,
Lakṣmi enthroned the Lord's image
In her heart. Controlling her senses,
She held up her hands above her head
In salutation.

**(மலை மீது இருத்தல்)**

719. **பிரணவ மனத்திடை பெருக்கியுள் ளடக்கிக்**
**கரணமிகு ஞானநிறை கண்ணினமு தூறச்**
**சரணமது தாரையெனத் தாயுணர்வு சாரக்**
**கிரணமதி யெனமலையின் மீதினில் கிளர்ந்தாள்.**

எ-து. சத்த கோடி மகாமந்திர சாலத்துக்கு உயிராகிய பிரணவத்தை மனத்தினால் உபாசித்து உள்ளேயடக்கியும், கரணத்தைக் கடந்த மிகுந்த ஞானமாகிய கண்ணிணைகளில் அமுததாரை பெருகவும், தன் தலைவன் சரண பங்கயத்தைப் பேரின்ப அமுதமாய் அருந்தியும், மூன்றாம் பிறையினின்றும் வளர்கின்ற சந்திரனைப்போல அந்த மலையின் கண் வீற்றிருந்தாள் பிராட்டியார் என்றவாறு. (7)

கரணம் - ஐம்பொறி.

### Malai mītu iruttal

*piraṇava maṉattiṭai perukkiyuḷ laṭakkik*
*karaṇamiku ñāṉaniṟai kaṇṇiṉamu tūṟac*
*caraṇamatu tāraiyeṉat tāyuṇarvu cārak*
*kiraṇamati yeṉamalaiyiṉ mītiṉil kiḷarntāḷ.*

### On the Hill

Meditating on the piraṇavam[1] in her heart,
Nectar streaming from her eyes twain
That symbolised knowledge, realising
That the Lord's feet were the true refuge,
She remained on the hill as a moon
With spreading rays.

(அனைத்தும் தவநிலை யடைதல்)

720. தவசினனை நிற்கமெய் தளர்ந்தவர் குழைந்தங்
கவசமுற பார்வதியவ் வாணியமர் மாதர்
திவசமொரு முப்பதுவு நிற்கவன முஞ்சேர்
[1]நவமிதென மரையினமு நற்றவ மியற்ற.

எ-து தவநிலையிலே பிராட்டியார் எழுந்தருளின மாத்திரத்திலே அங்கனமிருந்த பேரெல்லாம் சரீரம் தளர்ந்ததுவும் அல்லாமல் பார்வதி, கலைமகள் முதலாகிய பேர்களும் சித்திரப் பதுமைபோலக் குழைந்துருக, முப்பது நாளளவும் தவம்புரியும் காலையில் வனங்களும் மரையினங்களும், கல்லும் புல்லினங்களும் தவம் செய்த தென்றாலியாது தவம் செய்யாதிருந்தது என்றவாறு. (8)

தவசினனை - தவசில் அன்னை நிற்க. அவசம் - பரவசம், மயக்கம். திவசம் - நாள். நவம் - புதுமை.

பா.வே. - 1. நவவனமு மரையினமு.

### Aṉaittum tavanilai yaṭaital

*tavaciṉaṉai niṟkamey taḷarntavar kuḻaintaṅ*
*kavacamuṟa pārvatiyav vāṇiyamar mātar*
*tivacamoru muppatuvu niṟkavaṉa muñcēr*
*navamiteṉa maraiyiṉamu naṟṟava miyaṟṟa.*

---

1. The mystic syllable, OM.

## All Around, Stillness

As the mother remained thus in meditation,
Those who were near her grew frail and tired,
Along with Pārvati, Carasvati, the damsels
Of the divine race. Thirty days passed by.
It was a wonderment that even the flora
And the fauna of the woods joined the penance.

## வேறு

### (மலையின் தவநிலைக் காட்சி)

721. கொன்றைச்சடை காட்டித்தவ நின்றப்பனை கூந்தல்
அன்றுத்தவ நின்றப்பணி யாலுந்தவ நின்ற
மன்றற்பொதி செந்தாமரை வளர்தாளினி னின்று
வொன்றத்தவஞ் செய்தாலென வுற்றார்ந்தது மலையே.

எ-து. சரக்கொன்றை என்னும் சடைகளை விரித்து நான்கு திக்கினும் தவம்செய்த லொத்ததாய்க் கூந்தல் பனையானது விளங்கியது. அப்பொழுதில் பிராட்டியானவள் தவநிலை ஒழுக்கவிதி தவறாமல், யோக தவங்களை இடையூறில்லாமல் முடித்தமையால் மூன்றுலகின் கண்ணும் தவங்கள் நிலைபேறடைந்தன. திவ்விய பரிமளங்களை இதழினை விரித்து வீசுகின்ற செந்தாமரை, வெண்டாமரைக் கமலங்கள் ஒரு தாளினின்று தவம் செய்தலை ஒத்தன அம்மலையி னென்றவாறு. (9)

பனைகூந்தல் - கூந்தற் பனை; தாளிப்பனை

## Vēṟu

### Malaiyiṉ tavanilaik kāṭci

*koṉṟaiccaṭai kāṭṭittava niṉṟappaṉai kūntal*
*aṉṟuttava niṉṟappaṇi yāluntava niṉṟa*
*maṉṟaṟpoti centāmarai vaḷartāḷiṉi ṉiṉṟu*
*voṉṟattavañ ceytāleṉa vuṟṟārntatu malaiyē.*

## The Hill in Meditation

The palmyra palm appeared to perform penance
With laburnum branches; and Lakṣmi stood
And engaged herself in austerities.

The red lotuses too seemed to do so
Standing on their stalks; it seemed
The hill also had gone into meditation.

(உலகம் அசைவற்றது)

722. உலகெங்கணு மசைவற்றிட வொழியாதவ முயல்கால்
இலகும்பொரு ளியாவுமிசை யாவுமசை வற்ற
சொலவுந்தர மன்றேயயன் அரனுந்துய ருற்றார்
பலவுமரு ளன்னைதனை யன்றிப்பக ருண்டோ.

எ-து. உலகமெல்லாம் அசைவற்றிடப் பிராட்டியாரோ ஒழியாத் தவத்தைச் செய்யுங்கால் இவ்வுலகின்கண் மருவிய சராசரங்களும் அசைவற்று நின்றன. கூறுதற்கரிய புகழ் சிறந்த சங்கரனும் பிதாமகனும் துயருற்றார்கள். பல பேதா பேதங்களாகிய உயிர்கட்கும், சமய கோடிகட்கும் ஸ்ரீ மகாலட்சுமி துணையின்றி வேறுண்டோ என்றருளிச் செய்தார் சூதபுராணிகர் என்றவாறு. (10)

### Ulakam acaivaṟṟatu

*ulakeṅkaṇu macaivaṟṟiṭa voḻiyātava muyalkāl*
*ilakumporu ḷiyāvumicai yāvumacai vaṟṟa*
*colavuntara maṉṟēyayaṉ araṉuntuya ruṟṟār*
*palavumaru ḷaṉṉaitaṉai yaṉṟippaka ruṇṭō.*

### The World Grows Still

The entire earth grew still, even as
Lakṣmi's penance seemed unending.
All things moveable and immoveable
Became Still. It was beyond description.
Piramaṉ and Civaṉ were worried.
Is there a refuge for the manifest creation
Except the mother herself?

(தேவர்கள் அரங்கனிடம் திரண்டு வருதல்

723. அண்ட மெண்டிசை யாருயிர் வானவர்
புண்ட ரீகன் புராரி புரந்தரன்
தெண்டி ரைத்திருப் பாற்கடற் செல்வனார்
மண்ட லமளந் தப்பத மன்னினார்.

எ-து. அண்டங்களாகிய ஆயிரம் கோடி சமூகங்களும், எட்டுத்திக்கு, நான்கு வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, என்னும் எண்பத்து நான்கு நூறாயிர சீவ பேதங்களும், இந்திரன் முதலாகிய தேவர்கூட்டங்களும், பிரம்மா, சிவன் முதலாகிய பேர்களெல்லாம் சித்திரம் போன்று அசைவற்றவர்களாய் அனேக நாள் இருந்ததன் பின்பு திருப்பாற் கடலில் செல்வமாய் யோக நித்திரை செய்கின்றவரது உலகளந்த திருத்தாளினைத் தேடிச் சென்றார்கள் என்றவாறு. (11)

புண்டரீகன் - பிரமன். புராரி - சிவபெருமான்.

## Tēvarkaḷ Araṅkaṉiṭam tiraṇṭu varutal

*aṇṭa meṇṭicai yāruyir vāṉavar*
*puṇṭa rikaṉ purāri purantaraṉ*
*teṇṭi raittirup pāṟkaṭaṟ celvaṉār*
*maṇṭa lamaḷan tappata maṉṉiṉār.*

## Gods come to Araṅkaṉ

All living beings on earth
Came from the eight directions,
And the gods, Piramaṉ, Civaṉ and Intiraṉ
Went in search of the Lord
Resting in the Milky Ocean,
The one who measured the three worlds.

**(தேவர், முனிவர் யாவரும் சூழ்தல்)**

724. **முனிவர் மாதவர் மொய்த்தம ரர்தொழ**
**இனிய மாமறை யேத்தி யிடைவிடாத்**
**தனிய னந்தன் சுனந்தனுந் தாங்குறக்**
**கனியு நல்லடி யார்கள் கழற்றொழ.**

எ-து. ஏக தண்ட திரிதண்ட சன்னியாசிகளும், வேத பாராயண பண்டிதர்களும், நெருங்கிய தேவ சமூகங்களும் தண்டன் சமர்ப்பிக்கவும், இனிதாகிய பதக்கிரமச் சடைகளால் வேத பாராயணம் செய்யவும், ஒப்பற்ற சேஷசாயியர், பெரிய திருவடிகளாகிய கருட பகவானான இருவரும் ஸ்மரிக்கவும், பாசுரங்களால் கனிந்து உருகாநின்ற எம்பெருமான் தாசர்கள் பாதத்தாமரையைத் துதிக்கத் தக்கதாய் வீற்றிருந்தருளினார் நாராயணமூர்த்தி என்றவாறு. (12)

அனந்தன் - ஆதிசேடன். சுனந்தன் - திருமாலின் ஏவலருள் ஒருவன்.

**உரை** - ஸ்மரித்தல் - நினைவு கூர்தல்.

### Tēvar, muṉivar yāvarum cūḻtal

*muṉivar mātavar moyttama rartoḻa*
*iṉiya māmaṟai yētti yiṭaiviṭāt*
*taṉiya ṉantaṉ cuṉantaṉun tāṅkuṟak*
*kaṉiyu nallaṭi yārkaḷ kaḻaṟṟoḻa.*

### Gods and Sages

As sages, scholars and gods saluted
Reciting the sweet scriptures continuously,
And Aṉantaṉ and Cuṉantaṉ held him,
Sincere devotees prostrated at his feet
With deep emotion.

(அரங்கன் காட்சி தருதல்)

725. வந்த னன்பொன் மணிக்கோல மால்வரை
யந்த மாமல ராளன்பு கொண்டுடன்
சிந்தை யுங்களி கொண்டு தொழுதடி
முந்தப் பூசை முறையிற் புரிந்தனள்.

எ-து. பிராட்டியானவள் தன்னைக் குறித்து அரிய தவத்தினைச் செய்தலைக் குறித்து அரங்கநாயகர் எழுந்தருளினார். அப்பொழுது சிந்தனை மகிழ்சிறந்து தொழுது திருவடிகளிலே மூவிதமாகிய பத்தியினைத் தவறாத வைதிக பூசையினால் திருவாராதனம் செய்தாள் என்றவாறு. (13)

### Araṅkaṉ kāṭci tarutal

*vanta ṉaṉpoṉ maṇikkōla mālvarai*
*yanta māmala rāḷaṉpu koṇṭuṭaṉ*
*cintai yuṅkaḷi koṇṭu toḻutaṭi*
*muntap pūcai muṟaiyiṟ purintaṉaḷ.*

### Araṅkaṉ Comes

The Lord came to the golden Kōla Hill.
The lotus-residing Lakṣmi, full of love,
Her heart joyous, saluted his feet,
And worshipped him with proper rituals.

(யாது விரும்பினாய் எனல்)

726. ஞான நாயக னற்கரு ணைக்கடல்
தானு வந்துன் தவநிலை மெச்சினோம்
நீநி னைந்த பொருளை நிகழ்த்தென
வான மாதர்க் கரசி வழங்குவாள்.

எ-து. ஞான நாயகமாகிய நற்கருணைக் கடலாய்ப் பரவியிராநின்ற அரங்க நாயகர் திருவாய் மலர்ந்தருளுகின்றார். யான் உன் தவத்தின் நிலைமையினை மெச்சினேன். ஆகையினாலே நீ நினைந்த பொருளை இன்னதென்று எந்தனுக்கு அறியக் கூறுவாயாக என்று அனுக்கிரகம் செய்தலும், தேவ மடந்தையர்களுக் கெல்லாம் எழில் விளக்காகிய அரசியானவள் ஒரு வார்த்தை கூறுகின்றாள் என்றவாறு. (14)

## Yātu virumpiṉāy eṉal

*ñāṉa nāyaka ṉaṟkaru ṇaikkaṭal*
*tāṉu vantuṉ tavanilai mecciṉōm*
*nīni ṉainta poruḷai nikaḻtteṉa*
*vāṉa mātark karaci vaḻaṅkuvāḷ.*

## Araṅkaṉ's Query

The Lord of Realisation, an ocean
Of compassion, said: " I am pleased
And congratulate you on your penance.
What is it that you desire?"
The queen of goddesses spoke:

(இலக்குமி ஆராதனை செய்தல்)

727. திங்க ளொன்றினிற் செய்தவஞ் செய்திடும்
பங்க யத்துறை யும்பது மைமுனே
யெங்க ளைய னிருசர ணேத்திப்பின்
செங்கை யாற்றிரு வாரா தனஞ்செய்தாள்.

எ-து. ஒரு மாத பரியந்தம் ஸ்ரீ மகாலட்சுமியார் சிறந்த தவத்தினைத் தொடங்கிச் செய்த அளவில், பொன்னந்தாமரைப் பீடத்தி னெழுந்தருளிய பிராட்டியார் முன்பாக வெங்கள் ஐயனானவ ரெழுந்தருள, அவரது பாதத் தாமரையினில் சிவந்த காந்தள் மலரினைப் போன்ற கராம்புயத்தினால் திருவாராதனம் செய்து முடித்தாள் என்றவாறு. (15)

## Ilakkumi ārātaṉai ceytal

*tiṅka ḷoṉṟiṉiṟ ceytavañ ceytiṭum*
*paṅka yattuṟai yumpatu maimuṉē*
*yeṅka ḷaiya nirucara ṇēttippiṉ*
*ceṅkai yāṟṟiru vārā taṉañceytāḷ.*

## Lakṣmi's Worship

Lakṣmi who had performed austerities
For a month, saluted the feet of the Lord
Who had now appeared in the presence
Of the lotus-residing goddess.
She worshipped with her auspicious hands
In the proper manner.

(உம்மைவிட்டு நீங்காவரம் வேண்டும் எனல்)

728. யானு நும்மணி மார்பை யகன்றிடாத்
தேனும் பாலினைப் போலுஞ் சிறந்திடு
மூனி னின்ற வுயிரி னுறைந்திடத்
தானு வந்து தருக வரமென்றாள்.

எ-து. அப்போது பிராட்டியானவள் நாராயண மூர்த்தியை நோக்கி ஒரு வார்த்தை கூறுகின்றாள். அதேதென்றால், கர்த்தனே! உம்மைக் குறித்துத் தவம் செய்த காரணமேதென்றால், உமதழகிய திருமார்பை விட்டு நீங்காமலே எந்நாளும் தேனும் பாலும்போலும் சத்ததாதுக்களால் பொருந்திய பஞ்ச பூத காரியமாகிய உடம்பை விட்டகன்றிடாத உயிரினைப்போலும் உம்மை விட்டெந்நாளும் நீங்காத வரம் தர வேண்டும் என்றாள் பிராட்டியார் என்றவாறு (16)

சிறந்திடு மூனினின்றவுயிா - சிறந்திடும் ஊனில் நின்ற உயிர்.

## Ummaiviṭṭu nīṅkāvaram vēṇṭum eṉal

*yāṉu nummaṇi mārpai yakaṉṟiṭāt*
*tēṉum pāliṉaip pōluñ ciṟantiṭu*
*mūṉi ṉiṉṟa vuyiri ṉuṟaintiṭat*
*tāṉu vantu taruka varameṉṟāḷ.*

## "I shall be With You"

"I must never be separated from your chest
Gleaming with jewels. I should be with you
Like honey and milk, and like life within
A good body. Grant me this boon happily."

(அரங்கன் மணம் செய்ய விரும்புதல்)

729. ஐய னங்கது வந்தங் கணிமணிச்
செய்ய பங்கயத் தும்முறை செல்வியைக்
கையி னாற்தழு விக்கலந் தும்மணஞ்
செய்ய வுன்னினன் வையஞ் செழிக்கவே.

எ-து. இவ்விதமாய்ப் பிராட்டியார் விருப்பத்துடன் கேட்ட வார்த்தையை மதித்தருளிய என்னையனானவர் சந்தோஷமடைந்து அழகிய கரணிகையினை யுடைய பொன்னந் தாமரைப் பீடத்தின் எழுந்தருளி அவளைத் தனது திருக்கராம்புய மலரினால் எடுத்துத் தழுவி இறுகப் புல்லியும் பாணிக் கிரணம் செய்ய மனத்தின்கண் மதித்தருளினார் இந்த உலகங்களெல்லாம் செழித்தோங்க என்றவாறு. (17)

## Aranka̱n mana̱m ceyya virumputal

*aiya ṉaṅkatu vantaṅ kaṇimaṇic*
*ceyya paṅkayat tummuṟai celviyaik*
*kaiyi ṉāṟtaḻu vikkalan tummaṇañ*
*ceyya vuṉṉiṉaṉ vaiyañ ceḻikkavē.*

## Araṅkaṉ's Desire

The Lord came and raised the goddess
Who resides in the lotus that has a lovely
Pericarp, embraced her and wished to wed her
For the prosperity of the earth.

(நதியும் நகரமும் தன் பெயர்பெற வேண்டுதல்)

'30. பின்னு மன்னையென் பேர்பெறு மிந்நதி
மன்னி மூழ்கினர் வாழ்கவு மந்நகர்
முன்ன மீக வரமென வேதனைப்
பன்னு முந்தியி னீன்ற பரமனும்.

எ-து. மீட்டும் பிராட்டியானவள் திருவாய் மலர்ந்தருளுகின்றாள். வாரீர் மகானுபாவரே! எனது திருநாமதேயத்தைப் பெறுகின்ற இந்த இலக்குமி தீர்த்தத்திலே மூழ்கின பேர்களெல்லாம் பரம பதத்திலே நித்திய சூரியராய் உமது பாதத்தாமரை நிழலிலே பிறவி வெப்பந் தீர்ந்து வரம்பிலின்பத்தை அனுபவிக்கவும், அந்நகரமானது இலக்குமிதேவி நகரமென்று உலகத்தார் கூறும் வரமும் அளிக்க வேண்டுமென்ற அளவில் பிரமாவை உந்திக் கமலத்தின் எழுந்தருளிய பரமன் கூறுகின்றார் என்றவாறு. (18)

## Natiyum nakaramum taṉ peyarpeṟa vēṇṭutal

*piṉṉu maṉṉaiyeṉ pērpeṟu minnati*
*maṉṉi mūḻkiṉar vāḻkavu mannakar*
*muṉṉa mīka varameṉa vētaṉaip*
*paṉṉu muntiyi ṉiṉṟa paramaṉum*

## The River and the City

Lakṣmi spoke further: "May this river
Be named after me. Those who bathed in it
Should gain long life. The city too
Be named even thus. Grant this boon."
The Lord spoke to Piramaṉ on his navel.

(இலக்குமி விரும்பிய வரமளித்தல்)

731. அக்க ணத்தினி லார்ந்திடு நன்னகர்
பக்க மாகிப் பலனுமுண் டாகிடத்
திக்கி னுள்ளன செல்வங்க ளோங்கிடத்
தொக்கி லாவர மீந்தனன் றொல்லையோன்.

எ-து. பிராட்டியாரைக் குறித்து நாராயண மூர்த்தியானவர் திருவாய் மலர்ந்தருளுகின்றார். அப்பொழுது வளப்பத்தினால் பல செல்வங்களும் ஓங்கிய இந்த லட்சுமி புரமானது சஞ்சீவி புரத்தின் பக்கத்தினிருந்து சகல பலனும் விர்த்திக்கக் கடவது; இந்நகரத்தின்கண் வாசம் செய்கின்ற பேர்களெல்லாம் திக்குத்திகாந்தத்தில் நிறைந்திருக்கா நின்ற செல்வங்களெல்லாம் ஓங்கி வளமாய் இம்மையில் தர்மம் முதலாகியதைச் செய்ததன் பின்பு நமது பரமபதத்தில் பாச பந்தங்களாகிய பற்றில்லாமல் நித்திய சூரியராய் வாழக் கடவதென்று வரமீந்தருளினார் புருடோத்தமன் என்றவாறு. (19)

## Ilakkumi virumpiya varamaḷittal

*akka ṇattiṉi lārntiṭu naṉṉakar*
*pakka mākip palaṉumuṇ ṭākiṭat*
*tikki ṉuḷḷaṉa celvaṅka ḷōṅkiṭat*
*tokki lāvara mīntaṉaṉ ṟollaiyōṉ.*

## Lakṣmi Granted Boons

He gave the boon at once:
"This prosperous city will be wealthy
And gain riches from all directions."
Such was the boon granted by the Primal One.

(இந்நதியில் மூழ்குவோர் பெறும் பலன் கூறுதல்)

732. மனமகிழ்ந்திங் கிந்நதியின் மூழ்கு வோர்கள்
வல்வினையைக் கடிந்துமிக வாழ்வு மெய்திக்
கனைகடல்மூ வுலகினுள்ள தீர்த்த மியாவுங்
கலந்தபல னுண்டாயுன் கருணை யாலே
[1]நினைவுபெறு பொருண்முழுது நிகழ்ந்தந் தத்தில்
நிலையான பரமபத மடைவ தன்றி
யனையாரு மரபுமோ ராயி ரங்கால்
வரமுத்தி யடைவரென வறைந்தா னையன்.

எ-து. அரங்கநாயகர் பிராட்டிக்காக அருள் கூர்ந்து மீட்டுமொரு வரம் கூறுகின்றார். இந்த இலக்குமி தீர்த்த மகத்துவத்தை வேதாகமத்தால் கூறக்கேட்டாவது அல்லது ஒருவர் வாய்மொழியால் கேட்டாவது அல்லது அதன் பெருமையறியாது தீர்த்த மாடியாவது அவர் செய்த வலிய வினைகளாகிய சஞ்சித பிரார்த்துவ மாகாமிய மாகியது வக்கை நீங்கி மேலாகிய ஞானத்தைப் பெற்று, சத்திக்காநின்ற சத்த சாகரம் முதலான திரிபுவனத்தினும் உண்டாகிய தீர்த்தத்தினாட, விதித்த நாளில் தீர்த்த மாடிய பலனெல்லாம் நிறைவெய்தவும், அதுவுமன்றி உனது கருணையினாலே இம்மையிலே அவரிட்ட காமியங்களெல்லாம் அனுபவிக்கக் கடவது. அதுவன்றியும் சரமதிசையாகிய வந்திக் காலத்திலே மரணமான பின்பு நமது உருவம் பெற்றுப் பரமபதத்தில் நித்திய சூரியர்களாய் வந்தோ ராயிரங் கால்வழியரும் நமது முத்தியின் வசிப்பார்கள் என்றார் புருடோத்தமன் என்றவாறு. (20)

அந்தத்தில் - சரமதிசையில், இறுதிக்காலத்தில்.

பா.வே. - 1. நினைந்தபொருள் முழுவதும் பெற்று.

## Innatiyil mūḻkuvōr peṟum palaṉ kūṟutal

*maṉamakiḻntiṅ kinnatiyiṉ mūḻku vōrkaḷ*
*valviṉaiyaik kaṭintumika vāḻvu meytik*
*kaṉaikaṭalmū vulakiṉuḷḷa tīrtta miyāvuṅ*
*kalantapala ṉuṉṭāyuṉ karuṇai yālē*
*niṉaivupeṟu poruṇmuḻutu nikaḻntan tattil*
*nilaiyāṉa paramapata maṭaiva taṉṟi*
*yaṉaiyāṟu marapumō rāyi raṅkāl*
*varamutti yaṭaivareṉa vaṟaintā ṉaiyaṉ.*

## Bathing in the Spring

Those who bathe in this river happily
Will be freed from their evil past
And gain a rich life. They will receive
The result of having bathed in the seas
And the rivers flowing in the three worlds;
By your compassion they will gain
All their wishes; in the end, they will gain
Life eternal. A thousand generations
Preceding them and as many to come
Will gain realisation". So the Lord promised.

(இந்நதி மூழ்கியோர் – ஆசிரியர் கூற்று)

733. [1]உலகமதிற் சீர்த்திபெறு மிராம தீர்த்த
மூழ்வினையைக் கடிந்துயர்ந்த வாழ்வு மெய்தும்
அலகிலாப் புகழ்பெறுமவ் விராமன் முன்னாள்
அதிற்படிந்திங் கரக்கர்குலம் வேர றுத்தான்
இலகுபுவி தனைப்பன்னா ளாண்டான் கண்டாய்
இத்தீர்த்த மெவர்கள்படிந் தாலு மின்பந்
தொலைவிலா தளிக்கும்பண் டிழந்த செல்வந்
தொண்டாக வந்தெய்துஞ் சுகமுண் டாகும்.

எ–து. உலகங்களில் கூறுகின்ற புண்ணிய தீர்த்தங்களுக்கெல்லாம் உயர்ந்த புனித பவுத்திரமாகிய ராமதீர்த்தத்தின் அதி சிலாக்கியத்தைக் கேட்பாயென்று சீதரன் அருளிச்

செய்கின்றார். அந்தத் தீர்த்தத்திலே யாதாமொருவர் தீர்த்தமாடினால் பஞ்சமா பாதகம், அதிபஞ்சமா பாதகம் எல்லாம் நீங்கி இருப்பார்கள். அதுவன்றியும் செல்வம் தழைக்கும். அதனாலே எண்ணிறந்தனவாகிய புகழ்ச்சியினது பிரதாபத்தால் ஓங்கியிருப்பார்கள். முற்காலத்திலோர் இராமச்சந்திர மூர்த்தியானவர் அதிலே தீர்த்தமாடிய பலத்தினாலே இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்து, கரதூஷணன், திருசிரன், கும்பன், நிகும்பன், அதிகாயன், மகோதரன், பிரகஸ்தன், திரிசிரன், விராதன், கவந்தன், கம்பன், மாரீசன், சுபாகு, சம்புமாலி முதலாகிய பேர்களையெல்லாம் விசையம் செய்திந்த உலகத்தின் அரசனாய்ப் பதினோராயிரம் வருஷம் அரசாட்சி செய்தான். ஆதலால் இந்தத் தீர்த்தத்திலே எவர்கள் தீர்த்தமாடினாலும் இன்பத்தைக் கொடுக்கும். அதுவுமில்லாமல் செல்வர்கள் கால பேதத்தினாலே வறியவரானால் அந்தத் தீர்த்தமாடினால் அந்த ஊழ்வினை தீர்ந்து மறுபடியும் செல்வத்தை அடைவார்கள் என்று திருவுளம் பற்றினார் அரங்கநாயகர் என்றவாறு. (21)

பா.வே. - 1. உலகெலாம் பேர்பெறுமி.

**இலக்குமி தவம்புரிந்த அத்தியாயம் முற்றிற்று.**

## Innati mūḻkiyōr - Āciriyar kūṟṟu

*ulakamatiṟ cīrttipeṟu mirāma tīrtta*
*mūḻvinaiyaik kaṭintuyarnta vāḻvu meytum*
*alakilāp pukaḻperumav virāmaṉ muṉṉāḷ*
*atiṟpaṭintiṅ karakkarkulam vēra ṟuttāṉ*
*ilakupuvi taṉaippaṉṉā ḷāṇṭāṉ kaṇṭāy*
*ittīrtta mevarkaḷpaṭin tālu miṉpan*
*tolaivilā taḷikkumpaṉ ṭiḻanta celvan*
*toṇṭāka vanteytuñ cukamuṇ ṭākum.*

## Of those who had Gained

Bathing in the famous Rāma spring
Destroys one's evil past and also confers
A noble life. In days of yore,
Rāma of shoreless fame bathed here
And destroyed the Acura race. He ruled
Over the earth for a long time.
Whoever bathes in this spring gains
Endless joy. Riches lost earlier
Will be regained. They will gain wealth.

# 40. முப்பத்தாறாவது
# மகாலட்சுமி தேவி திருக்கலியாண அத்தியாயம்

தம் திருவுளப்படி பிராட்டியரைத் திருமணம் செய்து கொள்ள எண்ணியவராய் தேவகம்மியனான மயனை நினைத்தார். மயன் தோன்றினான். திருக்கலியாண மண்டபம் ஒன்றினை அமைக்குமாறு பணித்தார். அவ்வாறே மண்டபம் உருவாயிற்று. அம்மண்டபம் பொன்னாலும் மணியாலும் ஆன மேரு மலையை நிகர்த்து விளங்கியது.

அம்மண்டபத்தின் கால்கள் சந்திரனை நிகர்த்து வயிரத்தால் அமைந்தன. நவமணிகளால் ஆன சித்திரப் பதுமைகள் கோடி அளவின. உடுக்கூட்டங்களைப் போன்று வச்சிர மணிச்சரங்கள் தொங்கின. சந்திரகாந்தக்கல்லின் இடையிலே இந்திர நீலமணியமைந்த பதுமைகள் பல. அவற்றினருகே யாளிகள், பொன்னால் செய்த புலிகள், மணியால் ஆன மான்கள், பச்சை மணிகளால் வாழைகள், பொன்னால் குலைகள், அவ்வாறே கமுகு, தென்னை குலைகளோடு விளங்கின. நவமணிகளால் கும்பப்பாலிகைகள், நவமணிப்பதுமைகள், தரை கலவைச் சாந்தால் மெழுகப்பட்டது. மலரும் பன்னீரும் தரையை மறைத்தன. சித்திரங்கள் சாமரை வீசின; மலர்மாரி பொழிந்து நின்றன. நவமணிக் கால்களில் பச்சைமணி உத்திரம், கோமேதகத்தால் கைகள், மேலே மணிக்குடங்கள், மாணிக்கச்சுவர்கள் ஆகியவை விளங்கின.

காய்கனிகளும் பறவைக் கூட்டங்களும் மணிகளால் அமைந்து அவை முத்த மாலைகளைப் பெற்றன. அனந்த விமானம், அதனிடையே யோக நித்திரை செய்யும் திருமால், ஆயிரம் படக்குடை ஆகியவை பாற்கடலில் விளங்கும் காட்சி அமைந்தது. பளிங்குச் சுனைகள், தடாகங்கள், மாணிக்கத்தாலான சிம்மாசனம், இருபுறமும் பளிக்கறை, இவறறோடு கூடிய மண்டபம் சந்திர ஒளியை மங்கச்செய்தது.

பிரணவாகாரம் நடு அணையாயிற்று. அட்டாக்கரங்கள் படிகளாயின. காயத்திரி கால்களும் திரணைகளுமானாள். இவ்வாறு அமைந்தது ஆசனம். இவற்றை மயன் காட்டிவரக் கண்டார் அரங்கநாயகர். இந்திரன் முதலாகிய தேவர்கள், பிரமன், சிவன், சந்திரன் முதலாகிய நவக்கிரகங்கள், பன்னிரு சூரியர், சித்தர், காந்தருவர், நாரதர், அந்தணர், அட்டவசுக்கள், தெய்வ மருத்துக்கள், அத்திரி முதலாகிய முனிவர்கூட்டங்கள் ஆகியோரை வரவழைத்தார். வந்த அவர்கள் மணிமண்டபத்தைக் கண்டு களித்தார்கள். இசையும், இசைக் கருவிகளும் முழங்கின. மலர் முதலியவை மணம் பரப்பின. மாணிக்கவிளக்கு ஒளிவீசியது.

பாலிகையும் அரசாணைக்காலும் காட்சியளித்தன. குடவிளக்குகள், கிளை விளக்குகள், அலங்கார விளக்குகள் ஒளிவீசின. பிரமன் முதலாகிய தேவர்களும் முனிவர்களும் தேவமாதரும் சூழ்ந்து வணங்க மண்டபத்தின் நடுவே எழுந்தருளினார் அரங்கநாயகர். மங்கள இசை முழங்க இலக்குமி தீர்த்தம் முதலாகிய தீர்த்தங்களினால் திருமஞ்சனம்

செய்வித்துப், பரிமளமணிந்து, மகுடம், கவசம் பூட்டி, முப்புரி நூலணிந்து, வாகுவலயம் முதலான அணிகளைப் பூட்டிப், பொன்ஆழி புனைந்து அலங்கரிக்கப்பட்ட நாயகர் மண்டபத்திடை எழுந்தருளினார்.

திருப்பாற் கடலில் தோன்றிய திருமகளைத் தேவமங்கையர் அழகுபடுத்தத் தொடங்கினர். நறுமணப்பொருள்களால் நலங்கணிந்து, வேதமுறைப்படி திருமஞ்சனம் ஆட்டுவித்தார்கள். அணிகலன்களும் ஆடைகளும் பிரகாசிக்கச் செய்தார்கள். மலர்களையும் பரிமளங்களையும் அணிவித்தார்கள். சந்திரப்பிரபை, சுட்டி, சடைபில்லை, கொப்பு, மூக்குத்தி, கடகம், மோதிரம் போன்ற அணிகலன்களோடு திலதமும்மையும், தனத்திற்குச் சித்திரமும் எழுதி அழகு செய்தார்கள். மணிமண்டபத்தில் அரங்கநாயகரின் அருகில் அமர்த்தினார்கள்.

திருக்கலியாணத்தை வேதவிதி தவறாமல் தொடங்கினார்கள். தேவர்கள் துதிக்கச் சிவன் முதலானோர் பொரிகளைத் தூவச் சதுர்முகன் அருளியவாறு வேதமந்திரங்களைக் கூறி ஓமவிதிகளைச் செய்தார் அரங்கநாயகர். இசை முழங்க, வாழ்த்தொலிக்க, மங்கலம் இசைக்க, தேவகானம் பாட, நவமணிகளைக் குபேரன் பொழிய, பனிநீரை நிருதியும் வருணனும் தூவ, தென்றலையும் மலரையும் வாயுபகவான் தூவ மணவினைகளை முடித்த பிரமதேவன் மகாலட்சுமியின் திருக்கைகளை அரங்கநாயகரின் கைகளிலே வைத்துத் தமது கமண்டல நீரினால் தத்தம் செய்தார். அதன்பிறகு அரங்க நாயகர் திருமாங்கலியம் தரித்துத் தேவியின் கைகளைப் பற்றி ஓமகுண்டத்தை வலம் செய்தார். மலர்மாரியும் பொன்மாரியும் பொழிந்தன. அனலை வலம் வந்து, அம்மி மிதித்து, அருந்ததி காட்டி மணவறையுட்புகுந்தார். மஞ்சள் நீராடி மகிழ்ந்த அனைவரும் இலக்குமியார் தீர்த்தத்திலே நீராடி மகிழ்ந்தார்கள். ஆடிய மங்கள நீர் வராக் நதியின் வழி கடலையடைந்து கடல் நீரைப் பொன்னிற மாக்கியது.

திருப்பாற்கடலிலே தோன்றி, கோலாசலத்திலே தவம் செய்து பெற்ற வரத்தினாலே அரங்கநாயகரின் திருமார்பிலே வீற்றிருக்கும் பேறுபெற்ற திருமகள் அனைவராலும் அரங்கநாயகி என்று கூறித் துதிக்கப்பட்டாள்.

**(திருமண மண்டபம் அமைக்கச் செய்தல்)**

**734.** **மணம்புரிந்தெம் மன்னைக்கிதங் கொடுக்க வாங்கே**
**மனமகிழ்ந்து மயனைநினைந் தளவி னாங்கோர்**
**கணமதனி னவனும்வந்து கழற்ப ணிந்து**
**கைகூப்பக் கடைக்கணித்துக் கமலத் தோனும்**
**வணங்கமணி மண்டபமொன் றியற்று கென்ன**
**வாய்புதைத்து மதியுன்னி வகுத்தா னொன்றை**
**இளங்கவதற் கிணையாக வேறொன் றேனும்**
**இசைப்பரிய வழகுடைத்தா யிலங்கிற் றம்மா.**

எ-து. இந்தப் பிரகாரம் கூறிய நாராயண மூர்த்தியானவர் பாணிக் கிரணம் பண்ணிக் கொண்டு எம் தாயாகிய பிராட்டிக்கு இதங்கொடுக்கும் பொருட்டு மனம் மகிழ்ந்தவராய், மயனாகிய தேவ கம்மியனை நினைத்த மாத்திரத்தில் அனந்தக் காலத்திலவன் வந்து தெண்டன் சமர்ப்பித்து எனக்குப் பணிவிடை என்ன என்று கேட்ட மாத்திரத்தில் அவனுக்கு அனுக்கிரகம் செய்கின்றார். இந்த உலகத்தைச் சிருஷ்டிக்காநின்ற பிரம்மாவும் அதிசயித்து வணங்கத்தக்கதாகிய கல்யாண மண்டபமொன்றை அமைக்க வேணுமென்ற அளவில், அவனும் சிரத்தில் கைகூப்பித் தொழுது மனோ சிருஷ்டியினாலே ஒரு மண்டபத்தை வருத்தப்பட்டுச் செய்தான். அந்த மண்டபத்துக்கு இந்த உலகத்தில் இணை இல்லை என்று யாவரும் துதிக்கத்தக்கதாகச் செய்தான் தேவ கம்மியன் என்றவாறு. (1)

மயன் - தேவதச்சன்.

## Tirumaṇa maṇṭapam amaikkac ceytal

*maṇampurintem maṉṉaikkitaṅ koṭukka vāṅkē*
*maṉamakiḻntu mayaṉainiṉain taḷavi ṉāṅkōr*
*kaṇamataṉi ṉavaṉumvantu kaḻaṟpa ṇintu*
*kaikūppak kaṭaikkaṇittuk kamalat tōṉum*
*vaṇaṅkamaṇi maṇṭapamoṉ ṟiyaṟṟu keṉṉa*
*vāyputaittu matiyuṉṉi vakuttā ṉoṉṟai*
*iḷaṅkavataṟ kiṇaiyāka vēṟoṉ ṟēṉum*
*icaippariya vaḻakuṭaittā yilaṅkiṟ ṟammā.*

## XXXX. The Marriage of Makālakṣmi

### Building the Wedding Hall

Resolving to be married and make our mother
Happy, he thought of Mayaṉ, who appeared
At the very next moment and saluted
The Lord's feet with folded hands;
The Lord asked Mayaṉ to build a jewelled hall
That would make Piramaṉ himself feel humble;
Covering his mouth in humility, Mayaṉ used
His intellectual powers to build a hall.
Its wondrous beauty was beyond words,
And the hall had no equal anywhere.

(மணி மண்டப அழகு)

735. பொன்னுநவ மணிகளையு மிசைத்தங் கொன்றாய்
பொருந்திமணி மேருவெனப் பொலிந்து தோன்றிப்
பின்னுமணி முடியாக முகமாய்ப் பார்க்குள்
விளங்குமணி மண்டபத்தை விளம்பக் கேண்மோ
மன்னுகதிர் மதிபோலும் வயிரக் காலின்
மணிப்பாவை யழகெறிப்ப வாய்த்த சிங்கந்
தன்னுடைய கைவாயிற் காலின் முத்துத்
தாமமணிக் குச்சுகளுந் தழைத்த கோடி.

எ-து. அத்தன்மையாகிய கல்யாண மண்டபமானது எப்படிப் பிரகாசிக்குதென்றால் அபரஞ்சிப் பொன்னாலும், ஒன்பது வகையான மணிகளாலும், ஒன்றாயிசைத்துப் பொருந்துகின்ற அழகிய மேரு கிரியைப் போலத் தோன்றியது அல்லாமல் பிரகாசத்தினையுடைய மணிமயமாகிய திருமுடியும் விளங்கிச் சகல உறுப்புகளிலேயும் சிரேஷ்டமாகிய முகம் விளங்கினது போன்ற அந்த மண்டபத்தைக் கூறக் கேட்பீராக! சோடசக் கலைகளால் நிறைந்த சந்திரனையொத்த வயிரக்கால்களும், அதன் கண் விசித்திரமாய்ச் செய்தமைத்த நவமணிச் சித்திரப்பதுமைகளும், சிங்கங்களும், அச்சிங்கத்தின் வாய்களிலே தொங்கவிட்ட முத்த மாலைகளையு முடையவை கோடானு கோடிகள் என்றவாறு. (2)

முத்துத்தாமம் - முத்துமாலை.

## Maṇi maṇṭapa aḻaku

*poṉṉunava maṇikaḷaiyu micaittaṅ koṉṟāy*
*poruntimaṇi mēruveṉap polintu tōṉṟip*
*piṉṉumaṇi muṭiyāka mukamāyp pārkkuḷ*
*viḷaṅkumaṇi maṇṭapattai viḷampak kēṇmō*
*maṉṉukatir matipōlum vayirak kāliṉ*
*maṇippāvai yaḻakeṟippa vāytta ciṅkaṅ*
*taṉṉuṭaiya kaivāyiṟ kāliṉ muttut*
*tāmamaṇik kuccukaḷun taḻaitta kōṭi.*

## The Lovely Wedding Hall

Gold and the nine gems were integrated here
So the hall shone as a jewelled Mēru Mount.
Listen to what I say of the gleaming hall
Whose gem-encrusted spire was like one's head.

Like the speeding rays of the moon,
The diamond pillars with gem-statuettes
Were beautiful; there were lions too
With strings of pearl hung from their mouths.

(மணி மண்டப அமைப்பு)

736. தாரகையின் வயிரமணிச் சரங்க டொங்கத்
தழைத்தநடுச் சந்திரகாந் தக்கற் கீழும்
பாரகத்தி னடுவணைய நீலக் கால்கள்
பதித்தநாற் றிசைக்கணினும் பதுமை யேற்றிக்
கோரகம்பொன் [1]நடுவணிச்சித் திரங்க ளிட்டுக்
குவிந்தபோ திகையாளி முகங்கள் வைத்தங்
[2]காரகம்பொன் மணியுழுவை வாயின் மான்கள்
அணியணியாய்த் தொங்கவிட்ட தனேகங் கோடி.

எ-து. தாரகையாகிய வானகத்தின் கண்தோன்றி மீன்களைப்போல வச்சிரமணிச் சரங்களை இடையிடைகளிலே தொங்கத்தக்கதாகச் சரங்களைத் தொங்கவிட்டுத், தழைத்திரா நின்ற சந்திரகாந்தக் கல்லின் நடுப்பிரதேசத்திலே இந்திர நீலக் கல்களை அனேகம் அமைத்து வைத்து, நான்கு திக்கினும் பதுமைகளை யேற்றியும், அதனருகே பல சித்திரங்களை அமைத்திரா நின்ற போதிகையிலே யாளிகளை அனேகமாய் அமைத்தா ரச்சுவரிலே பொன்னால் செய்த புலியும், மணியினால் செய்த மான்களும் செய்து அதன் வாயிலே முத்த மாலைகள் தொங்கவிட்டது அனேகம் கோடிகள் என்றவாறு. (3)

சரங்கள் தொஙக எனப் பிரிக்க. போதிகை - தாஙகும் கட்டை. உழுவை - புலி.

பா.வே. - 1. கொடுமணி 2. ஆரகம

## Maṇi maṇṭapa amaippu

*tārakaiyiṉ vayiramaṇic caraṅka ṭoṅkat*
*taḻaittanaṭuc cantirakāṉ takkaṟ kīḻum*
*pārakatti ṉaṭuvaṇaiya nīlak kālkaḷ*
*patittanāṟ ṟicaikkaṇiṉum patumai yēṟṟik*
*kōrakampoṉ naṭuvaṇiccit tiraṅka ḷiṭṭuk*
*kuvintapō tikaiyāḷi mukaṅkaḷ vaittaṅ*
*kārakampoṉ maṇiyuḻuvai vāyiṉ māṉkaḷ*
*aṇiyaṇiyāyt toṅkaviṭṭa taṉēkaṅ kōṭi.*

## Plan of the Hall

Diamond-crusted strings hung from the sky
Filled with stars; a spread of moonstone
Was seen below. Sapphire-pillars set
For the centre of the earth; statues placed
On all four sides; gold-painted portraits
In between; Yāḷi faces looking down
From the top of pilasters; tigers of gold
And deer encrusted with gems were there too,
With crores of pearl-strings hanging from them.

(மண்டபத்தில் அமைந்த இயற்கைப் பொருள்கள்)

737. வாழைகள்பொன் மடல்விரியக் குலைக ணாற்றி
வண்பூவி னினங்களின் மாணிக்கஞ் சேர்த்துத்
தாழைகள்பொற் காய்மடல்கள் தழையத் தூக்கித்
தனிமணங்கள் சார்ந்தமலர்ப் பூப்போ லெங்குஞ்
சூழுகமு குகள்போலுந் தெங்கு போலுஞ்
சொற்பாளை விரியகுலை தொங்க ணாற்றி
நீழலிடு முயர்மணிப்பா லிகைகள் சேர்த்து
நிழற்றியநற் றூண்களொரு கோடி கோடி.

எ-து. வாழை இனங்களைப் பச்சைமணிகளால் செய்தமைத்து, பொன் மயமாகிய குலைகளைத் தொங்கச் செய்தும், அந்தப் பூவிலே மாணிக்கங்களைச் சேர்த்திழைத்தும், தாழைகளினது பொற்காய்களை மடலிலே தழைக்கத்தக்கதாய் மணிகளால் செய்தமைத்துத் தூக்கியும், ஒப்பற்ற திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற மலர்கள் போலவும், சூழ்ந்திலகா நின்ற கமுக மரச்சாலைகள் போலவும், தென்னஞ் சாலைகள் போலவும், பாளைகள் விரியக் குலைகளைத் தொங்கவிட்டும் கிரணங்களால் ஒளி விடுகின்ற நவமணிகளால் செய்தமைத்த கும்பபாலிகை விளங்கிப் பொலிவெய்திய தூண்களானவை கோடானு கோடி என்றவாறு. (4)

## Maṇṭapattil amainta iyaṟkaip poruḷkaḷ

*vāḻaikaḷpoṉ maṭalviriyak kulaika ṇāṟṟi*
*vaṇpūvi ṉiṉaṅkaḷiṉ māṇikkañ cērttut*
*tāḻaikaḷpoṟ kāymaṭalkaḷ taḻaiyat tūkkit*
*taṉimaṇaṅkaḷ cārntamalarp pūppō leṅkuñ*

*cūḻukamu kukaḷpōlun teṅku pōluñ*
*corpāḷai viriyakulai toṅka ṉāṟṟi*
*niḻaliṭu muyarmaṇippā likaikaḷ cērttu*
*nilaṟṟiyanaṟ ṟūṇkaḷoru kōṭi kōṭi.*

## Gifts from nature

Plantains with gold petals and fruit bunches,
Flowers made of gems, screw pine bushes
With raised petals made of gold,
And carved to look like scented flowers,
Imitations of betelnut and coconut palm
That had open fronds and dangling bunches,
Earthen pots flashing with gems,
And crores of ornamented pillars.

(மண்டபத்தின் வேலைப்பாடுகள்)

738. இவ்வகையாந் தூண்களிடைச் சூத்தி ரத்தி
னியைந்தநவ மணிப்பதுமை யிசைத்துப் பூக்கட்
செவ்விதருஞ் சுண்ணங்கள் கலவைச் சேறு
செறிந்தபனி நீர்வாச மெண்ணெய்த் தூவ
வெவ்வேறு கவரிக்கால் விசிறி வீச
விரைமலருங் கற்பகநாண் மாலை சூட
வெவ்விதமு மாயிரங்கண் படைத்தோ னுக்கு
மிமைத்திடா தழகுவாய்ந் தியைந்த தன்றே.

எ-து இவ்விதமாகிய தூண்களிடைகளிலே சூத்திரத்தினாலிசைத்த நவமணிப் பதுமைகள் இசைவித்துப் பூவினாலும், சிறந்த சுண்ணங்களினாலும், பரிமளக்கலவைச் சேறாலும் தரையினை மெழுக்கிட்டுப் புட்பத்தைத் தூவிப் பனி நீரெண்ணைகளைத் தூவியும், அனேக சித்திரங்கள், சாமரைகள், விசிறிக்கால் வீசவும், திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற புட்பமாரியும், கற்பக மாரியும், சில சித்திரங்கடூர்த்தவும் இந்த விசித்திரங்களை ஆயிரம் கண்களையுடைய இந்திர மகாராசனும் இமையாது ஆயிரங்கண்களைக் கொண்டு நோக்கினாலும் அடங்காத சிங்கார வளப்பத்தினையுடையது அம்மண்டபம் என்றவாறு. (5)

### Manṭapattiṉ vēlaippāṭukaḷ

*ivvakaiyān tūṉkaḷiṭaic cūtti ratti*
*ṉiyaintanava maṇippatumai yicaittup pūkkaṭ*
*cevvitaruñ cuṇṇaṅkaḷ kalavaic cēṟu*
*ceṟintapaṇi nīrvāca meṉṉeyt tūva*
*vevvēṟu kavarikkāl viciṟi vīca*
*viraimalaruṅ kaṟpakanāṉ mālai cūṭa*
*vevvitamu māyiraṅkaṉ paṭaittō ṉukku*
*mimaittiṭā taḻakuvāyn tiyainta taṉṟē.*

### Artistry

Mechanically operated statues of rich gems
Were set up between the pillars; flowers,
The best of coloured powder, scents,
Rose-water and scented oils were sprinkled
Everywhere; fans were moved by automatons;
Flowers from the *kaṟpaka* tree were showered;
The Hall was so lovely that even Intiraṉ
Who a has a thousand eyes could not have
Enough of it.

(நவமணிக் கால்கள்)

739. சித்திரத்தின் இரத்தினக்காற் சிறந்தொளிரும்
போதிகைமேற் செறிந்த பச்சை
உத்திரத்திற் பவழக்கால் மேதகங்கோ
மேதகத்தி னொளிருங் கைகள்
வைத்துமணித் தசும்பியற்றி வளைத்தமா
ணிக்கசுவர் வளர வெங்கு
முத்துமணித் தாமங்க ளொளிதூங்கு
முதுவயிரக் கான்மணிகள் முகப்பினிட்டு.

எ-து. சித்திரங்களால் செய்தமைத்த நவமணிக் கால்களிலே சிறப்பாகப் பிரகாசிக்கா நின்ற போதிகையின் மேலே பச்சைமணி உத்திரத்திலே பவழத்தினால் மேதகம் சேர்த்துக் கோமேதகத்தினாலே பெரிய கைகள் அமைத்து, அதற்கு மேலே மணிக்குடங்கள்

அடர்ப்பித்து, மாணிக்கச் சுவர் சூழ வைத்து, இடையிடைகளிலே முத்த மாலையைத் தொங்கவிட்டு, முதுமையாலாகிய வயிரத்தானமைந்த முத்த மாலையும் தொங்க அணிந்தான் என்றவாறு. (6)

போதிகை - தாங்கிக் கட்டை. மேதகம் - கோமேதகம், நவமணிகளுள் ஒன்று. உத்திரம் - விட்டம்.

## Navamaṇik kālkaḷ

*cittirattiṉ irattiṉakkāṟ ciṟantoḷirum*
*pōtikaimēṟ ceṟinta paccai*
*uttirattiṟ pavaḷakkāl mētakaṅkō*
*mētakatti ṉoḷiruṅ kaikaḷ*
*vaittumaṇit tacumpiyaṟṟi vaḷaittamā*
*ṇikkacuvar vaḷara veṅku*
*muttumaṇit tāmaṅka ḷoḷitūṅku*
*mutuvayirak kāṉmaṇikaḷ mukappiṉiṭṭu.*

## Pillars of Nine Gems

On the pillars with charming designs
Made of gems, the crowns shone brilliant;
Above them the beams with coral and cinnamon
Stone spread shining hands; in the hands
Jewelled pitchers that were skirted
By gem-encrusted walls; all over the place
Strings of pearls and gems were seen dangling;
Also well-seasoned diamond strings in-between.

(உச்சியும் தரையும்)

740. கொத்தலருங் கற்பகம்போ லிடையிடையின்
நவமணிகள் கோத்த சித்திரப்
பத்திகளுங் காய்பழம்போற் பருமணிக
டொங்கவதிற் பக்கிக் கூட்ட
முத்தணியு மணிமாலைக் கொத்தியபோற்
பொற்குச்சி முகப்பிற் சேர்த்தங்
கெத்தனையோ வதிகார மியற்றியிடு
தரைக்குமிந்திர நீலஞ் சேர்த்தான்.

எ-து. இதழ் விரிந்த கற்பகம். மந்தார மலர்போல் இடையிடைகளிலே நவமணி மாலையைத் தொங்கவிட்டும், மணியால் செய்த காய்களும், பழங்களும் குலைகளிலே தொங்கச்செய்து, அதிலே பட்சிக் கூட்டங்கள் விளங்குவதுபோலச் செய்து, முத்தங்களால் அமைத்த மாலையை அந்தப்பட்சிக் கூட்டங்கள் கொத்துவதுபோலப் பொற்குச்சுகளை முகப்பிலே சேர்த்தும், இப்படியாகிய அனேக சிங்காரங்களையெல்லாம் விசித்திரமாய்ச் செய்தமைத்த பின்பு அந்தத் தரையினிடத்திலே இந்திர நீலத்தைச் சேர்த்தமைத்தான் தேவகம்மியன் என்றவாறு. (7)

பக்கி - பறவை, பட்சி.

## Ucciyum taraiyum

*kottalaruṅ kaṟpakampō liṭaiyiṭaiyiṉ*
*navamaṇikaḷ kōtta cittirap*
*pattikaḷuṅ kāypaḻampōṟ parumaṇika*
*ṭoṅkavatiṟ pakkik kūṭṭa*
*muttaṇiyu maṇimālaik kottiyapōṟ*
*poṟkucci mukappiṟ cērttaṉ*
*kettaṉaiyō vatikāra miyaṟṟiyiṭu*
*taraikkumintira nīlañ cērttāṉ.*

## Top and Bottom

Like the *kaṟpaka* tree with bunches of flowers,
Here were charming designs strung with gems;
Vegetables and fruits hung in bunches;
On them were birds that seemed to be pecking
With golden beaks at the strings of pearls.
Innumerable were the novelties of Mayaṉ.
The earth was a spread of sapphires.

(அனந்த விமானம் முதலிய காட்சி)

741. பாற்கடல்போ லொருபக்கம் பளிங்கதனி
வியற்றிடுமப் பரம்பொ ருட்போன்
மேற்கவியும் பருமணிச்சூட் டாயிரம்வாய்ப்
பாம்பணையின் விளங்கச் செய்து

காற்குநதி பெருக்கெடுப்ப போற்கழறு
நீரோட்டங் காட்டிற் றந்த
மாற்குமுயர் மண்டபத்துள் யிடையிடையி
னறைதடுத்து வயங்கு மாதோ.

எ-து திருப்பாற்கடலினைப் போல வொரு பக்கத்தினில் செய்தமைத்த பின்பு பச்சைமணியினாலே அனந்த விமானமும், அந்த விமான நடுப்பிரதேசத்திலே பரம்பொருளுருவம் யோக நித்திரை செய்தது போலச் செய்தவரது திருமுடியிலே அனந்தன் தனது ஆயிரம் படமும் சீவரத்தனங்களுடனே குடையினைப்போலக் குவியச் செய்தும், கார்க்காலத்திலே நதிப்பெருக்கெடுத்தால் எப்படியோ அப்படிப் பெருகச் செய்தும், உயர்ந்த மணிமயமாகிய மண்டபத்திடை யிடைகளிலே மாணிக்கத்தா லறைச் சுவர் செய்தமைத்துத் தடுத்தான் என்றவாறு. (8)

## Aṉanta vimāṉam mutaliya kāṭci

*pāṟkaṭalpō lorupakkam paḷiṅkataṉi*
*liyaṟṟitumap parampo ruṭpōṉ*
*mēṟkaviyum parumaṇiccūṭ ṭāyiramvāyp*
*pāmpaṇaiyiṉ viḷaṅkac ceytu*
*kāṟkunati perukkeṭuppa pōṟkaḻaṟu*
*nīrōṭṭaṅ kāṭṭiṟ ṟanta*
*māṟkumuyar maṇṭapattuḷ yiṭaiyiṭaiyi*
*ṉaṟaitaṭuttu vayaṅku mātō.*

## The Aṉantaṉ Seat

One side was paved with marble as if
It were the milky sea; above were
The thousand hoods with shining gems
Of the nake-bed where rests the Supreme;
Streams seemed to be flowing as it does
In rainy season; the high hall
Was compartmentalised with walls.

(திருமண மண்டபம்)

742. நதிப்பெருக்கஞ் சாகரத்திற் சாருவபோ
லொருபக்க நளிர்சு னைக்கால்
மதிநிழலி னொருபக்கம் வனசமலர்த்
தடங்கள்போல் வகுத்து முள்ளே

**விதிமுறையி னாகமணிக் கானிறுவி**
**வாகாய முட்ட விட்டுப்**
**பதியிருக்கு மாசனமும் பருமணிமா**
**ணிக்கமதில் படுத்திச் சுற்றி.**

எ-து. அறுபது கோடி புண்ணிய மகாநதிகள் பெருக்கெடுத்துப் பிரவேசித்தால் எத்தன்மையோ அத்தன்மையாய், ஒரு பக்கத்திலே குளிர்ந்த சுனைகளின் வெள்ளம் பாய்தல் போலப் பளிங்கினால் செய்து, மற்றொரு பக்கத்தில் தாமரைத் தடாகம், நீலோற்பல ஓடைகள், செவ்வாம்பல் அலரும் தடாகங்கள், அதைப் பூஞ்சோலை சூழத் தக்கதாய் அமைப்பித்து, விதிமுறை தவறாமல் நாக மணியினால் செய்த கால்களை உள்ளே வரிசையாய் நிறுத்தியும், ஆகாயமளாவிய அந்த மண்டபத்தின் நடுப்பிரதேசத்திலே பதியாகிய புருடோத்தமனானவர் பிரவேசித் திருக்காநின்ற சிங்காதனம், சாதரங்கம் முதலாகிய நான்கு வகையாயுள்ள மாணிக்கத்தால் அமைத்தான் தேவ கம்மியன் என்றவாறு. (9)

நளிர் - குளிர்ச்சி. நாகமணி - நாகரத்தினம், மாணிக்கம். கானிறுவி - கால் + நிறுவி

**உரை** - சாதரங்கம் - மாணிக்கத்தின் முதல் சாதி, பதுமராகம். பிற 3 - நீலம், விந்தம், படிதம்.

## Tirumaṇa maṇṭapam

*natipperukkañ cākarattiṟ cāruvapō*
*lorupakka naḷircu ṉaikkāl*
*matiniḻali ṉorupakkam vaṉacamalart*
*taṭaṅkaḷpōl vakuttu muḷḷē*
*vitimuṟaiyi ṉākamaṇik kāṉiṟuvi*
*vākāya muṭṭa viṭṭup*
*patiyirukku mācaṉamum parumaṇimā*
*ṇikkamatil paṭuttic cuṟṟi.*

## The Wedding Hall

Like numerous rivers streaming
Towards the sea, cool ponds were set up;
Also lotus tanks beneath plentiful shade;
Inside pillars of snake-gems were raised
Reaching out to the skies. The Lord's throne
Was made of rich gems all over.

(பீடம்)

743. விளிம்புக்குச் சாம்புநதப் பொன்னழுத்தி
மாணிக்க விளக்க மிட்டுக்
களிம்பறுந்த பச்சையினி லாரங்கள்
திரணையிட்டுக் கவின்செய் முத்தம்
பளிங்கறையில் சேர்த்தரும்பு பொன்மிளிர
வொருபக்கம் பதுமை நாற்றிக்
களங்கமின்றி யொளிர்கிரண வாயிரஞ்செங்
கதிர்போன்ற காம பீடம்.

எ-து. அந்தச் சிங்காதனத்தருகிலே ஆயிரத்தெட்டு மாற்றாகிய சாம்புநதப் பொன்னை அழுத்தியும், மாணிக்க விளக்கங்கள் அனேகத்தினை விளங்க வைத்தும், உயர்ந்த மரகதத்தாலும் முத்தினாலும் திரணைகள் அமைத்து, முத்து மாலைகளைப் பளிக்கறை இடையிடையிலே தொங்கவிட்டும், பொன்மயமாய்ப் பிரகாசிக்காநின்ற பதுமைகளை அந்தப் பளிக்கறை இருபக்கங்களிலும் இசைத்து வைத்துக் களங்கமில்லாத ஆயிரங்கிரண சமூகங்களை விரித்து உலக இருளையெல்லாம் பருகாநின்ற சூரியனைப்போல ஒளிவிட்டுப் பிரகாசிக்காநின்ற அழகிய பீடமானது பிரகாசித்திருந்தது என்றவாறு. (10)

சாம்புநதம் - பொன்வகைகளில் ஒன்று. அவை - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூ நதம் என்பன. திரணை - கம்பி.

## Pīṭam

*viḷimpukkuc cāmpunatap poṉṉaḻutti*
*māṇikka viḷakka miṭṭuk*
*kaḷimpaṟunta paccaiyiṉi lāraṅkaḷ*
*tiraṇaiyiṭṭuk kaviṉcey muttam*
*paḷiṅkaṟaiyil cērttarumpu poṉmiḷira*
*vorupakkam patumai nāṟṟik*
*kaḷaṅkamiṉṟi yoḷirkiraṇa vāyirañceṅ*
*katirpōṉṟa kāma pīṭam.*

## The Seat

The throne had a finish of blemishless
Gold; there were gem-studded lamps;
Strings of emrald and lovely pearls

Were hung to ornament the marble hall.
Golden statuettes were placed on both sides
Of the wondrous seat which gleamed bright
Like the brilliant, thousand-rayed sun.

(மண்டபச் சிகரம்)

744. வானோங்கு சிகரமணி விண்மணியி
னொளிரமதி யழகு தோற்க
மீனோங்கு கிரணம்போ லிடையிடையில்
நவமணிகள் விளங்க வெங்குந்
தானோங்கி யிருளகற்றி யிரவுபக
லாய்க்கதிர்க டழைக்குஞ் சோதி
மானோங்கு சசிதழுவு மாயிரங்க
ணிந்திரனில் வழங்க லாமே.

எ-து. ஆகாயத்தை அளாவிய சிகரமானது சிந்தாமணியைப் போலொளியை விரித்தலி னாலே சந்திர கிரண மழுங்கவும், ஆகாயத்தில் தாரகா கணங்கள் பிரகாசிப்பது போல நவமணி மாலைகள் தொங்கவும், சிகரத்தினுடைய காந்தியானது சூரிய கிரணம் போலப் பிரகாசிக்கவும், மானைப்போன்ற கண்களையுடைய இந்திராணி தேவியைச் சரச சல்லாபத்தினாலே தழுவாநின்ற இந்திர மகாராசனைப்போல வீற்றிருந்தது மண்டபச் சிகரம் என்றவாறு. (11)

மீன் - நட்சத்திரம். சசி - இந்திராணி.

**உரை** - தாரகா கணம் - நட்சத்திரக் கூட்டம்.

**Maṇṭapac cikaram**

*vāṉōṅku cikaramaṇi viṇmaṇiyi*
*ṉoḷiramati yaḻaku tōṟka*
*mīṉōṅku kiraṇampō liṭaiyiṭaiyil*
*navamaṇikaḷ viḷaṅka veṅkun*
*tāṉōṅki yiruḷakaṟṟi yiravupaka*
*lāykkatirka ṭaḻaikkuñ cōti*
*māṉōṅku cacitaḻuvu māyiraṅka*
*ṇintiraṉil vaḻaṅka lāmē.*

## The Spire

The spire went up the skies, gem-bright,
Rivalling the loveliness of the moon;
Garlands of nine gems hung everywhere
Like the stars; the brilliance of the spire
Chased away darkness. Night became day
While the spire glowed like the sun
As if it were the thousand-eyed Intiraṉ
Embracing Caci tēvi.

(மண்டபத்திற்குவமை)

745. பிரணவத்தி னடுவணையட் டாக்கரத்திற்
பிறங்குபடி பிறழுங் கால்கள்
திரணைகா யத்திரியு மாசனமுண்
மண்டபஞ்செங் கதிர்தே ரொக்குங்
கிரணமணிச் சுற்றிலும்விண் மீனொக்கக்
கிளர்ந்தொளிரக் கிடந்த தந்தக்
கரணமதைக் கடந்தந்த மயன்கடவுட்
கடிவணங்கிக் காட்டி னானே.

எ-து. பிரணவாகாரமாகிய நடுவணையை யிட்டு, அட்டாக்கரமாகிய படிகளை அமைத்து, அதனருகே அமைத்த கால்களும், திரணைகளும் காயத்திரியாகவும், அப்படியாகிய ஆசனத்தை உடைய மண்டபம் செங்கதிரை விரிக்காநின்ற சூரியன் தேர் போன்றிருக்கும். மணிக்கூட்டங்களானவை சுற்றிலும் பதித்திருப்பது ஆகாசத்தில் தோன்றுகின்ற தாரகையை ஒத்தன. பார்க்கா நின்ற பேர்களுடைய அந்தக் கரணமாகிய மனம், புத்தி, யாங்கார, சித்தங்களை ஆக்கிரமித் தோங்காநின்ற அந்த மண்டபத்தின் வளங்களை மயனானவன் அரங்க நாயகர் பாத தாமரையை வணங்கிக் காட்டினான் என்றவாறு (12)

பிரணவம் - ஓங்காரம். அட்டாக்கரம் - விஷ்ணு மந்திரம்; ஓம் நமோநாராயணா:

## Maṇṭapattiṟkuvamai

*piraṇavatti naṭuvaṇaiyaṭ ṭākkarattiṟ*
*piṟaṅkupaṭi piṟaḻuṅ kālkaḷ*
*tiraṇaikā yattiriyu mācaṉamuṇ*
*maṇṭapañceṅ katirtē rokkuṅ*

*kiraṇamaṇic cuṟṟilumviṉ miṉokkak*
*kilarntoḷirak kiṭanta tantak*
*karaṇamataik kaṭantanta mayaṉkt*
*kaṭivanaṅkik kāṭṭi ṉāṉē.*

## A Simile

The Piraṇava[1] sound was the seat
In the middle; the eight-syllabled chant[2]
Formed the legs; Kāyattiri was the cornice;
The sun with russet rays was the hall
With the seat. The stars were the gems
That had been studded all over.
The hall ravished the heart of the onlookers.
Mayaṉ saluted the Lord and took him around.

(தேவர் சூழ்தல்)

746. காட்டுமணி மண்டபத்தைக் கடவுளக
மலர்ந்தொளிரக் கண்ணிற் கண்டு
வேட்டல்புரிந் திடற்குரிய விடமிதுவே
நண்ணுமென விபுதர் கோவி
னாட்டவரை நினைந்தளவி லவரவர்தம்
மனைவியொடு நாடி வந்தார்
ஈட்டமொடு மரனயனு மெந்தையடி
யமரரொடு மிறைஞ்சி நின்றார்.

எ-து. இவ்விதமாய்த் தேவ கம்மியன் அமைத்த கலியாண மண்டபத்தின் வளங்களை மயனானவன் பரம்பொருளுக்குக் காட்ட அந்த வளங்களையெல்லாம் அகமும் முகமும் மலரத் தமது செந்தாமரைக் கண்களினால் கண்டு பாணிக் கிரகணம் பண்ணுதற்குரித்தாகிய புனிதமான இடமிதுவே பவுத்திரமென்று நினைத்த புருடோத்தமனானவர், இந்திரன் முதலாகிய தேவர்களைத் தமது திருக்கலியாணத்துக்கு வரக் குறித்தார். அப்படி நினைத்த மாத்திரத்தில் அந்தத் தேவர் கூட்டங்கள் தங்கள் மனைவியர்களுடனே வந்து சேர்ந்தார்கள். அதன்பின்பு சிவனும் பிரமாவும் வந்து தெண்டன் சமர்ப்பித்து நின்றார்கள் என்றவாறு. (13)

வேட்டல் - திருமணஞ் செய்தல். விபுதர் - வானோர். ஈட்டமொடும் அரன்அயனும் எனப் பிரிக்க.

---

1. The syllable, OM.
2. OM-na-mō-nā-rā-ya-ṇa-ya.

## Tēvar cūḻtal

*kāṭṭumaṇi maṇṭapattaik kaṭavuḷaka*
*malarntoḷirak kaṇṇiṟ kaṇṭu*
*vēṭṭalpurin tiṭaṟkuriya viṭamituvē*
*naṉṉumeṉa viputar kōvi*
*ṉāṭṭavarai niṉaintaḷavi lavaravartam*
*maṉaiviyoṭu nāṭi vantār*
*īṭṭamoṭu maraṉayaṉu mentaiyaṭi*
*yamararoṭu miṟaiñci niṉṟār.*

## The Gods Crowd Around

As Mayaṉ showed the hall, the gods saw
With their hearts brimming with joy;
The Lord decided upon the hall
As the chosen spot for the wedding.
As he thought of the heavenly denizens,
They came rushing with their consorts.
Civaṉ and Piramaṉ also came with the crowd
Saluted the Lord's feet and worshipped.

(இந்திரன் முதலானோர்)

747. இந்திரனுஞ் சந்திரனு மிரவிகள்பன்
ணிருவர்சித்தர் சாத்த ரோடுங்
கந்திருவர் வீணையுறு நாரதர்தும்
புருவரிசை கானத் தோடும்
வந்தனர்க ளரம்பையர்கள் மங்கள
சுபங்கள்மறை யோர்கள் வாழ்த்தி
அந்தணர்க ளாசியொடும் வந்தனர்கள்
வசுக்கள்மருத் துக்கள் வந்தார்.

எ-து. இந்திரன் முதலாகிய தேவர்கூட்டங்களும், சந்திரன் முதலாகிய நவக்கிரகங்களினொருவராகிய பனிரெண்டு சூரியரும், ஒன்பது வகையாயுள்ள சித்தர்க் கூட்டங்களும், சாத்தாவாகிய வரியர புத்திரனும், கந்தருவர் கூட்டங்களும் வீணைகளை மீட்டிப் பாடாநின்ற தும்புரு நாரத ரீட்டங்களும், அரம்பைய ரீட்டங்களும் சூழ்ந்துவந்து மங்கள சுபகரங்களைக் கூறிச் சோபனம் பாடினார்கள். வேதப்பிராமணாளாகிய பேர்கள் ஆசீர்வதித்துத் தெண்டன் சமர்ப்பித்தார்கள். அட்டவசுக்களும், தெய்வ மருத்துவரும் வந்து நிறைந்திருந்தார்கள் என்றவாறு. (14)

இரவிகள். பன்னிருவர் - ஒவ்வொரு ராசியிலும் புகும் சூரியனின் பெயர் - 12. அவை - தாத்துரு. சக்கரன், அரியமன்மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டா என்பன.

## Intiran̲ mutalān̲ōr

*intiran̲uñ cantiran̲u miravikaḷpan̲*
*n̲iruvarcittar cātta rōṭuṅ*
*kantiruvar viṇaiyuṟu nāratartum*
*puruvaricai kāṇat tōṭum*
*vantan̲arka ḷarampaiyarkaḷ maṅkaḷa*
*cupaṅkaḷmaṟai yōrkaḷ vāḻtti*
*antaṇarka ḷāciyoṭum vantan̲arkaḷ*
*vacukkaḷmarut tukkaḷ vantār.*

## Intiran̲ and Others

Intiran̲, the moon, the twelve suns,[1]
The Cittar, Cāttā, Kantarvas, Nāratar,
Tumpuru and their like came playing the lute;
Heavenly damsels sang auspicious tunes;
Elders and Vedic priests came to give
Blessings. The Vacus and Maruts too came.

(முனிவர் கூட்டம்)

748. அத்திரிகவு தமன்வசிஷ்டன் விசுவா மித்திர
னங்கிரச னகத்தியன்கா சிபன்மார் கண்டன்
பத்திசெயும் வான்மீகன் பரத்து வாசன்
பாங்கான கலைக்கோட்டன் புலத்தி யன்பார்
நித்தியமாம் வியாசன்பாற் கரனு ரோம
நீதிபிரு குச்சனகன் சனத்கு மாரன்
உத்தமமா முனிக்கணங்க ளோடு மற்று
முள்ளமுனிக் கணங்களும்வந் துற்றா ரங்கன்.

---

1. Datru, Chakra, Aryama, Mitra, Varuna, Amsuman, Hiranya, Bhaga, Divaswa, Pusha, Savitru and Tvashta.

எ-து. அத்திரி முனி, கவுதமரிஷி, வதிஷ்டமகாமுனி, விசுவாமித்திரர், அங்கிரசன், அகத்தியன், காசிபன், மார்க்கண்டேயர், வான்மீகி, பரத்துவாசன், கலைக்கோட்டார், புலத்தியமுனி, வியாத முனிவராகிய வாதராயணர், பாற்கரன், உரோமசன், பிருகு, சனகன், சனத்குமாரன் முதலாகிய நற்குண நற்செய்கை ஒழுக்கத்தால் உயர்ந்த முனிக்கூட்டங்கள் எல்லாம் தண்டு கமண்டலங்களும், திரி தண்ட, ஏக தண்டங்களிலே முருக்கிலைச் சுருக்கினைச் சொருகிய கையராய்ச் சமித்துகளை மற்றொரு கரத்தில் தாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள் என்றவாறு. (15)

## Muṉivar kūṭṭam

*attirikavu tamaṉvaciṣṭaṉ vicuvā mittira*
*naṅkiraca nakattiyaṉkā cipaṉmār kaṇṭaṉ*
*patticeyum vāṉmīkaṉ parattu vācaṉ*
*pāṅkāṉa kalaikkōṭṭaṉ pulatti yaṉpār*
*nittiyamām viyācaṉpāṟ karaṉu rōma*
*nītipiru kuccaṉakaṉ caṉatku māraṉ*
*uttamamā muṉikkaṇaṅka ḷōṭu maṟṟu*
*miḷḷamuṉik kaṇaṅkaḷumvan tuṟṟā raṅṅaṉ.*

## Sages

Attiri, Koutamar, Vaciṣṭar, Vicuvāmittirar,
Aṅkiracar, Akastiyar, Kācipar, Mārkkaṇṭēyar,
Vālmīki full of devotion, Parattuvācar,
The noble Riṣysriṅkar, Pulattiyar,
The eternal Vyacar, Pāṟkarar, Urōmacar,
Piruku, Caṉakar, Caṉatkumārar,
And other noble sages also arrived there.

(மண்டபத்தின் செயற்பாடுகள்)

749. வந்தவர்கண் மணியணிமண் டபத்தினிறைந்
தின்பமிக வளர வாங்கே
கந்திருவர் வாத்தியங்கள் கறங்கத்துந்
துமிமுழங்கிக் கானம் பாடச்
சுந்தரகோ லங்களுடன் தோரணமும்
வார்கொடியுந் தொங்க னாற்றிப்
பந்திபந்தி யாய்க்கலச கும்பநிறைத்
தின்பமுறப் பனிநீர் தூவி.

எ-து. இப்படியாய் வந்து நிறைந்த தேவர்கூட்டம், முனிவரீட்டங்கள் அழகிய மணிமயமாகிய மண்டபத்தின் இனிய வளங்களையெல்லாம் பார்த்துக் களி கூர்ந்தார்கள். காந்திருவ கூட்டங்கள் பணகம், கோமுகம், மண்டூகம், சல்லரி, மல்லரி முதலியன முழக்கினார்கள். தேவ துந்துமி அனேகமாயிரம் முழங்கக் கீத இசைகளை இசை இலக்கணம் வழுவாமல் அனேகர் பாடவும், சுந்தர ரஞ்சித மங்களாகரமாகிய சித்திர விசித்திர கோலத்துடனே தோரணங்களும், நீண்ட துச படங்களும் தொங்கக் கட்டியும், பந்தி பந்தியாய்க் கனகக் கும்பங்களைத் தாபித்தும் பனிநீர்களைத் தூவி நிலங்களை யெல்லாம் பரிமளிக்கச் செய்தார்கள் என்றவாறு. (16)

## Maṇṭapattiṉ ceyaṟpāṭukaḷ

*vantavarkaṇ maṇiyaṉimaṉ ṭapattiṉiṟain*
*tiṉpamika vaḷara vāṅkē*
*kantiruvar vāttiyaṅkaḷ kaṟaṅkattun*
*tumimuḻaṅkik kāṉam pāṭac*
*cuntarakō laṅkaḷuṭaṉ tōraṇamum*
*vārkoṭiyun toṅka nāṟṟip*
*pantipanti yāykkalaca kumpaniṟait*
*tiṉpamuṟap paṉinīr tūvi.*

## Activities

They all went around happily
Noting all the riches displayed.
Kantaruvas played musical instruments,
Beat the Tuntupi and sang. Lovely designs
Were drawn on the floor; Hangings
And flags were bound everywhere.
There were rows and rows of filled pitchers
While rose water was sprinked everywhere.

(தீபம் முதலிய அழகு)

750. சந்தனத்திற் பனிநீராற் தரைமெழுகிக்
கற்பூரக் கோலஞ் சாத்தி
இந்துநிகர் பொற்கலவை யியைந்தசுண்ணங்
குங்குமங்க ளிறைத்து மிக்கக்

**கந்தமலர் தூவியெங்குங் கடிமணச்சால்**
**வேதிகையிற் கவின்செய் தீபஞ்**
**சுந்தரமார் பாலிகையுந் தொகுத்துவர**
**சாணிக்காற் றொகுத்த பின்னர்.**

எ-து. சாந்து, சந்தன பனிநீரால் மணவறைச் சாலைகளெங்கும் மெழுகி வெண்மை பொருந்திய ஆணி முத்தங்களினால் கோலங்களிட்டுப் பூரணச் சந்திர னுதையமானதுபோல ஆயிரத்தெட்டு மாற்று அபரஞ்சிதத் தங்கப்பொடிகள், களப, கதம்ப, கஸ்தூரி முதலாகிய திவ்விய பரிமள திரவியங்களை நான்கு திக்கினுங் கோடி சூரியன் உதித்ததுபோலப் பிரகாசிக்கத் தக்கதாகத் தூவி, கற்பகம், மந்தாரம், பாரிசாதம், சண்பக புஷ்பங்கள் இடையிடைகளிலும் நிறைந்து பிரகாசிக்கத் தக்கதாய்க் கடிமணச்சாலை வேதிகை எட்டுத் திக்கினும் அமைத்து, அழகு சிறந்தோங்கிய மாணிக்கத் தீபங்களிட்டுச் சுந்தரமாகிய பாலிகையும், அரசாணிக்காலும் வகுத்துச் சிறந்த அலங்காரங்களைச் செய்தார்கள் என்றவாறு. (17)

வேதிகை -மேடை.

## Tīpam mutaliya aḻaku

*cantaṉattiṟ paṉinīrāṟ taraimeḻukik*
*kaṟpūrak kōlañ cātti*
*intunikar poṟkalavai yiyaintacuṇṇaṅ*
*kuṅkumaṅka ḷiṟaittu mikkak*
*kantamalar tūviyeṅkuṅ kaṭimaṇaccāl*
*vētikaiyiṟ kaviṉcey tīpañ*
*cuntaramār pālikaiyun tokuttuvara*
*cāṇikkāṟ ṟokutta piṉṉar.*

## Lamps

The floor was washed with sandalpaste
And rose-water. Designs were drawn
With camphor. Golden powder like the moon
And other scented powders and saffron
Were sprinkled everywhere. Scented blossoms
Were showered on the wedding seat.
Lovely lamps and pālikai pots were readied
And the pipal branch was raised.

(குடவிளக்கு முதலியன)

751. குடவிளக்கங் கிளைவிளக்க மணிவிளக்கம்
விதிமுறையிற் கூட்டி நீண்ட
வடருமண வறைநிறுவி யங்கங்கே
யலங்காரத் தீப மிட்டு
இடையிடையின் மணிவிளக்கம் வைத்துச்சுற்று
மெழில்வாழைக் கமுகு நாட்டித்
தொடையணிந்து பலவிதமாங் கோலஞ்செய்
தடிபணியத் தொல்லோன் றானும்.

எ-து. அந்தத் திருக்கலியாண மண்டபங்களெங்கும் குட விளக்கங்களின் வர்க்கமும், கிளை விளக்கத்தொகுதியும், மணிவிளக்கக் கூட்டங்களும், விதிமுறையாகக் கூட்டி வைத்தமைத்தும், நெருங்கிய மணவறையினைச் சுந்தர, ரஞ்சித, விங்கிதமாய்ச் செய்தும், அந்தந்த இடங்கள்தோறும் அலங்கார தீபங்கள் பிரகாசிக்கத் தக்கதாய் அமைத்தும், இடையிடைகளிலே மாணிக்கத் தீபங்கள் பிரகாசிக்க வைத்தும், அதனைச் சூழ வாழை, தெங்கு, கமுகினங்களைச் சிங்காரமாய்க் கட்டியும், அதனருகெங்கணும் மலர் மாலையைத் தொங்கவிட்டு வளப்பமாய்ச் செய்தமைத்த பின்பு சகல தேவர் கூட்டச் சமூகங்களும் ஸ்ரீ அரங்க நாயகரது பாதத் தாமரைகளில் பந்தி பந்தியாய்த் தெண்டன் சமர்ப்பித்து வணங்கி நின்றார்கள் என்றவாறு. (18)

## Kuṭaviḷakku mutaliyaṉa

*kuṭaviḷakkaṅ kiḷaiviḷakka maṇiviḷakkam*
*vitimuṟaiyiṟ kūṭṭi nīṇṭa*
*vaṭarumaṇa vaṟainiṟuvi yaṅkaṅkē*
*yalaṅkārat tīpa miṭṭu*
*iṭaiyiṭaiyiṉ maṇiviḷakkam vaittuccuṟṟu*
*meḻilvāḻaik kamuku nāṭṭit*
*toṭaiyaṇintu palavitamaṅ kōlañcey*
*taṭipaṇiyat tollōṉ ṟāṉum.*

## Pitcher Lamps

Pitcher lamps, branching lamps
And jewelled lamps were readied for rituals.
Close to the wedding room was placed
Decorated lamps alternating with gem-studded
Lamps. Plantain and betel-nut trees

Were raised all around. Garlands were hung
On all sides making it appear very beautiful.
The Primal One saw it all.

(அரங்கநாயகருக்கு அலங்காரம்)

752. ஏகிமணி மண்டபத்தி னின்றான் தேவ
ரிறைஞ்சிகங்கை முதல்தீர்த்த மிழிவென் றுன்னிப்
போகமுறு மிலக்குமிதன் தீர்த்தங் கொண்டு
புகழ்திருமஞ் சனமாட்டிப் பன்னீ ராட்டித்
தேகமதிற் பொன்னாடை சாத்திச் சாந்தந்
திகழ்நிலவு மணிவரைமேற் செறிந்த தென்ன
வாகமுற வணிந்துமணிக் கவசம் வீக்கி
யரையின்மணி வடம்பூட்டி யழகிற் பொன்னூல்.

எ-து. அப்படிப் பிரமா, உருத்திரன் முதலாகிய தேவர்களும், மகாரிஷிகளும், தேவ ஸ்திரீகளும், ரிஷிபத்தினிகளும் வணங்கத்தக்கதாய் ஸ்ரீ அரங்க நாயகரானவர் அந்தத் திருக்கலியாண மண்டபத்தின் நடுப் பிரதேசத்தில் எழுந்தருளினார். அந்தச் சமயத்திலே மங்கள வாத்தியங்கள் முழங்க, தேவர்களெல்லாம் தெண்டன் சமர்ப்பித்து, கங்கை முதலாகிய புண்ணிய தீர்த்தங்களுக்கெல்லாம் அதி சிரேஷ்டமாகிய இலக்குமியார் தீர்த்தங்களைக் கொண்டு, களப, கதம்ப, கஸ்தூரி முதலாகிய திவ்விய பரிமள திரவியங்களைச் சேர்த்துத் திருமஞ்சனம் செய்து, திவ்விய திருமேனிகள் எங்கும் நுண்ணிய துகிலினால் துவட்டி, அதன் பின்பு திவ்விய பீதாம்பரத்தைப் புனைந்து, திருமுக மண்டலத்தில் கஸ்தூரி திலகத்தினை அணிந்து, சாந்து, சந்தனம், பனி நீர், களப, கதம்பம் முதலாகிய பரிமள திரவியங்களைத் திருமேனிகளெங்கும் அணிந்து, மரகத மலை போன்ற அவரது திவ்விய திருமுகங்களிலே மாணிக்கமகுடம் சூட்டி, இரத்தின மயமாகிய வச்சிரக் கவசம் திருமார்பகத்தில் அணிந்து, அவரது திரு அரையிலே மணி மயமாகிய வடத்தினைப் பூட்டிப், பொன் மயமாகிய முப்புரி நூலும் அணிந்தார்கள் என்றவாறு. (19)

**Araṅkanāyakarukku alaṅkāram**

*ēkimaṇi maṇṭapatti ṉiṉṟāṉ tēva*
*riṟaiñcikaṅkai mutaltīrtta miḻiveṉ ṟuṉṉip*
*pōkamuṟu milakkumitaṉ tīrttaṅ koṇṭu*
*pukaḻtirumañ caṉamāṭṭip paṉṉī rāṭṭit*
*tēkamatiṟ poṉṉāṭai cāttic cāntan*
*tikaḻnilavu maṇivaraimēṟ ceṟinta teṉṉa*
*vākamuṟa vaṇintumaṇik kavacam vīkki*
*yaraiyiṉmaṇi vaṭampūṭṭi yaḻakiṟ poṉṉūl.*

## Arankan

Arankan came and stood in the hall.
The gods saluted. Setting aside water
Gathered from Kankai and elsewhere,
They brought water from the Laksmi spring
And bathed him with it and with rosewater.
They enrobed him in a golden garment
And rubbed sandalpaste on him,
As if the full moon had descended
Upon an emerald mountain for rest.
A bejewelled armour was put on him.
A gem-studded band on his waist
And a golden sacred thread were also fixed.

(அணிகலன்கள்)

753. மணிமார்பின் மின்னலென் வணிந்து நீல
வரைப்புயத்தின் வாகுவல யங்கள் சேர்த்த
வணியார்செங் கதிர்மதிய மென்னத் தோடு
மழகாரு மிருசெவியி னணிந்து பல்விண்
மணியாரு மேருவென மகுடஞ் சூட்டி
மலர்க்கரத்தின் மணிக்கடகம் பூட்டி யாழித்
தணியாக விரற்பத்துஞ் சேர்த்து முத்துத்
தாமமணிப் பதக்கங்க டழையச் சாத்தி.

எ-து. அந்த ஆயிரத்தெட்டு மாற்றாகிய பொன்மயமான முப்புரிநூலினை மின்னலைப்போல மார்பினணிந்தும், நீலமால்வரையைப்போன்ற புயத்தின்கண் வாகு வலையங்களை அணிந்தும், அழகிய சூரிய சந்திரரைப் போன்ற இரண்டு குண்டலங்களைத் திருச்செவியில் பூட்டியும், பல கிரணங்களையுடைய மணிகளால் நிறைந்த மேரு கிரியினைப் போன்ற திரு மகுடத்தைச் சிரத்தினில்சூட்டியும், தாமரைக் கமலம் போன்ற கராம்புயத்தின் நவமணிக் கடகம் பூட்டியும், அபரஞ்சியினிழைத்த நவமணிகளானவை பிரகாசிக்காநின்ற மோதிரங்களைப் பத்து விரலின்கண் அணிந்தும், முத்து மாலை நடுப்பிரதேசத்தில் பிரகாசிக்கா நின்ற பதக்கங்களை வகைவகையாய் அணிந்து அலங்காரமாய் ஆபரணத்துக்குச் செய்தமைத்தார்கள் என்றவாறு. (20)

## Aṇikalaṉkaḷ

*maṇimārpiṉ miṉṉaleṉa vaṇintu nīla*
*varaippuyattiṉ vākuvala yaṅkaḷ cērttu*
*vaṇiyārceṅ katirmatiya meṉṉat tōṭu*
*maḻakāṟu miruceviyi ṉaṇintu palviṇ*
*maṇiyāṟu mēruveṉa makuṭañ cūṭṭi*
*malarkkarattiṉ maṇikkaṭakam pūṭṭi yāḻit*
*taṇiyāka viraṟpattuñ cērttu muttut*
*tāmamaṇip patakkaṅka ṭaḻaiyac cātti.*

## Ornaments

The sacred thread lay like a lightning
On his chest; bands were clasped
On his mountainous shoulders; rings
Rivalling the sun and the moon
Were fixed on his ears twain. A crown
Like the gem-rich Mēru Mountain
Was placed on his head; straps of gold
On his wrists; lovely rings on his fingers;
And numerous pearl strings with pendants
Gem-studded, ornamented his chest.

(மணவறையில் அரங்கநாயகர்)

754. நவமணியி னிழைத்தசித்திர மாலை சேர்த்து
நல்லுதர பந்தனமு நடுவிற் சேர்த்துப்
பவமொழிக்கும் பெருநிதிய மென்னுங் காற்குப்
பணிகள்பல சூட்டிமணக் கோலஞ் செய்து
தவமுயலுங் கற்பகநாண் மாலை சேர்த்துத்
தனித்துளவ மணிந்துமண வரையிற் சேர்த்து
பவனனொரு கோடியென விருந்தா னையன்
பாற்கடற்றான் பயந்தவளைப் பகர லுற்றாம்.

எ-து. நவமணிகளாலே இழைத்திராநின்ற சுந்தர ரஞ்சிதத் தோடுங்கூடிய அபரஞ்சி மணிமாலைகளை மார்பகத்தினில் புனைந்தும், நல்ல உதர பந்தனமாகிய ஆபரண வகைகளை

வயிற்றிலணிந்தும், செனன சாகரத்தை நீக்காநின்ற பாதத் தாமரைகளிலே பொன்னாழியினைப் புனைந்தும், தவ முயற்சியாகிய கற்பகத்தினது திவ்விய மணம் நாறுகின்ற மாலைகளை அணிந்தும், ஒப்பற்ற துளப மாலையைப் புனைந்தும், சர்வாபரண பூசித அலங்காரங்களுடனே ஸ்ரீ அரங்கநாயகர் மணவறையினெழுந்தருளினது எப்படிப் பிரகாசித்தது என்றால், கீழ்த்திசைக்கடன் முகட்டிலே சத்த புரவியோடும் கூடிய ஆரியர் ஒரு கோடி பேர்கள் ஒரு காலத்தி னுதையமானதுபோல வீற்றிருந்தருளினார். அதன் பின்பு திருப்பாற்கடலின் [1]தம்பதமாய் அவதரித்தருளிய ஸ்ரீ மகா லட்சுமியாருக்கு அலங்காரம் செய்கின்ற புகழினைச் சில கூறுகின்றாம் என்றவாறு. (21)

உதரபந்தனம் - ஆடவர் அரைப்பட்டிகை. நாண் மாலை - புதிய மலராலான மாலை. பவனன் - காற்று. சூரியன் என்பது உரை.

பா.வே. - 1. அற்புதமாய்.

## Maṇavaṟaiyil Araṅkanāyakar

*navamaṇiyi ṉilaittacittira mālai cērttu*
*nallutara pantaṉamu naṭuviṟ cērttup*
*pavamoḻikkum perunitiya meṉṉuṅ kāṟkup*
*paṇikaḷpala cūṭṭimaṇak kōlañ ceytu*
*tavamuyaluṅ kaṟpakanāṉ mālai cērttut*
*taṉittuḷava maṇintumaṇa varaiyiṟ cērttu*
*pavaṉaṉoru kōṭiyeṉa viruntā ṉaiyaṉ*
*pāṟkaṭaṟṟāṉ payantavaḷaip pakara luṟṟām.*

## Araṅkaṉ in the Wedding Hall

Beautiful, gem-studded garlands
Were placed on his chest; a pretty belt;
To the feet that is the refuge which destroys
The evil of birth, decorations were made.
Dressed as a bridegroom, with flowers
From the austerity-rich Kaṟpaka tree,
And pure Tuḷaci, Araṅkaṉ was led to the hall.
Now we proceed to describe how Lakṣmi
Was united to the Lord who appeared
Like the power of a crore of Vāyu gods.

(தேவிக்கு அலங்காரம்)

755. கலைமகளோ டுமையவளிந் திராணி தானுங்
கழற்பணிந்து நலங்குறுமஞ் சனமு மாட்டி
விலையிலா மணியாடை யிடையிற் சேர்த்து
வீக்குமணி வொட்டியமே கலையுஞ் சேர்த்துத்
தொலைவிலாக் கிரணமணிக் கச்சை விட்டுத்
தோடுமுழு மதிபோலுந் தொங்க லிட்டு
உலைவிலாச் செங்கதிர்சில் லோதி யிட்டு
வுரியநறுங் கற்பகநன் மாலை சூட்டி.

எ-து. அதிசிரேஷ்டமாகிய திருப்பாற் கடலில் அவதரித்தருளிய ஸ்ரீ மகாலட்சுமியினுடைய திவ்விய திருவடிக் கமலங்களிலே சகல கலைகளினும் நிறைந்து அருள்புரிகின்ற சரஸ்வதி தேவியும், பர்வதராசன் புத்திரியாகிய பார்வதா தேவியும், இந்திராணி தேவியும் அனந்தமான தெண்டன் சமர்ப்பித்துக் களப, கதம்ப, கஸ்தூரிகளாலே நலங்கணிந்ததன் பின்பு, திருமஞ்சனம் வேத விதிப்படி ஆட்டுவித்து, விலையில்லாத பீதாம்பர உடையை இடையிலணிந்து, நவரத்தினக் கசிதமாகிய ஒட்டியாணமும், மேகலாபரணமும் புனைந்து, உலவிலாத மாணிக்க மணிகளால் சிறந்தொளி பரவுகின்ற கச்சையைப் பூண்டும், திவ்விய பரிமளங் கமழ்கின்ற பூரணச்சந்திரனையொத்த வெண்டாமரை மாலையினைப் புனைந்து, பிரகாசிக்கின்ற சூரிய சந்திரப் பிரபையைத் திருமுடியினணிந்து, அளக பாரத்தினிடத்தில் கற்பக, மந்தார, பாரிசாத மலர் மாலை யானது திவ்விய சுகந்த பரிமளங்களைக் கமழத்தக்கதாக அலங்கரித்தார்கள் என்றவாறு. (22)

## Tēvikku alaṅkāram

*kalaimakaḷō ṭumaiyavaḷin tirāṇi tāṉuṅ*
*kaḻaṟpaṇintu nalaṅkuṟumañ caṉamu māṭṭi*
*vilaiyilā maṇiyāṭai yiṭaiyiṟ cērttu*
*vīkkumaṇi voṭṭiyamē kalaiyuñ cērttut*
*tolaivilāk kiraṇamaṇik kaccai viṭṭut*
*tōṭumuḻu matipōluṅ toṅka liṭṭu*
*ulaivilāc ceṅkatircil lōti yiṭṭu*
*vuriyanaṟuṅ kaṟpakanaṉ mālai cūṭṭi.*

## Decorating Lakshmi

Carasvati, Pārvati and Intirāṇi bowed
At her feet; they bathed her;
Enrobed her in a priceless garment;

They clasped a jewelled belt to her waist
And a band as well; they dressed her
In a girdle gleaming with gems,
Put on ear-studs that were moon-bright,
And a sun-bright crown-ornament
On her tresses. Here they placed
Scented, Karpaka blossoms.

(அணிகலன்கள் அழகுபெறுதல்)

756. மேகத்தின் மதிக்கதிர்போல் பிறைகள் சாத்தி
விளங்குசுட்டி யரசிலையுந் தொங்க னாற்றி
நாகத்தின் சடைப்பணிக ளணிந்து நீண்ட
நற்சம்பு கொப்புமுரு கொடுபு னைந்து
பூகத்தின் கண்டத்தா பரண மிட்டுப்
பொங்குகதிர் போன்றமூக் குத்தி யிட்டு
மாகத்திற் பிறைபோலுங் கதிர்கள் போலு
மாபரண நிறையவிட்டங் கழகு வாய்ப்ப.

எ-து. மேகத்தின் பிரகாசியாநின்ற மூன்றாம் பிறையைப் போன்ற சந்திரப் பிரபையைச் சாத்தியும், விளங்கும் படியாகிய அரசிலைச் சுட்டியை மயிர் வகிரினின்றும் தொங்கவிட்டும், நாகரத்தினத்தால் இழைத்த மணிமயமாயும் பொன்மயமாயு மிராநின்ற சடைபில்லையை அணிந்தும், திருச்செவிக்குச் சம்பு நாவற்கொப்பும் முருகும் அணிந்தும், கமுகம் போன்ற கண்டத்தில் தரிக்காநின்ற ஆபரண வகைகளையெல்லாம் தரித்தும், சந்திரப் பிரபையை யொத்த நத்து மூக்குத்தியை மூக்கினில் தொங்க விட்டும், ஆகாயத்தில் பிரவேசிக்காநின்ற இருசுடர்களும் ஒரு காலத்தில் பிரவேசித்ததுபோன்ற ஆபரண வகைகளெல்லாம் பிரதாபத்தை அடையத் தக்கதாக அந்த ஆபரணத்துக்கு அழகு செய்தார்கள் என்றவாறு. (23)

**Aṇikalaṉkaḷ aḻakupeṟutal**

*mēkattiṉ matikkatirpōl piṟaikaḷ cātti*
*viḷaṅkucuṭṭi yaracilaiyun toṅka ṉāṟṟi*
*nākattiṉ caṭaippaṇika ḷaṇintu nīṇṭa*
*naṟcampu koppumuru koṭupu ṉaintu*
*pūkattiṉ kaṇṭattā paraṇa miṭṭup*
*poṅkukatir pōṉṟamūk kutti yiṭṭu*
*mākattiṟ piṟaipōluṅ katirkaḷ pōlu*
*māparaṇa niṟaiyaviṭṭaṅ kaḻaku vāyppa.*

## The Ornaments Gain Beauty

On the crown were the sun-moon clips;
A forehead jewel shaped like a pipal leaf,
A snake-ornament on her plaited tresses,
Ear-ornaments like campu, koppu and muruku,
Necklace on her slender throat,
And a nose-screw bright as the sun,
And other ornaments like the crescent
And the suns, added to the beauty.

(பிராட்டியின் மணக்கோலம்)

757. தோளணிகைக் கடகமோ திரங்க ளிட்டுச்
சுடர்விளக்க மென்னநெற்றித் திலக மிட்டு
வாள்பொருவு மிருகருணை விழிக்கு மையும்
வளர்புருவ மையுநொய்ய வனைந்து தோய்யில்
நீளணிசேர் கொங்கைக்குட மணிந்து செய்ய
[1]நிகரச்சிற் றடித்தண்டைச் சிலம்பு மிட்டுக்
கோளகல புலகங்கை குவித்து நின்ற
கோமளத்தை மணக்கோலக் கோலங் கண்டார்.

எ-து. தோள்களிலே அணியாநின்ற கைக்கடகங்களும், மோதிரங்களும் இட்டுச் சுடர்விளக்கம் போன்ற நெற்றியிலே திலதங்களையிட்டு, வாளைப் போன்ற இரு கண்களும் கருணையினைப் பொழிய, அதற்குத் தகுதியாகிய மையினை இட்டுச் சந்தனக் களபத்தினாலே தனதடத்துக்குச் சித்திரமெழுதிச் சிவந்த தாமரைக் கமலம் போன்ற திருவடித் தாமரைக்குத் தண்டை பாதசரங்களைப் பூட்டி ஆன்மாக்கள் குற்றங்களெல்லாம் நீங்கத் திருவவதாரம் செய்தருளிய பிராட்டியாரை யாவரும் கைகுவிக்கத்தக்கதாக மணக்கோலம் செய்தார்கள் என்றவாறு. (24)

பா.வே. - 1 நீரசடித்.

## Pirāṭṭiyiṉ maṇak kōlam

*tōḷaṇikaik kaṭakamō tiraṅka ḷiṭṭuc*
*cuṭarviḷakka meṉṉaneṟṟit tilaka miṭṭu*
*vāḷporuvu mirukaruṇai viḻikku maiyum*
*vaḷarpuruva maiyunoyya vaṉaintu tōyyil*

*nilanicēr konkaikkuta manintu ceyya*
*nikaraccir ratittantaic cilampu mittuk*
*kōlakala pulakankai kuvittu ninra*
*kōmalattai manakkōlak kōlan kantār.*

**Lakṣmi as the Bride**

Shoulder-bands, bangles, rings,
Auspicious flame-like mark on her forehead,
Collyrium on her kindly eyes
That were sword-sharp,and the eyebrows
Drawn beautiful, sandal-lines drawn
To decorate her lovely breasts,
Chains and anklets for the lovely feet;
Thus they decorated the gentle lady
As a bride and saluted her
And prayed to be rid of their blemishes.

**(பொற்கும்பமும் வேள்விக் குண்டமும்)**

758. **கண்டமரர் யாவருங்கை குவிப்ப வாங்கோர்**
**கனகமணி யாசனத்திற் கவின்செய் தோங்கப்**
**புண்டரீகன் முனிவர்குழாஞ் சூழ வாங்கோர்**
**புனிதமணி யாசனத்திற் பொருந்தி முத்துத்**
**தண்டுலமும் விரித்துறுநற் தருப்பை சாத்திச்**
**சதுர்மறையின் விதிமுறைதண் மலர்கள் தூவி**
**மண்டலமும் பொற்குடமும் விதியின் வைத்து**
**வழங்குறுமட் சதைதூப தீப மிட்டு.**

எ-து. அந்த லோக மாதாவாகிய ஸ்ரீ மகா லட்சுமி தேவியாருடைய திருமணக்கோல திவ்விய தரிசனங்களைக் கண்ட தேவர்கள், மகா ரிஷிகள், ரிஷி பத்தினிகள் யாவரும் அற்புதம் பெருகிக் கையைச் சிரத்திற் கூப்பித் தொழ, அவரிடத்தில் கனகமயமாகிய திவ்விய ஆசனத்தில் பிரபலமாய் பிரகாசித்தருளினார். அப்போது பிரமா முதலாகிய பேர்களெல்லாம் சூழ்ந்து அருகினில் திகழ்ந்து ஆணி முத்தமாகிய அரிசிகளும், விரிவாய்ப் பரப்பி வைத்துத் தருப்பைகளை எட்டுத் திக்கினும் விதிப்படி வைத்து, வேதவிதிப்படி திருக்கலியாணச் சடங்குகளை யெல்லாம் வழுவாமல் செய்தமைத்து, பொற்கும்பத்தை வேள்விக் குண்டத்தைச் சூழ வைத்து வழங்காநின்ற அட்சதை, தூப, தீபமும் அமைத்தார்கள் என்றவாறு. (25)

தண்டுலம் - அரிசி. அட்சதை - மங்கல அரிசி.

## Poṟkumpamum vēḷvik kuṇṭamum

*kaṇṭamarar yāvaruṅkaḷ kuvippa vāṅkōr*
*kaṉakamaṇi yācaṉattiṟ kaviṉcey tōṅkap*
*puṇṭarīkaṉ muṉivarkuḻāñ cūḻa vāṅkōr*
*puṉitamaṇi yacaṉattiṟ porunti muttut*
*taṇṭulamum virittuṟunaṟ taruppai cāttic*
*caturmaṟaiyiṉ vitimuṟaitaṉ malarkaḷ tūvi*
*maṇṭalamum poṟkuṭamum vitiyiṉ vaittu*
*vaḷaṅkuṟumaṭ cataitūpa tīpa miṭṭu.*

## Golden Pitcher, Sacrificial Fire

As the gods saluted, the Lord was seated
On a golden seat made of sacred jewels,
Surrounded by Piramaṉ and the sages,
Spreading pearls of rice and Taruppai grass,
They showered flowers as commanded
By the four Vēdas. They placed
Golden pitchers encircling the sacred fire
And sprinkled auspicious rice. Scented smoke
Was prepared and lamps as well.

(மேடையில் இருவரும்)

759. விச்சுவசே னனையுமுன் னடியர்ச் சித்து
விளங்குதழ லோமநெய்யா குதிசொ ரிந்தங்
[1]கச்சுதனு மனைவியொடு தவிசி னேறி
யாருயிர்மெய் மதிகதிர்போ லழகு வாய்ப்ப
விச்சையினாற் தேவர்கண மிறைஞ்சி யேத்தி
ஏவற்பணி விடைசெய்ய வீசன் தானு
நச்சியபொற் பொரிசிதறிக் கழற்று திப்ப
நாரணன்புன் னகைபுரிந்து விதிந வின்றான்.

எ-து. அப்படியாய்ப் பாணிக்கிரகண விதியை ஆரம்பித்த மாத்திரத்தில் விசுவசேனரை முதன்மையாய் அர்ச்சித்து விளங்கும் படியாகிய யாக குண்டத்திலே நெய்யினாலே ஆகுதி செய்து புருடோத்தம பிராட்டியாரும் அந்தக் கலியாண மணத்தவிசினினேறி இருவரும் சந்திர சூரியரைப்போல வீற்றிருப்பத் தமது இன்பத்தினாலே

தேவர் கூட்டங்கள் ஆனந்தப் பரவசராய்த் தெண்டன் சமர்ப்பித்து ஏவற் பணிவிடை செய்ய, சிவனும் மற்று முதலாகிய பேர்கள் பொற் பொரிகளைத் தூவிப் பாதத் தாமரைகளைத் துதிப்பக் கேசவனானவர் புன்னகை புரிந்து சதுர்முகன் அருளிச் செய்கின்ற வேத மந்திரங்களைத் தமது திருவாக்கினாலே கூறி, ஓம விதிகளைச் செய்து ஆனந்த வைபவத்தை அடைந்தார்கள் என்றவாறு. (26)

விச்சுவசேனன் - விசுவசேநர் - திருமாலின் அவதாரச் சிறப்பு; லோகாலோக பருவதத்திலெழுந்தருளியிருப்பது. ஆகுதி - ஓமத்தீயிலிடும் நெய்ப்பலி.

பா.வே. - 1. வச்சுதனு மம்மன்.

### Mēṭaiyil iruvarum

*viccuvacē ṉaṉaiyumuṉ ṉaṭiyarc cittu*
*viḷaṅkutaḷa lōmaneyyā kutico rintaṅ*
*kaccutaṉu maṉaiviyoṭu tavici ṉēṟi*
*yāruyirmey matikatirpō laḻaku vāyppa*
*viccaiyiṉār tevarkaṇa miṟaiñci yētti*
*ēvaṟpaṇi viṭaiceyya vicaṉ tāṉu*
*nacciyapoṟ poricitaṟik kaḷaṟṟu tippa*
*nāraṇaṉpuṉ ṉakaipurintu vitina viṉṟāṉ.*

### The Bridal Couple

After worshipping Viccuvacēṉaṉ first,
The Lord poured ghee into the sacred fire
And went up the seat with his consort
Appearing handsome like the sun and the moon.
The gods felt immensely happy and prayed
And served as directed. Civaṉ and others
Sprinkled puffed rice in joy. Nārāyaṇaṉ
Smiled, and repeated Piramaṉ's mantras.

(வேதமோதுதல் முதலிய சடங்குகள்)

760. நான்முகனு மறைவிதியி னோமஞ் செய்து
நன்மலர்கள் தூவியடி வணங்கி நண்ண
வானவர்கந் திருவர்வாத் தியங்கள் செய்ய
மலர்தூவி முனிக்கணங்கள் மறைக ளோத

**மானனைய வுமையவள்மங் கலமும் பாட**
**வாசவனிந் திராணிமலர் மாலை சூட**
**வேனையர்பொன் முத்துநவ மணிகள் தூவி**
**யிறைஞ்சிதொழ நாரதர்தும் புருவர் போற்ற.**

எ-து. நான்முகனாகிய பிரமாவானவர் வேதவிதிப்படி ஓமம் செய்து மலர்மாரி சொரிந்து அடி வணங்கி நிற்ப, தேவாதிகளும் காந்திருவரும் பதினெண் வாத்தியங்கள் முழங்க, மலர் மாரிகளைத் தூவி முனிக்கூட்டங்கள் ஆசீர்வதித்து வேதாத்தியானம் செய்ய, மானைப்போன்ற மருண்ட பார்வையினையுடைய பார்வதியானவள் மங்கல சுமங்கலங்களைப் பாடவும், வாசவன் இந்திராணி முதலாகிய பேர்கள் மலர் மாலையைப் புனையவும், கின்னரர் முதலாகிய பேர்கள் நவமணிகளைத் தூவி ஏத்தவும், நாரதர், தும்புரு ஆகிய இரண்டு பேர்களும் தேவக்கியானங்கள் பாடி ஆனந்த வைபவத்தை அடைந்தார்கள் என்றவாறு. (27)

தும்புருவர் - ஒருகந்தருவர்.

## Vētamōtutal mutaliya caṭaṅkukaḷ

*nāṉmukaṉu maṟaivitiyi ṉōmañ ceytu*
*naṉmalarkaḷ tūviyaṭi vaṇaṅki naṇṇa*
*vāṉavarkaṉ tiruvarvāt tiyaṅkaḷ ceyya*
*malartūvi muṉikkaṇaṅkaḷ maṟaika ḷōta*
*māṉaṉaiya vumaiyavaḷmaṅ kalamum pāṭa*
*vācavaṉin tirāṇimalar mālai cūṭa*
*vēṉaiyarpoṉ muttunava maṇikaḷ tūvi*
*yiṟaiñcitoḻa nāratartum puruvar pōṟṟa.*

## Vedic Rituals

Piramaṉ performed the fire rituals
According to the Vēdas, sprinkled flowers,
Saluted the Lord's feet. The gods
And the Kantaruvas played music
The Sages showered flowers and recited
The scriptures. The doe-like Pārvati
Sang auspicious tunes. The bridal couple
Were garlanded by Intiraṉ and Intirāṇi.
The rest sprinkled pearls and various gems
Prayerfully. Nāratar and Tumpuru
Offered songs of praise.

(மலர்தூவி வாழ்த்துவோர்)

761. நிதிக்கிறைவன் நவநிதிகள் பொழிய தானம்
நிருதிவரு ணன்பனிநீர் நிறையத் தூவ
மதிக்குமவ ருளங்குளிர்ந்த தென்றல் வீசி
மலர்ந்தகற் பகம்வாச மலர்கள் தூவ
விதிக்கிறைவி பகல்விளக்கங் காட்டி யாங்கு
விண்ணவர்மண் ணவர்முனிவர் விருப்ப மெய்த
மதிக்குளயன் திருக்கோலங் காட்ட வேட்டு
மகிழ்ந்தின்ப சாகரத்தின் வாழ்வ தானார்.

எ-து. நிதிக்கு இறைவனாகிய குபேரனானவன் ஒன்பது வகையாயுள்ள ரத்தினங்களைத் தானமாய்ப் பொழியவும், நிருதியும் வருணனும் பனி நீரை நிறையத் தக்கதாகத் தூவவும், யாவரானும் மதிக்கா நின்ற வாய்வு பகவானும் குளிர்ந்த தென்றல் காற்றினை வீசித் திவ்விய பரிமளங் கமழா நின்ற மந்தார, பாரிசாதம், கற்பக மலரினைத் தூவவும், விதிக்கு இறைவியாகிய கலைமகளானவள் மணிவிளக்கேற்றவும், தேவ கூட்டங்களும் முனிவரீட்டங்களும் விருப்பத்தையடையவும், சதுர்முகப் பிரமாவானவர் மணக்கோலம் செய்து ஆனந்த வைபவத்தை அடைந்தார்கள் என்றவாறு. (28)

## Malartūvi vāḻttuvōr

*nitikkiṟaivaṉ navanitikaḷ poḻiya tāṉam*
*nirutivaru ṇaṉpaṉiṉīr niṟaiyat tūva*
*matikkumava ruḷaṅkuḷirnta teṉṟal vīci*
*malarntakaṟ pakamvāca malarkaḷ tūva*
*vitikkiṟaivi pakalviḷakkaṅ kāṭṭi yāṅku*
*viṇṇavarmaṇ ṇavarmuṉivar viruppa meyta*
*matikkuḷayaṉ tirukkōlaṅ kāṭṭa vēṭṭu*
*makiḻntiṉpa cākarattiṉ vāḻva tāṉār.*

## Showering Flowers

Kupēraṉ poured the nine varieties of riches
As gift; Niruti and Varuṇaṉ sprinkled
Cool water; the honoured Vāyu sent
Cool breeze and rained kaṟpaka blooms;
Carasvati lighted a brilliant lamp;

Gods, men and sages felt happy.
Piramaṉ ornamented the Lord
Who was immersed in an ocean of joy.

(முனிவர் வாழ்த்து)

762. ஆடிகளி னையனுருக் கோலங் காட்ட
[1]அமரரெலாங் கண்டவுட னடிவ ணங்கச்
சேடியர்செந் திருவருகு சூழ வேதத்
திசைமுகத்தோன் விதிமுறைக ளியற்றப் பின்னர்
மூடியவா னவர்குழுவு மியாவு முற்ற
மூதண்ட மெனுஞ்சொன்மண் டபநி றைந்து
கூடியநான் மறைக்குழுவுங் கூட்டங் கூடிக்
கோலமணச் சாலையெங்குங் குவிய லானார்.

எ-து. ஆடியாகிய நிலைக்கண்ணாடிகளிலே நாராயண மூர்த்தியினது திவ்விய மங்கள சொரூப சுந்தர திருவழகானது பிரகாசிக்கத் தக்கதாய்த் திருமணக் கோலம் செய்து, அற்புதம் பெருகிச் சரணார விந்தங்களைத் துதிசெய்து, சேடியராகிய பார்வதியாரும் கலைமகளும் சூழ்ந்து புகழ்ந்திடச் சதுர் முகனானவன் கல்யாணச் சடங்குகளை விதிமுறை வழுவாமல் செய்து முடிக்க, தேவ கூட்டங்களானவர்கள் மனம் களி கூரவும். அண்ட கோளகைக்குச் சமதையாகிய திருக்கலியாண மண்டபத்தின் முனிவர் கூட்டங்கள் திரண்டு ஆசீர்வாதம் செய்து சுபசோபனம் கூறி வாழ்த்தினார்கள் என்றவாறு. (29)

ஆடி - கண்ணாடி. மூதண்டம் - பிரமாண்டம், உலகம்.

பா.வே. - 1. அமரரெலாம்.

## Muṉivar vāḻttu

*āṭikaḷi ṉaiyaṉuruk kōlaṅ kāṭṭa*
*amararelāṅ kaṇṭavuṭa ṉaṭiva ṇaṅkac*
*cēṭiyarcen tiruvaruku cūḻa vētat*
*ticaimukattōṉ vitimuṟaika ḷiyaṟṟap piṉṉar*
*mūṭiyavā ṉavarkuḻuvu miyāvu muṟṟa*
*mūtaṇṭa meṉuñcoṉmaṇ ṭapani ṟaintu*
*kūṭiyanāṉ maṟaikkuḻuvuṅ kūṭṭaṅ kūṭik*
*kōlamaṇac cālaiyeṅkuṅ kuviya lāṉār.*

## Blessings from Sages

As the mirror reflected the Lord's image,
The gods perceived it and saluted.
Attendants drew close, while
Piramaṉ celebrated the wedding.
Gods and others converged on the earth
And filled the hall that was as large
As the universe. Well-versed Vedic scholars
Came to bless and crowded in the wedding hall.

(ஆலவட்டம் முதலியன)

763. சேனையர்கோன் பொன்பிரம்பு சுழல முன்னஞ்
சிறைக்கருடன் விசிறிக்கால் தூவச் சேடன்
றானுமணிக் குடைகவிப்ப மறைக ளேத்தச்
சாமரைகள் வீசசங்கத் [1]தொனிக ளார்ப்ப
வேனைமுத்தர் நித்தர்பத்த ரிறைஞ்சி யேத்த
விருமருங்கு மாலவட்ட மிசைய வெங்கும்
வானவர்கள் ஞானமணித் தரிச னத்தின்
மலர்க்கரங்கள் குவித்திருகண் மலர நின்றார்.

எ-து. அந்தத் திருக்கலியாண மண்டபத்தில் நெருங்கிய மகாரிஷிகணம் முதலாகிய தேவகூட்டங்களைச் சேனையர்கோ னானவருடைய பொற்பிரம்பானது சுழலுகின்ற பிரகாசத்தினால் யாவரும் ஒதுங்குகின்ற பெரும் புகழினைப் பூண்ட சீதர மூர்த்தியினது திருமுக மண்டலத்தில் சிறு காற்றரும்ப, கருடபகவான் சிறகினால் அசைப்பவும், அனந்த சாயியானவர் தமது ஆயிரமாணிக்க முடியினையும் திருக்குடையாய்க் கவிழ்ந்து பிரகாசிக்கவும், வேதவேதாந்தங்களால் முனிவர்கள் துதிக்கவும், அனேக தேவ கூட்டங்கள் இருபக்கங்களிலும் அனந்த கோடி சாமரைகளை வீசவும், பாஞ்சசன்னியமானது பதினான்கு லோகமும் செவிடுபடத் தக்கதாய் முழங்கவும், பதினெண்வகையாகிய மங்கல வாத்தியம் முழங்கத்தக்கதாய் முத்தர், பத்தர், சித்தர் முதலாகிய பேர்கள் ஞானமாகிய சேவையினது வைபவ தரிசனத்தால் ஆனந்தப் பரவசராய் வரம்பில் இன்பத்தில் முகமலர்ந்தார்கள் என்றவாறு. (30)

சேனையர்கோன் - விசுவசேனர்; திருமாலின் அவதாரச் சிறப்பு. காசிபரிடம் கற்றவர். தவமகிமையினால் சேனை முதலியார் என்ற பெயர் பெற்றவர்.

பா.வே. - 1. பம்பையோதை.

### Ālavaṭṭam mutaliyaṉa

*cēṉaiyarkōṉ poṉpirampu cuḻala muṉṉañ*
*ciṟaikkaruṭaṉ viciṟikkāl tūvac cēṭaṉ*
*ṟāṉumaṇik kuṭaikavippa maṟaika ḷēttac*
*cāmaraikaḷ vīcacaṅkat toṉika ḷārppa*
*vēṉaimuttar nittarpatta riṟaiñci yētta*
*virumaruṅku mālavaṭṭa micaiya veṅkum*
*vāṉavarkaḷ ñāṉamaṇit tarica ṉattiṉ*
*malarkkaraṅkaḷ kuvittirukaṇ malara niṉṟār.*

### The Fan

Vicuvacēṉaṉ held the golden rod; Karuṭaṉ
Wielded the fan in the front; Āticēṭaṉ
Raised the hood gleaming with gems;
The Vēdas praised; chowries were moved;
Cōnches blown. Realised souls, the immortals
And devotees prayed and praised. On both sides
Swayed the fans.

(மாங்கலியம் தரித்தல்)

764. செய்யும்விதி முறையியற்று [1]மறையோ னன்று
செழுங்கமலக் [2]கண்ணன்கை நீரைச் சேர்த்து
வையமெலாந் தழைத்தோங்க மறைக ளோங்க
மன்னுதிருப் பாற்கடலி னுதித்த மாது
மெய்யுமுயி ரென்னமன மகிழ்ந்து வாழ்க
வென்றான்மங் கலந்தரித்து விமல னன்னைச்
செய்யமலர்க் கரம்பிடித்தான் முனிவர் வாழ்த்த
தேவர்கள்துந் துமிமுழக்கிச் சுபங்கள் சொன்னார்.

எ-து. சதுர்முகனாகிய பிரம தேவரானவர் வேத விதிப்படி திருக்கலியாண சடங்குகளெல்லாம் முடிப்பித்து, ஸ்ரீ மகாலட்சுமி பதியாகிய செந்தாமரைக் கண்ணனுடைய திருக்கைகளிலே அகில லோக நாயகியாகிய ஸ்ரீ மகாலட்சுமியினது திருக்கராம்புய மலரினை வைத்துத் தமது கமண்டலசலத்தினால் தத்தம் செய்தா ரதேதென்றால், திரிபுவனங்களும் தழைத்தோங்கவும். வேத வேதாந்தங்கள் முதலாகிய தர்மார்த்தங்கள் விர்த்திக்கவும். நிலை பெற்ற திருப்பாற் கடலின்கண் அவதரித்தருளிய பிராட்டியாரும் ஸ்ரீ அரங்கநாயகரும்

உடலும் உயிரும் போல மனமகிழ் சிறந்து வாழக் கடவதென்று ஆசீர்வதித்தருளினார். அதன் பின்பு தேவ தேவனாகிய ஸ்ரீயப் பதியானவர் திருமங்கலியம் தரித்தந்த பிராட்டியார் திருக்கைகளைப் பிடித்துக் கொண்டு ஓமகுண்டத்தை வலம் செய்தருளினார்கள். அந்தச் சமயத்திலே முனீஸ்வராள் மங்கள வாழ்த்துக்களை வாழ்த்தினார்கள். தேவர்கள் தேவதுந்துமி முழக்கம் செய்து சுபகர மங்களம் கூறினார்கள் என்றவாறு. (31)

பா.வே. - 1. மறையே னன்று. 2. கண்ணன் நீரைச்.

## Māṅkaliyam tarittal

*ceyyumviti muṟaiyiyaṟṟu maṟaiyō ṉaṉṟu*
*celuṅkamalak kaṇṇaṉkai nīraic cērttu*
*vaiyamelān talaittōṅka maṟaika ḷōṅka*
*maṉṉutirup pāṟkaṭali ṉutitta mātu*
*meyyumuyi reṉṉamaṉa makilntu vāḻka*
*veṉṟāṉmaṉ kalantarittu vimala ṉaṉṉaic*
*ceyyamalark karampiṭittāṉ muṉivar vāḻtta*
*tēvarkaḷtun tumimulakkic cupaṅkaḷ coṉṉār.*

## The Sacred String

Having completed the rituals properly,
Piramaṉ sprinkled water on the lotus-palm
Of the Lord and said: 'For the prosperity
Of the world, and the spread of Vēdas,
May the damsel born in the milky ocean
And yourself live together in happiness
Like body and its life.' The Pure One
Tied the sacred string to the Mother
And held her lotus-like hand. The sages
Gave blessings. The gods beat the Tuntupi
And spoke auspicious words.

(அருந்ததி காட்டுதல் முதலியன)

765. வேதியர்நல் லாசிசொல முனிவ ரேத்த
விளங்குறுமட் சதைதூவி விமல ஞான
நீதிதரும் பல்லாண்டு கூறு மோதை
நிறைந்திடமங் கலசங்க 1நிமிர்ந்த வோதைப்

பாதிமதி யணிந்தோனு மேனை யோரும்
பங்கயத்தாள் பரவிநறும் பொற்பூத் தூவச்
சோதிமிகு மனல்வலமாய்ச் சூழந்தா ரம்மித்
துவைத்தருந்த தியைக்கண்டு சுகமுற் றாரால்.

எ-து. பின்னும் வேதியர்களெல்லாம் ஆசீர்வதிக்கவும், முனிவர் கூட்டங்களெல்லாம் போற்றி செய்து மங்களாட்சதை தூவி திருப்பல்லாண்டு கூறவும், மங்கள வாத்தியங்கள் முழங்கவும், இடம்புரி முதலாகிய நான்கு வகைச் சங்கங்கள் முழங்கவும், மூன்றாம் பிறைச் சந்திரனைச் சடையில் அணிந்த சிவனும் பார்வதாதேவியும், இந்திரனும் இந்திராணி தேவியும், அக்கினியும் சுவாகா தேவியும், தர்மராசனும் சாமளா தேவியும், நிருதியும் தீர்க்கா தேவியும், வருணனும் காளிகா தேவியும், வாயுவும் அஞ்சனா தேவியும், குபேரனும் சித்திர ரேகையும், மற்ற தேவர்களும் தேவஸ்திரீகளும், ரிஷிகளும் ரிஷிபத்தினிகளும் துதி செய்து அடிபணிந்து திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற மலர்மாரியும் பொன் பூமாரியும் தூவவும், கொழுந்து படர்ந் தோங்காநின்ற அனலை வலம் செய்து, அம்மியின் பேரில் பிராட்டி திருவடியைக் கையினெடுத்துப் பரம புருடரானவர் வைத்த பின்பு அருந்ததியைக் காட்டிச் சுபகர மங்களாகரத்தை அடைந்தார்கள் யாவரும் என்றவாறு. (32)

**உரை** - சுவாகாதேவி - தக்ஷன் மகள். திருமாலால அக்கினிக்கு மணம் செய்து வைக்கப்பட்டவள் தட்சிணாக்கினி, காருக பத்தியம், ஆகவனீயம் என்னும் மூன்று மக்களைப் பெற்றவள்.தீர்க்காதேவி - நிருதியின் தேவி. அஞ்சனாதேவி - காந்தருவ மாது. வாயுவை அணைந்து அனுமனைப் பெற்றெடுத்தவள்; புத்திரப்பேறு வேண்டி திருவேங்கடமலையில் தவம் செய்தாள். உருத்திர மூர்த்தியிடம் வெளிப்பட்ட வீரியத்தை வாயு பகவான் ஏந்திவந்து தவஞ்செய்யும் அஞ்சனையின் கையில் கொடுத்தான்; அதனைப் பழம் என்று உட்கொண்டு அனுமனைப் பெற்றாள் என்பது திருவேங்கடபுராணம். சித்திரரேகை - சித்திரா தேவி - குபேரனின் மனைவி.

பா.வே. - 1 நிமிர்ந்த வோதை பாதிமணி

## Aruntati kāṭṭutal mutaliyaṉa

*vētiyarnal lācicola muṉiva rētta*
*viḷaṅkurumaṭ cataitūvi vimala ñāṉa*
*nititarum pallāṇṭu kūṟu mōtai*
*niṟaintiṭamaṉ kalacaṅka nimirnta vōtaip*
*pātimati yaṇintōṉu mēṉai yōrum*
*paṅkayattāḷ paravinaṟum poṟpūt tūvac*
*cōtimiku maṉalvalamāyc cūḻantā rammit*
*tuvaittarunta tiyaikkaṇṭu cukamuṟ rārāl.*

## Looking at Aruntati

The brahmins blessed and sages praised
While sprinkling auspicious grains of rice.
The sounds of pure knowledge and blessings
Filled the spaces. Conches were blown.
The crescent-crowned Lord and the rest
Saluted the lotus-feet and showered blossoms.
The couple went round the fire rightwards.
Lakṣmi placed her feet on the grinding stone.
They saw Aruntati and were happy.

(மணவறைக் கோயில் அடைதல்)

766. முறைமுறையா யையன்திரு வடியின் வீழ்ந்து
முளரிச்செந் திருவடியும் வணங்கி நின்றே
நறையொழுகு மலர்ப்பனிநீர்ச் சுண்ணந் தூவி
நளிர்கடல்போல் மறையொலிநான் முகனுந் தேவர்
குறைவில்திரு மணக்கோல மியற்றிச் செங்கைக்
குவித்துப்பின் மங்களசோ பனங்கள் பாடி
நிறையுமணித் திருவந்திக் காப்பு மிட்டு
நிகழ்ந்திடுமெச் சரிக்கையொடுங் கோயில் புக்கார்.

எ-து. அப்படி முன்கூறிய தேவர்கள் எல்லாம் முறைமுறையாக ஸ்ரீ அரங்க நாயகருடைய திவ்விய சரணார விந்தங்களிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து அதன்பின்பு தாமரைப் பீடத்தினெழுந்தருளிய பிராட்டியாரையும் தொழுது அடிபணிந்து, தேன்களைப் பிலிற்றுகின்ற மலர்களும் பன்னீரும் சுண்ணமும் தூவிக் குளிர்ந்த கடல் போல வேத கோஷ்டம் செய்ய, பிரமாவும் மற்ற முனிவர் கூட்டங்களும் மணக்கோல ஓமகுண்டத்தில் பூரணாகுதி செய்து சகல தேவாதிகளுக்கும், வேதத்தினது பதக்கிரம சடைகளாலே அவிர்பாகங் கொடுத்து, உச்சியில் கைகளைக் கூப்பினவர்களாய், மங்கள சோபனங்கள் பாடி நிறைந்திரா நின்ற திருவந்திக் காப்பிட்டு, எச்சரிக்கை அனேகம் கூற மணவறைக் கோயிலிலே பிரவேசித்தார்கள் இருமுதுகுரவரும் என்றவாறு. (33)

திருவந்திக்காப்பு - திருவிழாப் புறப்பாடுகளின் முடிவில் கண்ணேறு நீங்குதற்காகச் செய்யும் விழாச்சடங்கு. எச்சரிக்கை - கட்டியம் கூறுதல், புகழந்து கூறுதல்.

### Maṉavaṟaik kōyil aṭaital

*muṟaimuṟaiyā yaiyaṉtiru vaṭiyiṉ vīḻntu*
*muḷariccen tiruvaṭiyum vaṇaṅki niṉṟē*
*naṟaiyoḻuku malarppaṉinīrc cuṇṇan tūvi*
*naḷirkaṭalpōl maṟaiyolināṉ mukaṉun tēvar*
*kuṟaiviltiru maṇakkōla miyaṟṟic ceṅkaik*
*kuvittuppiṉ maṅkaḷacō paṉaṅkaḷ pāṭi*
*niṟaiyumaṇit tiruvantik kāppu miṭṭu*
*nikaḻntiṭumec carikkaiyoṭuṅ kōyil pukkār.*

### To the Wedding Room

One by one the gods prostrated
At the Lord's feet; they also saluted
The lotus-feet of Lakṣmi. They sprinkled
Honey-dripping blossoms, rose-water
And scented powders; the Vēdas were recited
Rivalling the roar of the ocean.
Piramā and the gods completed the wedding
Without missing any rituals; Saluting
With their rosy hands they sang blessings,
Held the lamp to chase away the 'evil eye'
And led the couple to the wedding room.

(திருமணக் கோலம்)

767. மஞ்சணீர் கந்தசுண்ணங் கலவைச் சேறு
வசந்தங்க ளாடிமிக மனம கிழ்ந்து
செஞ்சொன்மட மாதரா டவருஞ் சேர்ந்து
செறிந்தமஞ்ச ளாடையுடன் திகழ நின்றார்
கொஞ்சுகிளி செந்திருவின் வதுவை வேட்டுக்
கூடியவ ரவர்மனையி னோடு மீசன்
கஞ்சமல ரயன்முதன்மற் றமரர் யார்க்குங்
கழறுமறு மணக்கோலங் காட்டி னாரே.

எ-து. மஞ்சள் நீரும், பரிமள சுகந்தப் பொடிகளும், கற்பூரச் சுண்ணங்களும், நானாவிதமாகிய களப, கதம்ப, கஸ்தூரி முதலாகிய பரிமள திரவியங்களும், சந்தனக்

குழம்புகளும் தேவ கூட்டங்களும், தேவ கன்னியர்களும், ரிஷிகளும், ரிஷி பத்தினிகளும் ஒருவருக்கொருவர் வசந்தங்களாடி மனமகிழ்ந்தவர்களாய்ப் பிரகாசிக்காநின்ற மஞ்சளாடைகளுடனே பரமசிவனும் பார்வதா தேவியும், பிரமதேவனும் சரஸ்வதியும், சாவித்திரி, காயத்திரி முதலாகிய தேவதா ஸ்திரீகளுடனே திருமணக்கோலம் செய்தருளினார்கள் என்றவாறு. (34)

வதுவை - திருமணம்.

### Tirumaṇak kōlam

*mañcanīr kantacuṉṉaṅ kalavaic cēṟu*
*vacantaṅka ḷāṭimika maṉama kiḻntu*
*ceñcoṉmaṭa mātarā ṭavaruñ cērntu*
*ceṟintamañca ḷāṭaiyuṭaṉ tikaḻa niṉṟār*
*koñcukiḷi centiruviṉ vatuvai vēṭṭuk*
*kūṭiyava ravarmanaiyi ṉōṭu mīcaṉ*
*kañcamala rayaṉmutaṉmaṟ ṟamarar yārkkuṅ*
*kaḷaṟumaṟu maṇakkōlaṅ kāṭṭi ṉārē.*

### The Couple

Having bathed in water mixed with turmeric,
Scents and sandal, the women spoke happily
And appeared in lovely yellow garments.
Gods had assembled here for the wedding
Of Lakṣmi whose speech is parrot-cute,
Along with their consorts. Civaṉ,
Lotus-resident Piramaṉ, and other gods
Also appeared in their bridal garments.

(தேவர் இலக்குமி தீர்த்தமாடுதல்)

768. நான்முகனு மரன்தேவர் முனிவர் தாமு
நணுகியிலக் குமிதீர்த்த நாடி யாடி
வானகமு மண்ணகமென் றியாருங் கொள்ள
மலைநிறைய வமரர்குழு வயங்கி மாதர்
மேனகையூர் வசியரம்பை முனிவர் மாதர்
விளங்கிநீ ராடுபெரு வெள்ள மோங்கிக்
கானகமு நிறைந்துமலை யருவி போலுங்
கனகமணி வராகநதி கலந்த தன்றே.

எ-து. நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவரும், சிவனும், தேவர்கூட்டங்களும், முனிவரீட்டங்கள் முதலாகிய பேர்களெல்லாம் இலக்குமியார் தீர்த்தத்திலே தீர்த்தமாடிய வெள்ளமானது பரந்த இம்மலைப் பக்கங்களெல்லாம் கடல்போல நிறைந்த சலப்பெருக்கமானது அலைகளுடனே திசைகளெல்லாம் பரவி வராகநதியைப்போய்ச் சேர்ந்ததென்றவாறு. (35)

## Tēvar Ilakkumi tīrttamāṭutal

*nāṉmukaṉu maraṉtēvar muṉivar tāmu*
*naṇukiyilak kumitīrtta nāṭi yāṭi*
*vāṉakamu maṇṇakameṉ ṟiyāruṅ koḷḷa*
*malainiṟaiya vamararkuḻu vayaṅki mātar*
*mēṉakaiyūr vaciyarampai muṉivar mātar*
*viḷaṅkinī rāṭuperu veḷḷa mōṅkik*
*kāṉakamu niṟaintumalai yaruvi pōluṅ*
*kaṉakamaṇi varākanati kalanta taṉṟē.*

## In the Lakshmi Spring

Piramaṉ, Civaṉ, gods and sages
Went to the Lakṣmi spring and bathed;
The earth appeared as heavens now
Since the hill was full of groups of gods;
Mēṉaka, Ūrvaci, Rampa and the wives
Of the sages, were bathing there. The waters
Rose in a flood, overran the forests,
And like a water-fall joined the Varāka river
Which is full of gold and gems.

(தேவர் திருமஞ்சன மாடுதல்)

769. ஆடிநவ மஞ்சணீர் பனிநீ ரோடு
மரியபரி மளமலரி னோடு மேகிக்
கூடியநாற் றிசைகளினும் பரவி யெங்குங்
குவலையத்தை மணக்கோலங் காட்டி வெள்ள
நீடியபே ரலைகடலு மஞ்ச ணீரா
னிறமாற்றிப் பொன்னிறமு மணமுங் கொள்ள
நாடியெவ ருங்காண வருண னுக்கு
நலங்குறுமஞ் சனமாட்டி நலங்காட் டிற்றே.

எ–து. சகலதேவர்கள், மகாரிஷிகள் முதலாகிய பேர்களெல்லாம் வசந்தமாடிய திருமஞ்சன நீரும், பனி நீரும் திவ்விய பரிமளங்களோடுங்கூடி, அனேகமுமாய்ப் பெருகி, வராக நதியில் சேர்ந்து, மிகுந்த அலைகளுடனே கூடிய கடலிடத்தில் புகுந்து, அந்தக் கடல் நீரை நிறம் மாற்றிப் பொன்னிறமாக்கிய திவ்விய பரிமளங்களைக் கண்டு களிக்காநின்ற வருண மகாராசனுக்கு மஞ்சன மாட்டி மணக்கோலம் செய்ததுபோல பிரகாசித்தது அந்த வெள்ளப் பெருக்கென்றவாறு. (36)

## Tēvar tirumañcaṉa māṭutal

*āṭinava mañcaṉīr paṉinī rōṭu*
*mariyapari maḷamalari ṉōṭu mēkik*
*kūṭiyanāṟ ṟicaikaḷiṉum paravi yeṅkuṅ*
*kuvalaiyattai maṇakkōlaṅ kāṭṭi veḷḷa*
*nīṭiyapē ralaikaṭalu mañca ṉīrā*
*ṉiṟamāṟṟip poṉṉiṟamu maṇamuṅ koḷḷa*
*nāṭiyeva ruṅkāṇa varuṇa ṉukku*
*nalaṅkuṟumañ caṉamāṭṭi nalaṅkāṭ ṭiṟṟē.*

## The Waters

The turmeric water in which they had bathed
Along with rose-water and scented flowers,
Spread in all four directions
Making the earth seem a bridal hall.
The ocean with large waves turned yellow
And gold, and became scented.
As others looked on, the waters bathed
Varuṉaṉ himself and blessed him.

(திருமஞ்சனமாடிய தேவர் செயல்)

770. திருமஞ்ச னங்களொடுந் தேவர் வந்து
திருவாரா தனஞ்செய்யச் செகந்நா தற்கு
மருவியயன் தேவர்பரி சாரஞ் செய்ய
மணிபுனையா சனத்திருத்தி மலர்கள் தூவ
வருமறைக ளானமுனி வரர்க ளாங்கே
யந்தரதுந் துமிமுழங்க வரம்பை மாதர்
பெருகியணி மணித்தீப மேந்த விந்திரன்
பெருகுநிதிக் குபேரன்வெண்சா மரைகள் போட.

எ-து. தேவர் கூட்டங்களானவர்கள் நிறைந்து கனக கும்பத்திலே தேவ கங்கையைக் கொணர்ந்து வந்து செகநாதராய்ச் செகத்தையெல்லாம் பாதுகாக்காநின்ற பரம மூர்த்திக்குத் திருவாராதனம் செய்து, உபசாரங்களைச் செய்த பின்பு நவமணியால் செய்தமைத்த வாதனத்தின் கண் அவரை எழுந்தருளச் செய்து, நறுமலர்களை மாரியாய்த் தூவியும், அரிய மறைகளைப் பாராயணம் செய்கின்ற முனிவர்கள் வாழ்த்தித் துதிக்கவும், தேவ துந்துமி அனேகமாய் முழங்கவும், அரம்பை மாதர்களானவர்கள் மாணிக்க தீபம் அனேகம் ஏற்றி முன் நிற்கவும், இந்திர மகாராசனும், செல்வத்தால் ஓங்கிய குபேரனும் வெண் சாமரைகனிரட்டவும் வீற்றிருந்தார் ஆனந்த கலியாணகுண, விபூதி, விக்கிரக விசேஷராகிய அரங்கநாயகர் என்றவாறு. (37)

## Tirumañcaṉamāṭiya tēvar ceyal

*tirumañca ṉaṅkaḷoṭun tēvar vantu*
*tiruvāra taṉañceyyac cekannā taṟku*
*maruviyayaṉ tēvarpari cārañ ceyya*
*maṇipuṉaiyā caṉattirutti malarkaḷ tūva*
*varumaṟaika ḷāṉamuṉi vararka ḷāṅkē*
*yantaratun tumimuḻaṅka varampai mātar*
*perukiyaṇi maṇittīpa mēnta vintiraṉ*
*perukunitik kupēraṉveṇcā maraikaḷ pōṭa.*

## The Gods in Action

The gods brought water in pitchers
For worshipping the Lord of the worlds.
Piramaṉ and the gods served severally;
They set up a bejewelled seat
And sprinkled flowers on it.
Sages recited scriptures; the Tuntupi
Was beaten; heavenly damsels carried
Gem-studded lamps. Intiraṉ and rich Kupēraṉ
Moved the white chowrie.

(திருவாராதனை செய்தல்)

771. முத்தணியுங் கவிகையட்சர் கவிக்க வாங்கு
முடியொடுகுண் டலப்பணிகள் முறையிற் சேர்த்துக்
கொத்தலருங் கற்பகநன் மாலை யோடுங்
'குலைபுனைந் தேயாரா தனமுஞ் செய்து

**எத்திசையும் புகழ்தேவர் அமுதங் கூட்டி**
**இசையமிசை செய்தரங்க ருண்ட சேடம்**
**பத்தருடன் முனிவர்கணந் தேவ ரியாரும்**
**பகிர்ந்துண்டா னந்தபர வசர்க ளாகி.**

எ-து. ஆணி முத்தங்களால் அமைந்தத் தவளச் சத்திரக் குடையானதை இயக்கர்கள் இருபுறத்தினும் தாங்கி நிற்கவும், திருமுடிகளில் மாணிக்க முடியானது பிரகாசிக்கவும், திருமுக மண்டலத்தில் கவச குண்டலங்கள் பிரகாசிக்கவும், இரத்தின கவசம், புசவலையம் மாணிக்க மாலை ஆகிய கவுத்துவாபரணம் விளங்கித் தோன்றவும், சர்வாபரண பூஷிதராய் விளங்கிய திருமேனியில் கற்பகம், மந்தார, பாரிசாதம், துளபம் முதலாகிய புட்பங்களாலே திருவாராதனம் செய்து, எத்திசைகளும் புகழாநின்ற தேவாமுதத்தை மிசை செய்தந்தச் சேஷத்தைச் சிவனும் பிரமா முதலாகிய தேவர்கூட்டங்களும், முனிவரீட்டங்களும், பத்த செனங்களும் பொசித்து ஆனந்தப் பரவசமடைந்தார்கள் என்றவாறு. (38)

குலை - பூங்கொத்து. பிசைசெய்தல் - உண்ணுதல். சேடம் - மிச்சப்பொருள், எச்சில். சேடம் என்பது உரையில் சேஷம் என்று கூறப்பட்டது.

பா.வே. - 1. குல்லை.

## Tiruvārātaṉai ceytal

*muttaṇiyuṅ kavikaiyaṭcar kavikka vāṅku*
*muṭiyoṭukuṇ ṭalappaṇikaḷ muṟaiyiṟ cērttuk*
*kottalaruṅ kaṟpakanaṉ mālai yōṭuṅ*
*kulaipuṉain tēyārā taṉamuñ ceytu*
*etticaiyum pukaḻtēvar amutaṅ kūṭṭi*
*icaiyamicai ceytaraṅka ruṇṭa cēṭam*
*pattaruṭaṉ muṉivarkaṇan tēva riyārum*
*pakirntuṇṭā ṉantapara vacarka ḷāki.*

## Worship

The Yakṣas raised a pearl-canopy;
Offering the crown and ear-ornaments,
And blossoms from the kaṟpaka tree,
The gods used bunches of flowers
For worship. Everywhere nectar was given
And eaten. After the Lord had partaken
The offerings, the rest was shared happily
By the devotees, sages and the gods.

(அனந்த விமான நித்திரை)

772. வலப்புறத்திற் றிருப்பதும மலர்மேவு
வடிவழகார் பிராட்டி தானுங்
குலக்கொடியாய்ச் சாத்வீக வுருவாய
கோலமே கொண்டு நின்ற
நலத்தபுகழ் பிருதுவியாம் பிராட்டியாய்
மகளிடத்தில் நண்ணா நிற்பக்
கலத்தபுக ழனந்தவிமா னத்துயின்றா
னருள்கூர்ந்த கமலக் கண்ணன்.

எ-து. பிராட்டியானவள் திருப்பாற் கடலின் அவதரித்து, கோலாசலத்தில் தவம் செய்த காரணத்தினாலே தமது கவுத்துவாபரணம் விளங்கிப் பிரகாசிக்கின்ற திவ்விய திருமார்பிலே பொன்னந் தாமரை மலரினது பீடத்தினெழுந்தருள அனுக்கிரகம் செய்தும், வல்லிசாதகக் கொடிபோன்ற சாத்வீக உருவமாய்த் தோன்றி விளங்குகின்ற பூதேவி, நீளாதேவி, அனந்தன், கருடன், விசுவசேனர், சனகர், சனந்தரன், சனக்குமாரர், சனாதரன் முத்லாகிய நித்திய சூரியர்களால் இடைவிடாமல் துதி செய்யவும், அனந்த விமானத்தின்கண் யோக நித்திரை செய்தருளினார் கருணா நேத்திரங்களால் அடியார்களுக்கு அருள் கூர்ந்த கமலக்கண்ணன் என்றவாறு. (39)

## Aṉanta vimāṉa nittirai

*valappuṟattiṟ ṟiruppatuma malarmēvu*
*vaṭivaḻakār piraṭṭi tāṉuṅ*
*kulakkoṭiyāyc cātvīka vuruvāya*
*kōlamē koṇṭu niṉṟa*
*nalattapukaḻ pirutuviyām piraṭṭiyāy*
*makaḷiṭattil naṇṇā niṟpak*
*kalattapuka ḻaṉantavimā ṉattuyiṉṟā*
*ṉaruḷkūrnta kamalak kaṇṇaṉ.*

## Resting in Aṉanta Vimāṉam

On the right was the image of beauty,
Lakṣmi who resides in the lotus; also
The creeper-like Mother Earth who is
An image of patience, far-famed
And beautiful, stood close by;

The lotus-eyed Lord full of grace
Rested with them in the Ananta Vimānam
Of enduring greatness.

(அனைவரும் வணங்குதல்)

773. ஆயிரமா மணிபுனைந்த படமதனைக்
கவித்தனந்த னழகன் தன்னைப்
பாயிரமா மறைவிதியிற் றொழுதேத்தி
யரங்கனுடன் பரவி யோங்குந்
தாயினுமும் மடியாகி யடியாருக்
கருளுதவு கருடன் தானும்
ஆயிரும்பேர் படைத்தருளும் விசுவசேனர்
கணமுதலோர் வந்தித் தேத்த.

எ-து. அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்கநாயகரானவர் சயன பீடத்தின் விளங்குகின்ற பணா முடிகள் ஆயிரத்தினும், ஆயிர மாணிக்கமணிகளானது ஆயிரங் கோடி சூரியரது கிரண சமூகங்களைப்போலப் பிரகாசிக்கவும, பாயிரமாகிய பொதுவிதி, சிறப்பு விதியினையுடைய வேத வாக்கியத்தால் தொழுது வந்தனைசெய் தவருடன் மருவிப் பிரபலமாகிய சீவபரம்போல விளங்கவும், தாயினைப் பார்க்கினும் மூன்று பங்கு அதிகமாய்ப் பாகவதர்களைப் பாதுகாக்காநின்ற கருடபகவானும், அதிக சிரேஷ்டமாகிய புகழினையுடைய விசுவசேனர் முதலாகிய பேர்கள் வந்தனை செய்ய வீற்றிருந்தருளினார் சர்வமங்கலகுண வந்தனை யோக்கியராகிய அரங்க நாயகர் என்றவாறு. (40)

### Anaivarum vaṇaṅkutal

*āyiramā maṇipuṉainta paṭamataṉaik*
*kavittaṉanta ṉaḻakaṉ taṉṉaip*
*pāyiramā maṟaivitiyiṟ toḻutētti*
*yaraṅkaṉuṭaṉ paravi yōṅkun*
*tāyiṉumum maṭiyāki yaṭiyāruk*
*karuḷutavu karuṭaṉ tāṉum*
*āyirumpēr paṭaittaruḷum vicuvacēṉar*
*kaṇamutalōr vantit tētta.*

### Salutations by Everyone

As the handsome Lord rested on Ananta
Who had a thousand hoods with shining gems,
Devotees worshipped Araṅkan by reciting

Scriptural hymns in the prescribed manner.
Karuṭaṉ who helps the devotees with affection
Rivalling maternal love, famous Vicuvakcēṉaṉ
And others also saluted the lord.

(அனைவரும் தொழுது போற்றுதல்)

774. அரம்பையர்கள் சதிமுறையின் வழுவாமற்
பரதநா டகத்தை யார்ப்பத்
தரம்பயிலு முனிவரெலாஞ் சாமவிசை
முதலியநான் மறைகள் சாற்றக்
கரம்பயில்மந் தாரமலர் தமைத்தூவி
யியக்கரெலாங் கண்க ளிப்ப
நிரம்பியதும் புருகருட ரிருபாலு
மிணையடிநின் றேத்தெ டுப்ப.

எ-து. அப்படிச் சயனித்த ஸ்ரீ அரங்கநாயகருக்குத் திருப்பாற் கடலினுதித்த வறுபது கோடி அரம்பையர்கள், சத்த சுரங்களும் வழுவில்லாமல் பரத இலக்கண சுப லட்சணங்களுடனே நடிக்கவும், சாத்வீக ஞான சம்மந்தங்களையுடைய முனிவர் கூட்டங்களெல்லாம் சாமகீதம் முதலாகிய நான்கு மறைகளையும் வழுவாமல் துதிக்கவும், கருட காந்திருவர் இருபக்கங்களில் சேவித்து இன்ப சாகரத்தின் மூழ்கவும், இரண்டு கராம்புய மலர்களாலே மந்தார மலர் மாரிகளைத் தூவித் தும்புருவர்களும், கருட காந்திருவர்களும் உபய சரணார விந்தங்களைத் தொழுது ஏத்தினார்கள் என்றவாறு. (41)

சாம இசை - சாமவேதத்தின் இசை.

## Aṉaivarum toḻutu pōṟṟutal

*arampaiyarkaḷ catimuṟaiyiṉ vaḻuvāmaṟ*
*paratanā ṭakattai yārppat*
*tarampayilu muṉivarelāñ cāmavicai*
*mutaliyanāṉ maṟaikaḷ cāṟṟak*
*karampayilman tāramalar tamaittūvi*
*yiyakkarelāṅ kaṇka ḷippa*
*nirampiyatum purukaruṭa rirupālu*
*miṇaiyaṭiniṉ ṟētte ṭuppa.*

## Prayers

Heavenly damsels danced *paratam*
According to the prescribed rules;
Learned sages recited Cāma tunes
And other scriptures; Yakṣas
Felt happy and showered handfuls
Of flowers; Tumpuru and Karuṭan
Flanked the Lord and saluted his feet.

(தேவமாதர் துதி)

775. மாமணியின் விளக்கேந்திச் சத்தமா
தர்களவண் மருவி நிற்பப்
பூமணியா ரந்தாங்கிப் புலோமிசையே
முதலானோர் புகழ்ந்தங் கேத்தச்
சேமநிதி யெமக்கெனவே சித்தரெலா
மிகவழுத்தித் தெளிந்து சூழப்
பூமடந்தை யாகியநா மகள்புகழ்ந்து
மிகவணக்கம் புரியா நிற்க.

எ-து. சத்தமாதர்களாகிய லோபா முத்திரை முதலான முனிவர் பத்தினிகளும், மாணிக்கத் தீபங்களை இருபக்கங்களினும் ஏந்தி நிற்பவும், இந்திராணி தேவியானவள் தனது திவ்விய உறுப்புகளெல்லாம் சர்வாபரணம் விளங்கத் தக்கதாய்ப் புகழ்ந்தேத்தவும், சங்கநிதி, பதுமநிதி போன்றவை எமது கருணா நிதியே என்று வந்தனை செய்து துதிக்கவும், வெண்டாமரைக் கமலபீடத்தின் வதியாநின்ற கலைமகளானவள் சர்வ மங்கள அனந்த கலியாண குணங்களைப் புகழ்ந்துருகி நிற்கவும் என்றவாறு. (42)

## Tēvamātar tuti

*māmaṇiyiṉ viḷakkēntic cattamā*
*tārkaḷavaṇ maruvi niṟpap*
*pūmaṇiyā rantāṅkip pulōmicaiyē*
*mutalāṉōr pukaḻntaṅ kēttac*
*cēmaniti yemakkeṉavē cittarelā*
*mikavaḻuttit teḷintu cūḻap*
*pūmaṭantai yakiyanā makaḷpukaḻntu*
*mikavaṇakkam puriyā niṟka.*

## Prayers by Divine Damsels

There stood the Seven Ladies carrying
Jewelled lamps; Intirāṇi and others
Carried garlands of gems and flowers
And sang the praises of the Lord;
Cittar offered plentiful worship saying,
'You are our prosperity'; Carasvati
Who resides in the white lotus
Praised and saluted again and again.

(சாரணர் பல்லாண்டு கூறுதல்)

776. வந்தனையோக் கியன்சர்வ மங்கலமா
கியகுணத்தான் வாசு தேவன்
செங்கமல மதிறந்த பிராட்டியார்
சிறந்தருளுந் திவ்விய மார்பில்
நிந்தையிலாக் கவுத்துவமுந் திருமுடியில்
துளபமணி நேமி யான்றன்
சந்ததமும் புகழ்பரவிச் சாரணர்கள்
பல்லாண்டு சாற்றி னாரால்.

எ-து கிருபா பரிபூரணராய் விளங்குகின்ற வந்தனை யோக்கியராயும், சர்வ மங்கள குண சாத்வீக ஞான பரிபூரணராயும், பரவாசு தேவ புருடோத்தமராயும், பொன்னந்தாமரை மண்டபத்தின் வீற்றிருந்தருளிய பிராட்டியார் பிரகாசிக்காநின்ற திவ்விய மணி மார்பினையுடைய பஞ்சாயுத பாணியும், திருமுடியின் விளங்கிப் பிரகாசிக்காநின்ற துளப மாலையினை அணிந்தவராகிய அரங்கநாயகரது சிறந்த புகழினைத் துதித்துச் சாரணர்களானவர்கள் பல்லாண்டு கூறித் துதித்து நின்றார்கள் என்றவாறு. (43)

## Cāraṇar pallāṇṭu kūṟutal

*vantaṉaiyōk kiyaṉcarva maṅkalamā*
*kiyakuṇattāṉ vācu tēvaṉ*
*ceṅkamala matiṟanta pirāṭṭiyār*
*ciṟantaruḷun tivviya mārpil*
*nintaiyilāk kavuttuvamun tirumuṭiyil*
*tuḷapamaṇi nēmi yāṉṟaṉ*
*cantatamum pukaḻparavic cāraṇarkaḷ*
*pallāṇṭu cāṟṟi ṉārāl.*

## All Hail!

The realised sages offered praises:
'You are one worthy of worship;
You have all auspicious qualities;
You are Vācutēvaṉ whose chest gleams
With the lotus-residing Lakṣmi,
And the *kavuttupa* gem; your crown
Is entwined with Tuḷaci garland;
You are the discus-wielder.

(தேவர்கள் வேண்டுதல்)

777. திருவடி பணிந்து பவவினை யொழித்துச்
சேதனர் தமையுமீ டேற்றக்
கருணையே புரிந்துன் னருள்புரிந் திடுவாய்க்
கமலையை மணம்புரி விமலாத்
திரணமா மடியோஞ் செய்யுப சாரஞ்
சிறிதுபுன் மைகளிருந் தாலும்
மருவினை யகற்றித் திருவருள் புரிவர்
யமலனே யரங்கநா யகனே.

எ-து. முத்தி வடிவாகிய பாத தாமரையினைப் பணிந்த பருவ முயற்சியினாலே ஆத்மாக்களையும் காருண்ணியத்தா லீடேற்றத் தக்கதாய்ப் பிறவி வெப்பத்தினைத் தீர்த்துப் பாதத் தாமரையின் நிழலின்கண் ஆனந்த வைபவமாய் அமரத் தக்கதாய்ப் பெரும்புறக்கடல் போன்ற சிறந்த கருணாநிதியை அடியேம் பொருட்டுப் புரிந்தருளச் செய்குவாய். கமலையாகிய ஸ்ரீ மகாலட்சுமி தேவியாரை வேதவிதிப்படி பாணிக்கிரணம் பண்ணிய தலைவனே! திரணவளவாகிய அடியோங்கள் செய்கின்ற உபசாரங்களில் சிறிது விதி விலக்கா யிருந்தாலும் அதனாலே விளைகின்ற பாவத்துடர்ச்சியினை நீக்கித் திருவருளினைப் புரிகுவாய் நிர்மலனாகிய திருவரங்க நாயகனே! என்றார்கள் பிதாமகன் முதலாகிய தேவர்கூட்டங்கள் என்றவாறு. (44)

சேதனர் - உலக உயிர்கள்.

## Tēvarkaḷ vēṇṭutal

*tiruvaṭi paṇintu pavaviṉai yoḻittuc*
*cētaṉar tamaiyumī ṭēṟṟak*
*karuṇaiyē purintuṉ ṉaruḷpurin tiṭuvāyk*
*kamalaiyai maṇampuri vimalāt*

*tiraṇamā maṭiyōñ ceyyupa cārañ*
*cir̲itupun maikaḷirun tālum*
*maruvin̲ai yakar̲r̲it tiruvaruḷ purivar*
*yamalan̲ē yaraṅkanā yakan̲ē.*

### The Prayer of Gods

Saluting the Lord's feet, the sages
Prayed: "Chasing away the evil of birth,
Kindly save the aspirants, O Lord
Who grants grace! Lakṣmi's Lord!
Though there may have been lacunae
In the worship offered by lowly ones
Like us, ignore them. Chase away
The sins that may occur in the future
And give us grace. Blemishless Lord!
Araṅkan̲!

(அரங்க நாயகியைப் போற்றுதல்)

778. அடைந்தன ரமர ரசுரர்கள் முனிவர்
ஆழியாம் நீடுபாற் கடலைக்
கடைந்தன ரமுதக் கடலதி னுதித்த
கருணைசெந் திருவெனப் புகழை
அடைந்தமூ வுலகு மளந்தபொன் னரங்கன்
அடியிணை விரும்பிய வமுதே
மடந்தைசூழ் கோலா சலமதி னுதித்த
மதுரமே யரங்கநா யகியே.

எ-து. பூர்வ காலத்திலே தேவர்கூட்டங்களும் முனிவ ரீட்டங்களும், அசுர கூட்டங்களும், ஸ்ரீ அரங்கநாயகர் அனுக்கிரக விசேஷத்தால் மந்திர கிரியினாலே பாற்கடலைக் கடைந்தஞான்று அமுதத்துடனே திருவவதாரம் செய்தருளிய கருணா ரூபமாகிய ஒப்பற்ற செந்திருவினது புகழினால் சிறந்த திரிபுவனமும் ஓர் அடியால் அளக்கா நின்ற உத்தமனது பாதத் தாமரையினைத் தவத்தினால் விரும்பித் திருமார்பின் வீற்றிருக்காநின்ற ஞானமூர்த்தமே! சிங்கார ரூபயாவண்ணிய சவுந்தரிய மங்கையராலே சூழப்படட கோலாசலத்தில் வீற்றிருக்கா நின்ற அமுதரசம்போன்ற ஸ்ரீ அரங்கநாயகியே என்று வந்தித்தார்கள் தேவர்கூட்டங்கள் என்றவாறு. (45)

பா.வே. - 1. அழியாமல்.

## Araṅka nāyakiyeyp pōṟṟutal

*ataintaṉa ramara racurarkaḷ muṉivar*
*āḻiyām niṭupāṟ kaṭalaik*
*kaṭaintaṉa ramutak kaṭalati ṉutitta*
*karuṇaicen tiruveṉap pukaḻai*
*aṭaintamū vulaku maḷantapoṉ ṉaraṅkaṉ*
*aṭiyiṇai virumpiya vamutē*
*maṭantaicūḻ kōlā calamati ṉutitta*
*maturamē yaraṅkanā yakiyē.*

## Praising Aranganayaki

"The gods, asuras and sages reached
The enormous, milky sea. They churned it.
In the nectarean sea you manifested
As an image of compassion and are famed so.
O nectarine mother who desired the feet
Of golden Araṅkaṉ who measured
The three worlds! O sweet lady
Who incarnated in Kōla hill
Encircled by good women! O Araṅkanāyaki!"

(அரங்கர் நித்தியராய்த் திகழ்தல்)

779. இவ்வகையில் துதிதேவர் விடைகொண் டேக
விறையவன்செந் திருவைமணி மார்பின் வைத்துச்
செவ்விபெறு பதுமமே லவனா ருந்தித்
திகழ்ந்திருப்ப நாரதர்கந் திருவர் செப்பக்
கொவ்வையிதழ் அருந்ததியார் கேள்வ னியோகக்
கொள்கைபெறு கோசிகனார் பிருகங் கேத்தத்
திவ்வியமார்க் கண்டன்சோ முகனே சம்பரன்
சேர்ந்துமிக நித்தியராய்த் திகழ்ந்தா ரன்றே.

எ-து. இவ்விதமாய்த் துதிக்காநின்ற தேவ கூட்டங்களெல்லாம் ஸ்ரீ அரங்க நாயகரது விடையினைப் பெற்றுத் தங்கள் பொன்னுலகில் சார்ந்த மாத்திரத்தில் இறைவனாகிய ஸ்ரீ லட்சுமி பதியானவர் செந்திருவாகிய இலக்குமியையும் கவுத்துவாபரணத்தையும் திருமார்பின்

வைத்தவராய்ச் சிறந்த அழகினையுடைய பதுமமேலவரான சதுர்முகனானவர் உந்திக் கமலத்தில் பிரகாசித்திருக்கவும், நாரத முனிவரானவர் ஆயிரம் தந்திபூண்ட பிரதம யாழினை யேற்றி இசை நூலிலக்கணம் வழுவாமல் சுதி கூட்டிப் பாடவும், திருவடித் தாமரை நீழலின்கண் சோமுகன் சம்பரன் இருவரும் அருந்ததி கணவனாகிய வசிஷ்ட முனிவரும், அஷ்டாங்க யோக வாசாரியாராகிய விசுவாமித்திரரும், பிருகு, மார்க்கண்டேயர் முதலாகிய நித்திய சூரியர்களும் இடைவிடாமல் திருவடித் தாமரை நீழலின்கண் பிறவி வெப்பம் தீர்ந்து ஆனந்த வைபவமாய்ச் சேவை செய்திருந்தார்கள் என்றவாறு. (46)

மகாலட்சுமிதேவி திருக்கலியாண அத்தியாயம் முற்றிற்று.

## Araṅkar nittiyarāyt tikaḻtal

*ivvakaiyil tutitēvar viṭaikoṇ ṭēka*
*viṟaiyavaṉcen tiruvaimaṇi mārpiṉ vaittuc*
*cevvipeṟu patumamē lavaṉā runtit*
*tikaḻntiruppa nāratarkan tiruvar ceppak*
*kovvaiyitaḻ aruntatiyār kēḷva ṉiyōkak*
*koḷkaipeṟu kōcikaṉār pirukaṅ kēttat*
*tivviyamārk kaṇṭaṉcō mukaṉē camparaṉ*
*cērntumika nittiyarāyt tikaḻntā ṟaṉṟē.*

## Araṅkaṉ the Eternal

Having praised thus, the gods took leave;
The Lord retained Lakṣmi on his chest;
Piramaṉ shone on the navel that arose
From the Lord's navel. Nāratar
And the Kantaruvas sang, Vaciṭṭar
The consort of Aruntati, Vicuvāmittirar
The teacher and Piruku blessed the Lord.
Mārkkaṇṭēyar, Cōmukaṉ and Camparaṉ remained
In his presence for all time.

# 41. முப்பத்தேழாவது
# ஸ்ரீ வரதராசப் பெருமாள் திருஅவதார அத்தியாயம்

சஞ்சீவி நகரத்தின் புகழை அறிந்து பயன் அடைந்தோம்; திருவரங்கப்பெருமான் அடியாரின் குறை நீக்கும் பொருட்டு கொண்ட திரு அவதார வரலாறுகளை அருளிச் செய்யுங்கள் என்று முனிவர்கள் கேட்கச் சூதபுராணிகர் கூறுகிறார்.

முகுந்தன், அச்சுதன், அந்தரியாமி, கிருபாநேத்திரதாரி, பாண்டவஉபகாரி என்னும் பல பெயர்களையுடைய அப் பரந்தாமனது திரு அவதார வரலாறுகளை வியாச முனிவரின் அருளால் ஒரு சிறிது கூறுகிறேன் என்று தொடங்குகிறார் சூத முனிவர்.

ஆதி காலத்தில் சத்திய விரதம் என்னும் காஞ்சிமாநகரத்தில் வாழ்ந்தவன் சுமதி என்பவன். அந்தண குலத்தைச் சேர்ந்தவன்; பிரமன் செய்த யாகத்தில் உற்பவித்த வரதராசரிடம் பக்தி பூண்டவன். அவன் யாகம் செய்ய விரும்பிச் சமித்துகள் திரட்டலானான். ஒருநாள் காட்டில் சென்று உலர்ந்திருந்த அரசு மரத்தை வெட்டி வீழ்த்தினான். அம்மரம் சாய்ந்தபோது அதனடியில் ஒரு பசுவானது சிக்கி இறந்துபட்டது. அதுகண்டு நடுங்கித் தன்விதியை நினைந்து வருந்தினான். இச்செய்தி நகரத்தில் பரவியது. அந்தணர்கள் தங்கள் குலத்திலிருந்து நீக்கினார்கள். மனம் மெலிந்த சுமதி நாரதரைத் தேடிக் கண்டு, அவரை வணங்கித் தனக்குச் சம்பவித்த கோஅத்தியினின்றும் நீங்கி உய்வு பெற அருள்புரியுமாறு வேண்டினான்.

அந்தணனை நோக்கி நாரதர் கூறுகிறார். அந்தணனே! தொண்டை மண்டலத்தில் உள்ள கோலாசல மலையில் எழுந்தருளியுள்ள அரங்க நாயகரின் திருமார்பில் வீற்றிருக்கின்ற இலக்குமிதேவியின் பெயரால் அம்மலையில் ஒரு தீர்த்தம் உள்ளது. அந்தத் தீர்த்தத்தில் நீராடி வராகதலமாகிய அத்தலத்தில் எழுந்தருளியுள்ள அரங்க நாயகனைத் தரிசித்தால் உன்னைப் பற்றியுள்ள கோவத்தியானது பஞ்சு மலையில் தீப்பொறி பட்டாற்போன்று அழியும் என்று கூறி அருளினார். அவ்வாறே கோலாசலம் அடைந்து இறைவனை வணங்கிக் கோவத்தி நீங்கப் பெற்றான். அவ்விடத்தே ஒரு அசரீரி வாக்கு அவன் செவிகளில் விழுந்தது. அதாவது: அந்தணனே! நீ அறியாது செய்த பாவத்தினால் ஏற்பட்ட அத்தியானது நீங்கியது. அரங்கநாயகரிடம் முன்போல உன்னுடைய பக்தியானது பெருக நீ நித்திய சூரியருடன் வசிக்கும் பேற்றினைப் பெறுவாய் என்பது அந்த அசரீரி வாக்கு

மனம் மகிழ்ச்சியடைந்த அந்தணன் காஞ்சிமாநகரத்தை அடைந்தான் அந்தணர்களிடம் தனது பாவ நிவர்த்தியை எடுத்துக் கூறினான். ஆனால் அந்நகர அந்தணர்கள் நம்பவில்லை. எந்தப் பிரமாணத்தாலே உன் வார்த்தைகளை நம்புவது என்று கேட்டு அவனை முன்போலவே நீக்கினார்கள். சுமதி அவர்களை நோக்கி, அந்தணர்களே! கோலாசலத்திலே மீண்டும் உபவாசம் செய்து காட்சியளவிலே உங்களுடைய அருளுக்குப் பாத்திரனாவேன் என்று கூறிக் கோலாசலத்தை யடைந்து இலட்சுமி தீர்த்தக்கரையிலே தவம் செய்யத் தொடங்கினான்.

சுமதியின் தவத்துக்கு இரங்கிய மகாலட்சுமியானவள் அவனது கோவத்தி முதலாகிய பாவங்களை நிவர்த்தி செய்தாள். அவ்விடத்திலே வதராசப்பெருமாள் பஞ்ச ஆயுத பாணியாய் கோலாசலத்திலே எழுந்தருளினார். அவரைத் தரிசித்த சுமதி அவருடைய திருவடிப்பேற்றினை விரும்பி வரம் வேண்டினான். அந்தணர்களும் அவரைத் தரிசித்துச் சுமதியைப் பிடித்துக் கொண்டு ஆனந்தம் அடைந்தார்கள். வரதராசப் பெருமாள் அந்தணர்களை நோக்கி, நீங்கள் யாவரும் கோலாசலத்திலே வாசம் செய்த பயனால் பாவங்களிலிருந்து நீங்கி நமது தரிசன வைபவத்தை அனுபவிப்பீர்களாக! நாம் எப்பொழுதும் இத்தலத்தின் தென்திசையிலே எழுந்தருளியிருப்போம் என்று அருளிச் செய்தார்.

தைப்பூசதினத்தில் எழுந்தருளியதனால் அவரைத் தேவர் முதல் யாவரும் அந்நாளிலே வழிபட்டு வந்தார்கள்.

### (அடியார் குறை நீக்கும் கோலம்)

780. **சுருதிபுகழ் திருவரங்கப் பெருமாள்பொன்**
**வரையிலகு தூய சீர்த்திப்**
**பெருமையெலாங் கேட்டுணர்ந்து புகழடைந்தே**
**மத்தலத்தின் பெருகு ஞானக்**
**குருபரமாய் விளங்கியவ ரடியார்குறை**
**வினையகற்றக் கொண்ட கோலத்**
**திருவிளையாட் டினையுமது திருவாயா**
**னலர்கவெனச் செப்ப லுற்றான்.**

எ-து. நான்கு வேதங்களும் துதித்துப் புகழ்கின்ற திருவரங்கப் பெருமாளானவர் அனந்த விமானசேகரராய் யோக நித்திரை செய்கின்ற சஞ்சீவியினது பிரகாசிக்காநின்ற அதி சிலாக்கியமாகிய பெரும் புகழினைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளக் கேட்டு ஆனந்தப் பரவசத்தினை அடைந்தோ மாகிலும் அத்தலத்தின்கண் பெருகாநின்ற ஞானக் குருபரமாய் விளங்கியவர், அடியார் குறையகலும் பொருட்டாகக் கொண்ட திருவவதாரச் சரித்திரங்களை ஆதியோடு அந்தமாய் அருளிச் செய்ய வேண்டுமென்று சவுனகாதி முனிவர்கள் விண்ணப்பம் செய்ய அருளிச் செய்கின்றார் சூத புராணிகர் என்றவாறு. (1)

## Aṭiyār kuṟai nīkkum kōlam

*curutipukaḻ tiruvaraṅkap perumāḷpoṉ*
*varaiyilaku tūya cīrttip*
*perumaiyelāṅ kēṭṭuṇarntu pukaḻaṭaintē*
*mattalattiṉ peruku ñāṉak*

*kuruparamāy viḷaṅkiyava raṭiyārkurai*
*viṉaiyakaṟṟak koṇṭa kōlat*
*tiruviḷaiyāṭ ṭiṉaiyumatu tiruvāyā*
*ṉalarkaveṉac ceppa luṟṟāṉ.*

## XLI. The Manifestation of Varatarāca Remover of Ills

The sages asked: "Having heard
Of the blemishless fame of Lord Araṅkaṉ
Who is praised by the scriptures,
And who resides in the golden hill,
We are happy. But we would like to know
How he appeared in that place
As the image of knowledge
And the remover of the ills that afflict
The devotees. Please tell us of his doings."
Cūta began.

(சொல்லொணாப் பெருமை)

781. அகிலகா ரணன்முகுந்த னச்சுதனந்
தரியாமி யருள்சேர் கண்ணன்
பகீரதிதங் கியபாத பங்கயத்தாற்
பாண்டவரைப் பாது காத்தோன்
முகிலனைய பூரணாங் கிசைவிளங்குந்
திருவுருவத் துயர்ந்தோன் மேன்மை
புகலரிய சங்கரற்கும் பிரமனுக்கு
மெனினம்மாற் பேச லாமோ.

எ-து. வாரீர் சவுனகாதி மகாமுனிவரே! இவ்வுலகத்துக்குக் காரணமாய் விளங்குகின்ற முகுந்தனென்றும், அச்சுதனென்றும், அந்தரியாமி என்றும், கிருபா நேத்திரதாரியென்றும், பகீரதி தங்கிய பாத பங்கயத்தினையுடையவ னென்றும், பாண்டவர்களைப் பாதுகாத்து இரட்சிக்கின்ற நீருண்ட காள மேகத்தினைப்போன்ற பூரணாங்கிசையானது விளங்கிய பெரும்புகழினைச் சங்கரனுக்கும் பிரமாவுக்கும் சொல்லுதற்கரிதாகிய அவரது திருவவதாரச் சரித்திரங்களை அடியேனால் சொல்லத்தகுமோ என்றார் சூதபுராணிகர் என்றவாறு. (2)

முகுந்தன் - திருமால்; நவநிதிகளில் ஒன்று முகுந்தம். அச்சுதன் - திருமால்: அழிவில்லாதவன்.

**உரை** - கிருபா நேத்திரதாரி - அருள் நோக்குடையவன். கிருபை - கருணை. அருள்: நேத்திரம் - கண்: தாரி - தரித்தவன். உடையவன்.

## Colloṇāp perumai

*akilakā raṇaṉmukunta ṉaccutaṉan*
*tariyāmi yaruḷcēr kaṇṇaṉ*
*pakīratitaṅ kiyapāta paṅkayattāṟ*
*pāṇṭavaraip pātu kāttōṉ*
*mukilaṉaiya pūraṇāṅ kicaiviḷaṅkun*
*tiruvuruvat tuyarntōṉ meṉmai*
*pukalariya caṅkararkkum piramaṉukku*
*meṉiṉammāṟ pēca lāmō.*

## Shoreless Greatness

"He is the cause of creation. Mukuntaṉ.
Accutaṉ. The indwelling eternal,
His eyes emit compassion. At his feet
Resides the Kaṅkai. He was the guardian
Of the Pāṇṭavas. Unimaginably tall,
He gleams like a water-bearing cloud.
Even Civaṉ and Piramaṉ cannot describe
His greatness. How can I do it?

(காஞ்சியில் சுமதி எனும் அந்தணன்)

782. வியாதனா ரருளாலே சிறிதறைவன்
விருப்பமுள முனிவர் கேட்பீர்
தயாபரனா ரெழுந்தருளுஞ் சத்தியநல்
விரதமெனத் தழைத்த காஞ்சி
நியாயமுறு தலமதனின் வதிந்திடுநின்
மலமுனிவர் நிறைந்து போற்றும்
புயாசலமந் தரச்சுமதி புனிதபா
வனப்புகழிற் பொருந்தி வாழ்ந்தான்.

எ-து. பின்னும் சூத புராணிகர் அருளிச் செய்கின்றார். வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! எமது ஆசாரியராகிய வியாத மகா முனிவர் அருளினாலே யான் இந்த அளவினால் சிறிது கூறுவன், பகவானது லீலா விபூதிகளைக் கேட்க விரும்பிய முனி சிரேஷ்டர்களே என்றருளிச் செய்கின்றார். ஆதிகாலத்தின் அதி சிரேஷ்டமாகிய சத்திய விரதமென்று தழைத்திருக்கா நின்ற காஞ்சிமா நகரில் வசியாநின்ற சுமதியென்கின்ற திரு நாமதேயத்தினையுடையவன் புனித பாவனப் புகழினாலே சிறந்தவனாய் வாழ்ந்திருந்தான் என்றவாறு. (3)

சத்திய விரதம் - காஞ்சிமாநகரின் சிறப்புப் பெயர்; உண்மையை நிலைநிறுத்துவோர் மிகுந்திருத்தலின் அப்பெயர் பெற்றது. சுமதி - காஞ்சியில் வாழ்ந்த ஒரு அந்தணனின் பெயர்.

## Kāñciyil Cumati eṉum antaṇaṉ

*viyātaṉā raruḷālē ciṟitaṟaivaṉ*
*viruppamuḷa muṉivar kēṭpīr*
*tayāparaṉā reḻuntaruḷuñ cattiyanal*
*viratameṉat taḻaitta kāñci*
*niyāyamuṟu talamataṉiṉ vatintiṭuniṉ*
*malamuṉivar niṟaintu pōṟṟum*
*puyācalaman taraccumati puṉitapā*
*vaṉappukaḻiṟ porunti vāḻntāṉ*

## The Brahmin Cumati of Kāñci

I will speak a few things by the grace
Of Vyāsa. Those of you who wish to, listen.
Kāñci, known all over as *Cattiyaviratam,*
A city that respects Law, is the residence
Of Varatarāca. Here lived blemishless sages.
Cumati who resided here was famous.

(வரதராசர் பக்தி)

783. சரதமுறு தத்துவத்தின் தவமுனிவ
ரனைவர்களுஞ் சார்ந்து போற்றும்
பரதர்புகழ் மெய்ஞ்ஞானத் தினகரனா
யடியவரைப் பாது காத்த
விரதமுறு பதுமமே லவன்புரிந்த
யாகத்தின் விளங்கித் தோன்றும்
வரதர்புகழ் பத்தியினின் மாறாத
வொழுக்கத்தான் வதிந்த மேலான்.

எ-து. தத்துவ ஞானத்தினையுடைய தவ சிரேஷ்டர்கள் யாவர்களும் புகழ்ந்து போற்றுகின்ற ஞானசக்தி சம்பூரணனாகப் பிரமாவானவர் புரிந்த யாகத்தில் திருவவதாரம் செய்தருளிய வரதராசர் பத்தியிலே மாறாத ஒழுக்கத்தினாலே வசியாநின்ற தவசிரேஷ்டனாகக் காஞ்சிமா நகரத்தின் வாசம் செய்கின்ற சுமதி என்னும் பிராமணன் என்றவாறு. (4)

சரதம் - உறுதி, உண்மை. தினகரன் - சூரியன்.

## Varatarācar pakti

*caratamuṟu tattuvattiṉ tavamuṉiva*
*raṉaivarkaḷuñ cārntu pōṟṟum*
*paratarpukaḻ meyññāṉat tiṉakaraṉā*
*yaṭiyavaraip pātu kātta*
*viratamuṟu patumamē lavaṉpurinta*
*yākattiṉ viḷaṅkit tōṉṟum*
*varatarpukaḻ pattiyiṉiṉ māṟāta*
*voḻukkattāṉ vatinta mēlāṉ.*

## Devotion for Varatarāca

Sages firm in their philosophical views
Praise Lord Varatarāca who is indeed
The sun of true knowledge. His vow
Is the guardianship of devotees.
He manifested in Piramaṉ's sacrifice.
The brahmin Cumati had firm devotion
For Varatarāca.

(சுமதி மரம் வெட்ட, பசு இறத்தல்)

784. வேள்விசெயு முயற்சியினாற் புறவத்தின்
பரசெடுத்து வேதி யோனு
நீளமுறு சமித்துதவு பாதவத்தை
வேதவிதி நெறியி னாலே
வாள்பரசாற் சேதிக்க வம்மரந்தா
னருகிருக்கும் வண்மை யான்மேற்
கோளடைய வீழ்ந்தவியக் கோவதனைக்
கண்ணுற்றான் குணக்குன் றன்னான்.

எ-து. அப்படியாகிய சுமதியானவன் யாகம் செய்ய வேண்டிச் சமித்து முதலாகிய துகளைக் குறித்து கண்ட கோடரியைக் கையிலெடுத்துக் காட்டகத்தில் பிரவேசித்து உலர்ந்திருக்கின்ற அரசு விருட்சத்தை வெட்ட, அந்த மரமானது சாய்ந்து பூமியின்கண் வீழ, அந்த மரத்தடியில் ஒரு பசுவானது அகப்பட்டு பிராணனை விட்டு இறந்து போக, அதைக்கண்ட நற்குண நற்செய்கைக் குன்றம் போன்ற சுமதி என்னும் பிராமணோத்தமன் என்றவாறு. (5)

புறவம் - காடு. பரசு - கோடரி. சமித்து - ஓமவிறகு; அத்தி, அரசு, ஆல், இத்தி, கருங்காலி , நாயுருவி, பலாசு, மா, வன்னி ஆகிய ஒன்பது வகை விறகு. பாதவம் - மரம். ஆன் - பசு. கோள் - கொலை.

## Cumati maram veṭṭa, pacu iṟattal

*vēḷviceyu muyaṟciyiṉāṟ puṟavattiṉ*
*paraceṭuttu vēti yōṉu*
*nīḷamuṟu camittutavu pātavattai*
*vētaviti neṟiyi ṉālē*
*vāḷparacāṟ cētikka vammarantā*
*ṉarukirukkum vaṇmai yāṉmēṟ*
*kōḷaṭaiya vīḻntaviyak kōvataṉaik*
*kaṇṇuṟṟāṉ kuṇakkuṉ ṟaṉṉāṉ.*

## Cumati Hacks a Tree, a Cow Dies

Desiring to perform a sacrifice, the brahmin
Took an axe to the forest and began
To hack a tall, dry Pipal tree for twigs
Towards Vedic fire-offerings; the tree
Fell heavily on the earth. Caught beneath it,
A cow died. The brahmin whose nobility
Was high as the mountains, saw this happen.

(சுமதி வருத்தம்)

785. மெய்விதிர்த்தான் கையறைந்தான் தன்விதியை
மிகநொந்தான் வேள்வி செய்தங்
குய்வதற்கு வெண்ணியவெண் ணங்களெலா
மிகவெறுத்து வெதும்பி நின்றான்

பையரவின் விடம்போலும் பழிக்கஞ்சி
நடுநடுங்கிப் பதைப தைத்தான்
செய்கையினை யறிந்தவர்கள் திருநாட்டி
னறிவிக்கத் தேர்ந்தா ரன்றே.

எ-து. இத்தன்மையாகிய பசுவானது இறந்துபோன விதத்தைக் கண்ட சுமதியாகிய பிராமணனானவன் சரீரமானது நடு நடுங்கி, இரண்டு கைகளையும் ஒன்றோடொன்றறைந்து, தனது விதி வசத்தை மிகவும் நொந்திரங்கினான். எண்ணிய எண்ணங்களெல்லாம் மிகவும் வெறுத்து வெப்பப்பட்டு சர்ப்பத்தினைப் போல் சீறி நெடுமூச்செறிந்து பதைக்கின்ற சுமதியினது மனஸ்தாபங்களை அறிந்த பேர்களெல்லாம் அந்தக் காஞ்சிமா நகரத்தினுள்ள நான்கு வர்ணச் சனங்களுக்கும் தெரியப்படுத்தினார்கள் என்றவாறு. (6)

### Cumati varuttam

*meyvitirttāṉ kaiyaṟaintāṉ taṉvitiyai*
*mikanontāṉ vēḷvi ceytaṅ*
*kuyvataṟku veṇṇiyaveṇ ṇaṅkaḷelā*
*mikaveṟuttu vetumpi niṉṟāṉ*
*paiyaraviṉ viṭampōlum paḻikkañci*
*naṭunaṭuṅkip pataipa taittāṉ*
*ceykaiyiṉai yaṟintavarkaḷ tirunāṭṭi*
*ṉaṟivikkat tērntā raṉṟē.*

### Cumati's Sorrow

His body shuddered; he wrung his hands
And cursed his fate; he hated the plans
He had made for holding the sacrifice
And stood sorrowful. Afraid of being blamed
As one would be frightened of snake's poison,
He shook and shuddered. Those who came to know,
Made the event public.

(சுமதி - குலத்திலிருந்து ஒதுக்கப்பெறுதல்)

786. அந்தணரெ லாங்குழுவா யமர்ந்தருளி
யவன்தவறுக் காற்றா ராகிச்
சிந்தனைதான் மிகவருந்திச் சுமதியினைக்
குலக்கடையாய்ச் சேர்த்தா ரந்த

நிந்தனையா னுள்மெலிந்து நீங்குதற்குக்
கருதியவர் நிமல மான
சுந்தரமா ரருள்வடிவாம் வீணைமுனி
வனையிறைஞ்சிச் சொல்கின் றானே.

எ-து. இத்தன்மையாய் உலகங்களிலே இருக்கப்பட்ட சதுர் வருணங்களும் நிந்திக்கவும், தெய்வப்பிராமணா் கூட்டங்களெல்லாம் இந்த கோவத்தி செய்த சுமதி என்கின்ற பிராமணனைக் குலத்துக்குக் கடைப்பட நீக்கி விட்டாராகையால் மனம் மெலிந்து அதி சிரேஷ்டராகிய நாரத மகாமுனிவரைத்தேடிக் கண்டடி வணங்கி ஒரு வார்த்தை கூறுகின்றார் என்றவாறு. (7)

குலக்கடை - குலத்தில் தாழ்ந்தவன். வீணை முனி - நாரதர்.

## Cumati - kulattiliruntu otukkapperutal

*antanare lāṅkuluvā yamarntaruli*
*yavantavaruk kārrā rākic*
*cintanaitān mikavaruntic cumatiyinaik*
*kulakkataiyāyc cērttā ranta*
*nintanaiyā nulmelintu niṅkutarkuk*
*karutiyavar nimala māna*
*cuntaramā rarulvativām vīnaimuni*
*vanaiyiraiñcic colkin rānē.*

## Cumati Excommunicated

The brahmins set up a counsel as they felt
Horrified by the sin he had committed.
With their thoughts all sorrowful,
They placed Cumati among the lowest caste
Because of the terrible state
Into which he had fallen. Since he wished
To be relieved, he approached the image
Of grace, Nāratar, saluted him
And made a submission.

(நாரதரிடம் சுமதி முறையிடுதல்)

787. ஆரியனே யருள்வடிவே யஞ்ஞானத்
திமிரமதை யகற்றுஞ் சோதிக்
காரியமா மழகருமங் கருதியடி
யேன்தழைத்த கான கத்திற்

வேரிதிக ழிந்தனத்தின் றாருவினைப்
பரசதனால் வெட்டி வீழ்த்தேன்
பாரதனின் சாய்ந்திடநற் பசுவொன்றங்
குயிர்விடுத்தப் பழிதான் பூண்டேன்.

எ-து சுமதியாகிய வேத பிராமணனாவன் தனது ஆசாரியனைப் பார்த்து ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் மகானுபாவரே! இவ்வுலகத்தினுள்ள அஞ்ஞானமாகிய இருளை நீக்காநின்ற ஞான சூரியனே! யானொரு அபராதம் செய்தேன். யாதென்றால் வேதவிதிப்படி செய்கின்ற வேள்வி செய்யும் பொருட்டினாலே சமித்துத் தருவிக்கத் தக்கதாய்க் காட்டகத்தில் சென்று மிகுந்த உன்னிதத்தோடும் கூடிய அரச விருட்சத்தை வெட்டிச் சாய்த்தேன். அப்போது அந்த மரமானது பூமியின்கண் விழும்பொழுது ஒரு பசுவானது இறந்து விட்டது. அந்தப் பழியானது என்னைச் சார்ந்து மிகுந்த துன்பத்தினை அடைந்தேன் என்றான் சுமதி என்றவாறு. (8)

திமிரம் - இருள வேரி - நறுமணம். இந்தனம் - விறகு.

## Nārataritam Cumati muṟaiyiṭutal

*āriyaṉē yaruḷvaṭivē yaññāṉat*
*timiramatai yakaṟṟuñ cōtik*
*kāriyamā maḷakarumaṅ karutiyaṭi*
*yēṉtaḷaitta kāṉa kattiṟ*
*vēritika ḻintaṉattiṉ ṟāruviṉaip*
*paracataṉāl veṭṭi vīḻttēṉ*
*pārataṉiṉ cāyntiṭanaṟ pacuvoṉṟaṅ*
*kuyirviṭuttap paḻitāṉ pūṇṭēṉ.*

## Cumati to Nāratar

'Noble one! Image of compassion!
Flame that chases away the darkness
Of ignorance! I have done an evil act.
I went to a dense forest and cut down
A tree with my axe for collecting firewood.
As the tree fell upon earth, a cow was caught
Beneath it and died. I am to be blamed.

(நாரதரை வேண்டுதல்)

788. ஆதலினா னந்தணர்க ளனைவர்களும்
அகற்றிவிட அடியே னுந்தன்
நீதமுறு மொழியாலென் நீள்வினைகள்
அகன்றுபுகழ் நிறைந்த நின்றன்
போதமுறு பொன்னடியின் பொருந்தியெந்தன்
மனக்கவலை போக்கி யென்றும்
ஆதிபரன் பதபத்தி யகலாமல்
வரமருள்வீ ரடியேற் கென்றான்.

எ-து ஆகையால் அந்த கோவத்தியைக் குறித்து வேதப் பிராமணர்கள் அடியேனை நீக்கி விட்டார்கள் தேவரீர் அனுக்கிரகத்தினாலே அடியேன் நீள் வினையானது நீங்கி உமது பொற்பாத கமலங்களுக்கு ஈடுபட்டவனாய் எனது மனக் கவலைகளை மாய்த்த அதிசிலாககியமாகிய ஆதிபரப்பிரமத்தில் பற்றிய மனத்தினாலே பத்தியோகம் சித்திக்கத் தக்கதாய் வரம் தரவேண்டுமென்றான். சுமதியென்னும பிராமணோத்தமன் என்றவாறு (9)

போதம - ஞானம. பதபததி - பதம் - திருவடி. திருவடிகளை நீங்காத அனபு

## Nāratarai vēṇṭutal

*ātalinā ṉantaṉarka ḷaṉaivarkaḷum*
*akaṟṟiviṭa aṭiyē ṉuntaṉ*
*nītamuṟu moḻiyāleṉ nīḷviṉaikaḷ*
*akaṉṟupukaḻ niṟainta niṉṟaṉ*
*pōtamuṟu poṉṉaṭiyiṉ poruntiyentaṉ*
*maṉakkavalai pōkki yeṉṟum*
*ātiparaṉ patapatti yakalāmal*
*varamaruḷvī raṭiyēṟ keṉṟāṉ.*

## Prayer to Nāratar

'Hence all the brahmins chased me away.
I have come to you hoping to be freed
Of my evil past by your noble words.
I salute your golden feet that are famous
And excel in granting illumination.
Kindly relieve me of my sorrow
So that I will never be divorced from devotion
To the Lord's feet. Grant me this boon', he said.

(கோலாசலம் அடைக எனல்)

789. எனவினவுஞ் சுமதியினுக் கருள்கூர்ந்தங்
கிசைத்திடுவா ரினிய மேலோர்
அனைவர்களும் புகழ்கோலா சலத்துறையு
மிலக்குமியா ரீன்ற தீர்த்தப்
புனிதமுறு தடம்படிந்தங் கரங்கநா
யகன்தன்னைப் புகழ்ந்து போற்றி
மனமுறுதுற் துயர்ப்பஞ்சா மாமலையவ்
வெரியனலால் மாயு மென்றான்.

எ-து. இவ்விதமாய்ச் சுமதியானவன் பரிதவிக்கின்ற வரலாற்றினைக் குறித்து நாரத மகாரிஷியானவர் அருட்கண் பார்வையினால் அருளிச் செய்கின்றார். வாராய் பிராமணோத்தமனே! இந்தப் பூமண்டலத்தில் அதி சிரேஷ்டமாகிய தொண்டை மண்டலத்தில் கோலாசலம் என்கின்ற கிரியில் அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்க நாயகரிட திருமார்பினெழுந்தருளிய இலக்குமி தேவியினது பெயரால் விளங்குகின்ற தீர்த்தத்திலே ஸ்நானம் செய்து அந்த வராக க்ஷேத்திரத்தில் வாசம் செய்த அவரிட தரிசனப்பலப்பிர யோசனத்தினாலே உனது கோவத்தியானது நிவாரணமாய் மலை போன்ற பஞ்சு மலையில் அக்கினிப்பொறி பாய்ந்ததுபோலாகு மென்றார் நாரத மகாரிஷி என்றவாறு. (10)

## Kōlācalam aṭaika en̲al

*en̲avin̲avuñ cumatiyin̲uk karuḷkūrntaṅ*
*kicaittiṭuvā rin̲iya mēlōr*
*an̲aivarkaḷum pukaḻkōlā calatturaiyu*
*milakkumiyā rīn̲ra tīrttap*
*pun̲itamuru taṭampaṭintaṅ karaṅkanā*
*yakan̲tan̲n̲aip pukaḻntu pōr̲r̲i*
*man̲amurutur̲ tuyarppañcā māmalaiyav*
*veriyan̲alāl māyu men̲r̲ān̲.*

## "Go to Kōla Hill!"

To Cumati who spoke thus, Nāratar replied
With compassion. 'There is the Lakṣmi spring
In Kōla Hill, which is praised by gods
And others. Bathe in that holy spring,

Salute and praise Araṅkaṉ there.
All the sorrow in your heart will be destroyed
As an enormous mountain of cotton
Is burnt by fire.

(இலக்குமி தீர்த்தத்தில் மூழ்குதல்)

790. அவர்மொழியைச் சிரந்தாங்கி யருட்கோல
மால்வரையை யணுகிச் சார்ந்து
பவமகற்று மிலக்குமியார் பதம்பணிந்தங்
கனுதினமும் பரிவான் மூழ்கி
புவமையிலாத் திருவரங்கப் பெருமானை
முப்பொழுது முவந்து வந்தித்
தவமிழைத்தா னவரருளா லாதிபஞ்ச
பாதகத்தின் தவறு தீர்ந்தான்.

எ-து. இவ்விதமாய் அருளிச் செய்த நாரத மகா முனிவரது அருள் மொழியினைச் சிரத்தில் தாங்கி, அருளே வடிவமாய்ப் பிரகாசிக்கின்ற கோலாசல பர்வதத்தினைச் சேர்ந்து, அகில லோக நாயகியாகிய இலக்குமியார் தீர்த்தத்திலே தீர்த்தமாடி, அந்த லோக மாதாவைத் தரிசித்து, அவளுடைய கிருபா நோக்கத்தால் ஸ்ரீ அரங்க நாயகரைத் திரிகாலங்களினும் உபாசித்து, அவரது தலத்தில் வசியாநின்ற பலப்பிரயோசனப் பரிபூரண இன்பத்தால் அதிபஞ்சமாபாதகமாகிய கோவத்தியானது நீங்கிப் புனித பவுத்திரத்தை அடைந்தான் சுமதியாகிய பிராமணன் என்றவாறு. (11)

**Ilakkumi tīrttattil mūḻkutal**

*avarmoḻiyaic cirantāṅki yaruṭkōla*
*mālvaraiyai yaṇukic cārntu*
*pavamakaṟṟu milakkumiyār patampaṇintaṅ*
*kaṉutiṉamum parivāṉ mūḻki*
*puvamaiyilāt tiruvaraṅkap perumāṉai*
*muppoḻutu muvantu vantit*
*tavamiḻaittā ṉavararuḷā lātipañca*
*pātakattiṉ tavaṟu tīrntāṉ.*

**Bathing in Lakshmi Spring**

Taking in his words with sincerity,
Cumati reached the grace-laden Kōla Hill;
Saluting the feet of Lakṣmi who destroys

The evil of birth, he bathed in the spring
Daily, and worshipped thrice a day
Lord Araṅkaṉ who has no equal. Thus he did
Penance and was relieved of the great sin.

(பாவம் நீங்குதல்)

791. புனிதபா வனரான சுமதியினை
யசரீரி புகல்வக் கேண்மோ
முனிவரெலாந் துதித்திடுநின் மனமறியா
முந்தியவிக் கோவான் மூழ்கு
நனிபழிதீர்ந் துயர்ந்தனையா லரங்கநா
யகரருளா னிலகு முத்தி
இனியபவுத் திரஞான வின்பமெலா
முன்போல விளங்கு மன்றே.

எ-து. இவ்விதமாய் இலக்குமியார் தீர்த்தத்தில் ஆடிய பலத்தினாலே பரம பவுத்திரம் அடைந்த சுமதியினை நோக்கி அசரீரியாகிய ஆகாயவாணி யொரு வார்த்தை கூறுகின்றாள். வாராய் பிராமணோத்தமனே! அனேக மகாரிஷிகளெல்லாம் வாசம் செய்கின்ற இந்த இலக்குமியார் தீர்த்தத்தில் தீர்த்தமாடிய பலத்தினாலே உமது பூர்வ கர்மங்க ளெல்லாம் நீங்கி உன் மனமறியாமல் சம்பவித்த கோவத்தி முதலாகிய பஞ்சமா பாதகங்களும் உன்னை விட்டுக் கழிந்ததனால், அனந்தவிமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்க நாயகருடைய கிருபா விசேஷத்தால் அதி சிலாக்கியமாகிய பரமபத செல்வத்தினை அடைந்து நித்திய சூரியருடனே வசிக்கப்போகும் உமது பத்தியானது முன்போல விருத்தியடையக் கடவதென்று அருளிச் செய்தாள் ஆகாயவாணி என்றவாறு. (12)

## Pāvam nīṅkutal

*puṉitapā vaṉarāṉa cumatiyiṉai*
*yacarīri pukalvak kēṇmō*
*muṉivarelāṉ tutittiṭuniṉ maṉamaṟiyā*
*muntiyavik kōvāṉ mūḻku*
*naṉipaḻitīrn tuyarntaṉaiyā laraṅkanā*
*yakararuḷā ṉilaku mutti*
*iṉiyapavut tirañāṉa viṉpamelā*
*muṉpōla viḷaṅku maṉṟē.*

## Relieved of the Sin

Listen to what the aerial voice said
To the purified Cumati: 'In this holy place
Worshipped by sages, you bathed and were freed
Of the sins committed in the past. Now you are
Pure. By the grace of Arankan,
You will once again glow with high knowledge
And happiness even as before.

(நாட்டு அந்தணர் மறுப்பு)

792. அசரீரி உரைத்தருள அகங்குளிர்ந்து
மெய்ம்மலர்ந்தங் கன்பு பூண்டு
விசனமெலா மொருவியவ னாடடைந்து
யாவருக்கும் விளம்பக் கேட்டப்
பசைதவிர்ந்த மனத்தினராய்ப் பகர்ந்திடுவார்
பாவவினைத் துடராச் சிப்பால்
நிசமறையின் விதிவாத மென்செய்து
விலக்கினைநீ நிசமோ வென்றார்.

எ-து. அப்படி அரங்கநாயகர் அருளினாலே ஆகாயவாணியானவள் அருளிச் செய்த வார்த்தையைக் கேள்வி செய்த சுமதியானவன் ஆனந்தப்பரவசனாய் மனோசங்கையானது தீர்ந்து, மிகுந்த உற்சாகத்துடனே அவ்விடம் விட்டு நீங்கி நகரத்தைச் சேர்ந்து அங்குள்ள வேதப் பிராமணாளுக்கெல்லாம் தெரிவிக்க, அந்த அந்தணர் கூட்டங்கள் எல்லாம் எவ்வளவும் இவன் வார்த்தையில் சிரத்தை யில்லாதவர்களாய்க் கூறுகின்றார்கள். வாராய் சுமதி! நீர் செய்த கோவத்தியான பாதகமானது நிவர்த்தியானதாய் நீர் சொல்கின்ற வார்த்தையை என்ன பிரமாணத்தினாலே யாங்கள் ஒத்துக் கொள்ளுவோம் என்று நீக்கிவிட்டார்கள் என்றவாறு (13)

பசை - அன்பு, ஈரம்.

**உரை** - சங்கை - ஐயம். கோவத்தி - கோ + அத்தி; கோ - பசு. அத்தி - கொலை; கொலைப்பாவம்.

## Nāṭṭu antaṇar maṟuppu

*acarīri uraittaruḷa akaṅkuḷirntu*
*meymmalarntaṅ kaṉpu pūṇṭu*
*vicaṉamelā moruviyava ṉāṭaṭaintu*
*yāvarukkum viḷampak kēṭṭap*

*pacaitavirnta maṉattiṉarāyp pakarntiṭuvār*
*pāvaviṉait tuṭarāc cippāl*
*nicamaṟaiyiṉ vitivāta meṉceytu*
*vilakkiṉaiṉī nicamō veṉṟār.*

### Brahmins Object

As the voice spoke, Cumati felt happy,
His body horripilated, and his heart
Was filled with devotion. Relieved
Of his sorrow, he returned to his home
And explained to everyone.
But the heartless brahmins said:
'How did you prevent the sin from stalking
You? Where is the true Vēdic witness for it?'

(சுமதி மீண்டும் தவம்)

793. அவ்வுரைகேட் டருந்தவனு மமுதமது
துளித்தலென வலர்ந்து கூறுந்
திவ்வியமா மறையவரே காண்டலள
வைதன்னாற் கிளர்த்து கின்றேன்
செவ்வியநற் திங்களொன்று இலக்குமியார்
தீர்த்தமதின் சிறந்து மூழ்கிக்
கொவ்வையித ழரங்கனார் தரிசனத்தால்
தவநிலையுங் கூட்டித் தன்றே.

எ-து. அப்படிக் கூறுகின்ற பிராமண கோடிகளுடைய வசனங்களைக் கேட்டு ஒரு விண்ணப்பம் செய்கின்றார் வாரீர் பிராமண சிரேஷ்டர்களே! தாமரைக் கமலமானது இதழ் விரிந்து அமுதத்தைத் துளிர்த்ததுபோல, தேவரீர்கள் அருளிச் செய்கின்றபடி அடியேன் பிரதிட்டப் பிரமாண்டமாகிய காண்டலளவினால் ஒரு மதியாவது ஸ்ரீ மகா லட்சுமி தீர்த்தத்தில் உபவாசம் செய்து தங்களுடைய கிருபைக்குப் பாத்திரனாகுவேன் என்று மறுபடியும் கோலாசலத்தைச் சேர்ந்து இலட்சுமி தீர்த்தக் கரையின் அரிதாகிய தவம் செய்யத் தொடங்கினான் என்றவாறு.

(14)

காண்டலளவை - நேரில் கண்ணாற் காணுமாறு. கூட்டித்தன்றே - என முன்னிகழ்ந்த செயதியாகப பாடல் அமைய உரை எதிர் காலத்தைச் சுட்டுகிறது. இவ் உரை அடுத்த பாடல்களைக் கொணடு கூறபபட்டுள்ளது.

### Cumati miṉṭum tavam

*avvuraikēṭ ṭaruntavaṉu mamutamatu*
*tuḷittaleṉa valarntu kūṟun*
*tivviyamā maṟaiyavarē kāṇṭalaḷa*
*vaitaṉṉāṟ kiḷarttu kiṉṟēṉ*
*cevviyanaṟ tiṅkaḷoṉṟu ilakkumiyār*
*tīrttamatiṉ ciṟantu mūḻkik*
*kovvaiyita ḷaraṅkaṉār taricaṉattāl*
*tavanilaiyuṅ kūṭṭit taṉṟē.*

### Cumati Performs Penance Again

Hearing this Cumati replied: "O noble
Brahmins who speak as if nectar drops
Are found in the fresh lotus! I shall
Gain the witness that can be perceived
For your sake. For one whole month
I shall bathe sincerely in the Lakṣmi spring".
He entered the mode of penance, all the while
Looking towards Lord Araṅkaṉ with rosy lips.

(சுமதியின் வேண்டுதல்)

794. நித்தியமா மிலக்குமியார் நிழலிணைகள்
அகற்றிடவும் நிமல மான
அத்திகிரி யருளாள ரழகியபொன்
கருடன்மிசை யமர்ந்து போற்றப்
பத்திசெய்த சுமதியவ ரடிபணிந்து
பன்மறையால் துதித்துப் பண்பாய்
முத்திதரு முதலோனே யருள்புரிவாய்
யாவருக்கு முயர்ச்சி யென்றான்.

எ-து. அப்படித்தவம் செய்கின்ற சுமதிக்கு இரங்கி ஸ்ரீ மகாலட்சுமி கடைக்கண் அருள் நோக்கத்தினது நீள் வினையாகிய கோவத்தி முதலாகிய மகாபாதகங்களெல்லாம் நிவர்த்தி செய்தாள். அப்போதந்த நெடுங்காலமாய்ப் பத்தி யோகம் செய்த பலப் பிரயோசத்தினாலே அத்திகிரி அருளாளராகிய ஸ்ரீ வரதராசப் பெருமாள் மிகுந்த கிருபையோடும் சங்கு, சக்கர, கட்க, கோதண்டம் வாள் என்கின்ற பஞ்சாயுத பாணியாய் இரத்தின கிரீடம் பிரகாசிக்கப் பீதாம்பரம் துலங்கக் கருடன் பேரில் ஆரோகணிதமாய்க் கோலாசலத்துக்கு எழுந்தருளக் கண்ட சுமதியானவன் மனம் கொள்ளாத சந்தோஷத்தை

அடைந்து, அவர் கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே அனந்தமான தண்டன் சமர்ப்பித்து, வேத வேதாந்தங்களினாலே தோத்திரம் செய்து உருகி அடியேன் சந்தேகம் தீர்ந்து பரம பாவனமாகினேன் இந்தத் தலத்தில் வாசம் செய்கின்ற பிராமண கோஷ்டிகளுடனே அடியேனும் உமது திருவடி வாரங்களினிடை வசிக்கும்படியாய் அருள் புரிய வேண்டும் முத்தி காரணனாகிய முதல்வனே என்றான் சுமதி என்றவாறு. (15)

உரை - பாவனம் - தூய்மை.

**Cumatiyin̲ vēṇṭutal**

*nittiyamā milakkumiyār nil̲aliṉaikaḷ*
*akar̲r̲iṭavum nimala mān̲a*
*attikiri yaruḷāḷa ral̲akiyapon̲*
*karuṭan̲micai yamarntu pōr̲r̲ap*
*patticeyta cumatiyava raṭipaṇintu*
*pan̲mar̲aiyāl tutittup paṇpāy*
*muttitaru mutalōn̲ē yaruḷpurivāy*
*yāvarukku muyarcci yen̲r̲ān̲.*

**Cumati's Prayer**

The eternal Lakṣmi chased away his evil past.
The compassionate Lord of Attikiri[1] came
Riding the handsome, beautiful Karuṭan̲
And blessed him. The devoted Cumati
Saluted him and worshipped him with hymns.
He prayed humbly: 'Lord who grants Realisation!
Grant grace to all those who are here.

(அரங்கன், என்றும் இத்தலத்தில் இருப்பேன் எனல்)

795. அந்தணர்க ளியாவருபொன் னடிபணிந்து
சுமதியினை யன்பா னேத்தச்
சந்ததமு மித்தலத்தின் சார்ந்திடுவோந்
தக்கணத்தின் தாழ்வி லாத
சுந்தரமா கியவரதன் தைப்பூசந்
தனில்மாந்தர் தேவர் போற்ற
வந்தமறை யோருமவர் மனமகிழ்ந்தங்
கவரடியின் வதிந்து வாழ்ந்தார்.

1. Varatarācar of Kāñcipuram.

எ-து. அந்த நகரத்தின் வசியாநின்ற அந்தணர்களாகிய பிராமணர்களெல்லாம் மிகுந்த உற்சாகத்துடனே வரதராசர் எழுந்தருளியதைக் கண்டு அவரது கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே அனந்தமான தண்டன் சமர்பித்துச் சுமதியின் இரண்டு அஸ்தங்களையும் பற்றிப் பிடித்து அன்பினாலே ஆனந்தப் பரவசர்களாய்த் துதிசெய்கின்ற பிராமண கோஷ்டிகளை நோக்கி அருளிச் செய்கின்றார். வாராய் சுமதி முதலாகிய அந்தணர்களே! இந்த அதி சிலாக்கியமாகிய கோலாசலத்தினில் நீங்கள் வாசம் செய்த பிரயோசனத்தினாலே சகல பாவத்தினின்றும் விடுபட்டவர்களாய் நமது தரிசன வைபவத்தினை அனுபவிக்கக் கடவீர்கள் ஆகிலும் சர்வ காலத்திலும் இந்தத் தலத்தில் தக்ஷிணத்தில் வாசம் பண்ணுவோம் என்றருளிச் செய்து என்றும் பரிபூரணத் திருவவதாரம் செய்தருளினார். ஆகையால் தைப்பூசமாகிய சுபதினத்தில் எழுந்தருளிய ஸ்ரீ வரதராசனை இந்திரன் முதலாகிய தேவர்களும், மகாரிஷிகளும், சேவிக்கத்தக்கதாகச் சுமதி முதலாகிய பேர்களெல்லாம் சேவிக்க எழுந்தருளினார் என்றவாறு. (16)

சந்ததமும் - எப்பொழுதும்; தக்கணம் - தென்திசை, வலப்பக்கம். தைப்பூசம் - தைமாதத்தின் பூச நாள்; பூசம் - இருபத்தேழு நட்சத்திரங்களில் எட்டாவது நட்சத்திரம்.

ஸ்ரீ வரதராசப் பெருமாள் திருஅவதார அத்தியாயம் முற்றிற்று.

## Araṅkaṉ, eṉṟum ittalattil iruppēṉ eṉal

*antaṉarka ḷiyāvarupoṉ ṉatipaṇintu*
*cumatiyiṉai yaṉpā ṉēttac*
*cantatamu mittalattiṉ cārntiṭuvōṉ*
*takkaṇattiṉ tāḻvi lāta*
*cuntaramā kiyavarataṉ taippūcaṉ*
*taṉilmāntar tēvar pōṟṟa*
*vantamarai yōrumavar maṉamakiḻntaṉ*
*kavaraṭiyiṉ vatintu vāḻntār.*

## "I shall be Here!"

All the brahmins saluted the golden feet
Of the Lord and praised Cumati. The Lord
Promised. "I shall be here for all time.
In this southern direction, the blameless,
Handsome Varatar came here on Pūca asterix
In Tai[2] month, worshipped by mortals
And gods. The brahmins who had come
Were happy and remained at his feet.

2. January - February.

# 42. முப்பத்தெட்டாவது

# ஸ்ரீ வெங்கடாசலபதி திரு அவதார அத்தியாயம்

தொண்டைநாட்டுக் காஞ்சிமாநகரத்தில் திருதாயு என்னும் மனுகுல மன்னன் அரசுபுரிந்து வந்தான். அவன் சேஷாசலம் என்னும் திருமீலையில் கோயில் கொண்டுள்ள வேங்கடத்தானை எக்காலமும் துதித்து வந்தான். எனவே சிறந்த ஒரு மகனைப் பெற்று, அவனுக்குத் தன் நாட்டினை முடிசூட்டி வைத்துவிட்டுத் தான் சேஷாசலத்தில் தவம் மேற்கொண்டான்.

தவத்தினை ஏற்ற திருவேங்கடத் தெம்பெருமான் திருதாயுவின் முன் தோன்றிக் காட்சியளித்தான். மகிழ்ச்சியடைந்த மன்னவன் எனது தீவினைக் கடலைக் கடந்து உமது பரமபதத்தை யடைய அருள்புரிய வேண்டும் என்று வேண்டினான். உனது விருப்பத்தினை நிறைவேற்றுகின்றோம்; நீ இப் பூமண்டலத்தில் சிறந்து விளங்குகின்ற கோலாசலத்தை அடைந்து இத்தவத்தினை மேற்கொள்க; அரங்கநாயகரது அருளால் பரம பதத்தை அடைவாய் என்றருள் புரிந்தார். அவர் வாக்கின் படியே கோலாசலத்தில் தவம் செய்தான் திருதாயு.

அவன் விருப்பத்தை நிறைவேற்ற விரும்பிய திருவேங்கடத்து எம்பெருமான் இரத்தின மகுடமும் கவுத்துவ ஆபரணமும் விளங்க பஞ்சாயுதம் ஏந்தி, மகா லட்சுமியோடு கருடவாகனத்தில், கும்பமாத உத்திராடத்தில் அரங்கநாயகர் ஆலயத்தின் வடபாலில் திருஅவதாரம் செய்தருளினார். அவருடைய திருவடிகளிலே பணிந்து நின்ற மன்னனை நோக்கி அரசனே! நீ முத்தி வைபவமாகிய பரமபதத்தில் நித்திய சூரியராய் வசிக்க அருள்புரிந்தோம். நாமும் இந்தப் புண்ணிய தலத்திலே எப்பொழுதும் எழுந்தருளியிருப்போம் என்று கூறினார்.

### (திருதாயு மன்னனின் தவம்)

796. தொண்டைதன் னாட்டிற் கதிபனாந் திருதா
யுப்பெயர் மனுகுலத் தரசன்
அண்டநா யகன்போ லாழியொன் றுருட்டி
யருமறை விதிவழு வாமன்
மண்டலம் புகழ வதிந்திடு காலை
வடதிரு வேங்கட னருளாற்
கொண்டல்போ லுதித்த புத்திரர்க் கரசு
கொடுத்துசே ஷாசலத் தமர்ந்தான்.

எ-து. வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! திருத்தொண்டை நன்னாடென்று எவ்வகை மேம்பட்டார்களும் புகழ்கின்ற காஞ்சிமா நகரத்தின்கண் அரசு புரிந்த அரசனாகிய திருதாயு என்கின்ற சிறந்த நாமத்தினையுடைய மனுகுலத் தரசனானவன் தேவேந்திர மகாராசனைப்போல் இந்தப் புவனச் சக்கிரேசுவரனாக ஏக சக்கிராதிபதியாய் அரசு புரிந்து, அரிய வேதங்களில் விதித்த விதியினை வழுவாமல், அந்த மண்டலங்களெல்லாம் புகழத்தக்கதாய் இருக்கின்ற காலையில், அந்த வாசனானவன் அதி சிலாக்கியமாகிய சேஷாசல மென்னும் திருமலையினெழுந்தருளிய ஸ்ரீ வேங்கடத்தரசினைச் சர்வ காலங்களினும் உபாசித்த பலத்தினாலே மேகத்துக்குச் சமதையாகிய புத்திரப்பேறு பெற்றுத் தனது அரசினை அந்தப் புத்திரனுக்கு மகுடாபிஷேகம் செய்வித்துத் தான் சேஷாசலத்தை அடைந்து தவம் செய்திருந்தான் என்றவாறு. (1)

மனுகுலம் - மனு என்னும் சோழனின் வமிசம். அண்டநாயகன் - அண்டர்நாயகன் - தேவர்களின் தலைவன், தேவேந்திரன். ஆழியொன்றுருட்டி - ஆழி - சக்கரம்; ஆணைச்சக்கரம்; உருட்டுதல் - செலுத்துதல்; அரசு புரிதல். கொண்டல் - மேகம்; பயன் உவமம். சேஷாசலம் - திருவேங்கடமலை. சேஷன் - ஆதிசேடன்; அசலம் - மலை.

### Tirutāyu maṉṉaṉiṉ tavam

*toṇṭaitaṉ ṉāṭṭiṟ katipaṉāṉ tirutā*
*yuppeyar maṉukulat taracaṉ*
*aṇṭanā yakaṉpō lāḻiyoṉ ṟuruṭṭi*
*yarumaṟai vitivaḻu vāmaṉ*
*maṇṭalam pukaḻa vatintiṭu kālai*
*vaṭatiru vēṅkaṭa ṉaruḷāṟ*
*koṇṭalpō lutitta puttirark karacu*
*koṭuttucē ṣācalat tamarntāṉ.*

## XLII. The Manifestation of Veṅkaṭācalapati

### Tirutāyu's Penance

The King of Toṇṭai Kingdom was Tirutāyu,
Of Maṉu's race. Like the King of gods
He moved the wheel of Law and lived
Without transgressing Vedic injunctions.
He was praised all over the land.
By the grace of Lord Veṅkaṭēsvara
He gained a son like the monsoon cloud.
Handing over the kingdom to him,
Tirutāyu settled down in Cēṣācalam.

(நாரணனிடம் வேண்டுகோள்)

797. நிரந்தரந் தவஞ்செய் திருந்தனன் நெடுநாள்
நேமியோ னுளங்குளிர்ந் தெழுந்து
வரந்தர நினைந்து கருடன்மீ தெழுந்த
மாயவன் பொன்னடி பணிந்து
திரங்கமழ் கமலத் திருவடி யடைந்தேன்
தீவினைக் கடலினைத் தணந்துன்
பரமமாம் பதத்திற் படர்ந்திட வருள்கூர்
பரமனே யருள்கெனப் பணிந்தான்.

எ-து. அப்படி அரிதாகிய தவம்செய்து அனேக நாள் செல்ல, நேமியனாகிய திருவேங்கடத் தெம்பெருமான் அவன் தவத்தினுக்கு இரங்கி வரம்தரும் பொருட்டாய்க் கருட பகவான் பிடர்த்தலையினேறி இரு சரணார விந்தமும் கர கமலத்தில் அலர்த்திச் சேவை தருகின்ற மாயவனது பாதபங்கயங்களில் அட்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்து விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் மகானுபாவரே! அடியேனை ஒரு பொருளாய்த் தேவரீர் இங்கெழுந்தருள என்ன பாக்கியம் பெற்றேன்! ஆகிலும் எப்பொழுதும் திவ்விய பரிமளங் கமழ்கின்ற செந்தாமரைக் கமலம்போன்ற திருவடிகளிலே சரணாகதியாக அடைந்தேன். எனது தீவினையாகிய கடலினைக் கடந்து உனது பரம பவுத்திரமாகிய பரம பதச் செல்வத்தினை அடையத்தக்கதாய் வரம்தர வேண்டுமென்றான் திருதாயு என்னும் அரசராபிரான் என்றவாறு. (2)

நேமியோன் - திருமால்; நேமி - சக்கரம். தணந்துன் - தணந்து - உன் - தணத்தல் - நீங்குதல்.

## Nāraṇaṉiṭam vēṇṭukōḷ

*nirantaran tavañcey tiruntaṉaṉ neṭunāḷ*
*nēmiyō ṉuḷaṅkuḷirn teḻuntu*
*varantara niṉaintu karuṭaṉmī teḻunta*
*māyavaṉ poṉṉaṭi paṇintu*
*tiraṅkamaḻ kamalat tiruvaṭi yaṭaintēṉ*
*tīviṉaik kaṭaliṉait taṇantuṉ*
*paramamām patattiṟ paṭarntiṭa varuḷkūr*
*paramaṉē yaruḷkeṉap paṇintāṉ.*

## Prayer to Nārāyaṇaṉ

He remained in meditation for long.
The discus-wielder was pleased and wished
To confer boons upon him. Perceiving

The Lord riding the Karuṭan̲, Tirutāyu
Saluted his golden feet. 'I have gained
Your scent-swirling lotus-feet.
Kindly destroy the ocean of my evil past
And grant me the privilege of residing
In the heavens.'

(கோலவரையில் தவம் செய்க எனல்)

798. வரம்பெறு முனிவர் மாதவ ரமரர்
மாநிலத் தரசர்கண் மகிழ்சேர்
தரம்பெறு தருமார்த் தங்களு மெளிதாய்த்
தந்திடுங் கோலமால் வரையின்
திரம்பெறுந் தவநீ ரிழைத்திட வரங்கன்
திருவருட் கருணையாற் சிறந்த
பரம்பொருள் வதிந்த பரமமாம் பதத்தைப்
படர்ந்திடப் பாங்கெனப் பகர்ந்தான்.

எ–து. அப்படி விண்ணப்பம் செய்கின்ற அரசனை நோக்கி அருளிச் செய்கின்றார். வரத்தினைப் பெறுகின்ற முனிவர் கூட்டங்களும், அஷ்டாங்க யோகத்தினைச் செய்கின்ற மகா தவசிகளும், தேவர் கூட்டங்களும், ஐம்பத்தாறு தேசத்தினை அரசுபுரிகின்ற அரசர் கூட்டங்களும் மகிழ்ச்சி பெறுகின்ற தர்மார்த்த காம மோக்ஷங்களாகிய சதுர்வித பலப்பிரயோசனங்களையும் அடையத்தக்கதாய் எளிதாய் அருளிச் செய்கின்றோம். இந்தப் பூமண்டலத்தில் அதி சிலாக்கியமாகிய கோலாசலம் என்கின்ற புண்ணிய தலத்திலே அரிய தவத்தினை நீ செய்குவையாகில் அந்தக் கோலாசலத்தில் யோக நித்திரை செய்கின்ற அரங்க நாயகரது கருணையினாலே பரமபதச் செல்வத்தினை அடைவதற்குப் பாங்காம் என்றருளிச் செய்தார் என்றவாறு. (3)

## Kōlavaraiyil tavam ceyka en̲al

*varampeṟu mun̲ivar mātava ramarar*
*mānilat taracarkaṇ makiḻcēr*
*tarampeṟu tarumārt taṅkaḷu meḷitāyt*
*tantituṅ kōlamāl varaiyin̲*
*tirampeṟun tavanī riḻaittiṭa varaṅkan̲*
*tiruvaruṭ karuṇaiyāṟ ciṟanta*
*paramporuḷ vatinta paramamām patattaip*
*paṭarntiṭap pāṅken̲ap pakarntān̲.*

## "Meditate on the Kōla Hill!"

'There is the Kōla Hill that easily grants
One's wishes for sages who ask for boons,
Riṣis performing austerities, gods and kings
On this earth. If you stay there
Performing penance, by the grace of kind Araṅkaṉ
You will be granted residence in the beyond
Where resides the Supreme, said the Lord.

(கோலவரையில் திருவேங்கடத்தான்)

799. ஆதியாஞ் சேஷா சலத்துறை மாயோன்
அருளினா லந்தரத் தெழுந்து
சோதியா மரங்கன் திருவடி யடைந்து
தூயநின் மலமனத் துன்னா
யோதிய வரையி னுயர்தவம் புரிந்தோ
னுளங்களி கூர்ந்திட உயர்ந்த
வேதியர் முனிவர் புகழ்ந்திட வெழுந்த
வேங்கடத் தரசினைக் கண்டான்.

எ-து. ஆதி மூலமாகிய சேஷாசலவாசர் அருளினாலே ஆகாச மார்க்கமாக எழுந்து சோதிமயமாய் விளங்கிப் பிரகாசிக்காநின்ற ஸ்ரீ அரங்கநாயகரது செந்தாமரைக்கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து அவரது கிருபா விசேடத்தால் அந்தக் கோலாசலத்தில் தவநிலையினின்று நிர்ச்சலமான மனத்தினாலே தியானித்தருளிய பக்தனுக்கிரங்கி அவன் களி கூரத்தக்கதாய்ச் சகல சிரேஷ்டராகிய வேதியர்கள், முனிவர்கள் புகழ்ந்து பிரார்த்திக்க எழுந்தருளினார் திருவேங்கடத் தெம்பெருமான் என்றவாறு. (4)

மனத்துன்னா - மனத்து - உன்னா: உன்னா - உன்னி - நினைத்து, தியானித்து; செய்யா என்னும் எச்சம். வேங்கடத்தரசு - திருவேங்கடத்து எம்பெருமான்.

## Kōlavaraiyil Tiruvēṅkaṭattāṉ

*ātiyāñ cēṣā calatturai māyōṉ*
*aruḷiṉā lantarat teḻuntu*
*cōtiyā maraṅkaṉ tiruvaṭi yaṭaintu*
*tūyaniṉ malamaṉat tuṉṉā*

*yōtiya varaiyi ṉuyartavam purintō*
*ṉuḷaṅkaḷi kūrntiṭa uyarnta*
*vētiyar muṉivar pukaḻntiṭa veḻunta*
*vēṅkaṭat taraciṉaik kaṇṭāṉ.*

## Vēṅkaṭēsvara on the Kōla Hill

By the grace of the wondrous Lord
Who resides in ancient Cēṣācalam,
The king rose to the sky and reached
The feet of fame-brilliant Araṅkaṉ.
Remaining in meditation with his pure heart
That was blemishless, he conducted
Noble austerities. Rendered happy
There came Vēṅkaṭēsvara praised by brahmins
And sages. Tirutāyu saw him.

(அரங்கன் கோயிலின் வடபால் எழுந்தருளுதல்)

800. சிரத்தினின் முடியுங் கவுத்துவ மணியுஞ்
சிறந்தபீ தாம்பர உடையுங்
கரத்தினைம் படையு முரத்தினிற் திருவுங்
கருடன்மே லெழுந்தபொன் னடியும்
வரத்தினிற் கோலா சலத்தினுத் திராடம்
மருவிய கும்பமா மதியின்
திரத்ததா மரங்கன் திருவுட னெழுந்தத்
திசையினுக் குத்தரத் தெழுந்தான்.

எ-து. இஷ்டகாமிய பலங்களைக் கொடுத்தருளுகின்ற வேங்கடத் தெம்பெருமானது சிரசிலே தரித்தருளிய இரத்தின மகுடமும், திருமார்பகத்தில் இலங்கிய கவுத்துவாபரணமும், திருவரையில் அணிகின்ற பீதாம்பர உடையும், திருக்கராம்புய மலரினேந்திய சங்கு, சக்கர, கட்கம், கோதண்டம், கதை என்னும் பஞ்சாயுதமும் விளங்கிப் பிரகாசிக்கத்தக்கதாய், ஸ்ரீ மகா லட்சுமி சமேதராய்க் கருடவாகனரூடராய்ச் சிறந்த உத்திராட நட்சத்திரத்திலே கும்ப மாசத்தில், கோலாசலத்தில் அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ லட்சுமி பதியாகிய அரங்க நாயகர் சன்னதியின் வடபாலிலே திருவவதாரம் செய்தருளினார் ஸ்ரீ வேங்கடத் தெம்பெருமான் என்றவாறு. (5)

உரம் - மார்பு திரு - இலக்குமி. உத்திராடம் - இருபத்து ஒன்றாவது நட்சத்திரம். கும்பமதி - கும்பமாதம். மாசிமாதம் உத்தரம் - வடக்கு.

## Araṅkaṉ kōyiliṉ vaṭapāl eḻuntaruḷutal

*cirattiṉiṉ muṭiyuṅ kavuttuva maṇiyuñ*
*ciṟantapī tāmpara uṭaiyuṅ*
*karattiṉaim paṭaiyu murattiṉiṟ tiruvuṅ*
*karuṭaṉmē leḻuntapoṉ ṉaṭiyum*
*varattiṉiṟ kōlā calattiṉut tirāṭam*
*maruviya kumpamā matiyiṉ*
*tirattatā maraṅkaṉ tiruvuṭa ṉeḻuntat*
*ticaiyiṉuk kuttarat teḻuntāṉ.*

## To the North of Araṅkaṉ's Temple

With a crown on his head, on his chest
The *kavuttuva* gem, enrobed in a beautiful
Yellow garment, with the five weapons
In his hands, Lakṣmi on his chest,
The Lord appeared on the Karuṭa
Revealing his golden feet. It was
The Uttirāṭam asterix in Māci month[1].
Veṅkaṭēsvara manifested to the north
Of the temple of Araṅkaṉ and Lakṣmi.

(வரமளித்தல்)

801. வந்தமா தவன்பொன் மலரடி வணங்கி
வருந்திய வரசன்முன் னருள்சேர்
இந்திர னமரர் முனிவரர் தவஞ்செய்
தித்தல மடைந்தநற் புகழாற்
சந்ததம் பரம பதத்தினை யடைந்து
சார்ந்திட வரமளித் தமலன்
சந்திரன் வசுக்கள் மருத்துவர் முதலோர்
சேர்ந்தடி பணிந்திட வதிந்தார்.

எ-து. இவ்விதமாக எழுந்தருளிய வேங்கடத்தானது கமலம்போன்ற திவ்விய திருவடிகளிலே பணிந்து வருந்துகின்ற திருதாயுவினுக்கு இரங்கி அருளிச் செய்கின்றார். வாராய் அரசனே! இந்தக் கோலாசலத்தினைச் சேர்ந்த இந்திரன் முதலாகிய தேவர்கள், மகாரிஷிகள் தவத்தினைச் செய்து இந்தத் தலத்திலே வாசம் செய்தமையால் அடைந்த புகழினாலே எப்பொழுதும் இடைவிடாமல் முத்தி வைபவமாகிய பரமபதத்திலே நித்திய சூரியராய் வசிக்கக் கடவாய். ஆகிலும் இந்த அதிசிலாக்கியமாகிய புண்ணிய பர்வதத்தில் எப்பொழுதும் வாசம் செய்கின்றோம் என வரம் அளித்த அமலனானவர் சந்திரன், வசுக்கள், மருத்துக்கள் முதலாகிய பேர்கள் போற்றத்தக்கதாய்த் திருவவதாரம் செய்தருளினார் திருவேங்கடத்தெம்பெருமான் என்றவாறு. (6)

**ஸ்ரீ வெங்கடாசலபதி திருஅவதார அத்தியாயம் முற்றிற்று.**

## Varamaḷittal

*vantamā tavaṉpoṉ malaraṭi vaṇaṅki*
*varuntiya varacaṉmuṉ ṉaruḷcēr*
*intira ṉamarar muṉivarar tavañcey*
*tittala maṭaintanar pukaḻār*
*cantatam parama patattiṉai yaṭaintu*
*cārntiṭa varamaḷit tamalaṉ*
*cantiraṉ vacukkaḷ maruttuvar mutalōr*
*cērntaṭi paṇintiṭa vatintār.*

## Giving Boons

Saluting the golden feet of the Lord
Who had arrived, the king stood anxious.
The Lord gave him the boon of heavens
As he had performed penance in this hill
Where Intiraṉ, the gods and sages had engaged
Themselves in austerities. The Pure One
Also chose to stay here, saluted by the moon,
The Vacus, the Maruts and the rest.

# 43. முப்பத்தொன்பதாவது
# ஸ்ரீ வைகுண்ட பெருமாள் திருஅவதார அத்தியாம்

கயிலாயபதியின் தோழனாகிய குபேரன் இலங்காபுரியை ஆண்டு வந்தான். இராவணனானவன் பிரமனை நோக்கித் தவம் செய்து தவ வலிமை பெற்றவனாய் வந்து இலங்கையில் அரசுபுரிய எண்ணினான். அதன்படியே நால்வகைச் சேனையுடனே வந்து குபேரனை வென்று இலங்கையின் ஆட்சியைக் கைப்பற்றினான்.

இராவணனிடம் தோல்வியுற்ற குபேரன் நாராயணமூர்த்தியை நினைந்து பரமபதத்தை நோக்கிச் சென்றான். இடையே பெருக்கெடுத்தோடிய விரசா நதியினைக் கடக்க இயலாதவனாய் நின்றான். அவனது நிலையைக் கண்ட துவார பாலகர்கள் குபேரனைக் கண்டு, ஐயனே! இந்த வடிவத்தோடு விரசா நதியைக் கடந்து செல்ல முடியாது. இரண்டு புயத்திலும் சங்கு சக்கரக் குறிகளைப் பெற்றவர்களாய்க் குருவின் அருள்பெற்ற அடியார்களுக்கே இவ் ஆறானது வழிவிடும் என்று கூறினார்கள். குபேரன் மேலும் வருத்தமடைந்தவனாய்ப் பரிதவித்தான். அப்போது அங்கு தோன்றிய நாரத முனிவர் குபேரனை நோக்கி, இலங்காதிபதியே! பரம பதத்தை அடைய விரும்புவோர் அரங்க நாயகருக்கு என்றென்றும் பக்தர்களாய் விளங்க வேண்டும். ஐம்புலன்களைக் கடந்தவர்களாய் விளங்க வேண்டும். நீயோ! போக பாக்கியங்களை விரும்பியவன். எனவே நீ இந்த வைகுந்தத்தை அடைய முடியாது. விரசாநதியும் வழி விடாது. எனவே பிறவிக்கடலை நீக்க விரும்புபவர்கள் இந்த நிலவுலகத்தில் தமது குருவின் அருளால் அந்த செல்வத்தைப் பெறுவார்கள். அந்தக் குருவினைப் பெறுவதற்குரிய புண்ணியதலம் எது என்றால் தலங்களுக்கெல்லாம் சிறந்து விளங்கும் கோலாசலம் என்னும் மலையேயாகும். அந்த மலையில் சென்று தவம் செய்வையாயின் பரவாசுதேவனின் அருள் கிடைக்கும். உனது எண்ணம் நிறைவேறும் என்று கூறினார்.

நாரதரை வணங்கி விடைபெற்று இந்நிலவுலகை அடைந்தான் குபேரன். கோலாசலமலைக்குச் சென்றான். இலக்குமி தீர்த்தத்தில் நீராடி அதன் எதிரில் அமர்ந்து ஒரு திங்கள் தவம் செய்தான். எம்பெருமான் பஞ்சாயுத பாணியாய்க் கார்த்திகைத் திங்கள் மிருகசீரிட நாளில் குபேரன் முன் தோன்றினார். அவர் திருவடிகளைப் பணிந்த குபேரன் தன் துயரங்களை எடுத்துக் கூறினான். வைகுந்தநாதராகிய எம்பெருமான் அவனை நோக்கி, குபேரனே! உன்னைத் துன்புறுத்திய இராவணனை நொடிப்பொழுதில் மாய்த்து விடுகிறேன் என்று கூறித் தெற்கு நோக்கி நடந்தார்.

இராவணனை அழிக்கச் செல்லும் வைகுந்தநாதரை வணங்கி, ஐயனே! தங்கள் திருவடித் தாமரைகளை அடைந்த அடியேன் எல்லாத் துன்பங்களும் நீங்கியவன் ஆனேன். இதன் மேலும் வேறு பேற்றினை நான் விரும்பவில்லை என்று கூறினான் குபேரன். அவ்விடத்தில் விரைந்து வந்து சேர்ந்த கயிலாயபதியாகிய பரமசிவன் வைகுந்தநாதரிடத்தில் கூறுகின்றார். ஐயனே! தாங்கள் இக்காலத்தில் இலங்கையை அடைந்திடக் கருதினால் என் வரங்கள் எல்லாம் அழியும். எனவே உமது புகழ் மேலும் ஓங்குமாறு அன்பர்களுக்கு

அருள்புரிய வேண்டும் என்று கூறினார். அதுகேட்ட வைகுந்தநாதன் குபேரனே! இன்னும் சிறிது காலம் சென்றபின் இராவணனை அழித்து உமது விமானத்தைப் பெற்றுத்தருகிறோம். அதுகாறும் நீ வசிக்கத்தக்கதாக ஒரு சிறந்த நகரத்தினை அமைத்துத் தருகிறோம் என்று கூறி, சிவபெருமானை நோக்கித் தாங்கள் கந்தமாதனம் என்னும் மலைக்குச் சென்று ஒரு நகரத்தை உண்டாக்கிக் குபேரனுக்கு முடிசூட்டி வையுங்கள் என்று அருளினார். கயிலாயபதியாகிய சங்கரனும் பார்வதிதேவியுடன், பிரம்மன் முதலான தேவர்கள் சூழ, முருகப்பெருமான் வதிகின்ற கந்தமாதனம் என்னும் மலைக்குச் சென்று ஒரு நகரத்தை உண்டாக்கிக் குபேரனுக்கு முடிசூட்டி வையுங்கள் என்று அருளினார். கயிலாயபதியாகிய சங்கரனும் பார்வதிதேவியுடன், பிரம்மன் முதலான தேவர்கள் சூழ, முருகப்பெருமான் வதிகின்ற கந்தமாதனம் என்னும் மலையை அடைந்து ஆயிரம் யோசனை நீள, அகல முள்ளதும், மதில், கோட்டை, அகழி, மாடமாளிகை போன்ற சிறப்புகளை யெல்லாம் உடையதும், அனைத்து வளப்பங்களையும் பெற்றதுமான ஒரு நகரத்தினை தேவ கம்மியனாகிய மயனைக் கொண்டு இயற்றுவித்துக் குபேரனுக்கு முடிசூட்டி வைத்தார்.

அதன் பிறகு அனைவரும் புறப்பட்டுக் கோலாசலத்தை அடைந்தார்கள். வைகுந்தநாதனைத் திருஆராதனம் செய்து துதித்தார்கள். அவர்களை நோக்கி தேவர்களே! இந்தக் கோலாசலமானது பூலோகப் பரமபதமாகும். இதனை நினைப்பவர்களும், தியானிப்பவர்களும் பிறவித் துன்பத்தை ஒழிவார்கள். இவ்விடத்திலே யாம் என்றும் எழுந்தருளியிருப்போம் என்று கூறி இலக்குமி தீர்த்தத்தின் எதிராக எழுந்தருளி வதிகின்றார் வைகுந்தநாதன்.

**(இலங்கையில் குபேரன்)**

802. **சந்திர சேகரத் தாணுவின் றாடொழூஉ**
**தந்தி ரஞ்சொற் றனபதி லங்கையின்**
**முந்தி யாண்டுசெங் கோலின் முறைவழா**
**திந்தி ரன்தனை யொத்திருந் தானரோ.**

எ-து. சடாபாரத்தினது கங்கையினைத் தரித்தும், சந்திரக் கீற்றினை அணிந்தும் பிரகாசிக்கின்ற தாணுவாகிய கயிலாய பதிக்குக் கல்வித் தோழனாகிய குபேரனானவன் முதன்மையாகிய இலங்கையினது பட்டாபிஷேக பதியாய்ச் செங்கோல் முறை வழுவாமல் இந்திரன் செல்வத்துக்கும் மேலாகிய செல்வத்துடனே வாழ்ந்தான் என்றவாறு. (1)

தாணு - சிவபெருமான்; இலிங்கவடிவினன்.

## Ilaṅkaiyil Kupēraṉ

*cantira cēkarat tāṇuviṉ ṟāṭolūu*
*tanti rañcoṟ ṟaṉapati laṅkaiyiṉ*
*munti yāṇṭuceṅ kōliṉ muṟaivaḻā*
*tinti raṉtaṉai yottirun tāṉarō.*

## XLIII. The Manifestation of Vaikuṇṭa Perumāḷ

### Kupēraṉ in Laṅka

Kupēraṉ was a fellow-disciple of Civaṉ,
The crescent-crowned. He ruled Ilaṅkai
In days of yore, righteously.
He was like Intiraṉ.

(இலங்கையில் இராவணன்)

803. தசக்கி ரீப னவனர சாளுநாள்
விசித்தி ரத்தவம் வேண்டி யிழைத்தலு
நசித்த லின்றிய நல்லன மூர்பவன்
கசித்த ளித்த வரத்தின் கணித்ததால்.

எ-து. இவ்விதமாகக் குபேரனானவன் அரசாட்சி செலுத்தி வருமளவில் இராவணனானவன் பிரம தேவரை நோக்கி அரிதாகிய தவங்களைச் செய்து, தபோபலத்தினாலே மிகுந்த பராக்கிரம சாலியாய், யாவரும் எதிரில்லாமல், திசைகளெங்கும் நடுங்கத் தக்கதாய் இலஙகையில் வந்து அரசாட்சி செய்வதற் கிசைந்தான் என்றவாறு. (2)

தசக்கிரீபன் - இராவணன் கிரீபம் - கழுத்து. கசித்தல் - இரங்குதல்.

### Ilaṅkaiyil Irāvaṇaṉ

*tacakki rīpa ṉavaṉara cāḷunāḷ*
*vicitti rattavam vēṇṭi yiḻaittalu*
*nacitta liṉṟiya nallaṉa mūrpavaṉ*
*kacitta ḷitta varattiṉ kaṇittatāl*

### Rāvaṇaṉ in Ilaṅkai

As Kupēra was ruling thus,
The ten-headed Rāvaṇaṉ performed
Wondrous austerities. Invincible Piramaṉ
Who rides the swan gave him boons
With compassion. Emboldened Rāvaṇaṉ
Rose in rebellion.

(குபேரனும் இராவணனும் போர்)

804. **இலங்கை யெய்தி யிமைப்பினில் வெற்றிபெற்**
**றலங்க லந்தோள் வச்சிர வண்ணனார்**
**பலங்க ளீந்த விமானம் பறித்துப்பின்**
**துலங்கி யாண்டனன் சூரபன் மாவைப்போல்.**

எ-து. அப்படிப் பிரமாஅனுக்கிரகம் செய்தருளிய வரத்தினாலே பராக்கிரம மதிக்கிரமித்து இரத, கச, துரக, பதாதி ஆகிய நான்கு வகை தளதந்திரத்துடனே இலங்கையைச் சூழ்ந்து, யுத்தங்கள் செய்து ஒரு நிமிடமாத்திரத்தின் செயசாலியாய்க் குபேரனை வென்று, வெற்றி பெற்று யாவராலும் சொல்வதற்கரிதாகிய புஷ்பக விமானத்தையும் பறித்துக் கொண்டு தான் அனேக அசுர சேனைகளுடனே பட்டாபிஷேகபதியாய் அரசாட்சி செய்தான் சூரபன்மாவினைப் போல இலங்கையில் என்றவாறு. (3)

## Kupēraṉum Irāvaṇaṉum pōr

*ilaṅkai yeyti yimaippiṉil veṟṟipeṟ*
*ṟalaṅka lantōḷ vaccira vaṇṇaṉār*
*palaṅka ḷīnta vimāṉam paṟittuppiṉ*
*tulaṅki yāṇṭaṉaṉ cūrapaṉ māvaippōl.*

## Kupēraṉ and Rāvaṇaṉ Locked in Battle

Rāvaṇaṉ reached Laṅkai, in a thrice
Won victory over Kupēraṉ with garlanded
Chest, took possession of his air-chariot
And was crowned. He reigned like Cūrapatmaṉ.

(குபேரன் இலங்கையை விட்டு நீங்குதல்)

805. **தனப திப்பெயர் தாரணி வேந்தனும்**
**மனதி ளைத்திட மாயனை யுன்னிமால்**
**புனித மாகுமுன் பொன்னடி காணவென்**
**றினிய நற்பர மப்பத மெய்தினான்.**

எ-து. அப்படித் தனபதியாகிய குபேரனானவன் இராவணனுக்குப் பயந்தவனாய் இளைத்துத் தனது அரசாட்சியையும் விட்டுப் புஷ்பக விமானத்தையும் பறிகொடுத்த அந்தச் சமயத்தில் ஸ்ரீமன் நாராயணனை மனத்திலே தியானித்து, அவரது பொற்றாமரைக் கமலம் போன்ற திவ்விய திருவடிகளைக் கண்டு இன்பத்தை அடைய வேண்டி அதி சிலாக்கியமாகிய பரமபதத்திற்கு எழுந்தருளினான் என்றவாறு. (4)

தனபதி - குபேரன்.

### Kupēraṉ ilaṅkaiyai viṭṭu nīṅkutal

*taṉapa tippeyar tāraṇi vēntaṉum*
*maṉati ḷaittiṭa māyaṉai yuṉṉimāl*
*puṉita mākumuṉ poṉṉaṭi kāṇaveṉ*
*riṉiya naṟpāra mappata meytiṉāṉ.*

### Kupēra Leaves Ilaṅkai

The garlanded King known as the Lord
Of wealth, grew wan, meditated on the Supreme,
And desiring to envision his golden feet
And gain comfort, went to the heavens.

(குபேரன் விரசா நதியைக் காணுதல்)

806. யோக மார்க்கத்தி னானுயர் கின்றதோர்
பாக மாம்விர சாநதிப் பாங்கரி
னேக சக்கிய மில்லா திளைத்தது
நாக மாவணை நாதனைப் போற்றினான்.

எ-து. அந்தக் குபேரனானவன் யோகமார்க்கக் குளிகையினாலே ஆகாச மார்க்கத்தின் எழும்பி, அண்டங்களெல்லாம் கடந்து அதற்கு மேலாகிய சராசரங்களெல்லாம் புகழ்கின்ற விமலமாகிய விரசாநதியைக கண்டு, அற்புதம் அடைந்து அந்த நதியினது பிரபலப் பெருக்கினைக் கண்டு பிரமித்து அதைக் கடக்கச் சக்தியில்லாது இளைத்தவனாய் ஆதிசேஷ சயனத்தில எழுந்தருளிய ஸ்ரீ வைகுண்ட நாதனைப் புகழ்ந்து உருகினான் என்றவாறு. (5)

விரசாநதி - ஆகாசகஙகை சககியம - சக்தி.

### Kupēraṉ viracā natiyaik kāṇutal

*yōka mārkkatti ṉāṉuyar kiṉṟatōr*
*pāka māmvira cānatip pāṅkari*
*ṉēka cakkiya millā tiḷaittatu*
*nāka māvaṇai nātaṉaip pōṟṟiṉāṉ.*

### Kupēraṉ Sights Viracā River

By his yogic powers, Kupēraṉ rose up
In the sky, sighted the Viracā river
In heaven, but could not ford it.
Tired, he meditated on the Supreme
Who rests on a snake.

(துவார பாலகர்)

807. **விளவை நோக்கியம் மேலவன் சிந்தனைத்**
**தளர்ந்து ரைத்தலும் வைகுந்தக் காவலர்**
**குளந்த னிலுன்னி வுத்தமன் தன்முக**
**மலர்ந்தி டச்சில வாய்மை மொழிவரால்.**

எ-து. இவ்விதமாய்க் குபேரனானவன் யோக மார்க்கத்தினாலே வந்திளைத்தவனாய் அந்த விரசா நதியைக் கடக்கச் சத்தி யில்லாதவனாய்க் கிலேசப்படுவதை அந்தப் பரமபதத்துக்குக் காவலாளிகளாகிய துவார பாலகர்கள் கண்டு, மனம்பொறாமல் அவரிடத்திற்கு வந்து சில வாய்மையாகிய விருத்தாந்தங்களைச் சொல்லத் தொடங்கினார்கள் என்றவாறு. (6)

## Tuvāra pālakar

*vilavai nōkkiyam mēlavan cintanait*
*talarntu raittalum vaikuntak kāvalar*
*kulanta nilunni vuttaman tanmuka*
*malarnti taccila vāymai molivarāl.*

## Guardians

As he prayed, wilting with helplessness,
The guardians of Vaikuntam came there
And spoke words that brought comfort
To the good man's face.

(குபேரனிடம் துவார பாலகர்)

808. **திவ்வி யத்தி னுருக்கொடு தேர்ந்துளாய்**
**செவ்வி யுற்ற திகிரி வளைக்குறி**
**தெய்வ நாயக மாய்ப்புயத் தேந்தியே**
**இவ்வி டத்தின் வருவ தியல்பதாம்.**

எ-து. அந்தத் துவாரபாலகாள் குபேரனைப் பார்த்து ஒரு வார்த்தை கூறுகின்றார்கள். வாராய் இராசசேகரனே! இந்த உருவத்தினைக் கொண்டு விரசாநதியைக் கடந்து பரமபதத்தில் பிரவேசிக்கக் கூடாதாகையால் திவ்விய ரூபமாகிய பரம பாகவத உருவினைக் கொண்டு சிறந்திருக்காநின்ற சக்கரக் குறியாகியதை இரண்டு புயத்தினும் தரித்தவர்களாய்த் தெய்வ நாயகமாய் விளங்குகின்ற குருவினருள் கொண்ட அடியார்களுக்கு இந்த விரசாநதியானது வழிவிடும். மற்ற பிரம்மாதிகளுக்கும் கடக்கத்தரமல்ல வென்றார்கள் துவாரபாலகாள் என்றவாறு. (7)

### Kupēraṉiṭam Tuvāra pālakar

*tivvi yatti ṉurukkoṭu tērntuḷāy*
*cevvi yuṟṟa tikiri vaḷaikkuṟi*
*teyva nāyaka māyppuyat tēntiyē*
*ivvi ṭattiṉ varuva tiyalpatām.*

### Guardians to Kupēraṉ

'You have sought to ford a river
Which is meant for the holiest.
If your shoulders receive the impress
Of the auspicious discus, then alone
Would it be possible to come over'.

(குபேரன் வருத்தம்)

809. என்று ரைத்தனர் காவல ரேந்தலு
மன்ற லந்துள பத்தொடை மாயனைச்
சென்று வந்தனை செய்தென் குறையினை
இன்று கூற இசைந்தில வென்செய்கேன்.

எ-து. இவ்விதமாய்த் துவாரபாலகர் கூறிய வார்த்தையைக் கேட்ட அரசனானவன் திவ்விய பரிமளங்களைக் கமழ்கின்ற துளப மாலாதரனாகிய பரம மூர்த்தியினைத் தரிசித்து அவரது செந்தாமரைக் கமலம்போன்ற திருவடிகளிலே விண்ணப்பம் செய்து என் மனக் குறையினை யகற்ற பாக்கியம் பெற்றேனில்லையாகிலும் இந்த வினைப் பயனுக்கு என் செய்வேன் என்று மனது கலங்கினான் குபேரன் என்றவாறு. (8)

### Kupēraṉ varuttam

*eṉṟu raittaṉar kāvala rēntalu*
*maṉṟa lantuḷa pattoṭai māyaṉaic*
*ceṉṟu vantaṉai ceyteṉ kuṟaiyiṉai*
*iṉṟu kūṟa icaintila veṉceykēṉ*

### Kupēra's Sorrow

Hearing what the guardians said,
Kupēra spoke: 'Though I had come
To salute and tell the Lord who sports
Scented garlands of my woe and seek redress,
I am helpless. What shall I do?'

(நாரதர் குபேரனிடம் வருதல்)

810. வீணை மாமுனி யவ்விர சாநதி
காண வந்தங் கரசனைக் கண்ணுற்றே
மாண்ப தாமுகம் வாடிய மாயைதான்
சேணு ளோர்புக ழாய்ச்செப்ப வென்றனன்.

எ-து. அப்படி அதி சிலாக்கியமாகிய பரமபத தரிசனம் காணுதற்கு அரிதாய்ப் பரிதவிக்கின்ற குபேரனானவன் விரசாநதிக்கண் மிகுந்த துன்பத்தை அடைந்த் சமயத்தில் திரிலோக சஞ்சாரியாயும், ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டராயும் வீணைமுனியென்று விளங்குகின்ற நாரத மகாரிஷியானவர் அந்த விரசாநதிக் கரையில் எழுந்தருளினவராய் குபேரனே! உனது செல்வங்களெல்லாம் இழந்து தாமரைக் கமலம் போன்றலர்ந்த உனது முகமானது வாட்டமுற்ற செய்கையினைத் தெரிவிக்கக் கடவாயாகிலும் சேணுளோராகிய தேவர் கூட்டங்களெல்லாம் புகழாநின்ற இலங்காதிபதியே என்றார் நாரத மகாரிஷி என்றவாறு. (9)

## Nāratar Kupēraṉiṭam varutal

*vīṇai māmuṉi yavvira cānati*
*kāṇa vantaṅ karacaṉaik kaṇṇuṟṟē*
*māṇpa tāmukam vāṭiya māyaitāṉ*
*cēṇu ḷōrpuka ḻāycceppa veṉṟaṉaṉ.*

## Nāratar to Kupēraṉ

The sage who plays the lute
Came to the Viracā river and saw the king.
He enquired: 'One who is praised by gods!
What is the cause for your noble face
To wilt even thus?'

(நாரதர் குபேரனைத் தேற்றுதல்)

811. விளைந்த வார்த்தை வீணை முனிக்கவன்
தளந்து ரைத்தலுந் தாழ்வினை யுன்னியே
அளந்தவ னன்றை வானர சேவினை
களைந்து நல்வினை யெய்தநீ காண்பனால்.

எ-து. இவ்விதமாய் அருளிச்செய்த நாரத முனிவனைப் பார்த்துத் தன் நகரத்தையும் புட்பக விமானத்தையும் இராவணன் பறித்துக் கொண்டதும், தான் விரசாநதிக்கரை வந்ததும், துவாரபாலகாள் சொன்ன விருத்தாந்தங்களும் ஆதியோடந்தமாய் விண்ணப்பம் செய்ய

அருளிச் செய்கின்றார். வாராய் இலங்காதிபதியே! நீர் பயத்தை அடைய வேண்டியதில்லை. உனது வினைப்பயனானது நீங்கி மிகுந்த செல்வத்தினை அனுபவிக்கப் போகிறாய். ஆகிலும் அந்த ஸ்ரீ வைகுந்த நாதனைக் கண்டு ஆனந்த இன்பத்தினை அடையத் தக்கதாகிய மார்க்கங்களைச் சுருக்கமாக அருளிச் செய்கின்றோம் என்றார் நாரத முனிவர் என்றவாறு. (10)

## Nāratar Kupēraṉait tēṟṟutal

*viḷainta vārttai viṉai muṉikkavaṉ*
*taḷantu raittalun tāḻviṉai yuṉṉiyē*
*aḷantava ṉaṉṟai vāṉara cēviṉai*
*kaḷaintu nalviṉai yeytanī kāṇpaṉāl.*

## Nāratar consoles Kupēraṉ

To the sage with the lute,
Kupēraṉ spoke of his sorrows
And received a reply: 'O King!
You will be rid of your sorrows
And gain all happiness'.

**(நாரதர் கூறுதல்)**

812. **பிரமன் சங்கர னாதியர் பேர்பெறு**
**திரம தான முனிவர் திகழ்ந்திடு**
**விரசை மாநதி தன்னை வியப்பொடு**
**பரவிச் சென்று பரமனைக் காண்கிலார்.**

எ-து. வாராய் இராசசேகரனே! சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமாவும், சம்மார கர்த்தாவாகிய சங்கர னும், மிகுந்த சீலராகிய முனிவர் கூட்டங்களும், பிரகாசிக்காநின்ற தேவர்கூட்டங்களும் இந்தப் பரம பாவனமாகிய விரசா நதியினைக் கடக்க வல்லவர்கள் அரிதாகிய பரம பதச் செல்வத்தை அடைகின்றது எளிதாவென்று பின்னும் கூறுகின்றார் நாரதமுனிவர் என்றவாறு. (11)

## Nāratar kūṟutal

*piramaṉ caṅkara ṉātiyar pērpeṟu*
*tirama tāṉa muṉivar tikaḻntiṭu*
*viracai mānati taṉṉai viyappoṭu*
*paravic ceṉṟu paramaṉaik kāṇkilār.*

## Nāratar's Assurance

'The crossing of this Viracā river
Is possible for Piramaṉ, Civaṉ
And the noble sages. No easy task is it
To cross and envision the Supreme.

(அரங்கனைத் துதிப்பதன் பயன் கூறுதல்)

813. பரம மாம்பத மேவுறு பண்பினர்
திரம தாய்ச்சென்ம சென்மங்க ளிற்செய்த
பரவு யோகத் தவகன்மம் பற்றறச்
சரண டைந்தவர் சார்குவர் முத்தியே.

எ-து. வாராய் குபேரனே! அதிசிலாக்கியமாகிய பரமபதச் செல்வத்தினையடைய விரும்பிய பேர்கள், இந்தப் பூமண்டலங்களில் தாங்கள் சென்ம சென்மங்களாகிய அனந்த சென்மங்களில் செய்த சகல கர்மங்களும், யோகங்களும் தவங்களும் தானங்களும் திரமாகிய மனத்தினாலே சேதனா சேதனங்களினுள்ளும் புறம்பும் வியாபித்தருளிய பொன்னரங் கேசருக்கு அற்புதம் செய்கின்ற பரம பாகவதர்கள் பரவாசுதேவன் பாததாமரை நிழலில் ஆனந்த வைபவ இன்பத்தினை அடைவார்கள் என்றவாறு. (12)

## Araṅkaṉait tutippataṉ payaṉ kūṟutal

*parama māmpata mēvuṟu paṇpiṉar*
*tirama tāyccenma ceṉmaṅka ḷiṟceyta*
*paravu yōkat tavakaṉmam paṟṟaṟac*
*caraṇa ṭaintavar cārkuvar muttiyē.*

## Pray to Araṅkaṉ

'Those who wish to reach the abode
Of the Supreme with their hearts desireless
For the fruits of yōga, penance and good deeds
Performed through several births,
And who surrender to the Lord
Will alone gain Realisation.

(அரங்கனையடைய விரசை தாண்ட வேண்டும்)

814. விரசை தாண்டிடில் விண்டுவின் செய்கையால்
கரத லப்புய நான்கிற் கதிர்த்திகழ்
பரவு வால்வளை யாழி பரித்தவர்
சரண தாமரை நீழலிற் சார்குவார்.

எ-து. வாராய் இராசசேகரனே! பின்னும் இந்த விரசாநதியினைக் கடந்த பரம பாகவதாள் ஸ்ரீ விஷ்ணுவினுடைய அனுக்கிரகத்தினால் அவர்களுக்கெல்லாம் சங்கு, சக்கரம், சதுர்ப்புசம், திவ்வியானந்த ரூபத்தை யடைந்தவர்களாய், நித்திய சூரியர்களுடனே பரவாசு தேவன் பாத கமலங்களின் நிழலின்கண் வீற்றிருப்பார்கள் என்றவாறு. (13)

## Araṅkaṉaiyaṭaiya viracai tāṇṭa vēṇṭum

*viracai tāṇṭiṭil viṇṭuviṉ ceykaiyāl*
*karata lappuya nāṉkiṟ katirttikaḻ*
*paravu vālvaḷai yāḻi parittavar*
*caraṇa tāmarai nīḻaliṟ cārkuvār.*

## Viracā Has to be Forded

'Those who cross the Viracā river
Receive from Viṣṇu the impress
Of the brilliant discus that illumes
The Lord's four shoulders like the sun,
And then reach the shade of his feet.

(ஐம்புலன் வென்றவர்)

815. காமக் குரோதம தாதி கடந்துளார்
சேம மாம்பர மப்பதஞ் சென்றிடி
னாமப் பூமியி னென்று நணுகிலாத்
தாமத் தார்புயத் தாழ்தடக் கையினாய்.

எ-து. பின்னும் கூறுகின்றார் நாரத மகாரிஷியானவர். காம, குரோத, லோபம்; மோகம், மதம், மாச்சரியம் முதலாகிய ஐம்புலக் குற்றங்களைக் கடந்த பெரியோர்கள் அதி சிலாக்கியமாகிய பரம பதச்செல்வத்தினை அடைந்து நித்தியானந்த வைபவ இன்ப சாகரத்தில் மூழ்கிய வாத்தும கோடிகள் இந்தக் கர்ம பூமியினென்றும் செனிப்பதில்லை. வாராய் திவ்விய பரிமளங்களைக் கமழாநின்ற ஆசானுபாகுவாகிய கராம்புயங்களை யுடைய இராச சேகரனே என்றார் மகாரிஷியாகிய வீணை முனிவர் என்றவாறு. (14)

## Aimpulan venravar

*kāmak kurōtama tāti katantulār*
*cēma māmpara mappatañ cenriti*
*nāmap pūmiyi nenru nanukilāt*
*tāmat tārpuyat tāltatak kaiyināy.*

## Controlling the Five Senses

'Those who have given up lust, hatred
And the rest, reach the saviour - feet
Of the Lord. They have no rebirth.
O King with shoulders ornamented
By flower-garlands!

(அரங்கன் துயில் கொள்ளுந் தலம்)

816. போக மாதி பொருந்திய உள்ளத்தான்
ஏக நாயக னற்பத மெய்துமோ
யோக மால்துயில் கொண்டிடு மோர்தல
மாகு முன்வினைக் காரியன் பாதமே.

எ-து. வாராய் குபேரனே! நீயோ வென்றால் போக பாக்கியங்களை இச்சித்தவனாய் இந்த வைகுந்தத்தைச் சேரலாகுமோ? எவராலும் காணப்படாத அந்தப் பரம மூர்த்தியைக் காணுதற்கு எளிதாகிய இந்தப் பூமண்டலங்களின் அதி சிரேஷ்டமாகிய தலம் உண்டு. அத்தலத்தில் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்கநாதனை ஆசாரியன் அருளினாலே சரணாகதி செய்து, அந்தச் சரணாகதியினது பிரபலத்தினாலே உனது தீவினையானது அகன்று இஷ்ட போகங்களை அனுபவிக்கப் பெறுவாய் என்றார் நாரத மகாமுனிவர் என்றவாறு. (15)

## Araṅkan tuyil kollun talam

*pōka māti poruntiya ullattān*
*ēka nāyaka narpata meytumō*
*yōka māltuyil kontitu mōrtala*
*māku munvinaik kāriyan pātamē.*

## Where Araṅkan Rests

Can one like you who is still lost
In worldly enjoyments, hope to gain
The wondrous presence of the Primal One?

If you go to the place where the Lord
Rests in yogic sleep, your evil past
Will be destroyed.

(அத்தலத்தை அடைவாயாக)

817. குருவி னின்னருட் கொண்டவன் செய்திடும்
பெருகு கின்ற வினைப்பெருங் குன்றெனும்
மருவு பஞ்சிற்கு ளரனழல் மாட்சிமேற்
திருவி னன்னரு ளாற்சிறந் தோங்குமே.

எ-து. வாராய் குபேரனே! இந்தப் பூமண்டலங்களின் செனன சாகரத்தினை நீக்க வேண்டிய ஆத்துமாக்கள் தனதாசாரியரை உபசரித் தந்தக் குருவினது பாதத் தாமரைகளிலே சரணாகதியாக அடைந்து அவரது கிருபையால் ஆத்துமாக்கள் சென்ம சென்மங்கள் தோறும் செய்கின்ற வினைப் பயனானது பெருகிய பெருங்குன்றமாகிய பஞ்சுக்குள் அக்கினிப்பொறி போலுமந்தத் திருவருளினாலே மிகுந்த செல்வத்தினை அடைவார்க ளாகையால் நீயும் அந்த ஸ்தலத்தினைச் சேரக் கடவாய் என்றார் நாரத மகாரிஷி என்றவாறு. (16)

திருவினன் + அருள்.

## Attalattai aṭaivāyāka

*kuruvi ṉiṉṉaruṭ koṇṭavaṉ ceytiṭum*
*peruku kiṉṟa viṉaipperuṅ kuṉṟeṉum*
*maruvu pañciṟku ḷaraṉaḻal māṭcimēṟ*
*tiruvi ṉaṉṉaru ḷāṟciṟan tōṅkumē.*

## "Go to that Place"

The immense mountain of one's evil past
Will be destroyed like cotton by fire,
If he gains the compassion of the Lord.
He will become prosperous.

(அத்தலமே கோலாசலம்)

818. திலகம் போன்றொளிர் கோலக் கிரிசென்றங்
குலைவி லாத தவத்தை யுஞற்றிடிற்
பலர்பு கழந்தப் பரம னருளினால்
இலகு முன்ற னுளங்குளிர்ப் பெய்துமே.

எ-து. அந்தத் தலமாவ தேதென்றால் இந்த உலகத்தின் வீற்றிருக்காநின்ற பரம பவுத்திரமாகிய தலங்களுக்கெல்லாம் திருமுக மண்டலங்களில் அணிகின்ற திலதப் பொட்டினைப்போல, சிரேஷ்டமாய் விளங்காநின்ற கோலாசல பர்வதமென்றொரு பர்வதம் உண்டு. அந்தப் பர்வதத்தினைச் சேர்ந்துனது ஞானேந்திரியம், கன்மேந்திரியம் ஆகிய தசேந்திரியங்களையும் உள்ளடக்கி, ஞான சுரூபனான ஆத்தும சொரூபத் தின்பத்தின் மனத்தோடுங் கூடினவனாய் அந்தப் புண்ணிய பர்வதத்தினின்று தவம் செய்ய, அந்தத் தபோபலன் தோன்ற, அனந்தங் கோடியாய் தழைத்துப் பல சமயங்களினும் புகழாநின்ற பரமனாகிய பரவாசுதேவன் அருளினாலே உனது மனதிலே எண்ணிய எண்ணங்களெல்லாம் முடிவெய்தும் என்றார் நாரத முனிவர் என்றவாறு. (17)

உலைவு - அழிவு.

## Attalamē kōlācalam

*tilakam pōnrolir kōlak kiricenran*
*kulaivi lāta tavattai yuñarritir*
*palarpu kalantap parama narulināl*
*ilaku munra nulankulirp peytumē.*

## Kōla Hill

'There is Kōla hill that glows brilliant
As a saffron-mark on the forehead;
If you perform blemishless penance,
You will gain all your desires
By the grace of the Lord hailed by all.

### (பூமியில் குபேரன்)

819. **சந்த தம்பொருள் தர்மங்க ளோங்கிட**
**வந்து கூறிய மாதவன் பொன்னடி**
**சிந்தை தன்னிற் சிறந்திட உன்னியே**
**பந்தம் நீங்கிடப் பாரினி னெய்தினான்.**

எ-து. அப்படியாக இந்தத் திரிலோகங்களினும் எப்பொழுதினும் அறம், பொருள், இன்பம் ஆகிய தர்மார்த்த காம மோக்ஷங்களை வெளியிட்டு ஆத்தும கோடிகளைக் கடைத்தேறச் செய்கின்ற நாரத முனிவர் அருளிச் செய்த திருமொழியினைக் கேள்வி செய்து, அவரது பொற்பாத கமலங்களின் அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து, அந்த விரசாநதியினை நீங்கிப் பந்த பாசங்களெல்லாம் அறுத்த அதிசிலாக்கியமாகிய பூமண்டலத்தில் எழுந்தருளினான் குபேரன் என்றவாறு. (18)

## Pūmiyil Kupēraṉ

*canta tamporuḷ tarmaṅka ḷōṅkiṭa*
*vantu kūṟiya mātavaṉ poṉṉaṭi*
*cintai taṉṉiṟ ciṟantiṭa uṉṉiyē*
*pantam nīṅkiṭap pāriṉi ṉeytiṉāṉ.*

## Kupēraṉ on the Earth

Kupēraṉ came down to the earth
As suggested by the sage for the increase
Of the four puruṣārtās.[1] He meditated
Upon the Lord and gave up attachment.

(கோலாசலத்தில் குபேரன்)

820. நித்திய மாகு மிலக்குமி நீள்பதம்
பத்தி யாடிப் பணிந்து தவநிலை
சித்தி யாயொரு திங்கள் சிறந்திட
முத்தி வைகுந்த நாதன்முன் தோன்றினான்.

எ-து. அப்படி நாரத மகரிஷி அருளிச் செய்தபடி கோலாசலத்தில் நித்தியமாகிய ஸ்ரீ மகாலட்சுமியினது பொற்பாத கமலங்களில் பணிந்து, அந்த இலட்சுமி தீர்த்தத்தில் ஆடி, அதற்கெதிராகத் தவநிலை செய்து, அந்தத் தவத்தில் சித்தி பெறத்தக்கதாகிய அஷ்டாங்கயோகம் ஒரு திங்களாகியதோர் மாசம் செய்கின்ற திறத்தால் ஸ்ரீ வைகுண்ட நாதரானவர் கிருபை கூர்ந்து கருடன் பேரில் ஆரோகணிதராய்க் குபேரனுக் கெதிராக எழுந்தருளினார் என்றவாறு. (19)

## Kōlācalattil Kupēraṉ

*nittiya māku miḷakkumi nīḷpatam*
*patti yāṭip paṇintu tavanilai*
*citti yāyoru tiṅkaḷ ciṟantiṭa*
*mutti vaikunta nātaṉmuṉ tōṉṟiṉāṉ.*

## Kupēraṉ on Kōla Hill

He saluted the auspicious feet
Of eternal Lakṣmi with devotion;

1. Dharma, Artha, Kama, Moksha.

Taking to fruitful penance,
He was there for a month.
Vaikunta Perumāḷ now appeared.

(அரங்க நாயகர் காட்சி)

821. விருச்சி கமிரு கசீரி டத்தினின்
கருத்தி னானுயர் வேந்தனைக் கண்ணுற்றே
திருத்த மாம்பர மப்பதச் செல்வனு
மருத்தி கூர்பவன் தன்னை யணுகினான்.

எ-து. அப்படித் தவம் செய்கின்ற தனபதியாகிய குபேரனுடைய இஷ்ட பலனானது நிறைவேறத்தக்கதாய் அருள்கூர்ந்து ஸ்ரீ வைகுந்த நாதரானவர் கீரிடம், மயூர தண்டம் முதலாகிய சர்வாபரண பூசித அலங்கார பஞ்சாயுத பாணியாய்க் கருடவாகனாரூடராய், விருச்சிக மதியான கார்த்திகை மாதத்தில், மிருக சீரிட நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் எழுந்தருளினார். அந்தச் சமயத்தில் கருத்து உருகத் தக்கதாய்த் தவம் செய்கின்ற அரசனைக் கிருபையோடும் நோக்கி அருள் புரிகின்றார் என்றவாறு. (20)

விருச்சிகம் - மாதம், கார்த்திகை மாதம். அருத்தி - இரத்தல், வேண்டுதல்.

## Araṅka nāyakar kāṭci

*virucci kamiru kacīri ṭattiṉiṉ*
*karutti ṉāṉuyar vēntaṉaik kaṇṇuṟṟē*
*tirutta māmpara mappatac celvaṉu*
*marutti kūrpavaṉ taṉṉai yaṇukiṉāṉ.*

## Araṅkaṉ

In the month of Kārttikai with Mirukacīriṭam
Asterix, the Lord manifested
Before the noble king who requested
The boon of entering the Eternal Abode.

(இராவணனை அழிக்கிறேன் என்று அருள் புரிதல்)

822. வந்தி லக்குமி மாதுக் கெதிர்திகழ்
சுந்த ரத்திரு மாலைத் தொழுதவன்
சிந்தை யுள்வினை செப்பிட உன்னியே
முந்தி மாய்ப்பனென் றோதி முடுகினான்.

எ-து. இவ்விதமாய் எழுந்தருளிய அகில லோக நாயகராகிய பரமபத நாதரானவர் பூமண்டலத்தில் அதி சிலாக்கியமாகிய கோலாசல கிரியினில் இலக்குமியார் தீர்த்தத்திற்கு எதிராக எழுந்தருளக் கண்ட குபேரனானவன், சுந்தரத்தோடுங் கூடி விளங்கிய நாராயண மூர்த்தியினது கமலம்போன்ற திவ்விய திருவடிகளிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து அவனது மனத்துயரங்க ளெல்லாம் விண்ணப்பம் செய்ய அருளிச்செய்கின்றார். வாராய் குபேரனே! உன்னை நெருக்கம் செய்த இராவணனை இந்த நொடிப்பொழுதில் மாய்த்து விடுகிறேன் நீர் பயப்பட வேண்டாம் என்றருளிச் செய்து தெற்கு நோக்கி நடக்கத் தொடங்கினார் என்றவாறு. (21)

## Irāvaṇaṉai aḻikkiṟēṉ eṉṟu aruḷ purital

*vanti lakkumi mātuk ketirtikaḻ*
*cunta rattiru mālait toḻutavaṉ*
*cintai yuḷviṉai ceppiṭa uṉṉiyē*
*munti māyppaṉeṉ ṟōti muṭukiṉāṉ.*

## Promise to Destroy Irāvaṇaṉ

Kupēraṉ saluted the handsome Lord
Who appeared at the Lakṣmi spring;
When he made his submission
The Lord gave him the assurance
That he would destroy Irāvaṇaṉ.

(காட்சி தந்ததே போதும் எனல்)

823. ஆதி மூலமென் றோதிய யானைமுன்
சோதி யாகத் துலங்கிய பாதமென்
வேதை தீர விளங்கிட வென்னிடை
யோத வேறு உவந்தில னியானென்றான்.

எ-து இப்படியாக இராவணனைச் சம்மரிக்க நினைத்த பரமபத நாதனைச் சேவித்து விண்ணப்பம் செய்கின்றான் வாரீர் மகானுபாவரே! பூர்வ காலத்தில் கசேந்திராழ்வார், ஆதிமூலம் என்று நினைத்த மாத்திரத்தில் அவரைக் காக்கவேண்டிச் சோதி மயமாகப் பிரகாசித் தெழுந்தருளிய செந்தாமரைக் கமலம்போன்ற திவ்விய திருவடிகளானவை அடியேனை ஒரு பொருளாய் மதித்து இங்கெழுந்தருள யான் என்ன பாக்கியம் செய்தேனாகிலும், பிரமாதிகளாலும் வேதங்களாலும் காணப்படாத அரிதாகிய சரணார விந்தத்தினை அடைந்த அடியேன் சகல வேதைகளும் தீர்ந்து பரமபவுத்திரத்தை அடைந்த யான் மற்றொரு புருஷார்த்தங்களையும் விரும்பே னென்றான் குபேரன் என்றவாறு. (22)

## Kāṭci tantatē pōtum eṉal

*āti mūlameṉ ṟōtiya yāṉaimuṉ*
*cōti yākat tulaṅkiya pātameṉ*
*vētai tīra viḷaṅkiṭa veṉṉiṭai*
*yōta vēṟu uvantila ṉiyāṉeṉṟāṉ.*

## "This Vision is Enough"

The feet that appeared as a brilliance
To the elephant that had cried out,
'Primal Lord!' has now come here
To chase away my sorrows,
I have no more desires left',
Said Kupēraṉ.

(உருத்திரமூர்த்தி தோன்றுதல்)

824. அந்தக் காலை யரனறிந் தோதுவான்
இந்தக் காலை இலங்கையி னெய்திடத்
தந்த வென்வரந் தாமழி கின்றதாய்
உந்த னுள்ளத் துவர்ந்திட லாகுமோ.

எ-து. இவ்விதமாகக் குபேரனானவன் விண்ணப்பம் செய்கின்ற வரன் முறைகளை அறிந்த கயிலாய பதியானவர், அதிக துரிதமாய்ப் பரமபதநாதர் இடத்தில் எழுந்தருளி, அவரது திவ்விய திருவடிகளிலே வேத வாக்கியங்களால் தொழுது விண்ணப்பம் செய்து, வாரீர் மகானுபாவரே! மாதா, பிதா, குரு, தெய்வம் முதலாகியதும், தேவரீரல்லது வேறுண்டோ? இந்தக் காலத்தில் இலங்கையில் எய்திட நினைந்தருள்கையால் அடியேன் கொடுத்த வரப்பிரசாதங்க ளெல்லாம் தாமழிக்கத் தக்கதாய் நினைந்தருளினால், அடியேன் செய்யவேண்டியது என்ன ஆகிலும் சமஸ்தமாகிய தபோ பலங்களும் தேவரீர் திருவுளப்படி யலது வேறில்லை என்றார் உருத்திர மூர்த்தி என்றவாறு. (23)

உவர்ந்திடல் - வெறுத்தல்.

## Uruttiramūrtti tōṉṟutal

*antak kālai yaraṉaṟin tōtuvāṉ*
*intak kālai ilaṅkaiyi ṉeytiṭat*
*tanta veṉvaran tāmaḻi kiṉṟatāy*
*unta ṉuḷḷat tuvarntiṭa lākumō.*

## The Coming of Uruttiraṉ

Learning of these goings-on, Civaṉ came
In all speed and saluted: 'Since you wish
To approach Ilaṅkai to destroy the boons
Granted by me, you should not feel
Averse to me.

(உருத்திர மூர்த்தியின் வேண்டுகோள்)

825. நீதி வேத நெறிவழு வாதுநின்
பாத தாமரை பற்றிய வன்பர்கள்
ஓத வென்று முயர்ந்த பெரும்புகழ்
நீத மாகி நிறைந்திட வேண்டுமால்.

எ-து. வாரீர் மகானுபாவரே! தேவரீர் அருளிச் செய்த நீதி மார்க்கங்களாகிய வேதவிதி வழுவாம லுமது திருவடித் தாமரைகளுக்கு அடிமையான பக்தர்கள் சர்வ காலங்களிலும் இடைவிடாது ஓதுகின்ற உமது உயர்ந்த பெரும் புகழினைப் பதினான்கு உலகினும் நிதமாக நிறைந்து பிரகாசிக்கும் படி யருள்செய்ய வேண்டுமென்றார் உருத்திரர் என்றவாறு (24)

## Uruttira mūrttiyiṉ vēṇṭukōḷ

*nīti vēta neṟivaḻu vātuniṉ*
*pāta tāmarai paṟṟiya vaṉparkaḷ*
*ōta veṉṟu muyarnta perumpukaḻ*
*nīta māki niṟaintiṭa vēṇṭumāl.*

## Uruttiraṉ's Submission

'The devotees who hold on to your feet
Without transgressing the Law,
Praise you. This great fame
Should remain so for ever.'

(குபேரனுக்கு ஆறுதல் கூறுதல்)

826. அன்று ரைத்த வரன்மொழி யன்பினா
லொன்று கூறுவ னுத்தம னாள்சில
சென்ற போது சிறந்திடும் புஷ்பகம்
பண்டு போலப் பதியளிப் போமென்றார்.

எ-து. அப்படி விண்ணப்பம் செய்கின்ற சிவனது வார்த்தைக்கு மிகுந்த அன்பினால் அருளிச் செய்கின்றார். வாராய் குபேரனே! சிவனது வரபாலனங்களெல்லாம் நிறைவேறும் பொருட்டாக இன்னும் சிலகாலம் சென்றபின் உனது புஷ்பக விமானத்தை உனக்குத் தருவோம் ஆகிலும், அந்த இலங்கா தீபத்தினும் அதி சிலாக்கியமாகிய நகரத்தைச் சிருட்டி செய்தருளுகின்றோம். நீ அவ்விடம் சென்று சகல வைபவ இன்பங்களையும் அனுபவிக்கக் கடவதென்று அருளிச் செய்தார் பரமபதநாதன் என்றவாறு. (25)

## Kupēraṉukku āṟutal kūṟutal

*aṉṟu raitta varaṉmoḻi yaṉpiṉā*
*loṉṟu kūṟuva ṉuttama ṉāḷcila*
*ceṉṟa pōtu ciṟantiṭum puṣpakam*
*paṇtu pōlap patiyaḷip pōmeṉṟār.*

## Comforting Kupēraṉ

With love for Civaṉ who spoke thus,
The Lord said: 'O good one!
After the passage of some time,
I shall get back the aerial chariot,
Puṣpaka, for you.'

(கந்தமாதனத்தில் தங்கச் சொல்லுதல்)

827. ஆதி யாம்பர மப்பத வச்சுதன்
ஓது வானொளி ரும்பர்க ளியாவருந்
தீதி லாக்கந்த மாதனஞ் சென்றுயர்
வேத மாமுடி சூட்ட விளம்பினார்.

எ-து. ஆதியாகிய பரம மூர்த்தியானவர் சிவனை நோக்கி அருளிச் செய்கின்றார். இந்திரன் முதலாகிய தேவர்கூட்டங்களுடனே கந்தமாதனத்துக் கெழுந்தருளி அதி சிலாக்கியமாகிய நகரத்தைச் சிருட்டி செய்து வேத விதிப்படி குபேரனுக்கு மகுடாபிஷேகம் செய்வித்து வரக்கடவீர்கள் என்றருளிச் செய்தார் பரமமூர்த்தி என்றவாறு. (26)

கந்தமாதனம் - குலகிரி எட்டில் ஒரு மலை, இராமேசுவரத்தில் உள்ள ஒரு மலை

## Kantamātaṉattil taṅkac collutal

*āti yāmpara mappata vaccutaṉ*
*ōtu vāṉoḷi rumparka ḷiyāvarun*
*tīti lākkanta mātaṉañ ceṉṟuyar*
*vēta māmuṭi cūṭṭa viḷampiṉār.*

## At Kantamātaṉam

The Primal Lord, Accutaṉ of heavens
Told Civaṉ: 'Go with the immortals
Of bright heavens to the blemishless
Kantamātaṉam and there crown Kupēraṉ as king.'

(கந்தமாதனத்தில் நகரம்)

828. சங்க ரனுமை தானவர் வானவர்
பங்க யன்மயன் பண்புட னேகியே
திங்கள் போலொளிர் சேயன் திருவரை
எங்கு மேவி யெயிலமைத் தானரோ.

எ-து. கயிலாய பதியாகிய சங்கரனும் பாரதா தேவியும், மனோவதி நகரத்தில் வாசம் செய்கின்ற சதுர் முகனும், சரஸ்வதி தேவியும், பொன்னுலகத்தில் வதிகின்ற இந்திர மகாராசனும், தேவர்கூட்டங்களும் எழுந்தருளி, சந்திரக் கூட்ட மிட்டது போன்ற திருமுகங்களை யுடைய சுப்பிரமணியரானவர் வாசம் செய்கின்ற கந்தமாதன கிரியில் வந்து நிறைந்தது. அந்தக் கிரியில் ஆயிரம் யோசனை அகல நீளமுள்ள மதில், கோட்டை, அகழி, மாடமாளிகை, அடுக்குகள், தளங்கள் முதலாகிய நகரத்தின் சிறப்புகளெல்லாம் அமைத்தான் தேவ கம்மியன் எனறவாறு. (27)

## Kantamātaṉattil nakaram

*caṅka raṉumai tāṉavar vāṉavar*
*paṅka yaṉmayaṉ paṇpuṭa ṉēkiyē*
*tiṅkaḷ pōloḷir cēyaṉ tiruvarai*
*eṅku mēvi yeyilamait tāṉarō.*

## A City in Kantamātaṉam

Civaṉ, Pārvati, the Tāṉavas, the gods,
Piramaṉ and Mayaṉ went to the Kantamātaṉam
Hill where resides Cuppiramaṇiyaṉ
With gleaming heads. Here they built
An immense fort.

(குபேரனுக்கு முடி சூட்டுதல்)

829. நாடி யாயிர மியோசனை நன்மதிட்
கோடி மாமணி மாளிகை கொண்டதோ
ராழி போல வமைத்திட வேயயன்
வாழி யென்று மணிமுடி சூட்டினான்.

எ-து. அந்தக் கந்தமாதன பர்வதத்தின்கண் மயனானவன் ஆயிரம் யோசனை அகல நீள முள்ளதாகிய நகரங்கள் எங்கினும் நவ ரத்தினங்களினாலே கோடி கோடியாகிய மாட மாளிகைகள் அமைத்துத் திருப்பாற்கடலினைப் போன்ற பல வளங்களும் அமைத்துக் கோடி சூரியன் உதித்ததுபோல விளங்கிப் பிரகாசிக்கின்ற சிம்மாதனம் செய்வித்து, விண்ணப்பம் செய்ய வேத விதிப்படி சதுர்முகனானவர் குபேரனுக்கு மகுடாபிஷேகம் செய்தருளி, என்றும் நிரந்தரமாக வாழி என்று ஆசீர்வாதம் செய்தருளினார் என்றவாறு. (28)

## Kupēraṉukku muṭi cūṭṭutal

*nāṭi yāyira miyōcaṉai naṉmatiṭ*
*kōṭi māmaṇi māḷikai koṇṭatō*
*rāḻi pōla vamaittiṭa vēyayaṉ*
*vāḻi yeṉṟu maṇimuṭi cūṭṭiṉāṉ*

## Kupēraṉ is Crowned

A fortwall of thousand square yocanas
Was built by Mayaṉ; within the area
He structured crores of enormous,
Gem-encrusted buildings. It all seemed
As a glowing sun. Piramaṉ blessed Kupēraṉ
And crowned him.

(கோலாசலத்தில் அரங்கனைத் துதித்தல்)

830. திக்கி னோர்களும் சூழத் திசைமுகன்
நக்க னோடு நணுகினர் நாரணன்
மிக்க பொற்பத மேவிப் பணிந்திடத்
தக்க தாம்வரை தன்னி னமர்ந்தனர்.

எ-து. அட்டதிக்குப் பாலகராகிய திக்கினோர்களும், சதுர்முகப் பிரம்மாவும், சங்கரன் முதலாகிய தேவர்க்களுடனே கோலாசலத்திற்கு எழுந்தருளி ஸ்ரீ பரமபத நாதனைக் கண்டு மிகுந்த ஞானோதயமான பேரானந்தத் தாமரை மலர்போன்ற சரணார விந்தங்களில் பணிந்து ஆனந்தப்பரவச இன்பத்தில் மூழ்கி அவரது தரிசன வைபவங்களைக் கண்டு களி கூர்ந்து வீற்றிருந்தார்கள் என்றவாறு. (29)

## Kōlācalattil Araṅkan̲ait tutittal

*tikki n̲ōrkaḷum cūl̲at ticaimukan̲*
*nakka n̲ōṭu naṇukin̲ar nāraṇan̲*
*mikka por̲pata mēvip paṇintiṭat*
*takka tāmvarai tan̲n̲i n̲amarntan̲ar.*

## Praying to Araṅkan̲

With the gods of eight directions,
Piraman̲ and Civan̲ approached Nārāyaṇan̲,
Saluted his golden feet and resided
In the great Kōla Hill.

(தேவர் இசைபாடி வணங்குதல்)

831. பந்தி பந்திய தாகப் பணிந்துபின்
இந்தி ரன்திசை யோர்க ளியக்கர்கள்
மந்தி ரத்திரு வாரா தனம்செயக்
கந்தி ருப்புகழ் காணங்க ளோதவே.

எ-து. இத்தனமையாகிய தேவர் கூட்டங்களானவர்கள் பந்தி பந்தியாக இந்திரன் முதலாகிய பேர்கள் வேதாகம விதிப்படி திருவாராதனம் செய்ய, காந்திருவர் கூட்டங்கள் தேவக்கியானம் பாடி இசையாகிய தேன்மாரியைப் பொழிந்து நின்றார்கள் என்றவாறு. (30)

## Tēvar icaipāṭi vaṇaṅkutal

*panti pantiya tākap paṇintupin̲*
*inti ran̲ticai yōrka ḷiyakkarkaḷ*
*manti rattiru vārā tan̲amceyak*
*kanti ruppukal̲ kāṇaṅka ḷōtavē.*

## Music of Gods

Saluting the Lord in serried formations,
Intiran̲, the gods of directions,
And Yakṣās performed ritual worship
With Vedic hymns while the Kantarvas
Presented songs praising the Lord.

(சிங்கமா நகரின் சிறப்பு)

832. பரம தாம்பதம் பாரினிற் கோலமால்
திரம தாஞ்சென்ம சென்மங்கள் செய்வினைக்
கரம தாமடி யார்கள் வதிந்திடும்
புரம தாஞ்சிங்க மாநகர் பூதலம்.

எ–து. இவ்விதமாகத் தேவர் கூட்டங்கள் வந்தனை செய்கின்ற இன்பங்களைக் கண்டு பரமபத நாதன் அருளிச் செய்கின்றார். வாரீர் தேவர்களே! இந்தக் கோலாசல கிரியானது பூலோகப் பரமபத மாகும். இந்திரமாகிய சென்ம சென்மங்களில் செய்கின்ற வினைப் பயனானது அளவிடப் படாதாயினும் அதைச் சோதித்துப் பொடியாகச் செய்கின்ற வரத்துக்குச் சமதையாகும். ஆகையால் நமதடியார்கள் சர்வ காலங்களிலும் வாசம் செய்கின்ற சிங்கமா நகரத்தின் புண்ணிய பலன்களைச் சொல்வதற்கு அரிதாய் விளங்கிய தென்றவாறு. (31)

## Ciṅkamā nakariṉ ciṟappu

*parama tāmpatam pāriṉiṟ kōlamāl*
*tirama tāñceṉma ceṉmaṅkaḷ ceyviṉaik*
*karama tāmaṭi yārkaḷ vatintiṭum*
*purama tāñciṅka mānakar pūtalam.*

## The Ciṅkavaram City

The Lord said: 'This Kōla Hill
Is heaven on earth. It is capable
Of destroying the evils garnered
Through many births. This Ciṅkavaram
Is a place where devotees live.

(கோலமால் வரையின் சிறப்பு)

833. கோல மாலெனக் கூறுவ ரோர்மொழிக்
கால னூரைக் கடந்தென் கருணையான்
மேல தாம்பர மப்பத மெய்துவார்
சால நீள்பிற விக்கடல் சார்கிலார்.

எ–து. கோலமால் என்கின்ற அதிசிலாக்கியமாகிய கிரியினை மனத்தினாலே தியானம் செய்து வாக்கினாலே ஒருதரம் கூறுவோர்கள் காலனாகிய எமலோகத்தினைக் கடந்து நமது கருணையினாலே மேலாகிய பரமபதச் செல்வத்தினை அடைவார்கள் மறுபடியும் பிறவிச் சாகரத்தினைச் சாரார்கள் என்றவாறு. (32)

### Kōlamāl varaiyin̲ cir̲appu

*kōla mālen̲ak kūr̲uva rōrmol̲ik*
*kāla n̲ūraik kaṭanten̲ karuṇaiyān̲*
*mēla tāmpara mappata meytuvār*
*cāla nil̲pir̲a vikkaṭal cārkilār.*

### Greatness of the Kōla Hill

'Those who utter the word Kōla Hill
Will cross easily the realm of death
And come to my abode due to my compassion.
They will never be caught again
In the ocean of birth.

(அரங்கன் கோயில் கொள்ளுதல்)

834. என்று மிந்தத் தலத்திடை யெய்துவோஞ்
சென்று தேவர்கள் திக்கினில் வாழ்ந்திட
வென்று ரைத்த விமலன் திருமொழி
கொன்று சென்று குரைகழ லுன்னினார்.

எ-து ஆகையால் இந்த அதிசிரேஷ்டமாகிய தலத்தில் சர்வ காலங்களிலும் வதிகின்றோம். நீங்கள் யாவரும் உங்கள் உலகத்திற்கு எழுந்தருளிச் சகல இன்பத்தினையும் அனுபவிக்கக் கடவீர்கள் என்றருளிச் செய்ய, அவரது திருமொழியின்படி சதுர்முகன் முதலாகிய தேவர்கள் தமது லோகங்களுக்கு எழுந்தருள, அன்று முதலாகப் பரம பதநாதர் அந்த இலக்குமி தீர்த்தத்திற்கு எதிராக எழுந்தருளிவதிகின்றார் என்று சூதபுராணிகர் அருளிச் செய்தார் என்றவாறு. (33)

ஸ்ரீ வைகுண்டபெருமாள் திரு அவதார அத்தியாயம் முற்றிற்று.

### Arańkan̲ kōyil koḷḷutal

*en̲r̲u mintat talattiṭai yeytuvōñ*
*cen̲r̲u tēvarkaḷ tikkin̲il vāl̲ntiṭa*
*ven̲r̲u raitta vimalan̲ tirumol̲i*
*kon̲r̲u cen̲r̲u kuraikal̲a lun̲n̲in̲ār.*

### Arańkan̲'s Residence

'I shall be here for all time.
You may return to your worlds'.
Taking in the words of the Pure One,
They went back meditating on his feet
Decorated with anklets.

# 44. நாற்பதாவது
# ஸ்ரீ பார்த்தசாரதி திரு அவதார அத்தியாயம்

யுகங்களிற் சிறந்தது துவாபரயுகம். அச்சிறப்பிற்குக் காரணம் என்னவென்பதைக் கூறுகிறேன் என்று சொல்லத் தொடங்குகிறார் சூதபுராணிகர். துவாபர யுகத்தில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவை ஓங்கி விளங்க வந்து தோன்றியவன் தருமராசன் என்பவன். அவன் இராசசூய யாகத்தைச் செய்து சிறப்படைய எண்ணினான். தனது தம்பியராகிய வீமன், அருச்சுனன், நகுலன் ஆகியோரை மூன்று திசைகளின்கண் அனுப்பிச் சகாதேவனைத் தெற்குத் திசைநோக்கி அனுப்பிவைத்தான்.

திக்குவிசயமாகத் தென்திசை நோக்கிப் புறப்பட்ட சகாதேவன் அரசர்களை வென்று அவர்கள் அளித்த திறைப்பொருள்களைப் பெற்று வந்தான். வருங்கால் காஞ்சிமாநகரினைக் கடந்து செஞ்சிமாநகரினை அடைந்தான். அங்கு அரசாண்ட மன்னனைவென்று திறைபெற்றான். அருகிலே உள்ள கோலாசல மலையை அடைந்து அரங்கநாயகரைத் துதித்தான். கண்ணபிரானை நினைந்து, அடியேன் இலங்கை மாநகர் சென்று திறை பெறத்தக்கதாய் அருள்புரிய வேண்டும் என்று வேண்டினான். சகாதேவனின் வேண்டுகோளுக்கருள்புரிய விரும்பிய கண்ணபெருமான் ஸ்ரீ பார்த்தசாரதியாய், அரங்கநாயகர் ஆலயத்தின் எதிரே கிழக்குத் திசையில் கும்பமாதமாகிய மாசிமாத அசுவனி நட்சத்திரத்தில் எழுந்தருளினார்.

எழுந்தருளிய பார்த்தசாரதிப் பெருமான் சகாதேவனே! உமது எண்ணத்தை நிறைவேற்றவே எழுந்தருளினோம். ஆயினும் துவாரகாபுரியினும் இக்கோலாசலமானது மிகவும் மேலானது. விபீடணன் அரசு புரிகின்ற இலங்காபுரியிலிருந்து உம் மகன் கடோத்கசன் மூலமாகத் திறைபெற்றுத் தருகின்றோம் என்று கூறிக் கடோத்கசனை நினைத்தார். உடனே அங்கு வந்து சேர்ந்து தன்னை வணங்கி நின்ற கடோத்கசனை நோக்கி, வீமசேனன் புத்திரனே! நீ இலங்காபுரி சென்று விபீடணச் சக்கரவர்த்தியிடம் நாம் அனுப்பியதாகக் கூறி நமது எண்ணங்களையும் சொல்லுக என்று அருள்புரிந்தார். அவ்வாறே புறப்பட்ட கடோத்கசன் இலங்கையில் மதில்கள், மாடமாளிகைகள் போன்ற சிறப்புகளை யெல்லாம் கண்டு மிகவும் வியப்புற்றவனாய்க் காவல்களை எல்லாம் கடந்து விபீடணனின் அவையில் சென்று வணங்கி நின்றான்.

அவனைக் கண்ணுற்ற விபீடணன் அவன் யார்? அங்கு வந்த காரணம் என்ன? என்பவற்றை வினவுகிறான். உடனே கடோத்கசன் தன் வரலாற்றையும் தான் வந்த காரணத்தையும் கூறி, இராச சூய யாகத்தைச் செய்ய அவனிடமிருந்து பொருளையும் வேண்டி நின்றான். கண்ணபிரானால் அனுப்பப்பட்ட அவனைத் தழுவிக்கொண்டு ஆசனம் அளித்து இருக்கச் செய்து, கண்ணபிரானைத் திசைநோக்கி வணங்கினான் விபீடணன். பிறகு எண்பதாயிரம் அசுர வீரர்களை அழைத்து அவர்கள் மூலம் யாகத்துக்கு வேண்டிய செல்வம், ஆடை ஆபரணங்கள் போன்ற உயர்ந்த பொருள்களை அனுப்பி வைத்தான்.

அவர்கள் கோலாசலத்தை அடைந்து பார்த்தசாரதிப் பெருமான் முன்னிலையில் அவற்றை வைத்து வணங்கினார்கள். அவற்றையெல்லாம் சகாதேவனிடத்திலே கொடுத்து யாகத்தைச் செய்ய எடுத்துச் செல்லுமாறு பணித்து அவர் அத்தலத்திலே எழுந்தருளினார்.

. (தருமன் ராசசூய யாகம் செய்ய நினைத்தல்)

835. சிறந்திடுந் துவாபர யுகத்தி னில்திகழ்
அறந்தலை யெடுத்திட வவத ரித்தருள்
நிறைந்ததோர் பொறைதிகழ் தரும னீண்டிடு
மறந்திக ழரசர்மா மகத்தை மாண்பதாய்.

எ-து. பின்னும் சூத புராணிகர் அருளிச் செய்கின்றார். வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! யுகத்தில் சிறந்திடும்படியாகிய துவாபரம் என்றால் அதன் புகழினைச் செப்பிடுகின்றேன். அதாவது துவாபரந்தோறும் வியாதர்க்குப் பட்டமாய் வந்து வேத முதலாகிய நூல்களைக் கூறும் தன்மையால் அந்தத் துவாபரத்திலே அரசாட்சியாய்ப் பிரகாசிக்காநின்ற தர்மார்த்தங்கள் விளங்கிப் பிரகாசிக்க தக்கதாக வந்தருளிய நிறைந்த சாத்வீக ஞான சம்பன்னராய்ப் பிரகாசிக்கா நின்ற தரும ராசனானவன் இராச சூய யாகத்தைச் செய்தலே தனக்கு மாண்பெனக் கருதினான் என்றவாறு. (1)

### Tarumaṉ rācacūya yākam ceyya niṉaittal

*ciṟantiṭun tuvāpara yukatti ṉiltikaḻ*
*aṟantalai yeṭuttiṭa vavata rittaruḷ*
*niṟaintatōr poṟaitikaḻ taruma ṉīṇṭiṭu*
*maṟantika ḻaracarmā makattai māṇpatāy.*

## XLIV. The Manifestation of Pārtacārati
## Yutiṣṭiraṉ Plans Rājacūya

In the great Tuvāpara yuka, Yutiṣṭiraṉ
Was born to help the rise of Dharma.
The famous king felt it would be fitting
To his status, if he performed
The Rācacūya sacrifice.

(தம்பியரை நாற்றிசைக்கும் அனுப்புதல்)

836. செயும்பொருட் டாதிக்கு நான்குஞ் சென்றிடப்
பயன்பெறு மிளைஞரைப் பரிந்த னுப்பிட
முயல்சகா தேவனுந் தெற்கின் முந்திடப்
பயிலரசர் கள்திறைப் பரிந்த ளித்தனர்.

எ-து. அந்த அதி சிலாக்கியமாகிய இராசசூய யாகத்தைச் செய்யக் கருதிய தர்ம ராசனானவன் தனது இளைஞராகிய பீமன், அருச்சுனன், நகுலன், இவர்கள் மூன்று வீரர்களையும் மூன்று திக்குக்கனுப்பிச் சகாதேவன் தென் திசைக்குப் போகத் தக்கதாய் நியமிக்க, அப்படியே சகாதேவன் தெற்கின்கண் ணுள்ள அரசர்களையெல்லாம் செயித்து, அவர்கள் கொடுக்காநின்ற திறைகளை வாங்கிக் கொண்டு நடந்தான் சகாதேவன் என்றவாறு. (2)

## Tampiyarai nāṟṟicaikkum aṉupputal

*ceyumporuṭ ṭātikku nāṉkuñ ceṉṟiṭap*
*payaṉpeṟu miḷaiñaraip parinta ṉuppiṭa*
*muyalcakā tēvaṉun teṟkiṉ muntiṭap*
*payilaracar kaḷtiṟaip parinta ḷittaṉar.*

## Brothers to the Four Directions

Planning it, he sent his four heroic
Brothers to the four directions.
Cakātēva who went to the south won victories
Over kings who gave him tribute.

(தெற்கே சகாதேவன்)

837. **காஞ்சிமா நகரினைக் கடந்து காவலன்**
**செஞ்சிமா நகரினில் திறைகள் கொண்டபின்**
**கொஞ்சிய கிளிபயில் கோல மால்வரை**
**துஞ்சிடு மரங்கனைத் தொழுது போற்றினான்.**

எ-து. இப்படியாகச் சகாதேவனானவன் தென்திசையாகிய காஞ்சிமா நகரினைக் கடந்து தொண்டை மண்டலத்தினில் சிறந்த செஞ்சிமா நகரத்தின் முதன்மையாய் அரசு புரிகின்ற அரசர்களிடத்தில் திறைகள் முதலாகிய கப்பப் பணங்களைக் கைக்கொண்டு, அந்த நகரத்தின் விளங்கிப் பிரகாசிக்கின்ற கோலாசலத்தில் எழுந்தருளி அந்த அதி சிலாக்கியமாகிய குயில்கள், அன்னங்களால் புகழாநின்ற அனந்த விமான சேகரராய் யோக நித்திரை செய்தருளிய ஸ்ரீ அரங்க நாயகருடைய திவ்விய சரணார விந்தங்களிலே அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து வேதாத்தமங்களால் துதி செய்து வணங்கினான் என்றவாறு. (3)

## Teṟkē Cakātēvaṉ

*kāñcimā nakariṉaik kaṭantu kāvalaṉ*
*ceñcima nakariṉil tiṟaikaḷ koṇṭapiṉ*
*koñciya kiḷipayil kōla mālvarai*
*tuñciṭu maraṅkaṉait toḻutu pōṟṟiṉāṉ.*

## Cakātēvaṉ in the South

The hero went beyond Kāñci city
And received tribute from Ceñci city.
He saluted and prayed to Araṅkaṉ
Who rests in the lovely Kōla Hill.

(அரங்கனைத் தொழுதல்)

838. அரங்கனைத் தொழுதபின் அருள்சு ரந்திடுஞ்
சரண்பயில் கண்ணனைத் துதிக்கச் சார்ந்தனன்
குரம்பயி னிலங்கையைக் குறித்தங் கெய்திட
வரந்தர வேண்டுமென் றோத மாதவன்.

எ-து. அப்படி அரங்க நாயகரை வந்திக்க அவரது கிருபா விசேஷத்தினால் அருள் சுரந்திட, என்றும் உபயப்பிரதான சரணார விந்தத்தினையுடைய ஸ்ரீ கிருஷ்ண பகவானை நினைத்த மாத்திரத்தில் எழுந்தருளி சேவை சாதிக்கின்ற பார்த்த சாரதியினிட கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே பணிந்து விண்ணப்பம் செய்கின்றான். வாரீர் தேவ தேவனே! அடியேன் இலங்கை யிலே திறை வாங்கத் தக்கதாய் வரம் தர வேண்டுமென்றான் சகாதேவன் என்றவாறு. (4)

## Araṅkaṉait toḻutal

*araṅkaṉait toḻutapiṉ aruḷcu rantituñ*
*caraṇpayil kaṇṇaṉait tutikkac cārntaṉaṉ*
*kurampayi ṉilaṅkaiyaik kuṟittaṅ keytiṭa*
*varantara vēṇṭumeṉ ṟōta mātavaṉ.*

## Praying to Araṅkaṉ

After saluting Araṅkaṉ, he gained grace.
He then went to Kriṣṇaṉ to worship his feet,
And pray for a boon to overcome Ilaṅkai
And gain tribute.

(பார்த்தசாரதி எழுந்தருளல்)

839. தன்திரு வருளினாற் தரணி போற்றிடப்
பொன்திரு வடியினைப் பொருந்தக் கீழ்த்திசை
மன்றிரு கும்பநன் மதியின் மாண்பதா
முன்றிரு வுருவினின் முகுந்தன் தோன்றினான்.

எ-து. ஸ்ரீ பார்த்த சாரதியானவர் தமது கிருபா விசேடத்தாலே எழுந்தருளி சகல இராசாக்களும் போற்றத்தக்கதாய்ப் பொற்றாமரைக் கமலம்போன்ற திவ்விய திருவடிகள் பிரகாசிக்க ஸ்ரீ அரங்கநாயகர் சன்னிதானத்துக்கு எதிராகிய கிழக்குத் திசையில் கும்ப மாதமாகிய மாசிமாதம் அசுவனி நட்சத்திரத்தில் திருவவதாரம் செய்தருளினார் என்றவாறு. (5)

## Pārttacārati eluntarulal

*tantiru varulinār tarani pōrritap*
*pontiru vatiyinaip poruntak kīltticai*
*manriru kumpanan matiyin mānpatā*
*munriru vuruvinin mukuntan tōnrinān.*

## Manifestation of Pārtacārati

By the Lord's grace, even as the earth hailed,
Mukuntan placed his golden feet to the east
Of Arankan's temple in the month of Māci,
In the Acuvini asterix.

**(இலங்கைக்குக் கடோத்கசனை அனுப்ப எண்ணுதல்)**

840. **நமதுமெய்த் துவாரகை யதினு நன்னல**
**குமுதமா மலரலர் கோல மால்வரை**
**அமலமா மென்னடி யாரி லங்கைநின்**
**குமரனா னல்வளங் கொடுப்பவன் காண்டிநீ.**

எ-து. ஸ்ரீ பார்த்த சாரதி அருளிச் செய்கின்றார். வாராய் சகாதேவனே! நாம் மனோரஞ்சிதமாய் வாசம் செய்கின்ற துவாரகாபுரியினும் அதி சிலாக்கிய மாகியது இந்தக் கோலாசலப் பர்வதமானது. குமுத மலரலர்களானவை பிரகாசிக்கின்ற இப்புண்ணிய பர்வதத்தில் உமது இஷ்டமானது நிறைவேறத் தக்கதாய் எழுந்தருளினோம். ஆகையால் என்னடியனாகிய விபூடணன் அரசு செய்கின்ற இலங்காபுரியிலே நீ திறை கொள்ள விரும்பிய படியால் உன் குமாரனாகிய கடோத்கசனாலே வேண்டிய திரவியங்களை வருவித்துக் கொடுக்கின்றோம் என்றருளிச் செய்தார் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் என்றவாறு. (6)

## Ilankaikkuk katōtkacanai anuppa ennutal

*namatumeyt tuvārakai yatinu nannala*
*kumutamā malaralar kōla mālvarai*
*amalamā mennati yāri lankainin*
*kumaranā nalvalan kotuppavan kāntinī.*

## Sending Katōtkacan to Ilankai

This Kōla Hill where the lilies bloom
Is more felicitous than our Tuvārakai.
I shall get tributes through your son
From my blemishless devotee in Ilankai.
You will see.

(கடோத்கசன் தோன்றுதல்)

841. என்று ரைத்த வெழிற்கண்ண னெம்பிரான்
குன்ற மொத்தக் கடோத்கசன் கூடிட
வென்றி யாக நினைத்தவவ் வேலைவா
யன்ற வந்த னகங்குளிர்ந் தெய்தினான்.

எ-து இவ்விதமாகக் கூறிய ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் தமது திருவுளத்தில் எண்ணிய பரிபூரண கிருபா விசேடத்தை அறிந்த கடோத்கசனானவன் அதிக பயபக்தியுடன் வந்து திருமாலினது சரணார விந்தத்தினைப் பணிந்து மிகுந்த இன்ப சாகரத்தில் மூழ்கி ஆனந்த வைபவத்தில் திளைத்து நின்றான் என்றவாறு (7)

## Katōtkacan tōnrutal

*enru raitta velirkanna nempirān*
*kunra mottak katōtkacan kūtita*
*venri yāka ninaittavav vēlaivā*
*yanra vanta nakankulirn teytinān.*

## Katōtkacan Appears

So said Lord Krisnan. Hearing the call,
The mountainous Katōtkacan approached him
With speed. Overwhelmed by joy
He stood before the Lord.

(கடோத்கசன் பணிதல்)

842. வந்து மாலடி வாழ்த்தி வணங்கியே
எந்தை யேகடை யேனை இவணிடைச்
சிந்தை யானினைந் தேதெனச் செப்பலு
முந்து கின்ற முதல்வன் மொழிகுவான்.

எ-து. அப்படிக் கடோத்கசனானவன் ஸ்ரீ கிருஷ்ண பகவானை வணங்கி வந்தித்தொரு விண்ணப்பம் செய்கின்றான், வாரீர் மகானுபாவரே! எமது மாதா, பிதா, குரு, தெய்வமாகி விளங்கிய தேவரீர், அடியேனை ஒரு பொருளாகக் குறித்து திருவுளத்தில் நினைத்த காரணத்தை அருளிச் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, வேத முதல்வனாகிய ஸ்ரீ பார்த்தசாரதியானவர் அருள்புரிகின்றார் என்றவாறு. (8)

## Kaṭōtkacaṉ paṇital

*vantu mālaṭi vāltti vaṇaṅkiyē*
*entai yēkaṭai yēṉai ivaṉiṭaic*
*cintai yāṉiṉain tēteṉac ceppalu*
*muntu kiṉra mutalvaṉ molikuvāṉ.*

## Kaṭōtkacaṉ's Salutation

Having came and saluted the Lord's feet
And prayed, he asked; 'My Lord!
Why did you think of lowly me
To come over?' The Primal one spoke.

(இலங்கை செல்லச் சொல்லுதல்)

**843. மைந்த கேட்டி னிலங்கையின் வாழ்ந்திடு**
**முந்து நல்லறி வானுயர் பூடணன்**
**கந்த மாநக ரத்திடை யண்மிநீ**
**நந்தம் வார்த்தையை நாட்டிட வேண்டுமால்.**

எ-து. வாராய் வீமராசன் புத்திரனே! இலங்கா தீபத்திலே அரசாட்சி நடாத்தி வாழ்கின்ற நன்மையினையுடைய சாத்வீக சாந்தகுண விபூடணனைக் கண்டு நாம் அனுப்புவித்த விருத்தாந்தங்களெல்லாம் ஆதியோடு அந்தமாய்த் தெரியக் கூறக்கடவாய் என்றார் ஸ்ரீ கிருஷ்ணதேவர் என்றவாறு. (9)

## Ilaṅkai cellac collutal

*mainta kēṭṭi ṉilaṅkaiyiṉ vālntiṭu*
*muntu nallaṟi vāṉuyar pūṭaṇaṉ*
*kanta mānaka raṭṭiṭai yaṇmiṉi*
*nantam vārttaiyai nāṭṭiṭa vēṇṭumāl.*

## "Go to Ilaṅkai!"

'Son, listen. In Ilaṅkai lives Vipīṣaṇaṉ,
Whose wisdom is sky-high. Go to him
And speak of my message
Regarding Kantamā city'.

(இலங்கையில் கடோத்கசன்)

844. இலங்கை நோக்கி மகிழ்ந்தின்ப மெய்தினான்
குலந்தி கழ்ந்தபொற் கோபுரக் குன்றமுங்
கலங்க லின்றிய தென்கடல் காவலும்
இலங்கக் கண்டங் கதிசெயித் தேகினான்.

எ-து. அப்படிக் கண்ணபிரான் அருளிச் செய்தபடி ஆகாய மார்க்கத்தில் எழும்பி, அதிவேகமாய்ச் சாகரத்தினைக் கடந்து, ஆயிரத்தெட்டு மாற்றுச் சொர்ணத்தால் விளங்கிப் பிரகாசிக்கின்ற உத்தர கோபுரமும் கோட்டைகளும், மதில் பரப்புகளும் மாடமாளிகைகளும் நிறைந்த இலஙகாபுரியில் அனேக இராக்ஷதர்கள் காவல் கட்டுகளுடனே விளங்கக் கண்டு அதிசயித்தான் கடோத்கசன் என்றவாறு. (10)

## Ilaṅkaiyil Kaṭōtkacaṉ

*ilaṅkai nōkki makilntiṉpa meytiṉāṉ*
*kulanti kalntapoṟ kōpurak kuṉṟamuṅ*
*kalaṅka liṉṟiya teṉkaṭal kāvalum*
*ilaṅkak kaṇṭaṅ katiceyit tēkiṉāṉ.*

## Kaṭōtkacaṉ in Ilaṅkai

He travelled to Ilaṅkai with great joy.
He approached Ilaṅkai full of wonderment
At the spires of burnished gold,
Mountains and the fortwalls for defence
Made by the southern sea.

(விபீடணனைக் காணுதல்)

845. அரசிற் றங்கிடும் வீடணன் தன்னடிப்
பரவித் தாழ்ந்துநின் றான்முகம் பார்த்தலுங்
கரவி லாதபே ரன்புடைப் பார்த்திபன்
தரநி னைந்து நகைத்தொன்று சாற்றுவான்.

எ-து. இவ்விதமாய்க் கடோத்கசனானவன் இலங்கையினது காவலை யெல்லாம் கடந்து அரசு நடாத்திய சபா மண்டபத்தில் விபூடணனென்கின்ற இராச சூடாமணியினது பாதத் தாமரைகளிலே சாஷ்டாங்கமாகத் தெண்டன் சமர்ப்பித்து உச்சியில் கூப்பிய கையனாக நின்றான். அவன் முகாரவிந்தத்தை நோக்கிப் பார்த்த மாத்திரத்தின் மனங்கொள்ளாத அன்பினாலே களித்துப் புன்னகை கொண்டவனாய் ஒரு வார்த்தை கூறுகின்றான் விபூடணன் என்றவாறு. (11)

## Vipītaṇaṉaik kāṇutal

*aracir raṅkiṭum viṭaṇaṉ taṉṉaṭip*
*paravit tāḻntuniṉ rāṉmukam pārttaluṅ*
*karavi lātapē raṉpuṭaip pārttipaṉ*
*tarani ṉaintu nakaittoṉru cāṟṟuvāṉ.*

## Seeing Vipīṣaṇaṉ

He went to King Vipīṣaṇaṉ, saluted his feet,
Hailed him and stood aside with humility.
The King who had blemishless love
Looked at Kaṭōtkacaṉ's face,
Smiled and spoke.

(நீ யார் எனல்)

846. யாவர் புத்திரன் தேயமியா துன்பெயர்
காவ லைக்கடந் தெவ்வணங் கண்டனை
நாவ லாய்ப்புகல் கென்றலு நன்குணர்
தேவ தேவன்தன் தூதுவன் செப்புவான்.

எ-து. அனேக இராக்ஷத சேனைகள் சூழத் தக்கதாய்ச் சிம்மாதனத்தில் வீற்றிருக்கின்ற விபூடணன் திருவாய் மலர்ந்தருளுகின்றான். நீ யாருடைய புத்திரன்? உன் நாம தேயமென்ன? உனது நகரத்தினைச் சொல்லக் கடவாய்; ஆகிலும் இந்த இலங்கா தீபத்தின் பெருங்காவலைக் கடந்து இவ்விடம் வந்த காரணத்தை விசிதமாகக் கூற வேண்டுமென்று உரைக்க, தேவ தேவனுடைய தூதனாகிய கடோத்கசனானவன் சொல்லத் தொடங்கினான் என்றவாறு. (12)

## Nī yār eṉal

*yāvar puttiraṉ tēyamiyā tuṉpeyar*
*kāva laikkaṭan tevvaṇaṅ kaṇṭaṉai*
*nāva lāyppukal keṉṟalu naṉkuṇar*
*tēva tēvaṉtaṉ tūtuvaṉ ceppuvāṉ.*

### "Who are You?"

'Whose son are you? To which country
Do you belong? What is your name?
How did you cross the defence barriers?
One who is capable of good speech!
Tell me!' The Lord's ambassador began.

(கடோத்கசன் தன் பெயர் கூறுதல்)

847. பாண்டு புத்திரர் தம்மிற் பயன்பெறு
காண்டி பார்க்குநேர் மூத்தவன் காதலன்
நீண்ட தோரத்தி னாபுர நீள்நகர்
ஆண்ட கையெற்கு நாமங் கடோத்கசன்.

எ-து. வாராய் இலங்காதிபதியே! யான் பாண்டு புத்திரனாகிய அருச்சுனனுக்கு மூத்தவனாகிய பீமமகாராசன் புத்திரனாவேன். எங்கள் தேயம் யாதென்றால் நீண்ட வளப்பத்தினை யுடைய அத்தினாபுரம் என்று கூறுவார்கள். அதி சிலாக்கியமாகிய இந்த இலங்காபுரியினைக் குறித்து யான் வந்த விருத்தாங்களைக் கேட்பீராக என்றான் கடோத்கசன் என்றவாறு. (13)

### Kaṭōtkacaṉ taṉ peyar kūṟutal

*pāṇṭu puttirar tammiṟ payaṉpeṟu*
*kāṇṭi parkkunēr mūttavaṉ kātalaṉ*
*nīṇṭa tōratti ṉāpura nīḷnakar*
*āṇṭa kaiyeṟku nāmaṅ kaṭōtkacaṉ.*

### Kaṭōtkacaṉ Speaks

Of the sons of Pāṇṭu, I am the son
Of the immediate elder to Aruccuṉaṉ[1]
Our land is the immense city,
Hastinapura. My name, Kaṭōtkacaṉ.

(இராசசூயத்திற்குப் பொருள் வேண்டுதல்)

848. கண்ண னாரரு ளாலிந்தக் காசினி
நண்ணு தன்மரு மியாக நடத்திடப்
புண்ணி யப்பொருள் கொண்டிவன் போகென
அண்ண லுய்த்தன னாண்டரு ளாழியாய்.

1. Bhima.

எ-து. பின்னும் அந்தக் கடோத்கச னானவன் கூறுகின்றான். இராச சூய யாகத்தைச் செய்ய வேண்டி உமது புண்ணியப் பொருள்களைத் திறையாக வாங்கி வரக் கடவாய் என்றருளிச் செய்கையால், அடியேன் தேவரீர் இடத்துக்கு வந்தேன் என்றான் கடோத்கசன் என்றவாறு. (14)

## Irācacūyattiṟkup poruḷ vēṇṭutal

*kaṇṇa ṉāraru ḷālintak kāciṉi*
*naṉṉu taṉmaru miyāka naṭattitap*
*puṇṇi yapporuḷ koṇṭivaṉ pōkeṉa*
*aṇṇa luyttaṉa ṉāṇṭaru ḷaḷiyāy.*

## Offerings for Rācacūyam

By the grace of Krisnan I was commanded
To get offerings for conducting
The great sacrifice. O king,
I have come to your place
For that purpose. Please grant the same.

(கடோத்கசனை உபசரித்தல்)

சிங்கத் திலங்கு மணைவிட்டுச் சென்றுபோ
யங்க வன்தனை யாதரித் தன்பினால்
துங்க மாகிய கண்ணனைத் தோத்தரித்
திங்கி தம்பெற வேயணை யேற்றினான்.

எ-து. இவ்விதமாய்க் கடோத்கசனானவன் கண்ணபிரானாகிய ஸ்ரீ கிருஷ்ண தேவர் அருளினால் ஒரு ராசசூய யாகத்தை முடிவெய்தும் பொருட்டு உன்னிடத்தில் திறைகொள்ள வேண்டி அனுப்ப வந்தோம் என்ற வார்த்தையினைக் கேட்ட மாத்திரத்தில் மனங் களிகூர்ந்து ஆனந்தப் பரவசனாய் அவனது தேகமானது பூரித்துப் புளகாங்கிதனாய், ஆனந்தக் கண்ணீர் பெருகத்தக்கதாகச் சிங்கமானது தாங்காநின்ற இரத்தின சிம்மாதனத்தை விட்டிறங்கிக் கடோத்கசனைத் தழுவி ஆலிங்கனம் செய்து, ஸ்ரீ கிருஷ்ண பகவானை மனதிலே தியானித்து, அவரது திருவடிக்கமலங்களைத் திக்கு நோக்கி அனந்தமான தெண்டன் சமர்ப்பித்து அவனுக்கு ஆசனம் கொடுத்து இருக்கச் செய்தான் விபூஷணன் என்றவாறு. (15)

## Kaṭōtkacaṉai upacarittal

*ciṅkat tilaṅku maṇaiviṭṭuc ceṉṟupō*
*yaṅka vaṉtaṉai yātarit taṉpiṉāl*
*tuṅka mākiya kaṇṇaṉait tōttarit*
*tiṅki tampeṟa vēyaṇai yēṟṟiṉāṉ.*

## Kaṭōtkacaṉ Feted

Rising from the regal throne, Vipīṣaṇaṉ
Welcomed Kaṭōtkacaṉ with love.
He prayed to the great Krisṇaṉ,
And gave his guest a seat.

(வீடணன் பொருள் அனுப்புதல்)

850. எனவு ரைத்தசு ரேசரெண் பத்துடன்
புனித முற்றவா றாயிரர் போக்கியே
இனிய வான்பொருள் கலையி ரஞ்சிதத்
தனதன் வெள்குறத் தானளித் தானரோ.

எ-து. இவ்விதமாய்க் கிருஷ்ண பகவானை அன்பினாலே தொழுது வந்தித்து மிகுந்த கிருபா விசேஷத்தினாலே அடியேனை ஒரு பொருளாக உம்மை இங்கு அனுப்பி வைக்க என்ன பாக்கியம் செய்தோமென்று, தனது இராக்ஷத சேனைகளில் நற்குண நற்செய்கையுள்ள அசுரர்கள் எண்பத்தாறாயிரம் வீரர்களை வரவழைத்துத் தர்மராசன் செய்கின்ற இராச சூய யாகத்துக்கு வேண்டிய திரவியங்களும் ஆடை, ஆபரணங்கள், பீதாம்பரங்கள் முதலாகிய வஸ்துக்களெல்லாம் கொண்டு கடோத்கசனுடனே சென்று, ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய மனோரஞ்சிதமாகும்படியாகச் சமர்ப்பித்து அவரது சரணார விந்தங்களில் விண்ணப்பம் செய்து வரக்கடவீராக என்றான் விபூடணன் என்றவாறு. (16)

இரஞ்சித - மனதைக்கவரும். தனதன் - குபேரன்

## Vīṭaṇaṉ poruḷ aṉupputal

*eṉavu raittacu rēcareṇ pattuṭaṉ*
*puṉita muṟṟavā ṟāyirar pōkkiyē*
*iṉiya vāṉporuḷ kalaiyi rañcitat*
*taṉataṉ veḷkuṟat tāṉaḷit tāṉarō.*

## Vipīṣaṇa sends Riches

The King of the acuras commanded
Eighty six thousand incorruptible soldiers
To take varieties of immense wealth
And offer them all to Krisṇaṉ
So that even Kupēraṉ would feel ashamed.

(கடோத்கசன் கோலவரையடைதல்)

851. அவர ருள்கொண்டா காயத்தி னேகிப்பின்
உவமை யிற்கோல மால்வரை யுன்னியே
தவம தின்னுயர்ந் தோர்கள் சரண்புகு
மவரைக் கண்டங் கறைந்தன னன்பினால்.

எ-து. அப்படி வேண்டிய திறையினைக் கொடுத்துக் கடோத்கசனைத் தன் பரிசனங்களுடனே அனுப்ப, ஆகாயமார்க்கமாக எழும்பி ஒரு நொடிப்பொழுதிலே கோலாசலத்தினைச் சேர்ந்து, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பாதத்தில் சமர்ப்பித்து, நடந்த விருத்தாந்தங்களெல்லாம் விண்ணப்பம் செய்து நின்றார்கள் கடோத்கசன் முதலாகிய இராக்ஷத சேனைகள் என்றவாறு. (17)

## Kaṭōtkacaṉ kōlavaraiyaṭaital

*avara ruḷkoṇṭā kāyatti ṉēkippiṉ*
*uvamai yiṟkōla mālvarai yuṉṉiyē*
*tavama tiṉṉuyarn tōrkaḷ caraṇpuku*
*mavaraik kaṇṭaṅ kaṟaintaṉa ṉaṉpiṉāl.*

## Kaṭōtkacaṉ at Kōla Hill

With his permission, Kaṭōtkacaṉ
Rose in the sky and reached the Kōla Hill.
Seeing Krisṇaṉ in whom wise men
Who are rich in penance take refuge,
He spoke pleasing words.

(பொருளைச் சகாதேவனிடம் ஒப்படைத்தல்)

852. கண்ணன் தூதுவன் கட்டுரை கேட்டபின்
நண்ணு கின்ற சகாதேவன் நன்முகம்
உண்ணி வந்த உவகையி னோக்கியே
புண்ணி யமகம் போய்ப்புரி கின்றனன்.

எ-து. இவ்விதமாய்க் கடோத்கசனானவன் விண்ணப்பம் செய்த மாத்திரத்திலே கண்ணபிரானாகிய ஸ்ரீ கிருஷ்ண தேவரானவர் தனதருகில் சேர்ந்துபாசித் திருக்காநின்ற சகாதேவனை நோக்கி அருளிச் செய்கின்றார். இந்தத் திரவியங்களைக் கொண்டு இராச சூய யாகத்தை நடப்பிக்கக் கடவாய் என்று அருளிச் செய்தார் என்றவாறு. (18)

### Poruḷaic cakātēvan̲iṭam oppaṭaittal

*kaṇṇan̲ tūtuvan̲ kaṭṭurai kēṭṭapin̲*
*naṇṇu kin̲r̲a cakātēvan̲ nan̲mukam*
*uṇṇi vanta uvakaiyi n̲ōkkiyē*
*puṇṇi yamakam pōyppuri kin̲r̲an̲an̲.*

### Tributes Given to Cakātēvan̲

Having heard of all that had happened
From his ambassador, Krisṇa
Looked at Cakatēvan̲ who had approached.
He said happily: 'Go and perform
The holy sacrifice.'

(கண்ணன் பார்த்தசாரதியா யெழுந்தருளல்)

853. அன்ற வர்க்கருள் செய்த வரத்தினாற்
குன்ற மர்கோல மால்வரை கீழ்புறத்
தின்று நல்லரு ளாலெதி கட்கெலா
நன்ற ருட்செய்து நாடொறு மெய்தினான்.

எ-து. அப்படிக் கண்ணபிரானாகிய ஸ்ரீ கிருஷ்ண தேவரானவர் சகாதேவ ராசனுக்கு அன்றருள் செய்கின்ற வரபாலனத்தினாலே குன்றமாகிய கோலாசலத்தில் அனந்த விமானசேகரராய் யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீ அரங்கநாயகரிட சன்னிதானத்தின் கீழ்த்திசையில் எழுந்தருளி மனோரஞ்சித சுபாகரத்துடனே எதிரிகளாகிய ரிஷிகளுக்கெல்லாம் நல்லருளைச் செய்து நாடோறும் வதியா நின்றனர் ஸ்ரீ பார்த்தசாரதி என்றவாறு (19)

ஸ்ரீ பார்த்தசாரதி திருஅவதார அத்தியாம் முற்றிற்று.

### Kaṇṇan̲ pārttacāratiyā yeḻuntaruḷal

*an̲r̲a varkkaruḷ ceyta varattin̲ār̲*
*kun̲r̲a markōla mālvarai kīḻpur̲at*
*tin̲r̲u nallaru ḷāleti kaṭkelā*
*nan̲r̲a ruṭceytu nāṭor̲u meytin̲ān̲.*

### Krisṇan̲ as Pārttacārati

Since he granted grace to Cakātēvan̲
The Lord remained in the eastern side
Of Kōla Hill. He granted grace
To all sages every day.

# 45. நாற்பத்தொன்றாவது
# வராகநதியின் வரலாறு உரைத்த அத்தியாயம்

பஞ்சமூர்த்திகள் கோலாசலத்தில் திரு அவதாரம் செய்தருளிய வரலாற்றினைக் கேட்டு மகிழ்ந்தோம். அரங்கநாயகரின் திருவடிகளிலே தோன்றிய தேவகங்கையானவள் வராக நதியாகப் பெருகிய வரலாற்றைக் கூறியருளுங்கள் என்று கேட்ட முனிவர்களுக்குச் சூதபுராணிகர் கூறத் தொடங்கினார்.

கயிலாயபதியாகிய இறைவன் திருக்கயிலாயத்தில் நடனம் புரிந்தபோது அவரது சடையானது அவிழ்ந்தது. அச்சடாபாரத்தில் இருந்த கங்கையானவள் உடுத்தியிருந்த உடையானது அவிழ தேவசபையிலிருந்த அனைவரும் நாணிக் கண்புதைத்தார்கள். அதைக் கண்ணுற்ற பரமசிவன் பகீரதியே! எக்காலமும் என்னிடத்திலே தங்குமாறு வரமளித்ததால் மிகுந்த இன்பத்தினாலே நீ உடையிழந்ததையும் அறியாதவளானாய். இந்தப் பாவத்தினைத் தீர்க்க நில உலகிலே சென்று தவம் செய்து, நாராயணமூர்த்தியின் திருவடிகளிலே புண்ணியநதியாகப் பிறந்து உனது பாவம் நீங்கப்பெற்று நமது சடாபாரத்தை வந்து அடைவாயாக என்று அருளிச்செய்தார். அவ்வாறே பகீரதி கங்கையாற்றங்கரையை அடைந்து தவம் மேற்கொண்டாள்.

நாராயண மூர்த்தியானவர் தோன்றி பகீரதியே! இந்தக் கங்கைக் கரையினும் சிறந்து விளங்கும் கோலாசல மலையை அடைந்து தவம் செய்வாயாக. மகாலட்சுமியின் பொருட்டு எக்கியத் திரு அவதாரம் கொண்டு நாம் அங்கு எழுந்தருளுவோம். அப்போது நமது திருவடிகளிலே வராக நதியாகத் தோன்றி உனது பாவம் நீங்கப்பெறுவாய் என்று அருளிச் செய்தார். அவ்வாறே கோலாசல மலையின் மீது தவம் மேற்கொண்டு வராக மூர்த்தியின் அருள்பெற்று அவருடைய திருவடிகளிலே வராக நதியாகத் தோன்றிப் பாவம் நீங்கினாள்.

வராக மூர்த்தியானவர் பகீரதியின் பொருட்டு அருள்புரிபவராய்க் கூறுகின்றார்; கங்கையாற்றினும் மிகச் சிறந்த இந்த வராகநதியிலே நீராடியவர்கள் பஞ்சமா பாதகங்களிலி ருந்தும் நீங்குவார்கள். இந்த நதியிலே பிதுர்களைக் குறித்துப் பிணடம் முதலாகிய சடங்குகளைச் செய்பவர்கள் அப் பிதுர்களுக்குப் பரமபதத்தைத் தேடித் தந்த பலனைப் பெறுவார்கள். பதினாறு வகையாகிய தருமங்களை மனம், மொழி, மெய்களால் ஒருமித்துச் செய்தவர்களின் வமிசத்தோர் பரமபதப் பேற்றினை அடைவார்கள்.

வேதவியாசரால் அருளிச் செய்யப்பட்ட இந்த அத்தியாயங்கள் அனைத்தையும இவ்வாறு அருளிச்செய்த சூதபுராணிகரை வணங்கி முனிவர்கள் அனைவரும் கோலாசலத்தை அடைந்து, அரங்கநாயகரின் கருணை பெற்று, அவரையே எக்காலமும் துதித்து நித்திய சூரியர்களாய் விளங்கினார்கள். அரங்கநாயகரின் திருவடிகளை அடைந்தவர்கள் பதினெட்டு வகையான யாகாதி கிரத்துகள், பதினாறுவகையான தருமங்கள், தவம், யோகம், ஞானம் ஆகியவற்றையெல்லாம் செய்தவர்கள் அடையும் பலனுக்கு மேலான பலனை எய்துவார்கள்.

இங்கு எழுந்தருளியுள்ள பிராட்டியாரை வணங்கி அரங்கநாயகனை முறையாய் வழிபடுபவர்கள் நித்திய சூரியராய்த் திகழ்வார்கள். அரங்க நாயகருக்கு ஆலயங்கள், திருமதில்கள், பிரதிமைகள், கோபுரங்கள், யாகசாலை, மண்டபங்கள், நந்தவனம் ஆகியவற்றை இயற்றியவர்கள் எல்லாவகையான செல்வங்களையும் பெற்றுத் திகழ்வார்கள்.

**(வராகநதியின் வரலாறு கேட்டல்)**

**854.** **ஆதிரங்க மெனப்புகழும் அழகியகோ**
**லாசலத்தி னமர்ந்து மேலாம்**
**பாதிமதி யணிந்தோனும் பங்கயனும்**
**அமரர்களும் பணிந்து போற்றுஞ்**
**சோதிபுகழ் பொன்னரங்கன் திருவிளையாட்**
**டினையுணர்ந்து சுகித்தோ மன்று**
**நீதிமகிழ் தேவகங்கை நிமலனடி**
**தனிற்பெருகும் நிலமை கூறாய்.**

எ-து. இப்படியாகப் பஞ்சமூர்த்திகள் திருவவதாரம் செய்தருளிய சரித்திரங்களைச் சூத மகாரிஷி அருளிச் செய்ய, சவுனகாதி மகாரிஷிகள் ஆனந்தப் பரவசராய் விண்ணப்பம் செய்து, வாரீர் மகானுபாவரே! ஆதிரங்கமென்று புகழ்கின்ற அதி சிரேஷ்டமாகிய கோலாசலத்தில் எழுந்தருளிய ஸ்ரீ அரஙக நாதனுடைய சரணாரவிந்தங்களில் சந்திர சேகரனும், சதுர் முகனும் தேவர்கூட்டங்களும் பணிந்து போற்றுகின்ற திருவிளையாட்டினை அருளிச் செய்யப் பரம பாவனங்களை அடைந்தோம். ஆகிலும் அவரிட திவ்விய திருவடிகளிலே உற்பவித்த தேவ கங்கையானவள் வராக நதியாகப் பெருகிய காரணத்தை விசிதமாக அருளிச் செய்ய வேண்டுமென்றார் மகாரிஷிகள் என்றவாறு. (1)

**Varākanatiyiṉ varalāṟu kēṭṭal**

*ātiraṅka meṉappukaḻum aḻakiyakō*
*lācalatti ṉamarntu mēlām*
*pātimati yaṇintōṉum paṅkayaṉum*
*amararkaḷum paṇintu pōṟṟuñ*
*cōtipukaḻ poṉṉaraṅkaṉ tiruviḷaiyāṭ*
*ṭiṉaiyuṇarntu cukittō maṉṟu*
*nītimakiḻ tēvakaṅkai nimalaṉaṭi*
*taṉiṟperukum nilamai kūṟāy.*

# XLV. The Legend of the Varāka River

## On the Legend of the Varāka River

"Kōla Hill is known as Ātiraṅkam.
Here resided the crescent-crowned Lord,
Piramaṉ and other gods who salute
The brilliant, golden Araṅkaṉ.
We are gratified at having learnt
About the ways of the Lord. Do tell us
How the great, heavenly Kaṅkai
Sprang from his feet".

(தேவகங்கை - பகீரதி)

855. ஆரியனு மருள்கூர்ந்தங் கறைந்திடுவான்
மாணாக்க ரனைவ ருக்குங்
காரியகா ரணங்கடந்த கண்ணுதலா
னொருகாலங் கயிலா யத்தின்
சீரியதோர் பிரதோட காலத்தில்
நடம்புரியத் திகழும் வேணிப்
பாரினிடை யவிழ்ந்திடலும் பகீரதியா
ணிர்வாணப் படிவா யுற்றாள்.

எ-து. அவ்விதமாக வினாவிய இருடிகளைப் பார்த்து ஆசாரியராகிய சூத புராணிகரானவர் திருவாய் மலர்ந்தருளுகின்றார். காரிய காரணங்களைக் கடந்தருளிய மூன்று கண்களையுடைய கயிலாச பதியானவர் ஒரு சிறந்திராநின்ற பிரதோஷ காலத்தில் நடனம் புரிந்தருளினார். அப்போது அவரது உடையானது அவிழ்ந்திட அந்தச் சடாபாரத்தில் தாங்கிய பகீரதியானவள் உடுத்திய பீதாம்பரச் சடையானது நீங்கத் தக்கதாய் அந்தத்தேவ சபையிலே மிகுந்த நாணத்துடனே நின்றாள் தேவ கங்கையாகிய பகீரதி என்றவாறு. (2)

## Tēvakaṅkai - pakīrati

*āriyaṉu maruḷkūrntaṅ kaṟaintituvāṉ*
*māṇākka raṉaiva rukkuṅ*
*kāriyakā raṇaṅkaṭanta kaṇṇutalā*
*ṉorukālaṅ kayilā yattiṉ*

*ciriyatōr piratōṭa kālattil*
*naṭampuriyat tikaḻum vēṇip*
*pāriṉiṭai yaviḻntiṭalum pakīratiyā*
*ṇirvāṇap paṭivā yuṟṟāḷ.*

**Pakīrati**

The noble one spoke kindly to his students.
"In days of yore Civaṉ who is beyond
Action and cause, was once dancing
During the auspicious Piratōṣa time[1]
Suddenly his matted locks became unbound
Pakīrati was thus disrobed in public.

(சிவன் பகீரதியைக் கோபித்தல்)

856. அக்காலை தேவரெலா மக்கத்தை
முழித்தவரா யச்சங் கூர்ந்தார்
மிக்காரு மரசவிரு டியர்களெல்லாம்
விழிக்குவிருந் தருந்தி நின்றா
ரெக்காலுந் துதிபரவு முக்கணனுங்
கங்கையையென் செய்தா யென்று
நக்கானற் குணமுளதோர் வார்த்தையினை
யிவள்கேட்க நவில்வ தானான்.

எ-து. அப்படித் தேவ கங்கையானவள் நிர்வாண வடிவாக விளங்கக் கண்ட தேவர் கூட்டங்களெல்லாம் இரண்டு நேத்திரங்களையும் மூடிக்கொணடவர்களாய் அச்சப்பட்டார்கள் அந்தச் சபையினில் இராச இருடியாகளெல்லாம் கண்ணுற்றுப் பார்க்கின்ற கொடிதாகிய பாபவினையத்தினைத் திரிநேத்திரதாரியாகிய பரமசிவனானவர் கண்டு மனம் பொறாமல் அந்தத் தேவகங்கையினை நோக்கிக் கோபாக்கினியினாலே நகைத்து ஒரு வார்த்தை சொல்லத் தொடங்கினர் என்றவாறு.
(3)

அககம் - கண்

1. Evening time.

## Civan̲ Pakīratiyaik kōpittal

*akkālai tēvarelā makkattai*
*mul̲ittavarā yaccan kūrntār*
*mikkāru maracaviru ṭiyarkal̤ellām*
*vil̲ikkuvirun tarunti nin̲rā*
*rekkālun tutiparavu mukkaṇan̲un*
*kaṅkaiyaiyen̲ ceytā yen̲ru*
*nakkān̲ar kuṇamul̤atōr vārttaiyin̲ai*
*yival̤kēṭka navilva tān̲ān̲.*

## Civan̲ Chides Pakīrati

Immediately all the gods closed their eyes
And felt terror-stricken. The regal sages
Looked on with passion at the sight.
Civan̲ to whom prayers are offered always,
Laughed angrily: "What have you done,
O Kaṅkai!" He then began to speak
So that she could hear.

(பகீரதிக்குச் சாபமிடல்)

857. என்றுமெந்தன் சிரத்தினிடை யெழுந்தருள
வரமளித்த வின்பா லின்று
நின்றுநட னம்புரிய நிருவாணப்
படிவான நிலமை யான்முன்
சென்றுதிரு மாலடியிற் செனித்துந்தி
யாய்ப்பெருகித் தீமை மாய்த்தங்
கன்றுதிருச் சடையடைவா யெனவுரைக்க
அகன்றுதவம் புரிவ தானாள்.

எ-து வாராய் பகீரதியே! சர்வகாலங்களிலும் எனது சித்தத்தினிடத்திலே வாசம் செய்யத்தக்கதாய் நாம் உமக்கு வரமளித்த காரணத்தினாலே, மிகுந்த இன்பத்தினை அடைந்த அந்தக் காலத்தில் சமஸ்த தேவர்களும் மகாரிஷிகளும் சூழத்தக்கதாய்க் கயிலாய பர்வதத்திலே நடனம் புரிகின்ற காலையில் நீவஸ்திர பங்கமாய் இருக்கச் சமஸ்தமான தேவர்களும் கண்டு ஆச்சரியப்படத்தக்கதாய்ச் செய்த காரணத்தினாலே நீ மிகுந்த பாவ

பலத்தினை அடைந்தாய். ஆகையால் நீ பூலோகத்தின்கண் சென்று அருமையாகிய தவத்தினைச் செய்து ஸ்ரீமன் நாராயணனுடைய பாத தாமரையிலே செனித்துப், புண்ணிய மாநதியாகப் பெருகி அதனாலே உனது தீமையாகிய மகா பாபங்களையெல்லாம் நீங்கினவளாய் நமது சடாபாரத்திலே வாசம் செய்யக் கடவாய் என்று அருளிச் செய்ய, பகீரதியானவள் மிகுந்த நாணத்துடனே அந்தக் கயிலாயபதியினை விட்டு நீங்கி அதி சிரேஷ்டமாகிய கங்கா தீரத்தின் கரையில் தவம்புரிகின்றாள் பகீரதி என்றவாறு. (4)

### Pakīratikkuc cāpamiṭal

*eṉṟumentaṉ cirattiṉiṭai yeḻuntaruḷa*
*varamaḷitta viṉpā liṉṟu*
*niṉṟunaṭa ṉampuriya niruvāṇap*
*paṭivāṉa nilamai yāṉmuṉ*
*ceṉṟutiru mālaṭiyiṟ ceṉittunti*
*yāypperukit tīmai māyttaṅ*
*kaṉṟutiruc caṭaiyaṭaivā yeṉavuraikka*
*akaṉṟutavam puriva tāṉāḷ.*

### Pakīrati Cursed

"I had given you the boon to remain
Always in my locks. Today while I danced,
You preferred to disrobe yourself
In public. Go and be born
At the feet of Nārāyaṇaṉ and stream forth
As a river. Getting rid of your faults
You may return to my locks."
Kaṅkai then went away to perform penance.

(கங்கைக் கரையில் தவம்)

858. கங்கையன்று தவமியற்றக் கடல்வண்ணன்
அருள்கூர்ந்தங் கறைவா றென்றுஞ்
சங்கரனுந் தொழுதேத்துந் தனிக்கோல
மால்வரையிற் றவஞ்செய் வாய்பொன்
மங்கைதனை மணம்புணர வளர்கோலத்
திருவுருவாய் வதிந்து மேலாஞ்
செங்கமலத் திருவடியிற் செனித்திடுவா
யெனவுரைக்கச் சென்றா ளங்கள்.

எ-து. அப்படி அரிதாகிய தவம் செய்கின்ற பகீரதியானவளுக்கு இரங்கினவராய கருணாநிதியாய்த் திருப்பாற் கடலில் யோக நித்திரை செய்கின்ற கருங்கடல் வண்ணனாகிய நாராயண மூர்த்தியானவர் பிரத்தியக்ஷமாக எழுந்தருளி வாராய், பகீரதியே! இங்கு நீ தவம் செய்கின்ற காரணத்தைக் குறித்து நீரிந்த தலத்தினை விட்டு நீங்கி, இந்தக் கங்கா தீர்த்தத்தினும் அதிசிலாக்கியமாகிய பஞ்சக் கிருச்சபலப் பிரயோசனத்தைக் கொடுக்கின்ற வராக சேத்திரத்தின் பிரயோசனத்தினாலே பரமசிவனாலும் தொழுது ஏத்துகின்ற ஒப்பற்ற கோலாசல பர்வதத்தினைச் சேர்ந்து தவம் செய்யக்கடவாய். ஸ்ரீ மகாலட்சுமி தேவிக்கு இதங்கொடுக்கும் பொருட்டாக நாமெக்கிய வராகத் திருவவதாரம் கொண்டு அந்த கோலாசலத்தில் எழுந்தருளுகின்றோம். அந்தச் சமயத்தில் நமது திருக்கமலங்களிலே செனித்து வராக நதியாகப் பெருகி உனது பாப பலன்களையெல்லாம் கடந்து உனதிஷ்ட பலன்களை அனுபவிக்கக் கடவாய் என்றருளிச் செய்தார் ஸ்ரீமன் நாராயணமூர்த்தி என்றவாறு. (5)

## Kaṅkaik karaiyil tavam

*kaṅkaiyan̲r̲u tavamiyar̲r̲ak kaṭalvaṇṇan̲*
*aruḷkūrntaṅ karaivā ren̲r̲uñ*
*caṅkaran̲un toḻutēttun tan̲ikkōla*
*mālvaraiyir̲ r̲avañcey vāypon̲*
*maṅkaitan̲ai maṇampuṇara vaḷarkōlat*
*tiruvuruvāy vatintu mēlāñ*
*ceṅkamalat tiruvaṭiyir̲ cen̲ittiṭuvā*
*yen̲avuraikkac cen̲r̲ā ḷaṅkan̲.*

## Penance on the Bank of Kaṅkai

To Kaṅkai who was performing austerities thus,
The sea-hued Lord spoke, full of compassion:
"Go to the unique Kōla Hill, which is praised
Even by Civan̲ in worshipful terms.
Perform your penance there. Be born
At the lotus-feet of the Lord when I come
As the Boar to marry Lakṣmi".
Kaṅkai went to Kōla Hill.

(தவத்தின் பயனாய் வராகநதி யாதல்)

859. போதமுறுந் தவமியற்றப் பொன்னரங்கர்
கோலமெனப் புவியின் மீது
மாதவர்கள் தொழுதேத்த வானவர்நான்
முகன்மகிழ்ந்து மலர்கள் தூவ

வேதமுறுங் கோலவரை மேவியருள்
புரிந்திடவும் விமல மான
பாதமல ரினிலுதித்து வராகநதி
யெனப்பெருகிப் படர்ந்தா ளன்றே.

எ-து. அந்தப் பகீரதியானவள் அந்தக் கங்கையினை விட்டு நீங்கிக் கோலாசல உருவம்கொண்டு அங்கு எழுந்தருள மகாரிஷிகளும், தேவர்களும், சதுர்முகனாகிய பிரமதேவரும் மகிழ் சிறந்து ஆனந்தப் பரவசத்தினை அடைந்தவர்களாய் மந்தார, பாரிசாத மலர் மாரியினைப் பொழிந்து துதி செய்யவும், வேத சொரூபமாய் விளங்கிய கோலாசல கிரியினது அனந்த விமான சேகரராய் எழுந்தருளி அந்தப் பகீரதிக்கு அனுக்கிரகம் செய்ய, அவரது நிர்மலமாகிய செந்தாமரைக் கமலம் போன்ற திவ்விய திருவடிகளிலே உதித்து வராக நதியாகப் பெருகிப் புண்ணிய பலத்தினை அடைந்தாள் என்றவாறு. (6)

## Tavattiṉ payaṉāy varākanati yātal

*pōtamuṟun tavamiyaṟṟap poṉṉaraṅkar*
*kōlameṉap puviyiṉ mītu*
*mātavarkaḷ toḻutētta vāṉavarnāṉ*
*mukaṉmakiḻntu malarkaḷ tūva*
*vētamuṟuṅ kōlavarai mēviyaruḷ*
*purintiṭavum vimala māṉa*
*pātamala riṉilutittu varākanati*
*yeṉapperukip paṭarntā ḷaṉṟē.*

## The Varāka River

As she performed intense austerities
On the Kōla Hill of golden Araṅkaṉ,
Great sages saluted worshipfully.
Gods and Piramaṉ felt happy and showered
Flowers. As the Lord on Kōla Hill
Granted grace, she streamed forth
From his blemishless feet and became
The Varāka river.

(கங்கையின் பயன்தரும் வராகநதி)

860. தஞ்சமெனத் தவம்புரிந்த பகீரதியாட்
கருள்கூர்ந்து சாற்று வார்பல்
வஞ்சனைபொய்க் கொலைகளவு வன்காம
மதுவுண்போர் வரையாந் தீமுன்

பஞ்செனவே காணுமிந்தப் படர்நதியிற்
குடைந்திடக்கங் கையினு மேலாம்
பஞ்சகமா கியகிரிச்சப் பலனடைவ
ரெனப்பரமன் பகர்வ தானார்.

எ-து. வாரீர் சவுனகாதி மகாமுனிவர்களே! மேற்கூறிய கங்கையானவள் அரங்கநாயகர் திருவடிக் கமலங்களை ஆதரவாய்த்தவம் புரிந்து சரணாகதி அடைந்த பகீரதியின் பொருட்டு அருள் கூர்ந்தவராய்த் திருவாய் மலர்ந் தருளுகின்றார். மனோ வஞ்சனை, பொய், கொலை, களவு, வன்மையாகிய காமம், மது உண்டல் முதலாகிய பஞ்சமா பாதகங்களும், அக்கினி மலையின்கண் தகிக்கப்பட்ட பஞ்சினைப் போலக் காணப்படும். இத்தன்மையனவாகிப் படர்ந்து பெருகுகின்ற புனித பவுத்திரமான வராக நதியிலே தீர்த்தமாடினால் கங்கா தீர்த்தத்தின் கண் விதிப்படி தீர்த்தமாடிய பலத்தினும் மேலாகிய பஞ்சகிரிச்சப் பலத்தினை அடைவர் என்று பின்னும் கூறுகின்றார் அரங்கநாதர் என்றவாறு. (7)

## Kaṅkaiyiṉ payaṉtarum varākanati

*tañcameṉat tavampurinta pakīratiyāṭ*
*karuḷkūrntu cāṟṟu vārpal*
*vañcaṉaipoyk kolaikaḷavu vaṉkāma*
*matuvuṇpōr varaiyāṉ tīmuṉ*
*pañceṉavē kāṇumintap paṭarnatiyiṟ*
*kuṭaintiṭakkaṅ kaiyiṉu mēlām*
*pañcakamā kiyakiriccap palaṉaṭaiva*
*reṉapparamaṉ pakarva tāṉār.*

## Holier than Kaṅkai!

To Pakīrati who had sought refuge
And performed penance, the Lord spoke
Full of grace: "By bathing in this river
Evils like fraud, untruth, murder, stealing,
Lust and the drink habit will be destroyed
As cotton is burnt by fire. This river
Is holier than the Kaṅkai and gives
The result of the five great sacrifices.[2]

---

2. Pirama Yajñam, Pitur Yajñam, Tēva Yajñam, Putra Yajñam and Maṉuṣa Yajña.

(வராக நதியின் சிறப்பு)

861. பின்னுமிந்தத் திருநதியிற் பிதுர்கருமஞ்
செய்வித்தோர் பிண்ட மீந்தோர்
பன்னுமறை விதிப்படிசோ டசமாகும்
பலதானம் பரிந்த ளித்தோர்
முன்னுமவர் பின்னுமந்தக் குலக்கொடி
பவுத்திரராய் விமல மான
மன்னுதிருப் பரமபத மடைந்து நித்திய
சூரியராய் வாழ்வா ரன்றே.

எ-து. மீட்டும் அந்தத் திருநதியாகிய வராகநதியிலே பிதுர்களைக் குறித்துப் பிண்டம் முதலாகிய கர்மங்களைச் செய்வித்தவர்களும், பதக்கிரமச் சடைகளால் கூறுகின்ற வேதவிதிப்படி பதினாறு விதமாகிய தானத்தினை மனம், வாக்கு, காயங்களால் ஒத்துப் பரிவாய்க் கொடுத்த பேர்களும், புனித பவுத்திரராய் அவர்கள் குலத்திலே முன் பிறந்த பிதுர்களும், அதன்பின் பிறந்த வமிசத்தோர்களும் கோடி குலத்தோர்கள் பவுத்திரராய் நிலமையாகிய பரம பதத்தலத்தின்கண் பிரவேசித்து நித்திய சூரியர்களாய் வாழ்வார்கள் என்றவாறு. (8)

பவுத்திரர் - பெயரன் முதலான வமிசத்தார்.

## Varāka natiyiṉ ciṟappu

*piṉṉumintat tirunatiyiṟ piturkarumañ*
*ceyvittōr piṇṭa mīntōr*
*paṉṉumaṟai vitippaṭicō ṭacamākum*
*palatāṉam parinta ḷittōr*
*muṉṉumavar piṉṉumantak kulakkoṭi*
*pavuttirarāy vimala māṉa*
*maṉṉutirup paramapata maṭaintu nittiya*
*cūriyarāy vāḻvā raṉṟē.*

## Greatness of the Varāka River

Besides, those who cause to be performed
Ceremonies for manes in this river,
Give balls of rice and give away
The traditional sixteen-fold charities,

Will gain the supreme heavens for generations
Earlier to them as well as those to come.
They will all become immortal.

(முனிவர்கள் வராக நதியை யடைதல்)

862. [1]ஆதலினா லத்தலம்போற் சிறந்த திந்த
அகிலவுல கங்களினு மரிதா முன்னம்
வேதமுனி வரனருள்கூர்ந் துரைத்த வத்தி
யாயமுப்பத் தாறதனில் விமலன் சீர்த்திச்
சூதமுனி வரனுரைக்கத் தேவ தேவன்
திருவிளையாட் டினையுணர்ந்து சிறந்த ஞானப்
போதமிகு நைமிசமா முனிவ ரியாரும்
பொங்குகட லெனத்துதித்துப் போந்தா ரன்றே.

எ-து. வாரீர் சவுனகாதி மகாரிஷிகளே! ஆதலினாலே மேற்கூறிய சஞ்சீவி புரமென்னும் தலத்தினைப்போல் இந்த நவகண்ட பூமண்டலங்களிலே அரிதாய் இருக்குமாகையினாலே, வேத முனிவராகிய அருளே திருஉருவமாய் யெழுந்தருளிய வாதராயணராகிய வியாச மகாரிஷியானவர் அருளிச்செய்த அத்தியாயம் முப்பத்தாறினும் கூறிய சிறந்த மொழியினைச் சூத முனிவரானவர் நைமிசவனத்தில் சவுனகாதி மகாரிஷிகளுக்கு அருளிச்செய்ய, அந்த மகாரிஷிக் கூட்டங்களெல்லாம் தேவ தேவனுடைய திருவவதார சரித்திரங்களையும், அந்த அவதாரங்களில் அனந்த லீலா விபூதி திருவிளையாட்டினை உணர்ந்து ஆனந்தப் பரவசராய்ச் சிறந்த ஞான போதகத்தினை யுடைய சூதபுராணிகரைக் கடல் சூழ்ந்ததுபோலச் சூழ்ந்தவர்களாய்க் கடலினும் பெரிதாகிய வேத கோஷ்டம் முழங்கத் தக்கதாய்க் கோலாசலத்தினை நோக்கி நடந்தவர்களாய் அந்த வராகத் தலத்தில் வந்து பிரவேசித்தார்கள் என்றவாறு. (9)

1. பா.வே. - ஆதலினா லித்தலம்போற் சிறந்த திந்த
வகிலவுல கங்களிலு மரிதாம் வானோர்
தீதகலச் சோமுகனைத் தடுத்தாட் கொண்ட
திருக்கரத்தா னாட்டியசம் பீர மென்றுங்
காதலினால் ராசேந்த்ர கற்ப கோடி
காலமிந்தக் கோலவரை கமழா நின்று
மாதவன்றன் னருளாலே தழைத்திங் கோங்கு
மதுபோல மாநிலத்தோர் மகிழ்ந்து வாழ்வார்.

## Muṉivarkaḷ varāka natiyai yaṭaital

*ātaliṉā lattalampōṟ ciṟanta tinta*
*akilavula kaṅkaḷiṉu maritā muṉṉam*
*vētamuṉi varaṉaruḷkūrn turaitta vatti*
*yāyamuppat tāṟataṉil vimalaṉ cīrttic*
*cūtamuṉi varaṉuraikkat tēva tēvaṉ*
*tiruviḷaiyāṭ ṭiṉaiyuṇarntu ciṟanta ñāṉap*
*pōtamiku naimicamā muṉiva riyārum*
*poṅkukaṭa leṉattutittup pōntā raṉṟē.*

## Sages Come to the Varāka River

Hence, such a great area of holiness
Is rare in all worlds", said Cūtar,
As he had been told by Vēda Vyācar
In thirty-six cantos describing in detail
The glory of the Lord. Having learnt
Of the divine ways of the Lord of Immortals,
The sages of Naimicāraṇyam gained
Great wisdom. They praised him loudly
As the ocean, and returned to Kōla Hill.

வேறு

(கோலமலையில் முனிவர்கள்)

863. அரங்கனா ரருளா லமுதசா கரம்போல்
அற்புத ஞானவை பவத்தை
நிரந்தர மடைந்து நித்தியசூ ரியராய்
நிர்சல தத்துவ நிறைந்தத்
திரம்பெறு வைகா னசவிதி யதனாற்
[1]சிறந்தவா ராதனம் புரிந்து
[2]கரங்குவித் தரங்கர் திரங்கமழ் அடியிற்
கருதியே வதிந்தனர் முனிவோர்.

எ-து. இவ்விதமாகச் சூதபுராணிகர் முதலாகிய சவுனகாதி மகாரிஷிகளெல்லாம் அந்த அதிசிலாக்கிய மாகிய கோலாசலத்தில் எழுந்தருளி ஸ்ரீ அரங்கநாயகருடைய பரிபூரண

அனுக்கிரக விசேஷத்தினாலே ஞானாமுத சாகரத்தினைப்போன்ற அற்புதமாகிய நிர்சல புத்தியுத்தராய் நித்திய சூரியர்களுடனே நிரந்தரமாக அந்தக் கோலாசலத்திலே வாசம் செய்தவர்களாய் வேதவிதிப்படி திரமாகிய வைகானச விதிப்படி திருவாராதனம் செய்து, அன்பினாலே இரண்டு கராம்புய மலர்களையும் உச்சியில் கூப்பித் தொழுது அவரது சரணார விந்தத்தினை உபாசித்து அந்தத் தலத்தில் அனேக காலமும் வாசம் செய்கின்றார்கள் என்றவாறு. (10)

பா.வே. - 1. சேர்ந்தவா.
2. வரஞ்சிறந் தோங்கிக் கோலமா வரையின் வதிந்தனர் சவுனக முனிவோர்

## Vēṟu

## Kōlamalaiyil muṉivarkaḷ

*araṅkaṉā raruḷā lamutacā karampōl*
*aṟputa ñāṉavai pavattai*
*nirantara maṭaintu nittiyacū riyarāy*
*nircala tattuva niṟaintat*
*tirampeṟu vaikā ṉacaviti yataṉāṟ*
*ciṟantavā rātaṉam purintu*
*karaṅkuvit taraṅkar tiraṅkamaḷ aṭiyiṟ*
*karutiyē vatintaṉar muṉivōr.*

## The Sages in Kōla Hill

By the grace of Araṅkaṉ, they gained wisdom
That was indeed like an ocean of nectar
As immortals, they followed Vaikāṉaca
Rituals which posit blemishless values,
Worshipped the Lord in traditional manner,
Held their palms together in salutation
And lived at the feet of Araṅkaṉ.

வேறு

(ஞானியர் பெற்ற பயன் பெறுவர்)

864. ஓதியநான் மறைவேள்வி மூவா றாமுன்
னுயர்ச்சிபுகழ் பலதான மீரெட் டாக
மேதினியிற் தவயோக ஞானஞ் செய்வோர்
மேவியிடும் பலன்களெலாம் விமல மான

நீதியுரை யாசரிய னருளாற் கூறும்
நிமலனடி சரணடைந்தோர் நிகரி லாத
ஆதிரங்க னருளாலே யமல மான
அழகியநற் பரமபத மடைவ ரன்றே.

எ-து. வேத விதிப்படி முனிவரர்கள் செய்கின்ற விசுவசித்து முதலாகிய பதினெண் வகையாயுள்ள யாகாதி கிருத்துக்களும், அதற்குத் தகுதியாய் விதித்த சோடச மகாதானம், பதினாறு பிரிவினாலே கொடுக்கப்பட்ட மானுக்கள் இவ்வுலகில் சிரேட்டமாய்க் கூறுகின்ற தவங்களியோகங்கள், ஞானங்கள், செய்த யோகிகளும் அடைகின்ற பலப் பிரயோசனங்க ளெல்லாம் நீதியாய்த் திருவாய் மலர்ந்தருளிய ஆசாரியனது பரிபூரண கிருபையினாலே நிர்மலனாகிய ஸ்ரீ அரங்கநாதருடைய திவ்விய திருவடித் தாமரைகளிலே சரணாகதியாய் அடைந்தவரது நிகரில்லாத திருநாம தேயங்களைத் துதிக்க அவனது கிருபா விசேடத்தால் அமலமாகிய அழகு பொருந்திய பரமபதச் செல்வத்தினை அடைவார்கள் என்றவாறு. (11)

ஆசரியன் - வழிபாட்டுக்குரியவன், ஆசிரியன். மானு - மானுடம்; மனிதப்பிறவி.

## Vēṟu

### Ñāṉiyar peṟṟa payaṉ peṟuvar

*Ōtiyanāṉ maṟaivēḷvi mūvā ṟāmuṉ*
*ṉuyarccipukaḻ palatāṉa mīreṭ ṭāka*
*metiṉiyiṟ tavayōka ñāṉañ ceyvōr*
*mēviyiṭum palaṉkaḷelām vimala māṉa*
*nītiyurai yācariya ṉaruḷāṟ kūṟum*
*nimalaṉaṭi caraṇaṭaintōr nikari lāta*
*ātiraṅka ṉaruḷālē yamala māṉa*
*aḻakiyanaṟ paramapata maṭaiva raṉṟē.*

### Gaining the Status of Wise Men

Those who surrender at the feet of the Lord
As suggested by one's teacher who knows,
Will gain the fruits of performing
Eighteen kinds of sacrifices as adviced
By the four Vēdas, and sixteen types
Of charities, and performing penance
And yōga on the earth. They will gain
The pure, beautiful and holy abode
Of the Supreme by Araṅkaṉ's grace.

